சபையாருக்கும் அதன் தலைவர் திரு. தேவ சகாயம், ஆணையாளர், சுகாதார அதிகாரி, பொது-மின்சாரப் பொறியியல் அதிகாரி கள், நகரசபை உறுப்பினர்கள் ஆகியோர் களுக்குக் குழுவின் நன்றியைத் தெரிவித் துக் கொள்கின்றேன்.

தொழில்துறை இயக்குநர் திரு. பி. சபாநாயகம் ஐ. ஏ. எஸ்., அவர்களின் அன்பான உதவி வேண்டும்போதெல்லாம் கிடைத்ததாலேயே, மதுரை திருப்பரங் குன்றம் திருப்பணிகள் விரைவில் முடிவு பெற்றன என்று கூறலாம். அவர்களுக்குக் குழுவின் நன்றி உரித்தாகுக.

மாநிலத்திலுள்ள பல பெரிய, சிறிய கோயில்கள் தாராளமாக நன்கொடை கொடுத்து உதவியமைக்கு அவர்கள் அனை வருக்கும் குழுவின் நன்றி உரித்தாகுக.

மதுரையிலும் பிற மாவட்டங்களிலும் உள்ள தொழிலதிபர்களுக்கும், வணிகப் பெருமக்களுக்கும் அவர்கள் கொடுத்த நன்கொடைக்காகக் குழு நன்றி செலுத்து கின்றது. அவர்களுக்குள் வித்தியாசம் பாராட்டக்கூடாது எனினும் இந்து அல்லாதவர்களின் ஸ்தாபனமாகிய மதுரை மில் கம்பெனியாரும், சர். ஜேம்ஸ் டோக் அவர்களும் பெருந்தொகையை நன் கொடையாகக் கொடுத்ததை குறிப்பிடா மல் இருக்கமுடியாது. அதற்காகக் குழு வினரை யாரும் தவறுதலாகக் கருதமாட் டார்கள் என்று நம்புகின்றேன்.

சுருங்கிய காலத்திற்குள் கும்பாபி டேகத்திற்குமுன் கோயிலிலுள்ள கற் தூண்கள் பலவற்றைச் சுத்தம் செய்வது என்பது மிகக் கடினமான வேலையாகும். மதுரை டி. வி. எஸ். கம்பெனியார் அன்புடன் அப்பொறுப்பை மேற்கொண்டு, தங்களுடைய ஆட்களையும் இயந்திரங் களையும் வைத்து நல்ல முறையில் அப் பணியைச் செய்தனர். அவர்களுக்குக் குழுவின் நன்றி உரித்தாகுக.

சென்னை வருவாய்த் துறையினருக் கும், மதுரை கலெக்டருக்கும், அவருடைய துணை அலுவலர்களுக்கும் குழு நன்றி செலுத்துகின்றது.

முதலமைச்சர் திரு. கே. காமராஜ் அவர்களும் அறநிலைய அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்களும் அன்புடன் செய்த உதவிகளுக்காக இக்குழு நன்றி செலுத்துகின்றது.

திருப்பணி நன்கொடைகளுக்கு வருமானவரி விதிவிலக்குச் சலுகைகள் கொடுத்தமைக்காக இந்திய அரசினருக்கு இக்குழு நன்றி செலுத்துகின்றது. இம் மாதிரி சலுகையை முதன்முதலாகப் பெற்றது மதுரைக் கோயிலேயாகும் என் பதை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.

மத்திய அரசிலுள்ள தமிழக, ஆந்திர அமைச்சர்கள் அனைவருக்கும் குழு நன்றி செலுத்துகின்றது. திருப்பணி தொடங் கியது முதல் திரு. ஓ. வி. அளகேசன் அவர்கள் பேருதவியாக இருந்துவந்தார்.

தென் ரெயில்வே அதிகாரிகள், சாமான்களை அவ்வப்பொழுது துரிதமாக மதுரைக்குக் கொண்டுவர, மிகவும் உதவி யாக இருந்தனர். அவர்களுக்கும் குழுவின் நன்றி.

உள் நாட்டிலும் வெளிநாட்டிலு மிருந்து தாராளமாக இயன்ற அளவு நன் கொடைகள் கொடுத்த பெருமக்கள் அனை வருக்கும் குழுவின் நன்றி உரித்தாகுக.

திருப்பணி வேலைகளை வெற்றிகரமாகச் செய்து முடித்த ஸ்தபதிகளுக்கும் அவர்கள் துணையாட்களுக்கும் குழுவினரின் நன்றி பெரிதும் உரித்தாகுக. வயது முதிர்ந்த ஸ்தபதிகள் தங்கள் கைத்திறனை காட்டுவதற்கு இத்திருப்பணி ஒரு வாய்ப்பைக் கொடுத்தது. அத்துடன் அவர்களிடம் பல இளைஞர்கள் பயிற்சி பெறவும் வாய்ப்பளித்தது. அவர்கள் பெற்ற பயிற்சியும் அனுபவமும் பண்டைய காலத்தில் இத்தொழிலுக்கு இருந்த பெருமையையும் சிறப்பையும் இன்று நிலைநாட்டப்பேருதவியாக இருந்தன. இது சம்பந்தமாக உள்ளூர் ஸ்தபதிகளுக்கு ஒரு குறைபாடு இருந்திருக்கலாம். அதாவது குழுவினர் அவர்களுக்குப் போதிய ஆதரவு கொடுக்கவில்லை என்று நினைக்கலாம். அது சரியல்ல. வேலை பார்த்த அனைவரும் தமிழ் மக்களேயாவர். குழுவினர் உள்ளூர்காரர்களை எப்பொழுதும் ஆதரித்தே வந்துள்ளனர். அவர்களுக்கு உள்ளூரைவிட வெளியூர்களில் அதிகச் சிறப்பும் பெருமையும் கிடைப்பது உண்மையாக இருக்கலாம். அவர்களை நான் ஒன்று கேட்டுக் கொள்கின்றேன். "அவர்களுக்கு வெளியூர்களில் கிடைக்கும் சீரும் சிறப்பும் மதுரையிலும் கிடைக்கவேண்டும்" என்று ஸ்ரீ மீனாட்சியம்மனை அவர்கள் வேண்டிக் கொள்வார்களாக.

நான் இப்பொறுப்பை ஏற்றுக் கொண்டது முதல், திருப்பணிக்குழு உறுப்பினர்களின் இடைவிடாத உதவிக்கும் மனமார்ந்த ஒத்துழைப்பிற்கும், தனிப்பட்ட முறையில் எவ்வாறு நன்றி செலுத்துவது என்பது எனக்குப் புலப்படவில்லை. மக்களுக்கும் திருக்கோயிலுக்கும் அவர்கள் செய்யவேண்டிய கடமையை மனதிற்கொண்டு, அவர்களுடைய கருத்துக்களைத் தயவு தாட்சண்யமின்றி எடுத்துரைத்தனர். அவர்கள் எனக்கு எல்லா அதிகாரங்களையும் கொடுத்திருந்தாலும், ஒவ்வொரு கட்டத்திலும் அவர்களைக் கலந்து செய்வதையே நான் முறையாகக் கொண்டேன். நடைபெற்ற குழுவின் கூட்டங்களுக்குச் சொந்தச் செலவில் தங்களுடைய மற்ற அலுவல்களையும் விட்டுவிட்டு வந்திருந்தனர். இதைவிட விசுவாசம் மிக்க ஒரு குழுவினை யாரும் பெற்றிருக்க முடியாது. அவர்கள் என் மேல் வைத்திருந்த நம்பிக்கையை நான் தவறுதலாகப் பயன்படுத்தவில்லை என்று நினைப்பதுடன் அவ்வாறே நம்புகின்றேன்.

இச்சமயத்தில் நான் ஒன்று குறிப்பிட விரும்புகின்றேன். மனிதர்களையும் கருத்துக்களையும் பொறுத்த மட்டில், ஏற்படும் மாறுபட்ட எண்ணங்களை ஒழுங்குபடுத்துவது திருப்பணிக் குழுத் தலைவரின் கடுமையான வேலையாகும். திருப்பணிக் குழுத் தலைவர் பதவியையும், தருமகர்த்தாக் குழுத் தலைவர் பதவியையும் வெவ்வேறு நபர்கள் வகிக்கும்பொழுது கருத்து வேறுபாடுகள் தோன்றுவதற்கு அனேக வாய்ப்புகள் ஏற்படும். நற்பயனாய் எங்கள் உறவு மிகவும் சுமுகமாக இருந்தது. தருமகர்த்தாக் குழுத் தலைவரும், உறுப்பினர்களும் உச்ச அளவில் ஒத்துழைத்ததுடன் மனமுவந்து உதவிகளும் செய்து வந்தனர். தனி அலுவலர் திரு. கே. வி. குமரன் நாயர், அவர் சிப்பந்திகள், பொறியியலர் திரு. கே. வெங்கட்ராமன், அவர் சிப்பந்திகள், அவ்வப்பொழுது கோயிலில் இறைபணியாளராக இருந்தவர்கள், கோயிற் சிப்பந்திகள், சிவாச்சாரியார்கள் ஆகிய அனைவருடைய விசுவாசமான ஒத்துழைப்பிற்கும் உதவிக்கும் எனது நன்றி உரித்

குக. ஒரு மலர் வெளியிட வேண்டுமென்ற எண்ணம் கடைசி நிமிடத்தில் தோன்றிற்று. அப்பொறுப்பை திரு. பி. கே. அருணுசலக் கவுண்டரிடம் அதன் ஆசிரியர் என்ற முறையில் ஒப்படைத்தேன். அவரும், ஆசிரியர் குழுவிலுள்ள பிற உறுப்பினர்களும் பெருமுயற்சியெடுத்துக் குறுகிய கால அளவில் மலரைத் தயாரித்துக் கொடுத்தனர். அவர்களுக்கு என்னுடைய நன்றியும் குழுவினுடைய நன்றியும் உரித்தாகுக.

பொதுமக்கள் காட்டிய அன்பிற்கும், மரியாதைக்கும், உதவிக்கும் நான் தனித் தனியாக இதன்மூலம் ஒவ்வொருவருக்கும் நன்றி செலுத்துகின்றேன். அவர்களுக்கு நான் விடுத்த வேண்டுகோட்கள் எப்பொழுதும் வீணனது கிடையாது. அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் அருள்பாலிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்வதே நான் அவர்களுக்குச் செய்யும் கைமாறுகும்.

நடைபெற்ற வேலைகளை, அண்மையில் எண்ணிப் பார்க்கும்பொழுது அதன் பிரமாண்டமான அளவும், ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் திருவருளின் பேராற்றலும் எனக்குத் தெளிவாகப் புலப்பட்டு மௌனமாகத் தலைவணங்கினேன்.

**பி. டி. ராஜன்.**

---

# வாழ்த்துரைகள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

இராமேசுவரம்,
20—5—63.

நம்மையும் நம் காரியங்களையும் நடத்திவைக்கும் சக்தி பராசக்தியே என்று உணர்ந்து அந்த பராசக்தியே உலகனைத்துக்கும் தாயாக விளங்குகிறாள் என்று அறிந்து கொள்வோம்.

இந்த நமது ஒரு ஜன்மத்திற்கேற்பட்ட தாயையே நாம் தெய்வமாக நினைக்க வேண்டுமென்பதை "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று ஒளவையார் கூறியிருக்கிறார்.

உலகில் எல்லாக் குழந்தைகளுக்கும் எக்காலத்திலும் தாயாக இருப்பவளான அம்பிகையைக் கொண்டாடுவது மிகவும் அவசியமல்லவா? நாமெல்லோரும் குழந்தை களாகையால் பராசக்தியைத் தாயாராக நினைத்து வழிபடுவதால் அப்படியே வந்து அனுக்ரஹம் செய்வாள். ஸ்ரீ பராசக்தி தாய் ரூபமாயிருந்து ஸகலபிராணிகளின் குற்றத் தையும் பொறுத்து அவரவர்களின் கஷ்டங்களை நீக்கிக் காப்பாற்றுகிறாள்.

இந்த பராசக்தியே த்வாதசாந்த க்ஷேத்திரமான மதுரையில் மீனாக்ஷியாகவும் விளங்குகிறாள். எந்த ஜீவராசியாயிருந்தாலும் கடவுளை அறிந்தோ அறியாமலோ வழி பட்டாலும் வீடு பேறு கிடைக்குமென்று சொக்கநாதரின் திருவிளையாடல்கள் நினைவுறுத்து கின்றன. மீனைப் போலவே கண்ணிமை கொட்டாமல் உலகனைத்தையும் தன் கடாக்ஷத்தி னாலேயே அருள்பாலித்துக் காப்பாற்றி வருகிறாள் மீனாக்ஷி.

உலகனைத்துக்கும் அம்மையும் அப்பனுமாக உள்ள ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர் களுக்கு அடியார்களால் உள்ளன்புடன் ஆலயத்திருப்பணி செய்விக்கப்பட்டு அண்மையில் கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதை அறிந்து சந்தோஷிக்கிறோம்.

அந்த வைபவத்தில் எல்லோரும் கலந்து கொண்டு ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர்களின் அருளினால் எல்லாவித மேன்மைகளையும் அடைவோமாக.

தருமபுர ஆதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம், மாயூரம்
16—5—1963.

கண்ணுக் கினிய பொருளாகி யேஎன் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புத மேஎன்ன விஞ்சைஇதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிசொக்கா நாயகனே.

— குருஞானசம்பந்தர்.

உலகெலாம் நிறைந்த ஒருமுதற் பொருளாம் இறைவனுக்குப் பாண்டிநாடே பழம்பதி யெனப் பெறுகின்றது. அப்பாண்டிநாட்டைச் சிவலோக மாக்குவித்தான் அப்பெருமான் பெருமாட்டி செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்தும், பெருமான் வழுதி மருமகனுகி மீனநோக்கின் மடவரலை மணந்து கதிர் மகுடம் தரித்தும், முருகப் பெருமான் உக்கிரகுமாரராய்த் தோன்றித் திருமுடி சூடியும் அந்நாட்டில் அரசு செலுத்தினர். அவர்கள் அரசு வீற்றிருந்த அருட்டிரு நகரமே மதுரைத் திருத்தலம்.

நாடு நன்றியில் நெறியில் அழுந்திய காலத்திலும் பன்னலம் புணரும் பாண்டி மாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் அடியவர் தங்களைக்கண்டால் குணங்கொடு பணியும் அமைச்சராம் குலச்சிறையாரும் அங்கு ஆலவாய்ப் பெருமான் அருட்டுணை பற்றிச் சைவத்தைக் காத்தனர். பாண்டிநாட்டரசியாரும் அமைச்சருமாகிய அவர்கள் தங்கள் நாடு முழுவதும் நலம்பெற்று நற்றமிழ் வேந்தனும் உய்தற்பொருட்டுச் சோழநாட்டிலே தோன்றியருளிய காழிக் கவுணியர் பெருமானைத் தங்கள் கோநகரில் எழுந்தருளிவித்து ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திரமாகிய பக்தபஞ்சாட்சரத்தைத் தென்னவன் செவியிற் செலுத்தி அவரால் திருநீறு பூசப்பெறும் பேறுடையனுக்கித் தேனலர்கொன்றையார் தம் திருநெறி எங்கும் திகழச் செய்தார்.

எப்பொழுதும் ஸ்ரீ மீனுட்சி தேவியையே நினைத்தும் அவளது திருப்பெயரையே சொல்லியும் பல செயல்களிலும் வெற்றி பெற்றுவருகின்ற சைவத் திருவாளர் **பி. டி. ராஜன்** அவர்கள் நன்முயற்சியால், குவலயம்போற்றும் கூடல்ஆலவாய் ஸ்ரீ மீனுட்சிசுந்தரேஸ்வரர் ஆலயம் இப்போது ஜீரணோத்தாரணம் ஆகி, மகாகும்பாபிஷேகம் செய்யப்பெறுவது, தமிழகத்திற்கே யன்றி நம் பாரத தேசம் முழுவதுக்குமே நன்மை தருவதொன்றும்.

தருமையும் கமலையும் விரிதமிழ்க்கூடலும் திருநகராக ஞானஅரசு செலுத்திவரும் **குருஞானசம்பந்த பரமாசாரிய மூர்த்திகளுக்குப்**, பொற்றாமரைத் தீர்த்தத்தில் அவர்களது திருக்கரத்தில் சேர்ந்து, தருமையில் ஆன்மார்த்த மூர்த்தியாக எழுந்தருளியிருந்து, பூசை ஏற்றுத், திருவருள் புரிந்துவரும் எம் செந்தமிழ்ச் சொக்கனது திருவருட்பணியில் ஈடுபடும் வாய்ப்பு நேர்ந்தமைக்குத் திருவருளைப் போற்றுகின்றோம்.

மதுரைப் பெருமான் மகாகும்பாபிஷேகம் மாநிலம் புகழும் வகையில் மாண்புறச் சிறக்க; இம்மாபெரும் பணியில் ஈடுபடும் சைவத்திருவாளர் **பி. டி. ராஜன் முதலிய** பேரன்பர் பலரும் பொன்னும் மெய்ப்பொருளும் பெற்றுப் போகமும் திருவும் மேன்மேலும் எய்துக. சைவம் தழைக்க; தமிழ் வாழ்க; நாடு நன்முறையில் வெற்றி பெற்று நலம் பலவும் ஓங்குக என தென்கடல் திருவாலவாய்ச் சிவன் திருவருளையே சிந்திக்கின்றோம்.

ஆழ்க தீயது, எல்லாம் அரன் நாமமே சூழ்க; வையகமும் துயர் தீர்க.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

அருள்நந்தித் தம்பிரான் அவர்கள்

திருப்பனந்தாள்

தஞ்சாவூர் ஜில்லா,

15—5—1963

'மேதகைய பலகலைபோர்த் தறம்வளரும் தமிழ்க்கூடல்' என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் புகழ்ந்தருளிய மதுரையில், "துரியங் கடந்த துவாத சாந்தப் பெருவெளி வளாகத் தொருபெருங் கோயிலின்" கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெறுவது உலகத்திற்கே நன்மை தருவது. இவ்வைபவத்தில் ராஷ்டிரபதி திரு. இராதாகிருஷ்ணன் அவர்கள் கலந்துகொள்வதும் மிகப் பொருத்தமுடையது. இவ்வைபவத்தைத் தம் அயரா உழைப்பினால் சிறப்பாக நடத்துவிக்கும் திரு. பி. டி. இராஜன் அவர்களுக்கு மீனாட்சி சுந்தரேசுவரரின் திருவருள் மல்குவதாகுக.

17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தவமுனிவர் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் மதுரையில் அருளிய நூல்கள்: மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மதுரைக் கலம்பகம், நீதிநெறிவிளக்கம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை குறம் என்பனவாகும். இந்நூல்களைப் படிக்காதவர் இருக்கமுடியாது. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடி அரங்கேற்றுங்கால் மீனாட்சியம்மையே குழந்தை வடிவில் எழுந்தருளியிருந்து "தொடுக்கும் கடவுள்" என்ற திருப்பாடலைப் பாடுங்கால் தம் கழுத்திலணிந்திருந்த முத்தாரத்தைக் குமரகுருபரர்க்கு அணிவித்தனர் என்ப. மதுரையில் அந்நாளில் ஆண்ட திருமலைநாயக்கமன்னரது வேண்டுகோட்கிணங்கப் பாடப்பெற்றதே நீதிநெறிவிளக்கம் என்னும் நீதி நூல். மீனாட்சியம்மை குறம் தமிழ் இலக்கியத்திலே சிறப்பிடம் பெறுவது. இத்தகைய அரிய நூல்களைக் குமரகுருபரர் மதுரையில் பாடியருளித் தமிழை வளம்படுத்தியுள்ளார்.

திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சைவ சமயஸ்தாபனம் செய்தது இந்த மதுரையில் தான்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

என்ற திருப்பாசுரம் சம்பந்தரால் இம்மதுரையில்தான் பாடப்பெற்றது. இன்னபல சிறப்புக்கள் பொருந்திய இம்மதுரையில் நடைபெறும் கும்பாபிஷேகத்தைக் கண்டு களித்து,

"புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்கர்
அழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்கர் அங்கயற்கண்
தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்கர் என்றென்று" சந்ததம் பாடிப்பரவி,
"நீர்வாழி தென்மதுரை நின்மலனா ரருள் வாழி
கார்வாழி அங்கயற்கண் கன்னிதிரு வருள்வாழி"

என்று வாழ்த்தி, மக்கள் வாழ்வாராகுக.

இக்கும்பாபிஷேக நினைவில் வெளிவரும் இம்மலர் மணம் உலகெங்கும் பரவுக.

— செந்திலாண்டவன் துணை.

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த
தேசிக பரமாசாரிய சுவாமிகள்
மதுரை ஆதீனம்

மதுரை
20—6—63

இவ்வளவு அரிய பெரிய திருப்பணியைச் செய்து முடிக்க ஐந்து ஆண்டுகள் செல்லலாம் என்று எல்லோரும் கருதியிருக்க, மூன்று ஆண்டுகளில் செய்து முடித்த பெருமை தமிழவேள் திரு. பி. டி. ராஜன் அவர்களையும் ஏனைய திருப்பணிக் கமிட்டிக் குழுவினரையும் அவர்களோடு ஒத்துழைத்த சகலரையும் சாரும்.

திரு. பி. டி. ராஜன் அவர்கள் சென்னை அரசாங்க மந்திரியாகப் பதவி ஏற்ற பொழுது, நமது ஆதீனத்திலிருந்து 1—11—1930-ல் ஆசீர்வதித்து அருளிய வாழ்த்துக் கவியில் நமது பேரன்பிற்குரிய ராஜன் அவர்கள், நமது சமய மார்க்கம் இலங்கச் செய்வார்கள் என்று சொன்ன சொல் இன்று இத்திருப்பணி மூலம் மெய்ப்பிக்கப் பெற்றிருப்பதை அறிந்து உளம் மிக மகிழ்கின்றோம்.

அவ்வாழ்த்துக்களாவன :—

வாய்மையிற் சிறந்த தொண்டை மண்டல முதன்மையாருள்
தூய்மையாம் குலத்தில் தோனறித் துலங்கும் ஆங்கிலத்தில் தேர்ந்து
சேய்மைசேர் லண்டன் சார்ந்து சிறந்த பாரிஸ்ட ரான
ஆய்மைகொள் பி. டி. ராஜ அமைச்ச நீ வாழி மாதோ.

மந்திரியானுய் என்று வாய்மை கேட்டு உவகை பூத்து
சந்ததம் பழமும் கண்டும் சர்க்கரை தானும் தந்தோம்
எந்தையார் சமய மார்க்கம் இலங்கும் என்று உளத்திற் கொண்டோம்
மந்தரமனைய தோளாய் மற்றினி வழுத்த லென்னே.

எம்மனோர்க்கினியர் நின்போல் எவரையும் காணலாமோ
அம்மையோர் பாகங்கொண்ட அரனருளாலே நீ.........வாழி மன்னே

கவியில் கூறியிருப்பதுபோல் இந்தத் திருப்பணி இனிது நிறைவேறப் பெருந்துணை புரிந்தவர்களில் அறநிலையத் துறை அமைச்சர் கனம் எம். பக்தவத்சலம், கமிஷனர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், திரு. பி. டி. ராஜன், திரு. ஏ. சிதம்பரமுதலியார் ஆகிய நால்வரும், வாய்மையிற் சிறந்த தொண்டை மண்டல முதன்மையாராக அமையுமாறு ஸ்ரீ மீனுக்ஷியம்மை திருவருள் பாலித்திருப்பது சைவ உலகம் எண்ணி எண்ணிப் பூரிப்படைய வேண்டிய காரியமாகும்.

இந்த அரிய பெரிய திருப்பணிக்கு ஒல்லும் வகைகளிலெல்லாம் உதவி புரிந்த தேவஸ்தான தர்மகர்த்தாக்களையும், சமஸ்தானங்களையும், சந்நிதானங்களையும், பொது மக்களையும் சைவ உலகம் பெரிதும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

கும்பாபிஷேக வைபவம் யாதொரு விக்கினமுமின்றி இனிதே வெகு விமரிசையாக முற்றுப்பெறவும், அதில் பங்கு கொண்ட பக்தகோடிகள் அனைவரும் சிந்திக்கும் மனோரத சித்தியும், அரோக திடகாத்திரமும், தீர்க்காயுளும், அஷ்ட ஐஸ்வரிய ஆதிக்கமும், நித்திய மங்கள குருகடாட்சமும் பெற்றுத் திகழத் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

**Sri Swami Sivananda,**
Founder-President.

P. O. SIVANANDANAGAR,
via Rishikesh,
Dt. Tehri-Garhwal,
(Himalayas), India.

28—5—1963.

The exceptional way in which this ancient and great Madura Meenakshi Temple is being presently managed will constitute an example and an ideal to several other leading Temples in the Southern and other parts of India. This Temple has been through the several centuries, and will remain for eternity, a source of Inspiration, Succour, Enlightenment, Peace, Prosperity and manifold Blessing to every devotee who seeks to enjoy and carry away the gifts from the infinite Grace of the all-beautiful and all-compassionate Divine Mother Meenakshi.

No devotee of this all-seeing, all-merciful, living, talking, boon-granting, easily accessible and responsive Mother Meenakshi, has ever stepped into the portals of this Temple, or gone away therefrom, without being the receipient of the double Blessing – Bhukti or all kinds of worldly prosperity and Mukthi or every type of Divine Realization and Attainment.

It is the supreme good-fortune of Bharatadesha, specially of Tamilnad, that the timeless, eternal, infinite Divine Mother has sought to reside, from ancient days, in this Madura-Temple, assume a form, present a name, rceeive worship and respond to the thousand needs of the endless stream of the people and the devotees. And, such is the power of the Grace of the all-powerful Mother Meenakshi that no external force or irreverent restraint whether Governmental or secular and sectarian can encroach upon the Jurisdiction of this Grand Temple, without being foiled. It remains for the thousands of the devotees of the Mother, and the present Temple Executive Members and all those connected with its efficient and ideal running, to labour yet harder for preserving this Temple as the Real Heaven and the most unique Shrine on earth, it has so far continued to be, through several centuries. It rests upon the dynamic energies and the great abilities that most of you command, to sow the seeds for the rise of those Forces which would in the near future, restore to Tamilnad, largely through the many sided activities of this Temple, the reign of prosperity, justice, peace, greatness, happiness, cultural and spiritual attainments, and life's fulfillment, that was established by the age of KANNINAD when the DIVINE MOTHER MEENAKSHI HERSELF was the RULER. Ramaraj of lesser magnificence has remained a difficult ideal; KANNIRAJ of greater magnificence has been a REALITY, and is still so, at least within the precincts of the vast area of this Glorious and Timeless Temple. May MOTHER MEENAKSHI, on the auspicious occasion of the Maha Kumbabishekam, usher in for all India a Grand Age and for all World a Great Life of Peace, Faith, Unity, and Divine Aspirations.




RAJ BHAVAN

Ootacamund,

15—5—1963.

I am delighted to learn that Sri Meenakshi Temple Kumbabishekam Souvenir Committee proposes to publish a Souvenir in connection with the Maha Kumbabishekam on 28th June 1963, containing articles reflecting the cultural and spiritual heritage of Bharat and the contribution of Tamil Nad, spotted with innumerable temples and religious and cultural centres adding lustre to the composite culture of India. I take this opportunity of sending my greetings and best wishes to the Members of the Souvenir Committee for successful propagation of the spiritual and cultural ideas through the souvenir, made available to the large number of devotees assembled on the occasion.

Bishnuram Medhi

Governor of Madras.




RAJ BHAVAN
Trivandrum

14—5—1963.

Dear Sir,

Sri Meenakshi Temple, Madurai, is an institution well-known for many centuries and everybody from north, south, east and west and even from other parts of the world comes and offers worship to the GREAT MEENAKSHI. The temple from the point of view of its artistic and religious aspects is considered to be one of the best and foreigners have much to say eulogising the structure. It is but in the fitness of things that our esteemed Rashtrapatiji has agreed to be present. I wish the Maha Kumbabishekam every success.

Yours Sincerely,

V. Giri

**K. Kamaraj**

Chief Minister of Madras




FORT ST. GEORGE

Madras-9

**14—6—1963**

தமிழகத்தின் வரலாற்றில் இன்று ஒரு பொன்னாள். புனிதமான ஒரு திருப்பணி இன்று மங்களமாய் நிறைவெய்துகிறது. அருளும் அழியாத புகழும் கொண்ட மதுரை இன்று புதுப் பொலிவு பெற்றுள்ளது.

பாண்டிய மன்னர்களின் தலைநகரமாக விளங்கிய மதுரை, தமிழ் வளர்த்தும் தமிழால் வளர்ந்தும் கீர்த்தி பெற்றது. இடைக்காலத்தில் நாயக்க மன்னர்கள் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தை மையமாகக் கொண்டு, இந்த அழகிய நகரை அமைத்தனர். இந்நாட்டின் பெருமைக்கும் கட்டிடக் கலைத் திறமைக்கும் ஒரு சின்னமாக இது விளங்கி வருகிறது.

இன்று மன்னர்கள் இல்லை. குடிமக்களே அரசோச்சும் குடியாட்சி சகாப்தம் மலர்ந்து விட்டது. மன்னர்கள் நடத்திய அறப்பணிகளும் திருப்பணிகளும் இன்று மக்களால் நடத்தப்படுகின்றன. இன்றைய மங்கள விழா அதற்கு ஒரு சான்று.

நமது நாடும் நாட்டின் ஒவ்வொரு அணுவும் மிகப் புனிதமானவை, வழிவழியாக வளர்ந்து வரும் கலையும்: ஞானமும், கலாச்சாரமும் பேணிக் காக்கப்பட வேண்டிய அரிய கருவூலங்கள் ஏனெனில் அவை நமது வாழ்க்கையை மேம்படுத்தும் அருட்செல்வங்கள் என்பதை நாம் உணரவேண்டும். வாழ்க்கையில் பண்பும் பயனும் பெருகும்படியாக அன்பும் அருளும் வளரவேண்டும் என்று வேண்டுகிறேன். கும்பாபிஷேக விழாவிலும் நமது பணிகள் ஒவ்வொன்றிலும் இறை அருள் முன்னின்று உதவ வணங்குவோம்.

கே. காமராஜ்




MADRAS

22—5—1963

I am happy to hear that your great efforts towards the renovation of the gopurams of Sri Meenakshi Sundareswarar temple have been completed and that you are arranging to celebrate the Maha Kumbabishegam on the 28th June 1963.

The temples of South India are mainly responsible for the preservation of our ancient Hindu religion and of our culture. Sri Meenakshi Sundareswarar Temple fulfils the religious aspirations of the man in a pre-eminent way. The ever present grace of Sri Meenakshi who in her living form reveals the Infinite gives man hope and encouragement. To visit the temple is itself an education. Its exquisite carvings, the chiselled figures which by sheer beauty of form and expression have a language of their own and the beautiful tank reminiscent of the Sangam Age, all reveal the glory of our past and the Goddess governs our actions in the present and gives us the hope for the future.

The forthcoming Maha Kumbabishegam signifies the fruition of the efforts of all those who contributed to the renovation of the gopurams. I pray God for the success of the undertaking.

S. Ramachandra Iyer.




DEPUTY MINISTER, RAILWAYS
INDIA
New Delhi

*25—5—1963*

Shri Meenakshi Temple is one of the most famous Temples in India, attracting millions of pilgrims every year. Madurai is known throughout the World because of this great temple and of its magnificent Gopurams which evoke the admiration of foreigners from the West as well as the East.

Renovation of this Temple at considerable cost is a laudable achievement and everyone concerned deserves our grateful thanks. The solemnity of the Kumbabishekam is heightened by the presence of the foremost living Philosopher and spiritual guide of our much troubled World – our revered and beloved Rashtrapati Dr. S. Radhakrishnan.

May this Temple continue to infuse unfaltering Faith for ever in the hearts of all of us poor mortals now living and of generations yet unborn, for eternal glory of our Motherland.

DEPUTY MINISTER FOR HOME AFFAIRS
NEW DELHI-II

8-6-1963

I am very glad that the Maha Kumbabishekam of the Madurai Temple will take place on 28th June, 1963. It is just fitting that our Revered Rashtrapati Dr. S. Radhakrishnan will be present on the great occasion. The Meenakshi Temple at Madurai is a monument by itself and speaks eloquently of our past culture and traditions. The great Goddess Meenakshi is housed in a temple whose exterior architectural beauty can have no match elsewhere. The seat of spiritual life and learning is found in the portals of the Meenakshi Temple. It is very fitting that great Tamil scholars had their abode at Madurai and the early princes of Pandiya line encouraged art and literature through the portals of the Madurai. Temple in a worthy and inspiring manner. In the Meenakshi Temple culture, religion and art exists side by side.

It is our sacred duty to prepetuate the sculptural art, the religious atmosphere and learning at Madurai through the blessings of the Meenakshi Temple.

Though I would like to be present on the great Kumbabishekam, my preoccupations at Delhi prevent me from going over there at the present moment.

I wish the Kumbabishekam all success.




UNIVERSITY BUILDINGS
Triplicane
MADRAS-5.

30—5—1963.

I am extremely happy to note that devotees of our great temples and those responsible for the administration of temples are now taking active steps to see that these ancient shrines are kept in proper conditions, and that their true function as sources of inspiration for the conduct of the public are being taken note of. The Meenakshi Temple at Madurai is one of the oldest in Southern India I am glad that the Kumbabishekam Souvenir Committee is bringing out a Souvenir on this occasion. It is hoped that a historical account of the temple will, as far as it can be rendered, be included, as also an account of the part played by the distinguished rulers of that part in ancient Tamil Nad in the maintenance of the Temple, and the propagation of Indian culture. It was in the year 1909 that I had the privilege of first visiting this Temple, and since then inspite of changes, I am glad to see that the Temple has survived, and is now a great shrine attracting tens of thousands of pilgrims. It is a delight to visit the Temple on Friday evenings, and to see the devotion of worshippers congregated. I hope and trust that with the loving care and the interest taken by the Editor - in - Chief and the Board, this Souvenir will be a monumental one enshrining for ever vivid memories of the Maha Kumbabishekam.

VICE-CHANCELLOR.

"DELISLE"
OOTACAMUND

17—5—1963

It is a matter of great satisfaction and solace to a large number of Hindus that, on account of the indefatigable labours of Sri M. Bhaktavatsalam, Minister in charge of Hindu Religious Endowments, and of of Sri P. T. Rajan, it has become possible, with the collaboration of numerous devotees, to make adequate arrangements for the performance of the ensuing Kumbabishekam.

It it needless to recount the glories or the sanctity of Madura and its renowned temples. The city and the shrines are both inextricably interwoven with the history of India as a whole and in particular of South India and of Tamil poetry and hymnology and the fine arts from the Sangam period. Along with Rameswaram and Tanjore and Chidambaram, Madura has been the scene of the pious labours of countless generations of architects and sculptors who, under the patronage of wise and discerning rulers and patrons, have made these cities world famous. The well - designed renovation of the shrine of the Devi and the gopurams is a welcome sign that the meterialistic outlook that pervaded some parts of this country during the middle of the last century has given place to enthusiastic devotion.

I wish the publication of the Souvenir and the Kumbabishekam celebrations all success.

VICE CHANCELLOR
ANNAMALAI UNIVERSITY

மா. சே. சாரங்கபாணி முதலியார், B.A.,B.L.,
அறநிலையத் துறை ஆணையர்.

சென்னை.
18—6—63

தமிழ் நாட்டில் பழம்பெருந் தலைநகரங்களுள், **மதுரை மாநகரம்** பெரிதும் சிறந்த தொன்று. 2000 ஆண்டுகளுக்கும் முன்பே, அது சீரும் சிறப்பும் உடையதாகத் திகழ்ந் திருந்தது.

சோழர்களின் தலைநகராக விளங்கிய **உறையூர், காவிரிப்பூம்பட்டினம்** முதலிய நகரங்களும், சேரர்களின் தலைநகராகத் திகழ்ந்த **வஞ்சி, கருவூர்,** முதலிய நகரங்களும், தத்தம் பெருமை இழந்து இன்று எளிய சிற்றூர்களாக உள்ளன.

ஆனல் பாண்டியர்களின் தலைநகராகிய **மதுரையும்,** பல்லவர்களின் தலைநகரம் **காஞ்சியும்** மட்டுமே, இன்னும் தம் பழம்பெருமை குன்ருமல் நின்று நிலவிச் சிறந்த பெருநகரங்களாக விளங்கி வருகின்றன. மதுரையில் **மீனுட்சி** அம்மையும், காஞ்சியிற் **காமாட்சி** அம்மையும் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி விளங்கி வருவதே இதற்குக் காரணம் ஆகும் என நாம் துணிந்து கூறலாம். அம்பிகையின் திருவருள் ஆற்றலை நாம் அளவிட்டுக் கூறுதல் இயலுமா? **"அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை யெல்லாம்"** எனத் திருவருட் சக்தியின் செயலை வியந்து சிவஞான சித்தியார் கூறுதல், ஈண்டு நாம் கருதியுணர்ந்து இன்புறுதற் குரியது.

மதுரை மாநகரின் மாட்சிமைகட்கெல்லாம், அதன்கண் அமைந்திருக்கும் **ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர்** கோயிலே, அடிப்படைக் காரணமாகும். நகரின் நடுவண் கோயில் நடுநாயகம் ஆக அமைந்து சிறந்து விளங்குகின்றது. பரிபாடல் என்னும் பழந் தமிழ்ச் சங்கநூல், இச்சிறப்பினைப் பின்வருமாறு பாராட்டிக் கூறுகின்றது.

"மதுரை மாநகரம் ஓர் அழகிய **தாமரைமலர்** போன்றது. அத்தாமரை மலரின் **இதழ்களைப்** போன்று, அந்நகரின் பற்பல தெருக்கள் திகழ்கின்றன. அத்தாமரை இதழ் களின் நடுவில் அமைந்துள்ள அழகிய பொகுட்டுப் போல, அந்நகரின் நடுவண் ஆலவாய் அண்ணல் கோயில் இருக்கின்றது. தாமரை மலரின் **மகரந்தம்** ஆகிய தாதுகள் போல, அங்குள்ள தண்டமிழ்க் குடிகள் வாழ்ந்து வருகின்றனர்.

தாமரையின் தாதுகளை உண்டுகளிக்க வரும் **வண்டுகள்** போல, புலவர் பெரு மக்கள் பலரும் அங்கு வந்து பாடிப் பரிசில் பெற்று மகிழ்ந்து இன்புறுகின்றனர். இத் தகைய பெருமை சான்ற பாண்டியர் தலைநகராகிய மதுரை மாநகர மக்கள், சேரர்களின் வஞ்சியிலும், சோழர்களின் உறந்தையிலும் கோழி கூவும் ஒலி கேட்டு மக்கள் துயில் எழுந்திருப்பதைப் போல அல்லாமல், அந்தணர்கள் நான்மறைகள் ஓதும், ஒலிகேட்டே வைகறையில் துயில் எழுவர்

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர் : பூவின்
இதழ்அகத் தனைய தெருவம் : இதழகத்து
அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல்கோயில் :
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்,
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர் !
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏம இன்துயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் உறந்தையும் போலக்
கோழியின் எழாது எம் பேரூர் துயிலே"

இவ்வழகிய இனிய பரிபாடற் செய்யுள், மதுரை மாநகரின் நடுவிடத்தில் ஆலவாய் அண்ணல் கோயில் அமைந்திருத்தலைப் புகழ்ந்துரைத்திருக்கும் திறம் போற்றி மகிழ்தற்குரியது.

இத்தகைய பெருமை வாய்ந்த ஆலவாய் அண்ணல் ஆகிய ஸ்ரீ மீனுட்சிசுந்தரேஸ்வரரின் கோயிலில் பெரும் பொருட் செலவில் திருப்பணிகள் செய்யப் பெற்று மிகவும் சிறப்புற 28—6—63 அன்று மகாகும்பாபிஷேகம் நடைபெற இருப்பது, இந்நூற்ருண்டின் சிறப்பு நிகழ்ச்சிகளுள் ஒன்ருக மதித்துப் பெரிதும் பாராட்டத் தக்க ஓர் அரும் பெரும் நிகழ்ச்சியாகும்.

"ஒளியால் உலகின் றுயிர் அனைத்தும்
மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே! கன்னி அன்னமே!
அளியால் இமவான் திருமகளாய்,
ஆவி யன்ன மயில் பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து
விளையாட் டயரும் செயல் என்னே!

எனத் திருவிளையாடற் புராணம் பாடியருளிய பரஞ்சோதி முனிவர் பாடுதல் போன்று மீனனது தான் இட்ட முட்டைகளைத் தனது கண்ணின் பார்வையாற் குஞ்சு பொரிக்கச் செய்து போற்றிக்காத்தல் போல, உலகத்தில் உள்ள உயிர்த்திரள்களையெல்லாம் தன்னுடைய அருட் கடைக்கண் பார்வையினுல் நோக்கிக் காப்பாற்றி யருள்பவள் ஸ்ரீமீனுட்சிதேவி!

அத்தேவியின் திருவருளால், மகா கும்பாபிஷேகம் சிறப்புற நிகழவும், அதனுல் நம் நாடும் உலகமும் நலம்பல பெற்று இன்பம் எய்தவும்,

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சிறந்து"

மன்னுயிர்கள் அனைத்தும் வாழவும், ஸ்ரீ மீனுட்சி அம்மை ஸ்ரீ சுந்தரேஸ்வரர் திருவடிகளை நாம் நம் மனமொழி மெய்களால் வணங்கி வழிபடுவோமாக!

**அ. சக்கரை, பி. ஏ., பி. எல்.,**
அறநிலையத்துறை துணை ஆணையர்.

மதுரை
22—6—63

"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று ஞானசம்பந்தப் பெருமான் வலஞ்சுழியில் வழிபட்ட போது பாடினார். அதனையே இன்று நாம் திரும்பப் பாடி மகிழவேண்டிய நிலையில் உள்ளோம். தமிழ்நாடு திருக்கோயில்களின் நிறைவால் பெருமை பெற்றது. தன்னுடைய சின்னமாக வானுயர் கோபுரத்தையே கொண்டதாக விளங்குவது. அத்தகைய நாட்டில் "கோபுரம் சூழ் மணிக்கோயிலாக"த் திகழ்வது அன்னை மீனாட்சியின் ஆலயமாகும்.

தமிழ்நாட்டில் பழமையும் பெருமையும் பெற்று விளங்கும் நூற்றுக்கணக்கான திருக்கோயில்களில் திருப்பணிகளும், கும்பாபிஷேகங்களும் அண்மையில் நிகழ்ந்து வருவதனைத் தமிழ்நாட்டு மக்கள் அறிவார்கள். அவற்றால் திருக்கோயில் வழிபாடும், சமய வளர்ச்சியும் ஓங்கி வருகின்றன. அவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போன்று துவாத சாந்தப் பெருவெளியாக விளங்கும் மதுரைத் திருக் கோயிலின் திருப்பணிகளும், மகா கும்பாபிஷேகமும் நிகழ்கின்றன.

இதற்கெல்லாம் காரணமாக விளங்குபவர்கள் அறநிலையத்துறை அமைச்சர் "நல்லறங்காவலர்" கனம் பக்தவத்சலம் அவர்களே. அறநிலையத்துறை அமைச்சராக அவர்கள் பதவியேற்ற நாள் முதல் அறநிலையங்களின் பணிகள் சிறந்தோங்கி வருகின்றன. தற்போது அவர்கள் அமெரிக்காவில் இருந்தாலும் அவர்களின் சிந்தையெல்லாம் மதுரைத் திருக்கோயிலின் திருப்பணிகளிலும், கும்பாபிஷேக நிகழ்ச்சிகளிலுமே இருப்பதனை அண்மையில் அந்த நாட்டிலிருந்து அவர்கள் எழுதியுள்ள கடிதம் கூறுகிறது. இதிலிருந்து அவர்களின் அறநிலையம் காக்கும் அரும் பணித்திறத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் ஈடுபாட்டுடன் தமிழ்நாட்டின் தனிப் பெரும் திருப்பணித் தலைவராக விளங்கும் தமிழவேள் உயர்திரு. பி. டி. ராசன் அவர்களின் பெருமுயற்சியின் காரணமாக யாராலும் நினைத்துக்கூடப் பார்ப்பதற்கு முடியாத அளவில் மதுரைத் திருக்கோயில் திருப்பணிகள் நிகழ்ந்து தமிழ்நாட்டின் தனிப்பெரும் கும்பாபிஷேக விழா நடைபெறுகிறது. இத்தகைய அரிய வாய்ப்பினைப் பெற்ற தமிழ்நாட்டு மக்களாகிய நாம் செய்த புண்ணியம் அளவிடற்கரியதாகும். நாம் பெற்ற புண்ணியத்தின் விளைவாகவே இக்கும்பாபிஷேக விழாவை நம் வாழ்நாளில் கண்டுகளிக்கும் வாய்ப்பினைப் பெற்றுள்ளோம். இத்தகைய அரிய வாய்ப்பினை நல்கித் திருவருள் கூட்டும் அன்னை மீனாட்சி, அண்ணல் சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளில் வணங்கி வாழ்த்துவதன்றி என்ன கைம்மாறு செய்ய முடியும்?

திருப்பணியைத் திறம்பட இயற்றி அண்ணலார் கும்பாபிஷேக நல்விழாப் பொலிவு கண்டு மகிழ்கின்ற நிலையினுக்கு ஆளாக்கிய திருப்பணிக் குழுவினர்க்கும் அதன் ஒப்பற்ற தலைவர் உயர்திரு. பி. டி. ராசன் அவர்கட்கும் செய்ந்நன்றி மறவாச் செந்தமிழ் நாட்டு மக்களாகிய நாம் என்றும் கடப்பாடுடையவர்கள்.

இம் மதுரைக் கோயில் தமிழ் நாட்டின் தனிப்பெருமையை விளக்குவதாக அமைந்ததோடன்றி, பாரதத்தின் பண்பார், சமயநெறியின் உயர்வைக் காட்டுவதாகவும் அமைந்துள்ளது. இக் கோயிலின் கும்பாபிஷேக விழா மக்களின் மாபெரும் விழா. மாபெரும் தத்துவ ஞானியாகவும் நம் குடியரசுத் தலைவராகவும் விளங்கும் டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்கள் மகா கும்பாபிஷேக வைபவத்தில் கலந்து கொண்டு சிறப்பிப்பதால் பாரதநாட்டுக் கோடானகோடி மக்களும் அருட்பிரசாதம் பெறுவதாகவே கருதுகிறோம். இந்த நல்ல நாளில் இவ்விழாவின் நினைவு என்றென்றும் நிலைத்திருக்கும் வகையில் வெளிவருகின்ற கும்பாபிஷேக மலர் ஓர் கலைக் களஞ்சியமாக விளங்குகின்றது.

வாழ்க திருப்பணியாளர்! வளர்க திருக்கோயில் வழிபாடு!!

**D. Ramalinga Reddy**, M.A.,B.L.,
Deputy Commissioner.

H. R. & C. E. (Admn) Dept.
Madras-34.

எத்தனையோ மகான்கள், அரசர்கள், அரசிகள், சிவனடியார்கள் இந்தக்கோவில் நிர்மாணத்திற்குக் காரணஸ்தர்களாக இருந்து இந்தக்கோவில் கலைகள் ஓவியங்கள் எல்லாம், எல்லாப் பக்தர்களுக்கும் அன்பளிப்பாகச் செய்துவிட்டுப் போயிருக்கிறார்கள். இது எல்லா இந்துக்களுக்கும், அதிலும் தமிழர்களுக்கு, முக்கியமாக பிதிரார்ஜித சொத்தாக உளது. பல மன்னர்களாலும், தனவான்களாலும் கோயில் அவ்வப்போது பழுது பார்க்கப்பட்டு வந்துள்ளது. இந்தக்கோவிலுக்கு நாளடைவில் ஏற்பட்ட பழுதுகளைச் சரிபார்த்து, மதில்கள், கோபுரங்கள் இவைகளை அழகுறச் சீர்படுத்தித் திருப்பணி நடத்தி, புனருத்தாரண வேலைகளை முடித்து, நம் கண்முன்னில் கும்பாபிஷேகம் ஆகம சாஸ்திரத்திற்குட்பட்டு ஜகத்குரு காஞ்சிகாமகோடி சங்கராச்சாரிய சுவாமிகளின் முன்னிலையில் இந்த வைபவம் காணும் பாக்கியம் சகலருக்கும் அளித்த சர். பி. டி. ராஜன் திருப்பணிக் குழுவினருக்கு எல்லாப் பக்தர்களுடைய நன்றி உரித்தாகுக.

பலவகையாலும், மேம்பாடுற்று விளங்கும் மதுரையம்பதியை வந்து வணங்கி, சிறந்த மகிமையுடன் திகழும் மதுரைச் சொக்கநாதர் மீனாட்சி அடிமலர் தொழுது உய்வோமாக ;-

"தர்மம் வளர, சத்தியம் நிற்க, என்றென்றும் வாழ்க சமயம்!"

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கை மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடொறும் பரவ
பொங்கழ லுருவன் பூதநாயகனால் வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவா யாவது மிதுவே."

[ திருஞானசம்பந்தர் ]

அ. சிதம்பர முதலியார், M. L. C.
ஸ்ரீ மீனாட்சி கோயில் தருமகர்த்தா தலைவர்,
திருப்பணிக் கமிட்டித் துணைத் தலைவர்.

மதுரை
22—6—63

சுதந்திர இந்தியா மாபெரும் பொருளாதார முயற்சியிலே முன்னேறி வருகிறது. வாழ்க்கை நிலைகளை உயர்த்தவும், விளைச்சலைப் பெருக்கவும், விரிவான அடிப்படையிலே தொழில்களை நிறுவவும், வேலை வாய்ப்புகளை மிகுவிக்கவும், சிறார் அனைவருக்கும் கல்வி அளிக்கவும், நல்ல சமூக மரபுகளை வளர்க்கவும் ஜனநாயக முறைகளின் மூலம் நமது மாபெரும் நாடு சொந்த முயற்சியால் முன்னேறி வருகிறது. இந்த முயற்சி உலகோர் கண்ணையும் கருத்தையும் ஈர்த்துள்ளது.

பெரும் பயன் உள்ள முழு வாழ்வு வாழ்வது நம் குறிக்கோள். ஜனநாயக சக்தி அமைப்புகளால் மட்டும் இது எய்தக் கூடியது அல்ல. ஏன் என்றால், உலகத்திலே ஒவ்வொரு நாட்டு மக்களும் தத்தமக்குரிய சொந்த வழிகளிலே முன்னேறி வருகின்றனர் சில தேசங்கள் அரசியல் மூலமாகவும் மற்றும் சில வேறு விதமாகவும் முன்னேறுகின்றன. நமக்கு ஆதாரம் மதமே ஆகையால் அதன் மூலந்தான் நாம் நமது காரியங்களை நடத்த வேண்டும். அரசியல் சமூக சீர்திருத்தங்கள் எதுவானாலும் நமக்கு மதத்தின் மூலமாய்த்தான் வரவேண்டும் என்பதை, பொது வாழ்க்கையிலே என் அனுபவத்தின் மூலம் நான் உணர்ந்திருக்கிறேன். 'மதமே நமது தேசீய வாழ்க்கையாகிய சங்கீதத்திலே பல்லவியாகவும் மற்றவை எல்லாம் சரணங்களாகவும் அமைந்திருக்கின்றன' என்பதை, மதுரைக் கோயிலின் மாபெருந் திருப்பணியும் மகா கும்பாபிஷேகமும் உணர்த்தாமல் இரா. நமது முன்னோர்கள் நம் கோயில்களைப் பாதுகாத்திராவிடின் இன்று நாம் உலகோர் முன் தலை நிமிர்ந்து நடக்க முடியுமா? நமது ஆலயங்கள் சரித்திர புத்தகங்களைவிட யதார்த்தமாய் நமது நாட்டவர் மனப்போக்கைக் காட்டிக் கொண்டிருக்கின்றன. அந்த வழியிலே சென்று நாமும் பெருமை அடைவோமாக.

திரு. நெ. து சுந்தரவடிவேலு, சென்னை
கல்வி இயக்குநர்.

# வாழும் வழி

நாம் வாழப்பிறந்தோம்; சும்மா இருக்கப் பிறந்தோம் இல்லை. கொள்கையோடு, நெறியோடு, முறையோடு வாழ்வது வாழ்க்கை. எப்படியோ மூச்சை வைத்துக்கொண்டிருப்பது இருப்பு. நாம், வாழ முயல வேண்டும்; இருப்போடு திருப்தி அடையக் கூடாது.

உடலுக்கு உணவு, வாழ்விற்குக் கொள்கைகள். உணவு பலவகை, கொள்கைகளும் பலவகை. சமூகக் கொள்கைகள், சமயக்கொள்கைகள் வாழ்விற்கு உணவாகப் பயன்படுகின்றன.

வாழும் முறையென்ன? ஞாயிற்றை நோக்குவோம். திங்களைக் காண்போம். தென்றலைத் துய்ப்போம். ஒளியும் சூடும் தரும் ஞாயிறு, அண்டி வந்தவர்களை மட்டுமா ஆதரிக்கிறது? எங்கெங்கோ இருக்கும் உயிர்களைத் தேடிச்சென்று ஒளியூட்டவில்லையா? வெப்பந்தந்து வாழவைக்க வில்லையா? திங்களாவது மறைந்து கிடக்கிறதா? தேடிவந்தால் பார்க்கலாம் என்கிறதா? இல்லையே. பருவத்தில் தோன்றி, தண்ணொளி வழங்குகிறதே. தென்றல்தான் என்ன? வேண்டுவோர், வாருங்கள் நெடுந்தொலைவு, என்று முறைத்துக் கொண்டு நிற்கிறதா? எங்கே பிறந்தாலும் எங்கெங்கோ வீசி மகிழ்வூட்டுகிறதே; இவற்றில் எதுவும் தன் இயல்பை மறைக்கவில்லை. தன்னாற்றலை முடக்கிப் பதுக்கி வைக்கவில்லை, தேடித் தொண்டு செய்கின்றன; எல்லா உயிர்களுக்கும் தொண்டாற்றுகின்றன.

நமக்கும் அதுவன்றோ வழி? தொண்டல்லவா பிறவிப்பயன்? தொண்டு வாழ்வன்றோ நிறைவாழ்வு?

# சிவ சக்தி

சுவாமி சித்பவானந்தர்

எங்கும் நிறை கடவுளைக் காண நமக்கு இயலாதிருப்பது ஏன் என்ற கேள்வியைச் சிலர் கிளப்புகின்றனர். தோற்றத்திலும் தோற்றத்துக்கு அப்பாலும் இருப்பவன் கடவுள் ஒருவனே. அவனைத் தான் நாம் சதா கண்டு கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் அவனை அங்கீகரிக்கின்றோமில்லை. கோணலான மனதைக் கருவியாகக் கொண்டு அவனைக் காணுதலே திரிவுபட்ட தோற்றத்திற்குக் காரணமாகும். இந்நிலைமையிலிருக்கும் நாம் ஒழுங்குபடுதற்கு சக்தி தத்துவமும் சக்தி உபாசனையும் பெரிதும் பயன்படும். சிவம் வேறு, சக்தி வேறு அன்று. சிவம் என்பது மெய்ப் பொருள். முக்காலத்திலும் இது மாறுத, அழியாத தன்மையுடையது. பிரியாது இதனிடத்து நிலைத்துள்ள விபூதி அல்லது சம்பத்துக்குச் சக்தியென்று பெயர். ஒரு உதாரணத்தால் இதை நன்கு விளக்கலாம். பாலினிடத்து வெண்மை நிறமிருக்கிறது. ரத்தினத்தில் ஒளியிருக்கிறது. வெண்மையின் உதவியைக் கொண்டும், ஒளியின் உதவியைக் கொண்டும் பாலையும் ரத்தினத்தையும் நன்கு அறிகின்றோம். பாலினின்று வெண்மையைப் பிரிக்க முடியாது. அதே மாதிரி சிவத்தினின்று சக்தியை பிரிக்கமுடியாது. ஆதலாலே தான் உமா மகேசுவரன் என்றும் லக்ஷ்மி நாராயணனென்றும் பரம் பொருளை அழைக்கின்றோம். உமை அல்லது லக்ஷ்மி என்கின்ற ஐசுவரியத்தையுடைய பரம புருஷன் என்று இப்பெயர்கள் பொருள்படுகின்றன. அண்டங்கள் அனைத்தும் சிவசக்திமயமாயிருக்கின்றன. சிவம் என்பது சேதனம், அறிவுப் பொருள். சக்தியென்பது அசேதனம், ஜடப்பொருள். இவை யிரண்டும் இணைபிரியாது உலகெங்கும் இயங்குகின்றன. மானுட அமைப்பை உதாரணமாக எடுத்துக் கொண்டால் அதன் மாட்டுச் சேதனமும் அசேதனமும் கலந்திருப்பதைக் காணலாம். உடல் அறிவில்லாதது, அசேதனம். ஆனால் அதன் மூலம் அறிவு சொரூபியாகிய ஆத்மா பிரகாசிக்கின்றது. இயற்கையிலேயே எத்திசை திரும்பிப் பார்த்த போதிலும் இக்கூற்று நிரூபிக்கப் படுகின்றது. தீ எரிகிறது, காற்றடிக்கிறது, மழை பெய்கிறது, பூமி சுழல்கிறது, பருவம் மாறுகிறது, அண்டங்கள் இயங்குகின்றன; உயிர் வாழ்வன தோன்றி மறைகின்றன; இவையனைத்திலும் சக்தியின் மூலம் சிவம் ஆனந்தத் தாண்டவமாடுகிறது. சிவ-சக்தி, லக்ஷ்மி-நாராயணன், ராதா-கிருஷ்ணன், சீதா-ராமன், புருஷன்-பிரகிருதி இத்தியாதி பெயரிட்டு அழைக்கப்படும் வஸ்து, பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது. மக்கள் அனைவரும் அதன் மயம்; அதைத்தான் அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். ஆனால் அவரவர் அறிவுக்கு ஏற்றவாறு அவர்கள் அதைப் பொருள்படுத்துகின்றனர்.

**சக்தியின் ஆற்றல் :**

பிரபஞ்சம் முழுவதும் மாயாசக்தியின் சொரூபம். மாயை என்னும் பதத்தை சூனியம் என்றும் மித்தை அல்லது பொய் என்றும் தப்பாகப் பொருள் படுத்துவார் சிலர் உண்டு. மாயாவாதம் என்னும் ஒரு சம்பிரதாயத்தைப் பற்றி

மாறுபாடும் அபிப்ராயங்கள் இருந்து வருகின்றன. மித்தையாகிய இவ்வுலகம் முக்காலத்திலும் இல்லவே இல்லையென்று வாதிப்பாரும் இதற்கு மாறாக இக்கூற்றைக் கண்டிப்பாரும் ஆகிய இரு பிரிவினர் உளர். ஆனால் மாயையை வெறும் வாதமல்ல என்று அறிவது அவசியம். உலகத்தைப் பற்றிய உண்மையை விளக்குவது மாயை. யாண்டும் அழியாது நித்தியமாய் இருப்பது பரம்பொருள். அக்னியில் உஷ்ணம் போன்று என்றும் பிரியாது இப் பரம் பொருளைச் சார்ந்திருக்கும் ஆற்றலுக்குச் சக்தி அல்லது மாயை என்று பெயர். இந்தச் சக்தியானது க்ஷணந்தோறும் சலித்துக் கொண்டிருக்கிறது. ஜகத் என்பதன் பொருள் மாறுபடும் தன்மையுடையது என்பதாம். சதா அது உருமாறிக் கொண்டிருப்பதால் குறிப்பிட்ட ஒரு வடிவம் அல்லது ரூபம் நிலைத்ததன்று. ரூபம் திரிவுபடும்போது அதன் பெயரும் மாறுகிறது. நாம ரூபங்கள் தான் மித்தையேயொழிய ரூபங்களை எடுக்கவல்ல சக்தி மித்தையன்று. அது சிவத்தைச் சார்ந்த திரு அல்லது விபூதியாம்.

சக்தியின் திருவிளையாட்டை அணு முதல் அண்ட பகிரண்டம் வரை எங்கும் காணலாம். இப்பூமியைப் போன்ற எண்ணிறந்த கிரகங்கள் ஒன்றையொன்று அதிவேகமாகச் சுற்றிக் கொண்டு ஓடுகின்றன. இவ்வாறு கிரகங்களைச் சுழல வைப்பதற்கு ஆகர்ஷண சக்தியென்று பெயர். இச்சக்தியின் வன்மையால் பந்துகள் போன்று அவை யாவும் ஆட்டப்படுகின்றன. ஆனால் நிலை குலையாது ஒழுங்காக அவைகள் சுழல்வதினின்று ஆட்டுவிக்கும் சக்தி அறிவுமயமானது என்பது விளங்கும். பராசக்தியின் இத்தகைய விளையாட்டு மனதுக்கு எட்டாத வண்ணம் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. பரந்த விண்ணகத்தினுள் நாம் வசிக்கும் இந்த மண்ணகமானது ஒரு அணுப்புள்ளி போன்றது. இதனுள் நடைபெறுகின்ற மாயா சக்தியின் லீலா விசித்திரம் மனிதனை மயங்கிடப்பண்ணிவிடுகிறது. பர்வதங்கள் ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்பதும் அவைகளினின்றும் அருவிகள் கர்ஜித்தும் விரைந்தும் வீழ்வதும், மேகம் மின்னி ஒளி வீசி இடிப்பதும், மழை தாரை தாரையாகப் பெய்வதும் இயற்கையின் பேராற்றலைப் பற்றி ஞாபக மூட்டுகின்றன. நீராவியும், மின்சாரமும் யந்திரங்களின் மூலம் செய்யும் நானாவித வேலைகள் அதன் வலிமையை விளக்குகின்றன. இனி உயிர்ப் பிராணிகளின் வாழ்வு முறையை ஆராயுமிடத்தும் சக்தியின் விளையாட்டு வெளியாகின்றது. ஜீவஜந்துக்கள் தத்தம் இனம் சேர்ந்திருப்பது, இனம் காப்பதும், இனம் பெருக்குவதும், சத்துருவோடு சண்டையிடுவதும் சக்தியின் ஜீவ தத்துவத்தைக் காண்பிக்கின்றன. மானுடவர்க்கத்தினுள் இதே இயக்கம் அதிக ஆற்றலுடனும் அறிவுடனும் கூடியதாக இருக்கிறது. ஒரே மின்சார சக்தி நானாவித முறைகளில் இயங்கி வருவது போன்று உயிர் வாழ்வன அனைத்தையும் ஒரே பிராண சக்தி ஆட்டி வைக்கின்றது. வாழ்வில் வைத்திருக்கும் பற்றை நீக்கிப் பரந்த நோக்கத்துடன் பார்ப்பார்க்கு இவ்வுண்மை விளங்கும்.

ஜடப் பொருளில் இயங்குகின்ற சக்தி ஒன்றுக்கொன்று உடன்பாடாயிருக்கும் போது அதற்கு கவர்ச்சி (attraction) என்று பெயர்; எதிர்மறையாயிருக்கும் போது அதற்கு விலக்கு (repulsion) என்று பெயர். ஜீவிய தத்துவத்தில் இதே

சக்தி விருப்பு வெறுப்பு என்ற பெயர்கள் படைக்கின்றது. இனியதில் விருப்பும் இன்னுததில் வெறுப்பும் கொள்வது முன் னேற்றம் அனைத்துக்கும் முகாமையாகின் றது. இவையிரண்டையும் கடந்தது அன்பு. பராசக்தி அன்பில் சம்பூரண நிலை யடைகின்ருள். இன்சொல் முதலிய மேலாம் தன்மைகள் அன்பினின்று உதிக் கின்றன. துன்பத்தையும் மனக் குழப்பத் தையும் மாற்றுதற்கு அன்பு செறிந்த இன்சொல் ஒன்றே மருந்தாகும். இது அதி சூட்சுமமாய் இருக்கின்றமையால் இதன் ஆற்றல் எளிதில் விளங்குகிற தில்லை. ஆயினும் உலகனைத்தும் அன்பின் வசப்பட்டிருப்பது உண்மை. இதைக் கரவாது எடுத்து மண்ணுலகில் வழங்கி யவர்களே மகாபுருஷர்கள். "சக்தியாய்ச் சிவமாய்" என்று பகர்ந்த பெரியோர்கள் "அன்பே சிவம்" என்றும் பகர்ந்தருளி யிருக்கின்றனர். சிவனுக்குச் சக்திமான் என்பது மற்ருெரு பெயர். ஏனென்ருல் அவன் அன்பு வடிவினன்; ஆற்றல் அனைத்தும் அவனிடத்திலிருந்து உதிக் கின்றது. ஆதலால் எல்லாம் வல்ல பரம் பொருளின் இயங்கும் தன்மைக்குச் சக்தி யென்றும் இயங்காத் தன்மைக்குச் சிவ மென்றும் பெயர்.

---

## என்னுல் சோதிக்கக்கூடுமா ?

வேதியாய் வேத வினைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீள்ஒளியாய்
ஆதியாய் ஈருய் நடுவாய் அவை கழிந்த
சோதியாய் நின்ருய் என் சோதனைத்தோ நின்இயல்பே ?

நின்னுல் மொழிந்த மறை நின் அடிகள் வந்தித்தும்
பன்னுள் அருச்சித்தும் பாதம் தலை சுமந்தும்
உன்நாமம் வாசித்தும் உன்னை அறியேன் என்று
சொன்னுல் அடியேன் என் சோதனைத்தோ நின்இயல்பே ?

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினும் சிறியதுமாய்
அரியதினும் அரியதுமாய் எளியதினும் எளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானும் காட்சியுமாய் அவை கடந்த
துரியமுமாய் நின்ருய் என் சோதனைத்தோ நின்இயல்பே ?

—பரஞ்சோதி முனிவர்.

# பராசக்தி

P. K. ஷண்முகநாதன், B. A., B. L.

இவ்வுலகில் நிலவிவரும் ஆஸ்திக சமயங்கள் யாவும் இந்தப் பிரபஞ்சத்துக்கு, சிருஷ்டி ஸ்திதி லய காரண வஸ்து ஒன்று இருக்கவேண்டும் என்ற முடிவுக்கே வந்துள்ளன. இதற்கு, சமயங்கள் தோறும் வெவ்வேறு பெயரிட்டு இதை வழங்கி வழிபட்டு வருகிறார்கள். உபநிஷதங்கள் இதனை ப்ரம்ஹம் என்ற பெயரால் குறிப்பிடுகின்றன. சைவர்கள் சிவம் என்கிறார்கள். வைணவர்கள் நாராயணன் என்கின்றார்கள். சாக்தர்கள் பராசக்தி என்று அழைக்கின்றார்கள். ப்ரம்ஹத்தின் லக்ஷணம் கூற முயற்சி செய்த உபநிஷதங்களும், சமயிகளும், அது மனவாக்குக் கெட்டாதது; நிற்குணமானது; உபாதி ரஹிதமானது; நாமரூபமற்றது; சுத்த சைதன்ய கேவலமானது என்றே கூறியிருக்கின்றனர். பழந் தமிழன் இதை, கந்தழி என்றான். கட்டுக்கடங்காதவன், கட்டப்படாதவன்; கட்டு இல்லாதவன் என்பது அதன் பொருள். இறைவன், கடவுள், இயவுள், கொடிநிலை என்பனவும் இவ்வஸ்துவின் பெயர்கள் தாம். இது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல. ஆயினும், மனோவாசாமகோசரமாய் இருக்கும் ஒன்றை நாம் மனதில் அனுஸந்தானம் பண்ணும் போது நமக்குப் பழக்கமான ரூபம் ஒன்றை அதற்கு ஆரோபணம் செய்து வழிபடுகிறோம். இந்த நிலைக்கு தடத்த லக்ஷணம் என்று பெயர்.

**சக்தி—பொது இயல்பு :**

நிருபாதிக ஸம்வித் ரூபமான ப்ரம்ஹம் பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கின்றது என்றால் அதைத் தொழில் படுத்துவது எது? ஒரு மனிதன் ஒரு காரியத்தைச் செய்ய ஆற்றல் உடையவனாக இருக்க வேண்டுவது போல, இந்த சொரூப விச்ராந்தியாய் இருக்கும் ப்ரம்ஹத்தில் அக்கினியில் சூடுபோல, அபின்னமான ஆற்றல் ஒடுங்கிடக்கின்றது. இந்த ஆற்றல் தான் சக்தி என்பது. இந்த சக்தியைப் பெண்பாலாகக் கூறுவது மரபு. ஆற்றல் பெண்ணாகும் போது அதனை உடைய வஸ்துவை ஆண்பாலாகக் கருதும் நிலை ஏற்படுகின்றது. உண்மையில் சிவம் சக்தி என்பவை வெவ்வேறு வஸ்துக்கள் அல்ல. ஒரே பூர்ண வஸ்துவின் இரண்டு பரிணாமங்களேயாகும். சக்தியின்றிச் சிவமில்லை, சிவமின்றிச் சக்தியில்லை. ஆற்றலையும் அதனை உடையவனையும் இரண்டாகப் பிரிக்க முடியாது, ஆயினும், இரண்டுவித பாவம், ஏற்படுகின்றதல்லவா? பாஸ்கர ராயர் எழுதிய "வரிவஸ்யா ரஹஸ்யம்" என்ற நூலின் நான்காவது சுலோகத்தில் "மஹாபிரகாசமான சிவத்துக்கு இயற்கையாகவே சலிக்கின்ற (ஸ்புரிக்கின்ற, அசைகின்ற, துடிக்கின்ற) விமர்சம் என்ற சக்தியுள்ளது. இந்த சக்தியோடு சேர்ந்தே சிவம் ஜகத்தை சிருஷ்டிக்கின்றது, காப்பாற்றுகின்றது, ஸம்ஹரிக்கின்றது", என்று கூறப்பட்டிருக்கின்றது. மேலும் இந்த சக்திக்கு, பராசக்தி என்றும், ஆதி சக்தி என்றும், பராபட்டாரிகா என்றும், லலிதை என்றும், காமேஸ்வரி என்றும், திரிபுர ஸுந்தரி என்றும் பல நாமங்கள் உண்டு. அருவமாய் இருக்கும் சிவத்திலிருந்து சக்தியின் அதிஷ்டானத்தால் பிரபஞ்சமாய் விரியும் நியதியில் ஒவ்வொரு படியிலும்,

ஒவ்வொரு நிலையிலும் சக்தி சிவத்தை அதிட்டிப்பதால் பல்வேறு பெயர்களால் அவள் அழைக்கப்படுகின்றாள் என்று லக்ஷ்மீதரர் என்பார் எழுதுகிறார். எனவே பராசக்தியின் ரூப பேதங்கள் அநேகம்.

சக்தியின்றி, சிவம் தொழில்படாது. சக்தி அதிட்டிப்பதாலேயே, ரூபமற்றதற்கு ரூபமும், குணமற்றதற்குக் குணமும், நாமமற்றதற்கு நாமமும் உண்டாகி விடுகின்றன. சக்திக்கும் சிவத்துக்குமுள்ள உறவை, திருமூலர்,

வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும், மகளும், தாரமும் ஆமே.

என்றார். மாணிக்கவாசகர் இம்மூன்று வித உறவேயன்றி நான்காவதான சம்பந்தமும் கூறுகின்றார்.

இமவான் மகட்குத்
தன்னுடைக் கேள்வன், மகன், தகப்பன்,
தமையன்''

என்று சகோதர பாவத்தையும் சேர்க்கின்றார். இவ்வாறு பராசக்தியானவள் சிவத்துக்குத் தாயாகவும், மகளாகவும், மனைவியாகவும், சகோதரியாகவும் இருந்து அவனைத் தொழிற் படுத்துகிறாள். அவளுடைய சேர்க்கையாலேயே இறைவன் பிரபஞ்சமாய் விரிந்து, இருந்து, ஒடுங்குகின்றான். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பது பழமொழி. ஆனால் அவளன்றி அவன் அசையமாட்டான். 'ஸ்பந்திது மபி நகலு குசல: என்பது சங்கரர் வாக்கு.

மேலும் சக்தியின் அருளாலேயே உயிர்கள் சிவத்தை அறியவும் அடையவும் முடியும். சக்தியின் அருள் தோய்ந்தாலன்றி சிவத்தின் அருள் கிடைக்காது.

"எங்கோ மான் அன்பர்க்கு முன்னி அவள்
நமக்கு முன் சுரக்கும் இன்னருள்''

என்கின்றார் மாணிக்க வாசகர். இதைத்தான் சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் **சக்திநிபாதம்** என்ற சொல்லால் குறிக்கின்றன. ஞானவாசிஷ்ட சுலோகம் ஒன்றில் 'எப்படி வாயுவானது அதன் அசைவால் அறியப்படுகின்றதோ, எப்படி நெருப்பானது அதன் சூட்டால் அறியப்படுகின்றதோ, அதுபோல சின்மாத்ரமாயும், அமலமாயும், சாந்தமாயும் இருக்கும் சிவம் அதனுடைய ஸ்பந்தமயமான (துடிப்பு = Vibration) சக்தியினால் மட்டுமே அறியக் கிடக்கின்றது. வேறு ஒன்றினாலும் அல்ல, என்று கூறப்பட்டிருகின்றது. சைவ சித்தாந்த நூல்களில் ஒன்றாகிய திருக்களிற்றுப்படியாரில்

ஆகமங்கள் எங்கே? அறு சமயம் தானெங்கே?
யோகங்கள் எங்கே? உணர்வெங்கே?—பாகத்து
அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யார் அறிவார் ? பேசு !

என்றும் கூறப்பட்டிருக்கின்றது. உலக வழக்கிலும், தாய் காட்டத்தான் சேய் தகப்பனை அறிகின்றது. இறைவனின் பாதி உடலை ஆக்கிரமித்துக் கொண்டு அவனை ஆட்டிவைக்கிறாள். நம் சமய குரவர் இவ்வாறு ஆதியும் பாதியுமாகவே கண்டு மகிழ்ந்தனர். 'தோடுடைய செவியன்' என்றும் 'உண்ணாமுலை உமையாளொடு உடனாகிய ஒருவன்' என்றும், 'பெண்சுமந்த பாகத்தன்' என்றும்

"தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்
பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி''

என்றும் இன்னும் எண்ணிறந்த பல

பாடல்களிலும் சக்தியோடு சேர்ந்த சிவமே கூறப்பட்டிருக்கின்றது. சிவம் பிரகாசாம்ஸம். சக்தி விமர்சாம்ஸம். சிவம் பொருள், சக்தி சொல், சக்தி உடல், சிவம் உயிர்.

" சரீரம் த்வம் சம்போ; சசி
மிஹிர வக்ஷோருஹ யுகம்"

அதாவது 'தாயே, நீ பரமசிவனுக்கு சூர்ய சந்த்ரர்களை இரு ஸ்தனங்களாக உடைய சரீரமாக இருக்கிருய்?' என்று சங்கரர் கூறுகின்ருர். இவ்வாறு பொது இயல்புகளில் பராசக்தியின் பிராதான்யத்தை, சைவ சித்தாந்தமும் சாக்த சித்தாந்தமும் கூறியிருக்கின்றன.

## சக்தி-சிறப்பு இயல்பு

**குண்டலினி :**

பிரபஞ்சத்துக்கு அன்னையும் பிதாவுமாக இருப்பவர்கள் சக்தியும் சிவமும். நமது உடலை 'க்ஷுத்ர ப்ரம்மாண்டம்' என்று கூறுவர். அதாவது சிறிய அண்டம் என்று பொருள். 'அண்டத்திலுள்ளது பிண்டத்தில்' என்பது பழமொழி. அண்டத்திலுள்ள தொண்ணூற்ருறு தத்துவங்களும் நமது சரீரத்திலும் இருக்கின்றன என்பது அதன் பொருள். நமது திரேகத்தில் சிவசொருபமாய் இருப்பது ஆன்மா. சக்தி சொருபமாய் இருப்பது குண்டலினி. குண்டலினி என்பது, சக்தி ஸ்வரூபம் என்பதை லலிதா ஸஹஸ்ரநாமாவிலும், சங்கரரின் ஸௌந்தர்ய லஹரியிலும், ஏனைய சாக்த தந்த்ர சாஸ்த்ரங்களிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.

**சுழுமுனை நாடிகள் :**

நமது உடலில் முதுகு எலும்புக் கோர்வை மிக முக்யமான அவயவம். இக் கோர்வைக்கு மேரு தண்டம் என்றும் வீணு தண்டம் என்றும் பிரம்மதண்டம் என்றும் பெயர்கள் உண்டு. இதன் உள் பாகத்தில் இருப்பது சுஷும்ணு என்ற நாடி. இதைத் தமிழில் சுழுமுனை என்பார்கள். இந்த சுழுமுனை நாடியிலிருந்து தான் நமது திரேகத்தில் வியாபிக்கும் 72,000 நாடிகளும் ஜன்யமாகின்றன.

**ஆறு ஆதாரங்கள் :**

சுழுமுனையின் ஆறு இடங்களிலிருந்து நாடிகள் பிரிகின்றன. இந்த ஆறு இடங்களையும் ஆதாரங்கள் என்று கூறுவர். சுழுமுனை நாடியானது நமது சிரசின் உள்பாகத்திலிருந்து முதுகெலும்பின் உள் பக்கமாக, கீழ் நுனிவரை சடை போல் தொங்கிக் கொண்டிருக்கின்றது. இதிலிருந்து கீழ்பாகத்தில் நான்கு பெருநாடிகள் பிரியும் இடத்துக்கு **மூலாதாரம்** என்று பெயர். நான்கு நாடிகள் பிரிவதால் நான்கு இதழ்க்கமலம் என்றும் கூறுவர். அதற்கு மேல் ஆறு நாடிகள் பிரியும் இடத்தை **ஸ்வாதிஷ்டானம்** என்றும், அதற்குமேல் பத்து நாடிகள் பிரியும் இடத்தை **மணிபூரகம்** என்றும், அதற்குமேல் பன்னிரண்டு நாடிகள் பிரியும் இடத்தை **அனுகதம்** என்றும், அதற்குமேல் பதினுறு நாடிகள் பிரியும் இடத்தை **விசுத்தி** என்றும் அதற்குமேல் மூன்று நாடிகள் பிரியும் இடத்தை **ஆக்ஞை** என்றும் சொல்லப்படும்.

மூலாதாரம் என்பது கருவாயில் எருவாயிலுக்கு இடையே அமைந்திருக்கிறது. இது பிருதிவி அம்ஸம். ஸ்வாதிஷ்டானம் என்பது குறியின் அடிபாகத்தில் இருக்கிறது. இது அப்பு அம்ஸம். மணிபூரகம் என்பது நாபியில் இருக்கிறது. இது தேயு அம்சம். அனுகதம் என்பது இருதய

ஸ்தானம். இது வாயு அம்ஸம். விசுத்தி என்பது கழுத்தின் உள்பக்கம் இருக்கின்றது. இது ஆகாச அம்ஸம். ஆக்ஞை என்பது இரு புருவங்களுக்கு இடையே இருக்கின்றது. இது மனஸ்தத்துவம். ஈண்டு உடலின் பாகங்களான நாபி, இருதயம், கழுத்து என்று சொல்வதை எல்லாம் அந்தந்த ஸ்தானங்களுக்கு நேராக இருக்கும் சுழுமுனை நாடியில் அந்தந்த ஆதார ஸ்தானங்கள் இருப்பதாய் அறிய வேண்டும்.

### மூன்று கிரந்திகள்–மண்டலங்கள்

சுழுமுனையின் இரண்டு பக்கங்களிலும் **இடகலை, பிங்கலை** என்ற சந்திர நாடி, சூரிய நாடிகள் மூலாதாரத்தினின்றும் புறப்பட்டு மேல்நோக்கிச் சென்று மூன்று இடங்களில் சுழுமுனையைத் தொட்டுக் கொண்டும் ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டும் இடசாரி வலசாரியாக மாறி மாறி மேலே செல்லும். இவ்வாறு மூன்று நாடிகளும் சேரும் இடங்களுக்கு **கிரந்திகள்** அல்லது முடிச்சுகள் என்று பெயர்.

ஒரு கிரந்திக்கும் மற்றொரு கிரந்திக்கும் இடையிலிருக்கும் இடத்துக்கு **மண்டலங்கள்** என்று பெயர். ஒவ்வொரு மண்டலமும் இரண்டு ஆதாரங்களாகப் பிரிந்து காணப்படுகின்றன. மூலாதாரத்தில் ஆரம்பித்த இம்மூன்று நாடிகளும் இடசாரி வலசாரியாக மேலே சென்று ஆக்ஞை என்ற புருவ மத்தியில் ஒன்று சேருகின்றன. மூன்றும் சேருவதால் ஆக்ஞைக்கு **திரிவேணீ சங்கமம்** என்ற பெயரும் உண்டு. கிரந்திகளுக்குக் கீழ் இருந்து மேல் வரிசையில் பிரம்ம கிரந்தி, விஷ்ணு கிரந்தி, ருத்ர கிரந்தி என்று பெயர். மூலாதாரத்திலிருந்து பிரம்ம கிரந்தி வரை உள்ள பாகத்துக்கு அக்னி மண்டலம் என்று பெயர். இதில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் என்ற இரண்டு ஆதார ஸ்தானங்கள் இருக்கின்றன. பிரம்ம கிரந்திக்கும் விஷ்ணு கிரந்திக்கும் இடையிலுள்ளது சூர்ய மண்டலம். இதில் மணிபூரகமும் அனுகதமும் இருக்கின்றன. விஷ்ணு கிரந்திக்கும் ருத்ரகிரந்திக்கும் இடையிலுள்ளது சந்த்ர மண்டலம். இதில் விசுத்தியும் ஆக்ஞையும் இருக்கின்றன. ஆக, ஆறு ஆதாரங்கள், மூன்றுமண்டலங்கள், மூன்று கிரந்திகள் ஆக பனிரெண்டு ஸ்தானங்கள் ஏற்படுகின்றன.

### சாக்தர் சாதனை

குண்டலினி சக்தி என்பது பாம்பு போன்ற உருவமுடையதாய், கோடி சூர்யப் பிரகாசமுள்ளதாய், தாமரைத் தண்டின் நூலிலும் மெல்லியதாய், தன்னையே மூன்றரைச் சுற்றுகச் சுற்றிக்கொண்டு, மூலாதார க்ஷேத்ரத்தில் உறங்கிக் கொண்டிருக்கின்றது. இவ்வாறு உறங்கும் குண்டலினியை யோக சாதனையாலோ, அல்லது உபாஸனையாலோ, எழுப்பி, சுழுமுனை நாடி வழியாக மேலே ஏற்றிச் செலுத்தும் போது, ஒவ்வொரு ஆதார சக்கரங்களையும் பேதித்துக் கொண்டு, மூன்று கிரந்திகளையும் ஊடுருவிச் சென்று மூன்று மண்டலங்களையும் தாண்டி ஆக்ஞைக்கு மேல் இருக்கும் ஸஹஸ்ரார கமலம் என்ற ஆயிர இதழ்த் தாமரையின் மத்தியில் இருக்கும் கர்ணிகையை அடையும். அங்கே பெருகும் அம்ருதம் சுழுமுனைவழியாக கீழ்நோக்கிப் பிரவஹித்து உடம்பின் 72,000 நாடிகளையும் நனைக்கும். இந்த சித்தியடைந்தவனுக்கு இறப்பென்பது இல்லை. இந்த ஆயிரம் இதழ்க் கமலத்தைச் சேர்ந்த சித்தனே, "நிலமிசை நீடுவாழ்வான்." "மலர் மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்"

என்பதின் உண்மைப் பொருளும் இது தான். இதுதான் சாக்த சித்தாந்தத்தின் சாதனை. நமது சித்தர்களும் இதனையே அவலம்பித்து இருக்கிறார்கள்.

யோக சாதனையில்லாமலே உபாஸனு பலத்தாலும் இதை அடைய முடியும். உபாஸனைக்குரிய மந்த்ரம், யந்த்ரம், வழி பாட்டு முறை முதலியவை சாக்த தந்த்ர சாஸ்த்ரங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக் கின்றன. சங்கரர் தாம்எழுதிய ஸௌந்தர்ய லஹரியில் குண்டலினி ஷட் சக்ர பேத னம் செய்வதையும், அம்பாளின் ஸ்தூல, ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதம ரூபங்களையும், அம்பா ளின் பஞ்சதசாக்ஷரி மந்த்ரத்தின் இரண்டு பெரும் பிரிவுக்ளான காதிவித்யை, ஹாதி வித்யை என்பனவற்றையும், அம்பாளின் 43 கோண யந்தரத்தையும் கூறியிருக் கின்றார். மேனாட்டிலிருந்து இந்தியாவுக்கு உத்யோகமாகவந்த Sri John Woodroffe என்பவர் 'ஆர்தர் ஏவலன்' என்ற புனை பெயரில் சாக்த தந்த்ரங்கள் பலவற்றை மொழி பெயர்த்தும் சாக்த நெறியை விளக்கியும் பல நூல்கள் செய்துள்ளார். அவற்றில் 'Serpent Power' என்ற ஆங்கில நூலில் குண்டலினியைப் பற்றி வெகு விரிவாக, தற்கால விக்ஞான ரீதியில் விளக்கியிருக்கின்றார். மந்த்ர உபாஸனை யாலும் ஸ்ரீ சக்ர பூஜையாலும் பராசக்தி யின் அருளைச் சுலபமாய் அடையலாம். ஏனைய சித்தாந்தங்களிலும் அந்தந்த தேவதைகளுக்கு மந்த்ரமும் யந்த்ரமும் இருப்பது போன்று பராசக்திக்கும் மந்த்ர மும் யந்த்ரமும் இருக்கின்றன. திருமூலர் திருமந்திரத்திலும் அம்பாளின் மந்த்ரம் யந்த்ரம் பிரஸ்தாபிக்கப் படுகின்றன. சித்தர் நூல்களில் இதைப்பற்றி விரிவாகக் காணலாம். போகர் நூலில் அம்பாளின் ஸ்ரீ சக்கரம் என்ற யந்த்ரம் விவரிக்கப்பட் டிருக்கின்றது.

**உருவ பேதங்கள் :**

அம்பிகையின் உபாஸனு பேதங்கள் இருப்பது போல மந்த்ரங்களும் பன்னி ரண்டு விதமாக இருக்கின்றன. அவற்றை யெல்லாம் விவரிக்க இங்கு இடமில்லை.

அம்பாளின் உருவபேதங்கள் கணக் கில் அடங்கா. பஞ்சக்ருத்யங்களைச் செய் யும் போது பஞ்சசக்தி பேதங்களாய் வர்ணிக்கப்படுகின்றாள். இறைவனின் அஷ்ட முகூர்த்தங்களுக்கு ஏற்ப அஷ்ட சக்திகளாய் விளங்குகிறாள். ஜகத்தின் பரிபாலனத்தைச் சேர்ந்த வெவ்வேறு காரியங்களைச் செய்வதாகப் பாவனை செய் யும் போது வெவ்வேறு ரூபங்களோடு இருப்பதாகச் சொல்லப்படுகிறாள். இவற் றில் இடவசதியைக் கருதி மூன்று உருவ பேதங்களை மட்டும் சுருக்கமாகச் சொல்லு வோம்.

காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி என்று மூவரையும் சேர்த்துப் பேசுவது உலக வழக்கமாய் இருந்து வருகின்றது. இவர்கள் மூவரும் ஆதிபராசக்தியின் மூன்று ஸ்தான பேதங் கள்.

ஆகமங்களில் பிரதிமா லக்ஷணம் என்ற பகுதியில் சகல தேவதைகளின் உருவத்துக்கும் தியான சுலோகங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இந்த தியான சுலோகங்களில் ஒரு பிரதிமை அமைக்கப்பட வேண்டிய முறை கூறப் படுகின்றது. 'காச்யசில்பம்,' 'சில்பரத்னம்' போன்ற சில்ப நூல்களிலும் பிரதிமா லக்ஷணம் கூறப்படுகின்றது. ஆகம ரீதி

யாக அமைந்த உருவங்களே வழிபடத் தக்கவை. சாஸ்த்ரோக்தமாய் அமையாத உருவங்களுக்கு தெய்வ சான்னித்யம் உண்டாவதில்லே; சிலசமயம் விபரீத பலன் களேயும் உண்டுபண்ணிவிடும். ஆதலால் விக்ரஹ அமைப்பில் அதிகமாக கவனம் செலுத்தப்படவேண்டும் என்பது விதி.

**காசி விசாலாட்சியின்** உருவத்துக்கு காரணுகமத்தில் பிரதிமா லக்ஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நவ யௌவனமுள்ளவளாய், சிவப்பு நிறமுடையவளாய், பூர்ண சந்த்ரன் போன்ற முகமுடையவளாய், முக் கண் உடையவளாய், உயர்ந்த ஸ்தனபாரம் உடையவளாய், நான்கு கைகள் உடையவளாய், முன் இடது கையில் பத்மராகம் இழைத்த பாத்திரத் தையும், முன் வலது கையில் பத்மராகம் இழைத்த அகப்பை (கரண்டி)யை ஏந்திய வளாயும், பின் கைகளில் பாசாங்குசம் தரித் தவளாயும் நின்றதிருக்கோலமாயும் இருப் பாள். விசாலாட்சிக்கு அன்னபூர்ணி என்று பெயர். சங்கரர் செய்துள்ள அன்னபூர்ணு ஸ்தோத்ரத்தில் பாத்திரம் அகப்பைக்கு பதிலாக அபயவரதமுத்ரை இருப்பதாயும், இன்ஞெரு உருவத்தில் அக்குமாலே, புஸ்தகம் பாசம் அங்குசம் உடையவளாயும் கூறியிருக்கின்ருர். இவள் ஸகலலோகத்தையும் ரட்சிக்கிறவள் விஸ்வேஸ்வரனுடைய பத்னி. ஸ்ரீ லக்ஷ்மி ஸ்வரூபிணி. பக்தர்களுக்கு அபீஷ்டத்தைக் கொடுப்பவள் என்று வர்ணிக்கப்பட்டிருக் கின்றது.

**காஞ்சி காமாட்சியின்** உருவம் இருந்த திருக்கோலமாயும், பாசம் அங்கு சம், கரும்பு கோதண்டம், புஷ்ப பாணம் இவைகளேத் தரித்த சதுர் புஜங்களே உடை யவளாயும், ஸகலாபரண பூஷிதையாய் லக்ஷ்மி, சரஸ்வதி இவர்களால் சேவிக்கப் படுபவளாய், காமேஸ்வரரின் மனதுக்கு இன்பம் விளேவிப்பவளாய், யௌவன காந்தியுடையவளாய், யானேயின் மஸ்தகங் கள் போன்ற ஸ்தனங்களே உடையவளாய் பக்தர்களின் விருப்பங்களே அளிப் பவளாய், இறைவனின் புருஷாகார பூதை யாய் விளங்குவாள். சங்கரர் எழுதிய ஸௌந்தர்ய லஹரி 7-வது சுலோகம் இந்த திருமேனியை வர்ணிக்கின்றது. அதற்கு உரை எழுதிய லக்ஷ்மீதரர், அம்பாள் மணி பூரசக்ரத்திலிருந்து புறப்பட்டு ஹ்ருதய கமலத்தில் இருக்கும் அஞகதசக்ரத்துக்கு வரும்போது இருக்கும் ரூபம் என்று கூறுகிருர்.

**மதுரை மீஞட்சி** அங்கயற்கண்ணி யிருந்து ஆட்சி புரியும் பழம் பதியாகிய மதுரையை ஆகம ரீதியாக த்வாத சாந்த க்ஷேத்ரம் என்பார்கள். த்வாத சாந்தம் என்ருல் பன்னிரெண்டின் முடிவு. பன்னி ரெண்டுக்கு அப்பாற்பட்டது என்று பொருள். முன்பு சொன்னபடி ஆறு ஆதாரம், மூன்று மண்டலம், மூன்று கிரந்தி ஆகிய பன்னிரெண்டுக்கும் அப்பால் இருப் பது ஸஹஸ்ராரகமலம். இங்கு இருக்கும் சக்திக்கு மஞேன்மணி என்று பெயர். இவள் சிவத்தோடு அபின்னேயாய் இருப் பவள். இவளுக்கு இரண்டே கைகள். இந்த உருவத்தைப்பற்றி ஸுப்ர பேதா கமம் இவ்வாறு கூறுகிறது:

"இரண்டு புஜங்கள் உடையவளா யும், ஸர்வாபரண பூஷிதையாயும், ஸ்யாமள நிறமுடையவளாயும், வலது கையில் உத்பலபுஷ்பம் உடைய வளாயும், இடது கையை லம்ப ஹஸ்த

மாகத் தொங்க விட்டுக்கொண்டு நின்ற திருக்கோலமாய் இருப்பாள்''.

உத்தர காமிகாகமத்தில் இடது காலை நேராக ஊன்றி வலதுகாலைச் சற்று வளைத்து நிற்பாள் என்கின்றது. பூர்வகாரணுகமத்தில் ஸர்வாலய ஸௌந்தரியாய், சியாமளையாய், இரண்டு நேத்ரங்களும் இரண்டு புஜங்களும் உடையவளாய், கரண்ட மகுடம் உடையவளாய், தாமரைக் கொப்பான நேத்ரங்கள் உடையவளாய், பருத்த ஸ்தனங்களை உடையவளாய், மந்த ஹாஸம் பொருந்திய முககாந்தியுடைய வளாய் இருப்பாள் நம் மீனுட்சி என்கின்றது.

சாதாரணமாக தேவியின் உருவங்களுக்கு அபயவரத முத்ரைகள் இருப்பதில்லை. இதற்குக்காரணம் சங்கரர் ஸௌந்தர்யலஹரி 4வது சுலோகத்தில் கூறுகின்ருர். ''தாயே உன்னைத்தவிர மற்ற தேவர்கள் எல்லோரும் அபயவரத முத்ரைகாட்டித் தம்சக்திகளைப் பிரகடனப் படுத்திக் கொள்ளுகிருர்கள். ஆனல் நீயோ அவ்வாறு அபிநயத்தின் மூலமாக உனது அபயப்ரதானம், வரப்ரதானம் இவைகளை வெளியிடுவதில்லை. ஏனெனில் அந்த சக்தி உனது சரணாரவிந்தங்களுக்கே இருப்பதால் உன்கைகளால் காட்ட வேண்டிய அவசியம் இல்லை'' என்கின்ருர். சங்கரர் அருளிய மீனுட்சி பஞ்சரத்னத்தில் 3வது சுலோகத்தில் மீனுட்சியை ஸ்ரீசக்ரமத்தியில் இருக்கும் பிந்துவில் வசிப்பவளாயும், ஆறுமுகன் கணேசன் இவர்களுக்குத் தாயாயும் ''ஹ்ரீம்'' என்ற பீஜாக்ஷரத்தை உடையவளாயும் ஸ்ரீவித்யையின் அதிதேவதையாயும் வர்ணித்திருக்கிருர்.

ஆக மூவரும் ஒரே பராசக்தியின் மூன்றுவிதமான ரூபங்கள்தான். ஸ்தானத்தையும், பலனையும் உத்தேசித்து மூன்றுவிதமாக வர்ணிக்கப்படுகிருள். மீனுட்சி துவாதசாந்தம்என்ற ஸஹஸ்ரார கமலத்திலிருக்கும் மனேன்மணியாயும் காமாட்சி ராஜாராஜேஸ்வரியாயும், அன்னபூரணி ஸ்திதி கர்த்ரீயாகவும் விளங்குகிருர்கள். அவர்களுக்குள் ஏற்ற தாழ்வுகற்பிப்பது அபசாரமாகும். முன்பே சொன்னபடி அம்பாளின் ரூப பேதங்கள் பல உள. அவள் செய்யும் தொழிலுக்கும், இருக்கும் ஸ்தானத்துக்கும், கொடுக்கும் பலனுக்கும், சாதகனின் ஆன்ம விகாஸத்துக்கும் தக்கபடி விளையாட்டாக ஓர் உருவத்தைமேற் கொள்ளுகிருள்.

அம்பாளுடைய உபாஸனையானது மிகவும் சிரேஷ்டமானது. அதிரஹஸ்யமானது. தகுந்த சத்குருவையடைந்து ''மஹாவேதா'' என்ற தீக்ஷைபெற்று, பஞ்சதசாக்ஷரி மந்திர உபதேசம் செய்யப்பட்டு, ஸ்ரீசக்ரவிவரணங்களை நன்கு ஆராய்ந்து அறிந்து, யதோக்தமாய்வழி படுவோர்க்கு இவ்வுலகில் கிடைக்கக் கூடாத பேறு இல்லை. எவனெருவனுக்கு கடைசி ஜன்மாவோ அவனுக்கேதான் இது கிடைக்குமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஜகஜ்ஜனனியாயும், க்ஷிப்ரப்ரஸாதினீயாயும், பரமகருணுசாகரமாயும் இருப்பதால் அவள் தன்னுடைய பக்தர்களுக்கு சதுர்விதபுருஷார்த்தங்களையும் அளித்து மேம்படச்செய்து பிறவிப்பெருங் கடல் நீந்த ஓர் அசாதாரணமான ஆனல் எளிதில் கிடைக்கக் கூடிய புணையாக இருந்து அருள்பாலிக்கிருள்.

சுபம்

# எங்கும் சக்தியே

**சேங்காலிபுரம் திரு. அனந்தராம தீட்சிதர்**

தெய்வங்களே நமது குறைகளை நீக்க வேண்டும். அப்படி நீக்குபவர்கள் தேவர்கள் எனப்படுவர். அத்தேவர்களுக்கு ஏற்படும் குறைகளை நீக்கும் தெய்வம் ஸ்ரீசக்தி எனப்படும். இந்த சக்தியுடன் சேர்ந்து இருப்பதே சிவபெருமானுக்கு பெருமை. சக்தியுடன் சேராமல் இருந்தால், சிவனும் வெறும் சிவன் தான். ஆதலால் தான் உலகவழக்கத்திலும் வைஷ்ணவர் முதலிய யாராயிலும் எனக்கு எழுந்துவர சக்தி இல்லை எனக்கூறுவார்களேயாகில், அவர்களை, 'சிவனே என்றிரு' எனக் கூறுவது வழக்கம். ஆதலால் தான் ஆதிசங்கரரும், [1] பரமேஸ்வரனுக்கும் காரியங்களைச் செய்வதற்குத் தகுதியை அளிக்கும் பராசக்தி இவளேதான்; ஆகையால், ப்ரம்மா, விஷ்ணு முதலியோரும் வணங்கும் ஸ்ரீசக்தியை நமஸ்கரிக்கவோ துதிக்கவோ புண்யமில்லாதாருக்கு இயலாது. இச்சக்தியில்லையேல் அசைவதற்கும் இயலாது, என்று துதித்திருக்கிறார். இப்படிப்பட்ட பராசக்திதான் ஸ்ரீமீனாட்சி, அவளேதான் காமாட்சி, புவனேஸ்வரி என்ற பெயர்களால் விளங்குகிறாள்.

இவ்வுலகில் ஸ்த்ரீ ரூபமாகத் தெய்வத்தைக் கூறும் மதம் நம் இந்துமதம் ஒன்றுதான். அதனாலேயே பெண்களுக்கு நம்மதத்தில் சிறந்த பெருமை கொடுக்கப் பட்டுள்ளது. அதுமட்டுமல்ல. தெய்வங்களாகக் கூட பெண்களை பூஜித்து வருகிறோம். அம்மாதிரி பூஜித்து, புடவை, குங்குமம், மஞ்சள், புஷ்பம், தாம்பூலம் இவற்றைக் கொடுத்து அலங்கரித்து, அன்னமிட்டு உபசரிப்பதை சுமங்கிலிப்ப்ரார்த்தனை என்று சொல்கிறோம். இப்பூசையை விஷ்ணுமதத்தைச் சார்ந்தோரும் செய்து வருகிறார்கள். இந்த சுமங்கலிப்பூசையை ஏதோ காரணத்தால் நடத்தாத குடும்பங்களில் நல்ல சுபகாரியங்களை ஆரம்பிக்கும் போது இடையூறு ஏற்படுவதுடன், அக்குடும்பங்களில் தோன்றும் சந்ததியினருக்கு சந்திரன், சுக்கிரன், ராகு முதலிய க்ரஹங்கள் ஜாதகத்தில் தோஷமுள்ளவர்களாகின்றன. மனதும், ஸ்வாஸகோசமும் பாதிக்கப்படுகின்றன. ஆதலாலேயே லலிதா ஸஹஸ்ரநாமத்தில் (ஓம் ஸுவாஸின்யை நம: ஓம் ஸுவாஸின்யர்ச்சினப்ரீதாயை நம:) என்ற நாமங்களால் ஸ்ரீசக்தியை, ஸுவாஸினி ரூபிணியாகவும், ஸுவாசினிகளை அர்ச்சிப்பதால் சந்தோஷப் படுகிறவளாகவும் கூறப்பட்டுள்ளது. இப்படிப் பெண்களைத் தெய்வமாக நினைத்துப் பூஜிப்பது நம் பெரியோர்களது சம்பிரதாயமாக இருந்து வந்திருக்கிறது. இவ்வுணர்ச்சி அவர்களுக்கு இருந்தால் தான் இந்நாளில் உள்ள, அச்சாஸ்திரத்தை உணராத சிலர் கூட, பெண்களிடத்தில் பொது ஸ்தலங்களில் மரியாதையும், கருணையும் காட்டுகின்றனர்.

---

1 சிவ: சக்த்யா யுக்த: யதி பவதி சக்த; ப்ரபவிதும்
நசேதேவம் தேவ; நகலு குசல; ஸ்பந்திதுமபி !
அதஸ்தவாமாராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி
ப்ரணம்தும் ஸ்தோதும்வா கதமக்ருத புண்ய : ப்ரபவதி

பராசக்தியான ஸ்ரீஅம்பாளின் ஸ்வரூபம் எங்கும் வியாபித்து உள்ளது. ஆதலால் தான் மதுகைடபர்களை விஷ்ணு வதம் செய்தார் என சில புராணங்களும் ஸ்ரீஅம்பாளே வதைத்தாள் என சில புராணங்களும் கூறுகின்றன. இதற்குக் காரணம் விஷ்ணு முதலிய யாவரும், பராசக்தியின் ஸ்வரூபமாக இருப்பதே தான். அதனுல்தான் ஆதிசங்கரர் ஸ்ரீசக்ரம் முதலிய யந்தரங்களையும் சக்தி ஸ்வரூபங்களான சாரதா, காமாட்சி முதலிய பிம்பங்களையும் ஆங்காங்கு ப்ரதிஷ்டை செய்திருக்கிருர். அப்படிப் பட்ட ஸ்தலங்களில் சக்திக்கு முக்யத்துவம் அளித்த க்ஷேத்ரம் மதுரையே ஆகும். இங்கே விளங்கும் பராசக்தியான ஸ்ரீமீனுட்சியும் ஸ்ரீசுந்தரேஸ்வரரும் பக்தர்களுக்குக் கற்பகவிருக்ஷம் போன்றவர்கள். அவாகளின் அருளைப்பெற்றவர்க்கு சோகமே கிடையாது என திருவிளையாடற்புராணம் கூறுகிறது.

[2] ஒரே அம்பாள், பல்வேறு காரியங்களைச் செய்யும்போது வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிருள்.

[3] அரண்மனையில் அரசர்களிடம்வசிக்கையில் லக்ஷ்மி என்றும், யுத்த பூமியில் ஜயை என்றும், அரக்கர் யானை சர்ப்பம் இவைகள் நிறைந்த மார்க்கத்தில் க்ஷேமங்கரீ என்றும், காடுகள் நிறைந்து புக முடியாத மலையில் சபரீ என்றும், பூதங்கள் பிரேதங்கள், பிசாசங்கள், நரிகள் இவைகளால் பயம் ஏற்படுகையில் மஹாபைரவீ என்றும், மனக் கலக்கமேற்பட்டிருக்கையில் திரிபுரை என்றும், நதிகளைக் கடக்கும்போது ஏற்படும் பயத்தைப் போக்கத் தாரை என்றும் மனிதர்கள் நினைத்து க்ஷேமங்களை அடைகிருர்கள். இப்படி ஒரே சக்திதான் உலகெங்கும் பரவி பல நன்மைகளைச் செய்துவருகிறது. மேலும் மந்திர சாஸ்திரத்தில் ஸ்ரீ அம்பாளுடைய மந்திரமான நவாக்ஷரியில் ஸ்ரீ மகாலக்ஷ்மி வசிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. மேலும், 'ஓ துர்க்கே உன்னை நினைத்த மாத்திரத்தில் யாவருடைய பயத்தையும் போக்குகிருய். நல்ல நிலையில் இருப்போர் நினைப்பார்களேயாகில் அவர்களுக்கும் மிகச் சிறந்த மங்களமான புத்தியை அளிக்கிருய்!' என்றும், பல பெயருள்ள ஸ்ரீ அம்பாள் ஒருத்தியே எப்பொழுதும்கருணையால் நனைந்த மனதுடன் யாவருக்கும் உதவி புரிவதற்காக விளங்குகிருள். ஏழ்மை, துக்கம், பயம் இவற்றையெல்லாம் இவளைத் தவிர வேறு யார் போக்கக்கூடும் என்று தேவர்கள் கூறியிருக்கின்றனர்.

[4] மேலும் ஸ்ரீபரமேச்வரனது ஒரேசக்தி பலகாரியங்களைச் செய்யும்போது வெவ்

---

[2] ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேசௌ பக்தகல்ப மஹீருஹௌ
தயோரநுக்ரஹோயத்ர தத்ர சோகோ ந வித்யதே

[3] லக்ஷ்மீம் ராஜகுலே ஜயாம் ரணபுவி க்ஷேமம்கரீமத்வனி
க்ரவ்யாதத்விப சர்பபாஜி சபரீம் காந்தாரதுர்க்கே க்ரௌ
பூதப்ரேத பிசாச ஜம்புகபயே ஸ்மூர்த்பா மஹாபைரவீம்
வ்யாமோஹே த்ரிபுராம் தரந்தி த்விபத: தாராம்ச தோயப்லவே

[4] துர்கேஸ்ம்ருதா ஹரசி பீதிமசேஷ ஜந்தோ:
ஸ்வஸ்தை ஸ்ம்ருதாமதிமதீவ சுபாம்ததாஸி
தாரித்யாது: ஸ்கபயஹாரிணி காத்வதன்யா
சர்வோபகாரகாருணய சதாத்ரசித்தா

வேறு பெயர்களுடன் அழைக்கப்படுகிறது. அதாவது பக்தர்களுக்குச் சகல போகங்களையும் அளிக்கும்பொழுது பவானியாகவும், பௌருஷத்தைப் பிரயோகிக்கும் பொழுது விஷ்ணுவாகவும், துஷ்டர்களிடம் கோபத்தைக் காட்டும்பொழுது காளியாகவும்சத்ருக்களை அடக்கும்பொழுது துர்க்கையாகவும் விளங்குகிருள்.

ப்ரஹ்மலோகத்திற்கும் மேலுள்ள மனித்வீபத்தில் ஸ்ரீஅம்பாள் திவ்ய ரூபத்துடன் சங்கநிதி, பதுமநிதிகளுக்கிடையில் விளங்குகிருள். அத்வீபத்தைச் சுற்றிலும் அமிர்த மயமான சமுத்திரம் இருக்கிறது. அங்கு விளங்கும் ஸ்ரீஅம்பாளுடைய சக்திதான் வேதமந்திரங்களால் ஆலயங்களிலுள்ள பிம்பங்களுக்கு ஆகர்ஷிக்கப்படுகிறது. மேலும் இங்கு செய்யும் பூஜைகளெல்லாம் உலகெங்கிலும் பெய்யும் மழை ஜலம் சமுத்திரத்தை அடைவது போல, மணித்வீபத்தில் உள்ள ஸ்ரீஅம்பாளிடம் போய்ச் சேருகின்றன. இவ்வாறு ஆலயங்களிலுள்ள பிம்பங்களுக்கு, அடிக்கடி செய்யப்படும் திருப்பணிகள் சிறந்த தர்மமாகும். ஆதலால் ஸ்ரீஅம்பாளுடைய பிம்பத்திற்கு மருந்து சாத்தி, பிரதிஷ்டை செய்வதால் சக்ரவர்த்தியாக விளங்குவான் என்றும், கோவிலுக்குத் திருப்பணி செய்வதால் மூவுலகமும் வசமாகும் என்றும், தெய்வத்திற்கு நித்யபூஜை முதலியவை நடக்கும்படி செய்வதால் ப்ரம்மலோகம் கிடைக்கும் என்றும் இம்மூன்றையும் செய்வதால் தெய்வமாகவே ஆகிவிடுகிருனென்றும் ஸ்ரீபகவானே சொல்லியிருக்கிருர்.

5 ஸ்ரீமீனுட்சி ஆலயத் திருப்பணியை நடத்த முடியுமோ என நினைக்கக்கூடிய சமயத்தில் இப்பெரிய மகாகும்பாபிஷேகத்தை நடத்துவதென்பது அத்தெய்வத்தின் கருணையாலும் ஜகத்குரு ஸ்ரீஆச்சார்யாரின் அநுக்ரஹத்தாலும் என்றே கூற வேண்டும். இரவு பகலாக ஆயிரக்கணக்கான திறமை வாய்ந்த வேலைக்காரர்கள் வேலை செய்வதை நான் நேரில் கண்டேன். இம்மஹாகும்பாபிஷேகம் முடிந்த பின்பு இக்கமிட்டியின் தலைவரும், தர்மத்திற்காகவே வாழ்க்கையை அர்ப்பணம் செய்து கொண்டு இருப்பவருமான ஸ்ரீ P. T. ராஜன் அவர்கள் மற்றுமுள்ள அங்கத்தினர்கள் இந்த ஆலயத் திருப்பணியையும், மகா கும்பாபிஷேகத்தையும் நினைத்துப் பார்ப்பார்களேயாளுல் ஸ்ரீமீனுட்சிதான் இதை நடத்திக்கொடுத்தாள், நாம் நடத்தவில்லை என்பது தெரியவரும். இப்பொழுதும் ஸ்ரீஅம்பாள் தான் நடத்துகிருள் என அவர்கள் நினைப்பார்கள். ஆயினும் பின்பு நிச்சயாகவே தோன்றும். இவர்கள் சிவ தர்மத்தில் ஈடுபட்டு இத்திருப்பணி செய்தது, உலகத்திற்கெல்லாம் செய்த நன்மையாகும். ஒரு க்ஷணமோ, அரைக்ஷணமோ மனிதன் சிவாலயத் திருப்பணியில் ஈடுபட்டால் தேவ வருஷங்களில் பல வருஷங்கள் கைலாசத்தில் வசிப்பான் என ஆகம சாஸ்திரம் கூறுகிறது.

இத்திருப்பணியை நடத்தியவர்கள் பல வருஷங்கள் இச்சிவ தர்மத்தில் இரவு பகலாய் ஈடுபட்டுள்ளார்கள். இவர்களுக்கு கிடைக்கும் நற்பயன் வாக்கினுலும் கூற முடியுமோ! இவர்களுக்கும், நம் தேசத்திற்கும் உலகிற்கும் ஒரே தெய்வமாகிய பராசக்தி(ஸ்ரீமீனுட்சி) ஆயுள் ஆரோக்யம் முதலிய சகல மங்களங்களையும் கொடுக்கும்படி ப்ரார்த்திக்கிறேன். ★

5 ப்ரதிஷ்டயா சார்வபௌமம் ஸத்மனு புவனத்ரயம்
பூஜாதினு ப்ரஹ்மலோகம் த்ரிபி:மத்ஸாம்யதாமியாத்

# மீனாட்சியம்மன் வழிபாடு

தி. சேஷாத்திரி M. A.

சமயம் என்பதே மனதை அடக்கும் தத்துவத்தைப் புரிந்துகொள்ள உருவம் தந்து, அதைக் கைவரச் செய்யக் காட்டப்படும் வழிகளின் அமைப்புத்தான் மனதை எதற்கு அடக்க வேண்டும்?

மலையிலிருந்து மழைநாளில் கால் காலாகப் பெருகிச் சேர்ந்து, உருண்டு திரண்டு வரும் வெள்ளப் பெருக்கை ஏன் அடக்கி அணைபோட்டார்கள்?

மிகவும் பயன் தரக்கூடிய நீர், ஆக்க வேலைக்கு ஆகக் கூடிய நீர், வீணில் பாய்ந்து பெருகி மலையை உருட்டி, கல்லைப் பெயர்த்து, பூமியைப் பறித்து, வயலை வெளியாக்கி, வந்த சுவடு தெரியாமல் கடலில் கலந்து, தானும் வீணாகி மக்களையும் உலகத்தையும் துன்பத்துக்குள்ளாக்கி விடுகிறதே! அதை அணைபோட்டுத் தேக்கி அவ்வப்பொழுது கட்டுப்படுத்தி, சிறிது சிறிதாக வெளியேறவிட்டால் உலகம் வாழ்கிறது. பூமி செழிக்கிறது. நாடு நலம் பொங்குகிறது. வீடெல்லாம் மங்களம் தங்குகிறது.

அதேபோல, இந்த மனம் அடங்கிப் போகத் தெரியாமல் போனால், விருப்பப்படி சென்று, புயலாய்ச் சாடி, பூகம்பமாய் ஆட்டி, காட்டாறாய், மனிதன் வாழ்க்கையை எல்லா வகையாலும் குட்டிச் சுவராக்கிவிடுகிறது. பயன் தரவேண்டிய மனித வாழ்வு பயித்தியக்காரத் தனத்தில் கழிகிறது. நன்மை தரவேண்டிய வாழ்வு நாசமகிறது. மங்களம் பொங்கவேண்டிய வாழ்வு பொசுங்கிச் சுடுகாடாகிறது. விலங்கினம் போல், விலங்கையும் விடக் கேடாக மக்களினம் வாழ்ந்து மடிந்து விட்டால் உலகம் என்ன ஆகும்? உள்ளபடி மனத்தை அடக்கிய மகான்கள் இருந்ததால் அன்றோ, இன்னும் இருப்பதால் அன்றோ உலகம் வாழ்கிறது. எனவே அந்த மனத்தை அடக்கிக் கட்டுப்படுத்தி, சரியான முறையில், நேர்மையான போக்கில், உலகம் நலம் பெறும் பாட்டையில், நம் வாழ்வு ஈடேறும் போக்கில் செலுத்த வேண்டமா? அதற்குத்தான் மனதைக் கட்டுப்படுத்துகிறோம். கட்டுப்படுத்துதல் முதல்படி; சரியான முறையில் செல்ல விடுவது இரண்டாம்படி. அவ்வளவு மட்டும் தானா?

நீரை அணையிட்டுத் தேக்கி, கட்டுப்படுத்திவிட்டானே மனிதன், பயன் ஒன்று தான் கிட்டியதா? பதினைந்தே நாட்களில் கடலுள் கவிழ்ந்து மறையும் நீர் பனிரெண்டு மாதங்களுக்கும் பயன் நல்குவதாக ஆயிற்று; பூமியைக் கிழித்து மணலை சொரிந்து மேடிக்கும் நீர் விளைவாக மாறிற்று. குடிக்க, குளிக்க என மக்களுக்குப் பலவகையிலும் உதவி 'அமுதம்' என அழகுச் சொல்லில் வாழ்த்தும் பெற்றது; அவ்வளவு தானா?

அதிலிருந்து மின்னாற்றலும் அல்லவா வெளியாயிற்று. சோழன் அணை கட்டினபோது இதைக் கனவும் கண்டிருக்கமாட்டானே! இன்று கட்டும் அணைகள் எல்லாம் மின்னாற்றலையும் தந்து எங்கும் ஒளியாய், எங்கும் ஒலியாய் எங்கும் அலையாய் மாறிநின்று உலகையே

புத்துலகாக்கிக் கொண்டல்லவா மிளிர் கிறது. அதே போல இந்த மனதை அடக்கினுல் அதிலிருந்து நாம் கற்பனை கூடச் செய்யமுடியாத மற்ற ஆற்றல்களை யும் பெறலாம். அதற்காகத்தான் மனதை அடக்கவேண்டும் என்பது.

குறிப்பாகச் சொன்னுல் மனதை அடக்கத்தெரிந்தால் மனிதன் புத்தியும் மன ஆற்றலும் அதிகம் பெற்றவனுக ஆகலாம். உலகுக்கும் அவனுக்கும் அதனுல் பயன் மிக உண்டு. இது அணை நீரின் உபயோகத்தை நிரந்து பெருக்கிய தொக்கும். அதேசமயம் மின்னுற்றல் வெளி யானது போல் அடக்கிய மனது மனித னின் தெய்வ ஆற்றலையும் வெளியேற்றிப் பயன் தரும். அதற்கும் மேலாக இந்த மனித வாழ்க்கையையும் தெய்வ வாழ்வாக மாற்றும். அதுவே மனிதன் அடைய வேண்டிய பேற்றுக்கெல்லாம் தலையாய பேறு; உயர் வரம். அதை, மனதை அடக்காமல் பெற முடியாது; பெறவே முடியாது. இது தான் மறைத் தீர்ப்பு; மறையாளர் முடிவு; யோகியர் அனுபவம்; சித்தர் தரும் சேதி.

தெய்வ ஆற்றலும் வேண்டாம். தெய்வமாதலும் வேண்டாம் என்றுலும் மனதை அடக்காமல் வேறு நன்மை எதை யும் பெற முடியாது. மின்சாரம் வேண் டாம் என்றுலும் அணை தேவையே. அணை போட்டபிறகு மின்சாரம் ஏற்படுத்திக் கொள்ளாமல் இருத்தல் அசட்டுத்தனம். தெய்வ ஆற்றல் பெருமலிருத்தலோ முடியாது.

எனவே மனதை அடக்கவே தான் சமயங்கள் வழி கூறுகின்றன. கோவில், குளம், யாத்திரை, பஜனை, ஜபம், தியானம், யோகம், தனியிடமிருத்தல், உல்கை ஒதுக்குதல், எல்லாமே வழிகள் தாம். இது எல்லாச் சமயத்துக்குமே சரி என்றுலும், இந்து சமயத்தின் சில சிறப் புக்கள் நல்லவை.

இந்து சமயம் மனிதன் தன்மைக் கேற்றவாறு காட்டப்பட்ட வழிகளுள் எதையும் ஏற்றுக்கொள்ளலாம் என்று சுதந்திரம் தந்து உள்ளது.

'சற்றே கையாண்டாலும் பெரும் அச்சம் நீங்கும்' என்கிறது கீதை.

இந்து சமயம் மேலும் வழிகள் கண்டுபிடிக்கப்பட்டால் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறது.

இந்து சமயம் மனிதன் மிருகத்தி லிருந்து வந்தவன் என்று சொல்லி அச் சுறுத்தாமல் அவன் தெய்வமே; மாயை யாலோ, தன் கர்மத்தாலோ, சூழப்பட்டுத் தன் உண்மையை மறந்து நிற்கிறுன் என்கிறது.

உண்மையுடன் முயலும் எந்த மனிதனும் தன் உண்மை நிலையை அடையலாம் என்று அது உறுதி கூறு கிறது.

மனோ விஞ்ஞான அறிவை மிகவும் நன்கு பயன்படுத்தியுள்ளது. இதை மேல் நாட்டு மனோ விஞ்ஞானப் புலிகளே ஒத்துக்கொண்டுள்ளனர்.

இவற்றிற்கு மாருக இந்து சமயம் போதிக்கப்பட்டிருக்குமானுல் போதனை யின் குறையே தவிர சமயத்தில் இல்லை.

நிற்க மனதை அடக்க முதலில் அதை ஓரிடத்தில் சேரவைக்க வேண்டும். குவியவைக்கவேண்டும். அதற்குத்தான் தெய்வ உருவங்கள் நமக்குத் தரப்பெற்றி

ருக்கின்றன. கதைகள் தோற்றம் கருத்து உணர்ச்சி இவை நம் மனதைக் கவரலாம். அது எதுவாயிருந்தாலும் நம் உணர்வுகள் எல்லாவற்றையும் தன் வயப்படுத்தக் கூடியதாகஇருக்கவேண்டும். மனிதனுக்கு ஐந்து பொறிகள். தவிர, மனம் புத்தி தான் என்ற ஓர் உணர்வு இவை மூன்றும் இருக்கின்றன. இவை எட்டையும் சேர்ந்தாற்போல் தன் வயப்படுத்தி ஆழ்த்தக் கூடிய ஒரு பொருளோ தத்துவமோ கிடைத்துவிட்டால் அவன் தன்னை முழுமையாக அதில் மறந்து விடுவான். 'மனதை நிறுத்த' என்று சொல்லும் போது அதற்கு முன்னும் பின்னும் உள்ள எல்லாம் கட்டுண்டால் தான் மனம் நிற்கும். அவ்வெட்டுக்கும் நிலைக்களமாகவே மீனாட்சி அம்மையின் தோற்றமும் தத்துவமும் அமைந்திருக்கின்றன.

கண்கள் அன்னையின் அழகுத் தோற்றத்தை உண்டு அதிலேயே திளைத்து நிற்கும். அவள் தோற்றம் விவரிக்கப்பட்டிருக்கிற விதம் பாருங்கள்.

"உதித்தெழும் ஆயிரம் கோடி ஞாயிற்றுக் கொப்பான காந்தியுடையவள். அழகிய கொவ்வைச் செவ்வாய், புன்முறுவல் ஒளி வீசி நிற்கும் அழகிய வரிசையிலமைந்த பற்கள். பீதாம்பரம் அலங்கரிக்கும் திருமேனி, முத்து மாலைகள் அணிந்த மார்பகம்; கிரீடம் சூடிய தலை; காலில் சிலம்புகள்; தாமரை ஒளி சிதறும் பாதங்கள்; சியாமள நிறம்." இந்த உருவத்தைத் தியானியுங்கள் சற்று நேரம். பிறகு, என்றும் இதையே எண்ணிப் பணிவேன் என்று சொல்ல எவ்வளவு நேரமாகும்? பிறகு இதை விட்டு அப்பால் எவ்வளவு நேரம் தான் தனித்துச் சென்று தாமதிக்க முடியும்.

மூக்கு அங்கே தங்க வேண்டுமே! "நானாவிதமான புஷ்பங்களால் அர்ச்சிக்கப்பட்ட பாதங்களையுடையவள் அன்னை"

வீணை, புல்லாங்குழல், மிருதங்கம், பலவித ஆடம்பர வாத்தியங்கள் முழங்குகின்றன அவள் அருகே, நம் காதுகளைக் கட்டி நிறுத்த. சுவைக்கவும், ஊறுப் பொறிக்கு இன்பம் தரவும் இந்த நிலையில் நாம் ஊனப் பொருள்களைத் தேடமாட்டோம்: கருணைக்கடல் அன்னை. அதில் முழுகிவிட்டால் அவள் அமுதமயமான துதிச் சொற்களைச் சுவைத்து விட்டால் பிறகு அவை எதையும் தேடி அலையா.

இப்படிப் புறப்பொருள் மேயும் பொறிகள், அடங்கி அங்கே தங்கி விட்டால் நல்லது தான். ஆனால் சில சமயம் மனம் ஓடிவிடும், இவைகளை ஓரிடத்தில் சேர்த்து வைத்து விட்டு அப்படி ஓடாமல் இருக்க இந்தத் தோற்றத்துக்குச் சிறப்புத்தரக் கூடிய கருத்துச் சூழல் இருக்க வேண்டும். தத்துவ ஆழம் இருக்க வேண்டும்.

அவள் "விஷ்ணு, பிரமன், தேவேந்திரன் முதலியோர் போற்றும் புகழ் மலரடிகளை உடையவள். தத்துவ ரூபிணி. நன்மையைத் தருபவள். இமயன் மகள். வாணி, இலக்குமி முதலிய தேவிகள் ஏத்திப் பணிபுரிய அமர்ந்திருப்பவள். சிவபிரான் இடப்புறத்தை இருப்பிடமாகக் கவர்ந்து கொண்டவள். அவள் வித்தை உருவத்தவள். ஹ்ரீம் என்ற மந்திரத்தால் ஒளியுறுகிறவள். சக்கரத்தின் நடுப் புள்ளியில் வசிப்பவள். சபைக்கு நாயகி அவள். சண்முகர், விநாயகர் இரண்டு தேவர்களையும் பெற்றெடுத்த தாய். உலகை மயக்குபவள். பயத்தைப் போக்குபவள். நிர்மலமான ஞானத்தைத் தருபவள், நாராயணன் தங்கை.

இந்தக் கருத்தெல்லாம், தனித்தனி பார்த்துச் சிந்தித்தால், ஆழம் காணக் காண, மனிதன் மனதை மிக உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லக்கூடியவை. மேலும்,

பல யோகிகள், முனீந்திரர்கள் இதயத்தில் வசிப்பவள். பலவித சித்தியைத் தருபவள். நாதப் பிரமமான ஓங்கார ரூபிணி. நானுவித தத்துவங்களில் சாரமான தத்துவம்,

இப்படிப்பட்ட மீனுட்சியை, கருணைக் கடலை எப்பொழுதும் வணங்கி நிற்கிறேன் என்று துதிக்கிருர் ஆதிசங்கரர்.

இதில் உள்ள ஒவ்வொரு கருத்தையும் எடுத்துச் சொன்னுல் விரியும். சுருக்கமாக மனம் இப்படி தோற்றமும் தத்துவ உருவமும் கொண்ட ஒரு பொருளில் லயித்து விடுமானுல் அது பெறும் ஆற்றலுக்கு அளவேயிருக்காதன்ரே! அந்த ஆற்றல் பெற்ற மனம் கொண்ட மனிதன் பலவித சித்திகளுக்கும் சுவாமியாவான். தெய்வமென உலகில் நடந்து, இருந்து செயலாற்றி எல்லோரும் மதிக்க வாழ்வான்.

இதைவிட இன்னொரு அதிசியமும் உண்டு. ஓங்கார சொரூபிணியாகவும், தத்துவ ரூபிணியாகவும் எண்ணித் தியானம் செய்பவன் மனம் அடங்கும்; உயிர் அடங்கும்; அவன் ஜீவன் முக்தனுவான்.

சிரிங், ஹ்ரிங் என்ற மந்திர வித்தையின் ரூபிணியாக வழிபடுபவன் சித்தனுவான். சிவன் தேவியாக, சண்முகன் தாயாக, சபாநாயகியாக வழிபடுபவன் யோகியாவான், முனிவனுவான்.

அழகும் பெருமையும் கொண்ட அன்னையாக மட்டும் எண்ணி இடையருத வழிபாடு செய்ய இயலுமானுல் அதுவே போதுமே.

அப்படி வழிபட்டு பெரும் காரியம் செய்தவர் உதாரணம் வேண்டுமா!

ஒரு தலைப்பில் ஸ்ரீ P. T. இராசன் அவர்களையே எடுத்துக் கொள்ளுங்கள். இந்த கும்பாபிஷேகத் திருப்பணி அவர் அன்னை வழிபாட்டுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டு அன்ரே! எவரும் எளிதில் நடத்தித் தலைக்கட்டக் கூடிய ஒரு பணியோ இது! அம்மம்ம, அவர் அன்னையன்பின் ஆற்றலது!

மறு தலைப்பில் ஆதிசங்கரரை எடுத்துக் கொள்ளலாமே. முப்பத்திரண்டு அகவைக்குள் உலகம் உய்யப் பெரு வாழ்வு வாழ்ந்து முத்தியடைந்தவர் அவர்.

இப்படி அன்னை எளிதில் கிட்டியிருக்கும் போது பயன் பெற முயற்சி செய்யாதவன் கண்களிருந்தும் குருடனுக மதிக்கப்படுவான்.

எனவே கருணைக் கடலான மீனுட்சி தேவியை எப்பொழுதும் வணங்கி வழிபடுவோமாக.

# காளி —
# தமிழ் நாட்டில் வேட்டுவ வரி

தெ. பொ. மீனுட்சிசுந்தரம்

தாய்க் கடவுள் வழிபாடு உலகு எங்கும் பரவிநின்ற தொரு வழிபாட்டு முறை. இந்தியாவில் மிகமிகப் பழைய நாகரிகம் என்று எல்லோரும் கருதும் சிந்து நதிக்கரை நாகரிகத்திலும், இந்த வழிபாடு சிறந்து விளங்கியது. மொஹஞ் சதாரோ—ஹரப்பா என்ற இடங்களில் அகழ்ந்த போது, தாய்க் கடவுள் வடிவம் பல கிடந்தன. எனவே வேத வழிபாட்டிற் கும் முந்தியது இது எனலாம். இந்த வழிபாடு திராவிடரிடம் வேரூன்றி யிருந்ததா? மற்ருெரு இந்தியப் பழங்குடி மக்களான முண்டர் (சவரர், கோலர்) இடம் வேரூன்றியிருந்ததா? என்பது பின்னே ஆராய்ச்சியால் விளங்கலாம். ஆனுல் தாய்மை வழிபாடு எங்கும் பரவியது ஒன்ரு தலின் இரண்டு மக்களிடமும் இருந்தது என்றே கொள்ள வேண்டும். ஆனுல் தாய்மை வழிபாடு ஒன்றே ஒரு சிலரிடம் சிறந்து விளங்கும். இதிலும் இரண்டு வகை உண்டு. மற நிலை ஒன்று அற நிலை அல்லது அருள் நிலை ஒன்று. இந்த இரண்டில் எந்த நிலை எந்த மக்களிடம் சிறந்தோங்கியது என்று ஆராய்தல் வேண்டும்.

தொல்காப்பியம் கடவுளரைக் குறிப் பிடும் போது மாயோனும் சேயோனும் வேந்தனும் வருணனும் என்ற இவர் களையே வழிபடுகடவுளராக எடுத்துச் சுட்டக் காண்கிருேம். ஆனுல் இங்கே பாலை நிலத்திற்கு எனக் கடவுள் ஒரு வரும் காணேம். பின்னுளில் ஞாயிறு அத்தகைய பாலைநிலக் கடவுளானமையை நச்சினுர்க்கினியர் குறிப்பிடுகின்ருர். இருந்தாலும் தமிழ் நூற்பரப்பில் காளியே அத்தகைய சிறப்பிற்கு உரியவளாக ஓங்கி நிற்பதைக் காண்கிருேம். தொல் காப்பியர் தாய்மை வழிபாட்டினைக் குறியா மலே போகின்ருர் என்பதற்கில்லை. மாடு பிடி சண்டை என்ற வெட்சியில் கொற்ற வையைக் குறிப்பிடுகின்ருர். கொல் + து + அம் என்பதே கொற்றம் ஆகும். கொன்று வெற்றி பெறுவதே பழங்கால வெற்றி யாகும். சாகும் வரை போராடும் காலம் அது. கொற்றத்திற்குக் கடவுள் கொற் றவை. கொற்று + அவை என்பது கொண்டால் அவை என்பது அவ்வை (அம்மை தாய்) என்பதன் வடிவமே ஆம். வீரர்க்கு வெற்றி தந்து பகைவரை அழிக் கும் தாயே கொற்றவை எனலாம். வீரர் படையின் முன்னே இந்தக் கொற்றவை செல்வாள் என்று அக்காலத்து மக்கள் நம்பினுர்கள்.

அந்தக் காலத்தில் மக்கள் கடவுளை வழிபடும்போது அக் கடவுள்போலவே தம்மில் ஒருவரைக் கோலஞ் செய்து வழி பட்டார்கள் என்று அறிகிருேம். வள்ளிக் கூத்து என்பது இத்தகைய வழிபாட்டு முறையின் பெயர். முதலில் முருகப் பெருமான் வழிபாட்டில் முருகன் விரும் பும் வள்ளியைப் போல் ஒரு பெண்ணிற்கு கோலம் செய்தார்கள். அவள் ஆடும் கூத்திற்கு வள்ளிக் கூத்து என்று பெயர். அதனுல் முருகப் பெருமான் மனமகிழ்ந்த

தாக அக்கால மக்கள் கருதினுர்கள், அகப் பொருட் கருத்தும், பின் இராச லீலை என வழங்கும் குரவைக் கூத்தின் அடிப்படை நுட்பமும் இந்த வள்ளிக் கூத்தில் உண்டு எனலாம். திருமுருகாற்றுப் படையில் குன்றுதோருடலில் வரும் குரவைக் கூத்தில் இது வெளிப் படையாக விளங்குகிறது, இனி பிற கடவுளரை வழிபடும் போதும் அக்கடவுள் போல ஒருவரைக் கோலம் செய்து வந்தனர். ஒன்று போல மற்ருென்றைச் செய்தால் முதலாவதொன்றன் பயனை மற்றையதிலும் பெறலாம் என்று உலகத்தில் பல இடங்களிலும் மக்கள் கருதிவந்தனராம். மழை வராதபோது மழை போல நீரை வாரியிரைத்தால் மழையே வந்து விடும் என்று கருதினராம். எனவே கடவுளைப் போல ஒருவருக்கு கோலம் செய்தால் அக் கடவுளே அவர்கள் மேல் வந்து விடுவார் என்று எண்ணினுர்கள் போலும். பின்னர் இதுவே படிம வழிபாட்டிற்கு வழிசெய்தது போலும். கடவுள் போலக் கோலம் செய்வதோடு அமையாது அக் கடவுளுக்கு என்று அமைந்த கூத்தும் ஆடுவது உண்டு. அதற்கு ஏற்ற பாடலும் பாடுவது உண்டு. இத்தகைய கூத்துகளுக்கு எல்லாம், வள்ளிக் கூத்து என்பதே பொதுப் பெயராக அமைந்து விட்டது. கொற்றவைக்கு வழிபாடு செய்ய, கொற்றவையின் கோலம் செய்து ஆடும் கூத்தும் வள்ளிக் கூத்து என்றே பெயர் பெற்றது. வீரர்களே இதனைப் பெரும் பான்மையும் கொண்டாடினர், என்பது வாடாவள்ளி வயவர் ஏத்துவது என்ற தொல்காப்பியக் குறிப்பால் அறிகின்றேம். அது வள்ளி என்ருல் கொடிக்கும் பெயர்; அது வாடும் வள்ளிப் பொருளின் நின்றும் நீக்குவதற்கு வாடாவள்ளி என்று இந்தக் கூத்திற்கும் பெயர் வழங்கியது.

ஒவ்வொரு கடவுளுக்கும் ஒவ்வொரு வகையான கூத்து உண்டு. அந்த கூத்தாடும் கோலத்தில் அக் கடவுள் படிவத்தைப் பல்லவர் காலத்தில் அமைத்து வந்தனர். எனவே அதற்கு முன் அக் கூத்தினையே ஆடி வழிபட்ட காலம் உண்டு என்பது தெளிவாகின்றது. ஆனந்தத் தாண்டவக் கோலத்தைக் கண்ட பின் மற்றைய கூத்துக்களை எல்லாம் மறந்து விட்டோம். ஆனுல் அவை இருந்தன, என்பதனை மறத்தல் ஆகாது. பழந்தமிழ் நாட்டில் பலவகை ஆடல்களில் சிறந்தன, பதினேர் ஆடல்களாம். அவற்றில் ஒன்று மரக்கால் ஆடல் என்பது. இது காளி அல்லது துர்க்கைக்கே உரியது. அசுரர்கள் இட்ட போரில் தேளும் பாம்புமாக மாறி நலியத் தொடங்கினுர்களாம். அவற்றின் மேல் மரக்காலை உருட்டிக் கொண்டு கூத்தாடத் தொடங்கினுளாம் காளி. அவை எல்லாம் கூழாய் மடிந்தனவாம். இதுவே காளி அசுரர் வாட அமரர்க்கு ஆடிய கூத்தாம் என்பர் அடியார்க்கு நல்லார். இதனைப் பாலை நிலத்தில் வாழ்ந்த வேடர்கள் சிறப்பாகக் கைக்கொண்டு ஆடி வந்தனர். பாலை நிலக் கடவுளாகக் கொற்றவை விளங்கினுள். வேடுவர், ஆறலை கள்வர்கள், அவர் இந்தக் கூத்தினை ஆடும் போது பாடுவார்கள். அந்தக் கூத்துப் பாட்டுக்கு வேட்டுவ வரி என்று பெயர். ஒருவர் போல ஒருவர் கோலம் பூண்டு ஆடுவதனை வரிக்கூத்து என்று சிலப்பதிகாரம் வழங்கும். எனவே வேட்டுவப்பெண் கொற்றவைபோல ஆடும் கூத்தே வேட்டுவ வரிக் கூத்து: அப்போது பாடும் பாடலே வேட்டுவ வரியாம், என்பது அடியார்க்கு நல்லார் கொள்கை.

இவ்வழிபாடு வேட்டுவரிடம் வழங்கியது என்பதனை இங்கே குறிக்கொள்ள வேண்டும். முண்டர் என்ற பழங்குடி

களுக்குச் சவரர் என்றும் பெயர். சவரர் என்பதற்குப் பொதுவாக வேடர் என்று பொருள் கொள்வது உண்டு. உப நிடத காலத்திலிருந்து சவரர்கள் மந்திரங்களில் வல்லவர்கள் என்பது தெளிவாகிறது. அவர்களிடம் இன்று வழங்கும் மந்திரம் அதர்வண வேதத்திலும் உள்ளதாம். உயிர்ப்பலி தந்து தாய் வழி பாடு செய்வது அவர்களிடையே பெரு வழக்கம். கொடிய விந்தியமலையின் தலைவியாகத் தாய்க் கடவுளைப் பாராட்டுவது, அவர்கள் வழக் காம். கொடிய கொலை முதலியவற்றால் தாய்க் கடவுளை இன்ப மூட்டுவது அவர் களிடமிருந்து பரவி இருக்கலாம். ஆனால் இந்நாட்டில் வழங்கும் தாய் வழிபாடு பலவகையான் பழக்க வழக்கங்களின் கல வையே எனலாம்,

பல்லவர் காலத்தில்தான் மகிடாசுர மர்த்தனியின் கோலம் தமிழ்நாடு முழு வதும் பரவியது. மாமல்லபுரத்தில் இந்தக் கடவுளின் கோலம் இன்றும் காட்சியளிக் கிறது. ஆனால் சங்க காலத்தை ஒட்டியெ ழுந்த சிலப்பதிகாரத்தின் கோலம் மக்கள் மனத்தைக் கவர்ந்துள்ளது. பின்னர் அர சரும் காளியை வழிபடலாயினர். விசயா லயன் சோழப் பேரரசிற்குப் புத்துயிர ளித்து அதனை நிலை நாட்டிய போது நிசும்பாசுரமர்த்தனி கோயிலைத் தஞ்சை யில் எழுப்பி வழிபட்டு வெற்றிகொண் டான். பின் காளியின் வழிபாடு தமிழ் நாட்டில் பரவியதில் வியப்பில்லை. பரணி நட்சத்திரம் காளியம்மையின் நட்சத் திரம். ஊர்ப் பிடாரிக்குப் பரணியம்மை என்ற பெயர் சில இடங்களில் வழங்கக் காண்கிறோம். 1000 யானையைப் போரில் கொன்று வெற்றி கொண்ட வீரனுக்குப் பரணி பாடும் வழக்கம் சோழர் காலத்தில் நிலைத்துவிட்டது. அக்காலத்தில் கடுமை யான போர்கள் நிகழ்ந்தமை இதனால் விளங்கும். போர் முழக்கத்தை நாம் கேட்கும் வகையில் சந்தத்தை அமைத்தார் சயங் கொண்டார். அதற்கேற்ற மொழி நடையை அமைத்தவர் ஒட்டக்கூத்தரே ஆகும். ஆனால் அந்த நடைக்கேற்ற கதையோ போரோ கிடையாமையால் கடவுள் ஒளியும் ஆன்ம அகங்காரமும் போராடும் உலகப் பெரும் போராட்டத் தையே பாடுதற்குத் தன் நடையைப் பயன்படுத்தினார் ஒட்டக்கூத்தர். தக்கனை யும் அவனோடு சேர்ந்த அமரர்களையும் அழிப்பதற்கு என்று எழுந்த வீர பத்திரரும் பத்திரகாளியும் செய்த வீரச் செயல்களைப் பாடுவதற்கு மிகப் பொருத்த மாக அமைந்தது. அவர் நடை பின் வந்த தத்துவராயர் முதலியோர் ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் நிகழ்ந்த போராட்ட மாக நேரிடையே பரணி பாடவந்தார்கள்.

பழைய சங்க காலத்திலேயே காடு கிழாஅள் பழையோள் என்று பலவகை வழிபாடுகள் நடைபெற்றன. வீரர்களும் தியாகமே உருவானவர்கள். தியாகமே வேள்வி, வேளாண்மை என்று வள்ளுவர் குறிப்பிடவில்லை. எனவே போரும் இந்த வகையில் ஒரு வேள்வியேயாகும். இதனைக் களவேள்வி என்று வழங்கினர். இதனைக் காளிக்குச் செய்யும் வேள்வியாகக் கருதினர்.

காளியைச் சுற்றிக் கூளிகள் எழுந் தன. காளிக்கு இடம் காடானால் சுடுகாடும் அவளிடம்தானே! அங்கு வாழ்வனவாகக் கருதப்பெற்ற பேய்களே கூளியாயின. இறந்தனவற்றை மண்ணுக்கினால் அன்றி இறந்த பிணமலையே உயிர்களை எல்லாம் தான் வளர்க்கும் நஞ்சால் கொல்லும் இந்த நஞ்சையும் உண்டு எல்லாவற்றை

யும் சுட்டெரித்து மண்ணுக்கும் ஓர் ஆற்றல் இயற்கையில் விளங்குகிறது. அதனைக் காளியும் கூளியுமாகக் கூறுவதில் ஒருவகைப் பொருத்தம் உண்டு. தெய்வத் தன்மை அங்கும் விளங்குவதனை மக்கள் கண்டனர். போரினை இந்த வகையில் பேய்கள் அடும் கூழாகப் பாடும் வழக்கம் சங்க காலத்திலேயே தொடங்கிற்று. தவசிகள் தலை மறைவாகக் காடுகளிலும் சுடுகாடுகளிலும் தவம் செய்து வந்தனர். அவர்களைப் பிறர் பேய் என்று இகழ்ந்தபோது அவர்களே தம்மைப் பேய் எனக் கூறிக்கொண்டனர் பேயாழ்வார், காரைக்காற்பேய் எனத்தம்மைக் கூறிக்கொள்ளும காரைக்கால் அம்மையார் முதலியவர்களைக் காண்கிறோம். இந்த நிலையில் பேய் என்பது ஞானி அல்லது சித்தர் என்ற பொருளில் வழங்கலாயிற்று ஞானிகளிடையே விளங்கும் ஆண்டவனும் பேயோடாடி எனப் பெயர் பெறுகிறான்.

காளி இந்த வகையில் கடவுளர் கடவுளாகின்றாள். அவளுடைய கொடுமை தீமையை அழிப்பதாக முடிகின்றது. அஞ்ஞானத்தை அழிப்பதாக முடிகின்றது. காளியும் பழையோளும் மலைமகளின் கோலமாக ஒன்றாகி விடுகின்றார்கள். எல்லோரும் முருகப்பெருமானின் தாயாகின்றனர். மாயோனின் தங்கையாகின்றனர். சிவபெருமானின் மனைவியாகின்றனர். இப்படி ஒருமைப் பாடு எழுகின்றது. தமிழ்நாட்டின் மண் வளம் இது.

ஆனால் போராட்டப் போக்கும் இருந்தது. அதனது எதிர் ஒலிகளே சில புராணக் கதைகளில் கேட்கிறோம். உலகினை அழித்து விளையாடிய காளியை சிவன் கூத்தாடி வென்ற கதையே ஊர்த்துவ தாண்டவத் திருக்கதை. காளி வழிபாட்டிலும் சிவ வழிபாடு சிறந்தது எனக் காட்ட எழுந்த கதை இது. கொலை வழிபாட்டினும் அன்பு வழிபாடு சிறந்தது என்று காட்டுவதும் இக்கதையின் உட்கோளாம். காளியின் திருநடம், ஊன் நடனம், ஆண்டவன் திருநடனம், ஞான நடனம் என்றெல்லாம் விளக்கத் தொடங்கினர்.

காளியை முழு முதற் கடவுளாக வழிபடுகின்றவர்கள் திருமால், சிவன், பிரமன் என்ற மூவரும் இவளை வழிபடுகின்றார்கள் என்று கூறத் தொடங்கியதும் உண்டு.

அரி அரன் பூமேலோன் அகமலர் மேல்
மன்னும்
விரிகதிர் அம் சோதி விளக்காகியே நிற்பாய்

என்பது வேட்டுவ வரி. ஆனால் இந்தத் தமிழ் நாட்டின் மண் வளத்தால் சமரச சன்மார்க்கமே வளர்ந்தது. காளியைச் சிவனாக்கினார்கள். சிவன் செயத்திருவிளையாடல்களைக் காளியின் திருவிளையாடல்களாக்கினர்.

மதியின் வெண்தோடு சூடுஞ் சென்னி
நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்து
அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்
துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி
வளையுடைக் கையிற் சூல மேந்தி
கரியின் உரிவை போர்த்தணங் காகிய
அரியின் உரிவை மேகலை யாட்டி
சிலம்பும் கழலும் புலம்புஞ் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை.

என்பதும் வேட்டுவ வரியே,

விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்வோய்

என்பதும் வேடுவர் பாடும் பாட்டே. திருமாலோடும் கூளிகாளியை ஒன்றாக்கி விட்டனர்.

**மருதின் நடந்துநின் மாமன் செய் வஞ்ச**
**உருளும் சகடம் உதைத்தருள் செய்வோய்**

என்றும் பாடுகின்றனர், அவ் வேட்டுவர். இவ்விருவரும் ஒன்றுன கோல மாகவும் காட்சியளிக்கின்றுள். சிலப்பதிகாரத்தில் காளி கொன்றையும் துளவமும் குழுமத் தொடுத்து ஆனைத்தோல் போர்த்துப் புலி யினுரி யுடுத்து சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்தி நிற்கின்றுள். திரு மாலின் தங்கையுமாகின்றுள். திருவமர் மார்பற் கிளையாள் என்கின்றுர் இளங்கோ. சிவனுக்கும் மனைவியாகின்றுள். கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து மங்கையுருவாய்! மறையேத்தவே நிற்பாய் என்று வேட்டுவ வரி பாடுகிறது. முடிவில் ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றியே நிற்கும் உண்மைக் கடவுட் கோலமே தோன்றுகிறது. [கைலைக் கடவுளும் பாண்டியர் மீனுட்சியும் மணக்கும் திருக் கோலக் காட்சியும் ஒரு பெருஞ் சமரச ஞான நற்காட்சியே ஆம். ஆகவே எங் கெங்கோ தொடங்கி எப்படி எப்படி எப்படியோ வளர்ந்த தாய் வழிபாடு சிலப் பதிகார காலமுதல் சமரச சன்மார்க்க காட் சியாய், எல்லா மதங்களையும் எல்லா வழி பாடுகளையும் ஒன்றுக்கி வளர்க்கும் காட்சி யாக ஓங்குவதனை இன்று மீனுட்சியம்மை கோயில் கோபுரத்தில் கண்டுகளிக் கின்றேம்.]

---

## ஏசுவார்களே!

குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு இமையாக் குஞ்சரமும்,
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் மதுரைப் பரமேட்டீ!
படங்கொள் பாயும் பூவணையும் தருவாய் கையில் படுதலைகொண்டு
இடங்கள் தோறும் இரப்பாய் என்று ஏசுவார்க்கு என்பேசுவனே.

தேனுர் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடுஎன்று
நாலு வேதப் பொருள், உரைத்தாய் நீயே மதுரை நம்பரனே!
நாலு வேதப் பொருள் உரைத்தாய் நீயே பாதி நாரிஉரு
ஆனுய் என்று பிறர்பழித்தால் அடியேன் விடை ஏது அறைவேனே?

—பரஞ்சோதி முனிவர்

# அன்னை மகாகாளி

## ஸ்ரீ அரவிந்தரின் தத்துவ விளக்கம்

பி. கோதண்டராமன் M.A.,B.L.,

உள்ளவன் ஒருவன், உலகு, உயிர், யாவும் அவனே. அவனின்றிப் பிறிதொன்றும் இல்லை. அவனது திரு விளையாட்டால் மயங்கி அறிவிழந்த உயிர், மீண்டும் அறிவு விளக்கம் பெற்று அவனுடன் ஒன்றுபடுவதே வாழ்க்கையின் குறிக்கோள்.

உயிர் தன்னை எளிதில் அறிந்து கொள்ளும்பொருட்டு இறைவன் இரண்டு பிரதான திருவுருவங்கள் கொள்ளுகிறான். ஒன்று ஆண் உருவம்; மற்றொன்று பெண் உருவம். ஆண் உருவைப் புருடன், ஈசுவரன், சிவன், திருமால் என்கிறோம். பெண் உருவைப் பிரகிருதி, இயற்கை, சக்தி, அன்னை என்கிறோம்.

சக்தியும் சிவனும் ஒன்றே. சிவனின்றிச் சக்தியில்லை; சக்தியின்றிச் சிவனுமில்லை. மிக உயர்ந்த நிலையில் பிரிவற்ற ஒருமையே உளது. இறைவன் ஆனந்த மிகுதியால் திருவிளையாடல் புரியும்போதே அவனுடைய திருவுருவங்கள் அமைகின்றன. பரன் ஆணையால் பரை அனைத்துயிரையும், அனைத்துலகங்களையும் படைக்கிறாள். படைத்து அவற்றினுட் புகுந்து, அவற்றின் இருள், மயக்கம், இன்னல் துன்பம், பிணி, பிறப்பு, இறப்பு முதலிய யாவற்றையும் ஏற்றும்—பல்லூழி கால மாக அவற்றினிடையே வினை புரிந்து, அன்பும், அருளும் சொரிந்து இருள் மயக்கங்களைத் தீர்த்து, உண்மையொளி வீசி, அவற்றைப் பரிபக்குவப்படுத்தி, திருத்தியமைத்து, உருமாற்றி, உயர்த்தி இறுதியில் மீண்டும் இறைவனடி சேர்ப்பித்தும் வருகிறாள்.

உலகுயிர்களை ஈன்ற அன்னை, தானும் தன் திருப்பணிக்கு அனுகூலமாகத் திருவுருவங்கள் பலவற்றைத் தாங்குகிறாள். அவற்றுள் நான்கு திருவுருவங்களே சிறப்புடன் விளங்குவன. மகேசுவரி, மகாகாளி, மகாலட்சுமி (திருமகள்), மகாசரசுவதி (கலைமகள்), என்பவையே அவை.

இத்திருவுருவங்களின் இலக்கணங்களைப் பலர் பலவிதமாகக் கூறுவர். பகவான் ஸ்ரீ அரவிந்தர், தம் கனிந்த பூரண யோகசாதனையில் கண்ட பேருண்மைகளை அடிப்படையாகக் கொண்டு இவற்றிற்குக் கூறும் இலக்கணங்கள் சாலச்சிறப்புடையன. அவை அன்னார் எழுதியுள்ள "அன்னை" என்னும் நூலில் விளக்கப்பட்டுள்ளன. அவற்றையே நாம் ஈண்டுக் கையாள்வோம்.

மகேசுவரி, எல்லாவற்றிற்கும் மேலே, விழுமிய ஞானத்திற்கு உறைவிடமாக இருப்பாள். அவளே மனிதரை அவரவர் இயல்பிற்கும் அறிவிற்கும் ஏற்ப நடத்துகிறாள். எல்லா உயிர்களும் இறைவன் இயல்பையும் இறைவன் உண்மையையும் அடைய வேண்டுமெனப் பெருமுயற்சி செய்கிறாள்.

மகாலட்சுமி, தன் அழகினாலும் வசீகரத்தினாலும் ஆனந்தப் பரவசத்தினாலும், பொருத்தம், இணக்கம், சமரசம், தானலயம், சீரிய செல்வப்பெருக்கு முதலிய

வற்றுலும் மக்களை உயர்த்தி, தெய்வீகத் தன்மை அடையுமாறு செய்கிருள். அவள் அற்பம், சிறுமை, வறட்சி முதலிய வற்றை விரும்புவதில்லை. சுயநலம், பொருமை, முதலியவற்றை வெறுப்பாள். எல்லாவற்றிலும் அன்பையும் அழகையும் இசைவையுமே அவள் விரும்புவாள்.

மகாசரசுவதி, அனைத்திறனும், விடா முயற்சியும், நிருவாக சக்தியும் நிரம்ப உடையவள். அவளே எல்லா உயிர்களை யும் பொறுமையுடன் பரிபக்குவப்படுத்தி யும் உருப்படுத்தியும் சம்பூரண நிலை அடையுமாறு செய்கிருள்.

மகாகாளி, சொல்லரிய வேகமும், தீவிரமும், ஆற்றலும் உடையவள். அவள் மார்க்கத்திலுள்ள எல்லாத் தடை களையும் ஒரு கணத்தில் தகர்த்தெறிந்து விடுவாள். விரோதிகளைத் தவிடுபொடி யாக்கிவிடுவாள். அசட்டை, அஞ்ஞானம், தாமதம் முதலிய யாவற்றையும் ஒரே அடியில் ஒழித்துவிடுவாள். சாதாரணமாக ஒரு நூற்றுண்டில் ஆவதை ஒரு நாளில் முடிக்கும் ஆற்றல் அவளுக்குண்டு. அவள் காலசக்தி, புரட்சித் தேவதை. கோழைக ளும் பயங்கொள்ளிகளும் அவளுடைய சீற்றத்தையும் வேகத்தையுங்கண்டு அஞ்சுவர். ஆயினும் அவளும் அன்னையே. அவளுடைய அன்புக்கும் அருளுக்கும் எல்லையேயில்லை. அவள்பொருட்டு யாவற் றையும் துறப்பவர்கள் பேரின்பம் அடைவர்.

அன்னை மகாகாளியின் திவ்விய சொருபத்தை ஸ்ரீ அரவிந்தரின் மொழியி லேயே சித்தரிக்குமுன், வாழ்க்கைத் தலைவனை இறைவன் மங்கல சொருப ஞகத் தோன்றுவதோடு உக்கிரமான பயங்கர சொருபனுகவும் காட்சியளிக் கிருன் என்பதை ஸ்ரீ அரவிந்தரே ஆங் காங்குத் தம் நூல்களில் கூறியிருப்பதை ஒரு சிறிது கூறுவோம்.

வாழ்க்கையில் எல்லாமே அன்பும், இன்பும், நலனும், அழகும், அறமுமாக இல்லை. வன்பு, துன்பு, தீமை, மரணம், விருபம் மறம் ஆகியவற்றையும் காண் கிருேம். உலகில் இணக்கத்தைவிட பிணக் கத்தையும், சமாதானத்தைவிட போராட் டத்தையுமே அதிகமாகக் காண்கிருேம். வாழ்வைவிட மரணமே அதிகமாகத் தென் படுகின்றது. எங்கும் பலவித சக்திகள் ஒன்றேடொன்று மோதியடித்துக்கொள் கின்றன. எங்கும் உயிர்கள் ஒன்றே டொன்று போராடியும், ஒன்றையொன்று விழுங்கியும், இறந்தும், பிறந்தும் வரு கின்றன. எங்குமே அழிவின்றி ஆக்கத் தைக் காணேம். இது வாழ்க்கையைப்பற் றிய உண்மையாகும். இதை மறுப்ப திலோ, மறைப்பதிலோ பயனில்லை. உல கையும், வாழ்க்கையையும் உருமாற்றித் திருத்தியமைப்பதற்குரிய வழியை ஆரா யுமுன், இவ்வுண்மையை நேராகக் காண் பது இன்றியமையாததாகும்.

இறைவன் இவ்வுலகுயிர்களைப் படைத்துக் காத்து அளிக்கிருன். அவன் அன்பும், அருளும், கருணையும், இன்பும், உயிரும், அழகும், நலனும், அறமும் வடி வங்களாகக் கொண்டவன். அவனே சிவம், மங்கலம், நலம்புரியும் துர்க்கையின் பாகன். மக்கள் இவ்வண்ணமாகவே இறை வனைக் கருதிப் போற்றுவர். மனிதன் ஒவ் வொருவனுக்கும் தன்னைக் காத்தளிக்கும் ஒரு கடவுள் உண்டு. ஆனல் இதுவே இறைவனைப்பற்றிய பூரண உண்மையா காது. உலகுயிர்களை ஆக்கி அளிக்கும் இறைவனே சங்காரமூர்த்தியாகி, காலம்

என்னும் உருக்கொண்டு அவற்றை அழித்து விழுங்குகிறுன். மங்கல சொரு பனே உக்கிரமான பயங்கர சொருபத்தில் தோன்றுகிறுன். வாழ்க்கைத் தலைவனே போரின் முதல்வனுயும் விளங்குகிறுன். உயிர்களின் நண்பனே அவற்றை அழிப்போனுகவும் காண்கிறுன். நலம் புரியும் துர்க்கை குருதிதோய்ந்த சங்கார நடனம் புரியும் மகாகாளியாகி றுள். பக்தன் ஒருவன் சேதமடைந்த கப் பலுக்குள் இருக்கிறுன். கப்பலிலுள்ளவர் அனைவருமே மூழ்கிவிடினும், தன்னைக் காத்தளிக்கும் கடவுள் தன்னைமட்டும் எப்படியேனும் காப்பாற்றிக் கரை சேர்ப் பான் என்று இருக்கிறுன். அனைவருமே காப்பாற்றப்பட, அவன் பிடித்துக்கொண் டுள்ள கடைசிப் பலகையையும் அவனிடமி ருந்து பிடுங்கி இறைவன் அவனைமட்டும் கடலில் மூழ்கடிக்கிறுன். இத்தகைய கடவுளை என்னென்று சொல்லுவது?

ஆயினும், இத்தகையோனும் நம் மைக் காத்தளிக்கும் இறைவனே; சிவனைப் போன்று ருத்திரனும் இறைவனே. துர்க் கையைப் போன்று காளியும் நம் அன் னையே. இவ்வுண்மையின் ஞானம் உதித் தால்தான், ''இறைவியே, நீயும் என் அன்னையே. உன் பயங்கரத் தோற்றத்தி லும், ஓர் அமைதியையும் அழகையும் இசையையும் காண்கிறேன். நான் உன் னையே சரண் அடைகிறேன். நீ என்னைக் கொன்றுலும் நான் உன்னிடம் விடாது அன்பு செலுத்துவேன்'' எனக் கூறும் உண்மையான ஞானியின் நிலையை நாம் அடைவோம். ''எல்லாம் அவனே,எல்லாம் அவனே'' என்னும் ஞானம் எய்திய பின் னரே நாம் நம் வாழ்க்கைப் பிரச்சனைக ளைத் தீர்க்க முடியும்.

இந்து சமயம் ஒன்றே கடவுளைப்பற் றிய பூரண உண்மையையும் நமக்கு அளிக்கிறது. இந்நாட்டில்தான், பயங்கர மான, கோர சொருபமுள்ள மகாகாளியை, ''இவளும் நம் அன்னையே'' என மக்கள் வழிபடுகிறுர்கள் இப்படிப்பட்ட அன்னை மகாகாளியைப்பற்றி ஸ்ரீ அரவிந்தர் தம் ''அன்னை'' என்னும் நூலில் திருவாய் மலர்ந்தருளியிருப்பதாவது:

மகாகாளியின் சுபாவம் வேறு. மகேசுவரிக்கு இயல்பாக உள்ள பரப்பும் அறிவும் இவளுக்கு இல்லை. ஆனுல், உணர்ச்சியும், ஆற்றலும், வலிமையுமே இவளது சக்திக்குச் சிறப்பு அளிப்பன. இவளிடம் கட்டுக்கடங்காததொரு தீவிர மும், தான் மேற்கொண்ட கருமத்தை நிறைவேற்றுவதற்குரிய மகத்தான சக்தி யும் ஊக்கமும் காணப்படுகின்றன. மார்க்கத்தில் குறுக்கிடும் வரம்புகள், தடைகள் ஆகிய யாவற்றையும் நொறுக் கும் ஒரு தெய்வீக உக்கிரமும் இவளிடம் உண்டு. சண்டமாருதம் போன்று இவள் கருமம் ஆற்றும்போது, இவளுடைய தெய்வீகத் தன்மைகள் பீறிட்டுப் பொலி யும். ஒரு கருமத்தை விரைவாகவும், உடனே பலனளிக்கும் முறையிலும் செய்து முடிப்பதற்கும், ஒன்றைத் துரித மாகவும் நேராகவும் புடைப்பதற்கும், நேர்முகமாகத் தாக்கி அதன் முன்னுள்ள யாவற்றையும் துடைத்துச் செல்வதற்கும், இவளே சரி. இவளுடைய முகத்தைக் கண் டாலே, அசுரன் பயத்தினுல் நடுங்குவான். இறைவனைப் பகைத்து நிற்பவர்களுக்கு இவள் குரூரமாயும் ஆபத்தாயும் இருப் பாள். ஏனெனில், உலகங்களின் போர்வீரி யான இவள், சண்டைக்கு எப்போதும் பின்வாங்க மாட்டாள். பரிபக்குவமடை யாதவற்றை இவள் சகிக்கவே மாட்டாள்.

ஆகவே, மனிதனிடம் தனக்கு இணங்கி வராத யாவற்றின் விஷயமாகவும், முரட்டடியாகவே நடந்துகொள்வாள். மடமையிலும் மயக்கத்திலும் உழன்று அவற்றில் பிடிவாதமாக நிற்பவர்களின் விஷயத்தில் இவள் கடுமையாகவே இருப்பாள். துரோகம், பொய், துவேஷம் ஆகியவற்றின்மீது கடுஞ்சினம் கொள்வாள். வைரத்திற்கு உடனே சவுக்கடி கொடுப்பாள். இறைவன் பணியில் காட்டும் அசட்டையையும், அலட்சியத்தையும், மந்த புத்தியையும் இவள் பொறுக்கமாட்டாள். அகாலத்தில் உறங்குகிறவர்களையும், வெட்டியாகத் திரிகிறவர்களையும், அவசியமாயின் சுருக்கென்று நோவும்படிப் புடைத்து எழுப்புவாள். வேகமாகவும், நேராகவும் கபடற்றும் உள்ள மனவெழுச்சிகள், ஒளிவு மறைவு இன்றியும் தொந்தமற்றும் உள்ள கிளர்ச்சிகள், வானோக்கிக் கொழுந்துவிட்டு எரியும் ஆர்வம்-இவையே மகாகாளியின் இயக்கங்களாகும்.

இவளது குணப்போக்கை ஒரு கட்டுக்குள் கொண்டு வரமுடியாது. இவளது உட்பார்வையும் திடசித்தமும், ஒரு கழுகைப் போன்று வெகு உயரமாயும் வெகு தொலைவிலும் செல்லும். இவளுடைய அடிகள் மேல் நோக்கி விரைந்து செல்லும். இவளுடைய கரங்கள் புடைக்கவும் பாதுகாக்கவும் நீண்டு பரந்திருக்கும். ஏனெனில், இவளும் அன்னையே; இவளுடைய வன்மைப் போலவே இவளுடைய அன்பும் தீவிரமானது. இவளது உள்ளத்தில் ஆழ்ந்த பாசமும் பட்சமும் உண்டு. இவளை மட்டும் தன் முழு பலத்துடன் குறுக்கிட விட்டுவிடுவோமாயின், சாதனை முன்னேற விடாமல் தடுக்கும் தடைகளும், தாக்கும் பகைகளும், சத்தில்லாப் பொருள்களைப்போல ஒரு நிமிடத்தில் நிர்த்தூளியாய்விடும். இவளது சினம் பகைவர்களுக்குப் பயங்கரமாயிருக்கலாம்; அழுத்தத்தின் மும்முரம் பலவீனர்களுக்கும் பயங்கொள்ளிகளுக்கும் துன்பம் தருவதாக இருக்கலாம். ஆனால், பெரியோர்களும் மேலோர்களும் பலவான்களும் இவள் மீது அன்பு செலுத்துவர். ஏனெனில், இவள் கொடுக்கும் அடிகளே, அவர்களின் அமைப்பில் இணங்கிவராமல் எதிர்த்து நிற்பவைகளை மட்டம்தட்டி, பலமும் பூரண உண்மையும் பொருந்தியனவாக ஆக்குகின்றன. இவையே, அவர்களின் வளைவுகளையும் கோணல்களையும் நிமிர்த்தி நோக்குகின்றன. இவையே, அவர்களிடம் தூய்மையற்றதாயும் குறையாயும் உள்ளவற்றை வெளியே கடத்துகின்றன. அவள் மட்டும் இல்லாமல் இருப்பின், ஒரே நாளில் ஆகக்கூடியது பல நூற்றுண்டுகள் பிடிக்கலாம். இவளின்றி, ஆனந்தம் பரந்தும் கம்பீரமாயும் இருக்கலாம்; ஆனால், அவ் ஆனந்தத்தின் முழு தீவிரங்களில் சுவாலை போன்று எழும் களிப்பை அது இழந்துவிடும்.

இவளே, ஞானத்திற்கு வெற்றிகொள்ளும் ஆற்றலை அளிக்கிறாள். அழகுக்கும் இசைவுக்கும் இவள் உயர்ந்தோங்கும் ஓர் இயக்கத்தைக் கொணர்ந்து தருகிறாள். பரிபூரணம் அடைவதன் பொருட்டு நிதானமாகவும் உழைப்புடனும், சிரமப்பட்டுக்கொண்டும் செல்வோருடைய சக்தியைப் பெருக்கி, அவர்களின் நீண்ட வழியைக் குறுக்கவல்லதொரு வேகத்தைத் தருகிறாள். பரம உன்னதமான பரவசங்கள், மகோன்னதமான உணர்ச்சிகள், மிக விழுமிய நோக்கங்கள், மிகப் பரந்த காட்சிகள், ஆகிய இவற்றிற்குக் குறைவான எவையும் இவளுக்குத் திருப்தியளிப்பதில்லை. ஆகவே இவளிடமே இறைவனின் வெற்றிச் சக்தி உளது. நாம் விரும்

பும் மகத்தான சித்தியானது, 'இனிமேல்' என்பதின்றி இப்போதே நடைபெறக் கூடுமாயின், அது இவள் அருளும் கனலாலும் வெறியாலும் வேகத்தாலுந்தான் முடியும்.

ஆகவே, காரியசித்தியடைவதற்கும் வாழ்க்கைப் பிரச்சினையைத் தீர்த்து அதில் வெற்றி கொள்வதற்கும் மகாகாளியின் துணையை வேண்டி அவளை வழிபடுவோமாக! அன்னை மகாகாளி வெல்க!



## தாலோ தாலேலோ

முதுசொல் புலவர் தெளித்த பசுந்தமிழ்
நூல், பாழ் போகாமே
முளரிக் கடவுள் படைத்த வசுந்தரை
கீழ்மேல் ஆகாமே
அதிரப் பொருது கலிப்பதை ஞன் தமிழ்
நீர்நாடு ஆளாமே
அகிலத்து உயிர்கள் அயர்த்து மறங்கடை
நீள்நீர் தோயாமே

சிதைவுற்று அரசியல் நல்–தரு மம்குடி
போய் மாய் வாகாமே
செழியர்க்கு அபயரும் ஒப்பென நின்றுஉண-
ராதார் ஓதாமே
மதுரைப் பதி தழையத் தழை யும் கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன் வளர்த்த பசுங்கிளி
தாலோ தாலேலோ.

—குமரகுருபரர்

# நமது சமுதாயத்தில் கோயில்களின் இடம்

T. M. நாராயணசுவாமி, M. A., B. L.

தென்னாட்டில் இந்து சமயத்தில் கோயில்கள் தாம் நம் மக்களுக்கும் சமுதாயத்திற்கும் உயிர் என்று சொல்லலாம்; உயிரை வளர்த்து ஓங்குவிக்கும் சக்தியை உற்பத்தி செய்யும் இடங்கள் : உயிரின் பிணியைத் தீர்க்கும் அரு மருந்துகள் ; உயிருக்கு உற்ற துணைகள் என்றும் சொல்லலாம். நம் சமுதாயமே கோயில் அடிப்படையில் தான் ஏற்பட்டிருந்தது. கோவில் இல்லாத ஊர் ஊரல்ல; அதைக் காடு என்று பெரியோர்கள் நம் சமுதாயத்தில் நினைத்தார்கள். ஆகையால்தான், இந்தச் சமுதாயத்தில் கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாமென்ற பழமொழி பிறந்து நாளது வரையில், அனுபவத்தில் இருந்து வருகிறது. கோவில் இல்லா ஊரில் நாம் வாழ்வாங்கு வாழமுடியாது என்பது இந்தப் பழமொழியிலிருந்து தெரிகிறது. சமுதாயத்துக்கு நடு நாயகம் கோயில்கள். நம்முடைய கோபுரங்களைப் பார்த்தால் ஒரு எண்ணம் யாவருக்கும் உதிக்கும் கோபுரங்கள் நன்கு அழகாகக் கட்டப்பட்டு கீழிருந்து மேல் நோக்கிச் செல்கின்றன. அதைப் போல நம்முடைய கோயில் வழிபாட்டுத் தத்துவம் தெரிந்து வழிபட்டால் நமது தனி வாழ்வும் சமுதாய வாழ்வும் அழகாகக் கட்டுப்பட்டு மேல் நோக்கிச் செல்லும் என்பதே ஆகும். இது நம் வரலாற்றிலிருந்து விளங்கும்.

ஒரு சமுதாய முன்னேற்றத்திற்கு மொழி வளர்ச்சி மிகவும் முக்கியம். நம் தமிழ் மொழியைக் கோயில்கள் தான் வளர்த்தன. கோயில்களால் பல இலக்கியங்கள் எழுந்தன. அவைகளால் அன்பு தழைத்து, அறிவு மலர்ந்து, ஆடல்பாடல், இசை, சிற்பம், ஓவியம், வண்ணம் முதலான பல கலைகளும் கனிந்து விளங்கின. ஒரு காலத்தில் கோயில்கள் பள்ளிக்கூடங்களாக விளங்கி, எண்ணையும் எழுத்தையும் பரப்பின ; வேத பாடசாலைகளாகப் பணியாற்றி வேதங்களைப் பரப்பின, மருந்தளிக்கும் வைத்திய நிலையங்களாகவும், பசியைப் போக்கும் அன்ன சத்திரங்களாகவும் தொண்டாற்றின, காலத்திற்கு ஏற்றபடி கலாசாலைகளாகவும் விளங்கின. உதாரணமாக, திருவரங்கம் கோயிலில்ஒளி வீசி திகழ்ந்த நம்பிள்ளை சபை உலக பிரசித்தி பெற்றது. அதுபோன்ற சபைகளும் மதுரையில் திகழ்ந்த தமிழ்ச் சங்கங்களும் கலாசாலைகள் அல்லவா? சகல அறங்களையும் வளர்த்த கூடங்களாகத் திகழ்ந்தன. கோயில் திருவிழாக்கள் சமுதாய நலனுக்காகவே ஏற்பட்டன.

ஆதிகால முதல் நம் நாடு ஆத்மீக வாழ்விற்குத்தான் முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கிறது. அது நம் நாட்டிற்குத் தனிச்சிறப்பு. நாம் கண்டதே கோலம் என்று வாழவில்லை. ஊனக் கண்ணிற்குத் தெரியாத உண்மைப் பொருள் ஒன்று உண்டு. அதன் அடிப்படையிலே மக்கள் வாழவேண்டும். இதுதான் நம் முன்னோர் காட்டிய வழி. நமக்குள் அழியாத ஆத்மா ஒன்று உண்டு. நாம்

என்பது வெறும் எலும்பு போர்த்த உடம்பல்ல ; அழியாத ஒன்று இந்தக் கூட்டிலே இருந்து இயக்குகிறது. எல்லாருடைய கூட்டிலிருந்து இயங்குகிறதும், எல்லா கண்டங்களையும் இயக்கி வருகிறதும் ஒன்றே. ஆகவே அந்தப் பரம்பொருளுக்கு ஏற்ப இவ்வுடம்பில் உள்ள உயிரும் இசைந்து வாழவேண்டும். அதுதான் வாழ்வு. மற்ற வாழ்வு, லோகம் எல்லாம் கட்டி ஆள்வதாயிருந்தாலும் வாழ்வல்ல.

அப்பரம் பொருளை அறிந்து அடைய ஏற்பட்ட வழிகள் பல, அவற்றுள் சிறந்தது கோவில் வழிபாடே, இதுவே எல்லா மக்களுக்கும் இசைந்தது, எளியது, உகந்தது. சமுதாயத்தைப் பிணைப்பதும் அதுவே ஆகும்.

இது தொன்று தொட்டு நம் நாட்டில் இருந்து வருகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் உண்டான திருமுருகாற்றுப்படையில் இவ்வழிபாடு சொல்லப்பட்டு அதன் தன்மை விளக்கப்பட்டிருக்கின்றது ;

அளவிடற்கு அரிய பெரிய முருகன் ஆறுபடை வீடுகளுடன் குன்றுகள், விழா நிகழும் இடங்கள், சதுக்கம், சந்தி முதலாகப் பல இடங்களிலும் அமர்ந்துள்ளான்-எங்கே அமர்ந்திருக்கக் கண்டாலும் வணங்கிப் போற்று, சொற்களால் கூற வொண்ணாத பெரும்புகழ் உடைய முருகனை நமக்கு முடிந்த வகையில் இனியவையும் நல்லவையுமாகப் புகழ்ந்துபாடு ; அப்போது தனது பெருமையான இடத்திலிருந்து முருகன் இறங்கி வந்து 'அஞ்சேல்' என்று அருளித் தன் தெய்வ இளநலத்தைக் காட்டுவான்—இவ்விரிந்த உலகத்தில் உன்னையே நான் அடைய நீ அருளல் வேண்டும் என்று பக்தன் வேண்டுகின்றான்-என்று திருமுருகாற்றுப் படை கோவில் வழிபாட்டுத்திறம் கூறுகிறது. ஆகவே யாவரும் எப்போதும் சென்று வழிபாடு செய்து அருள் பெறுவதற்கு ஆக இறைவன் அமர்ந்துள்ள இடங்கள் கோவில்கள். இது முருகன் கோவிலுக்கு மட்டும் உள்ள உண்மையல்ல; இன்றும் சிவன் கோவில், திருமால் கோவில், ஆக எல்லாக் கோவில்களிலும் அமைந்துள்ள உண்மையே ஆகும்.

நம் நாட்டில் இந்தக் கோவில் வழிபாட்டிற்கு புத்த, சைன மதங்களால் சிதைவு ஏற்பட்டது. கோவில் வழிபாட்டிற்கு ஒரு அதிர்ச்சியும், ஆட்டமும் உண்டாயின. ஆனால் இறைவன் அருளால் இந்த நிலைமை மாறியது. 6, 7—ம் நூற்றாண்டு முதல் 10-ம் நூற்றாண்டு வரை நம் நாட்டில் அவதரித்த நாயன்மார் ஆழ்வாராதிகள் பழைய காலத்திலிருந்த திறனை இந்த கோவில் வழிபாட்டை ஊர், ஊராகச் சென்று தம் உள்ளம் கவரும் பதிகங்களால் மக்கள் உள்ளத்தையும் கவர்ந்து, சமுதாயத்தையும் திருத்தி, பக்திமார்க்கத்தைப் புத்துயிர் ஊட்டி, உருவாக்கி அழகுபடுத்தி நிலைநாட்டித் திகழச் செய்தார்கள். அப்பெருமை அவர்களையே சாரும். அவர்களால் பாடப்பெற்ற தலங்கள் நம் நாட்டில் கருவூலங்களாக, நம் உயிர்களாகத் திகழ்கின்றன. தேவாரம் முதலான திருமுறைகளும் திவ்யப்பிரபந்தமும் இலக்கியத்திலே தனிப்பெரும் சிறப்புடையன.

சமுதாயத்திற்கு இலக்கியம் அவசியம். இவர்கள் செய்ததை ஒட்டி இவர்களுக்குப் பின் வந்த ஆச்சாரியார்களும் மடாதிபதிகளும் தாங்கள் பாடிய தோத்திரங்களாலும், சாஸ்திரங்களாலும் தாங்கள்

ஏற்படுத்திய மடாலயங்களாலும் இந்தக் கோவில் வழிபாட்டிற்கு, சிறப்புத்தந்து இன்னும் பலப்படுத்தினுர்கள்.

சாதாரண உலகக் காதல் வாழ்வே—பக்திவழிபாட்டின் கடவுள் காதலாக, தெய்வக்காதலாக,தெய்வநெறியாகப் பெரியோர்களால் மாற்றப்பட்டது. இதனுல் பலவகை சிறு பிரபந்தங்கள் உண்டாயின. கோவிலில் எழுந்தருளிய மூர்த்திகளை தங்கள் தெய்வக் காதலனுக எண்ணி, உலா, தூது, அந்தாதி, ஊஞ்சல், அம்மானை, குறவஞ்சி, பிள்ளைத்தமிழ், முதலிய பிரபந்தங்கள் வெளிவந்தன. சமுதாயம் இவைகளால் பெரும் பேறு அடைந்தது. அநேகக் கோயில் புராணங்கள் வெளிவந்தன.

கோவில் வழிபாட்டினுல் சிந்தைக்கு ஒரு செம்மை ஏற்படுகின்றது. சமுதாயத்தில் உள்ளவர் ஒவ்வொருவரும் வழிபாடு செய்தால் ஒவ்வொருவருடைய சிந்தையும் மேன்மையுறும். ஆகவே சமுதாயமே மேன்மை பெறும். தம் பதிகங்களில் கோயில் வழிபாட்டின் உயர்வையும் நன்மையையும் பலவாருக அப்பர்கூறியுள்ளார். ஒன்று, இரண்டு, இங்கு கூறலாம்.

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர் செஞ்சடைஎம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே.

தற்காலத்திலே எங்கு பார்த்தாலும் வேகமும் அவசரமும்தான். அமைதியில்லை. உண்மை அன்பு இல்லை. அமைதி வேண்டுமென்ருல் கடவுள் பக்தியால்தான் கிடைக்கும். இதையே ஒரு ஆங்கில ஆசிரியர் நகைச்சுவை தரும்படி சொல்கிருர். "மனிதன் பறவை போல் பறக்கவும் மீனைப்போல் நீந்தவும் செய்கிருன். எல்லா ஆற்றலையும் அவனுக்கு நான் (கடவுள்) தந்து இருக்கிறேன். ஆனுல் அமைதியை மட்டும் நானே! என்னிடம் வைத்துக்கொண்டு இருக்கிறேன். என்னை அடைந்தால்தான் அந்த அமைதியை,மனிதனுக்குத் தருவேன்," என்று இறைவன் கூறுவதாக அந்த ஆசிரியர் சொல்கிருர். இதனுல் அப்பர்வாக்கு நன்கு புலனுகிறது.

சேக்கிழார் தனது பெரிய புராணத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லைப் பொன்னம்பலத்திலே ஆனந்தத் தாண்டவமாடும் அய்யன் திருச்சந்நிதியில் வழிபாட்டினுல் பெற்ற எல்லையில்லா மகிழ்ச்சியை இந்தப்பாட்டில் கூறியிருக்கிருர்.

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குண மொரு மூன்றும்
திருந்து சாத்துவிக மேயாக
இந்து வாழ் சடையா னுடுமானந்த
எல்லையில் தனிப் பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

மேலும் மனிதனுக்கு ஒரு பிறவி மட்டும் அல்ல. பல பிறவிகள் உண்டு. இது நமது சமய உண்மை. முற்பிறவிகளில் ஏற்பட்ட பாவங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும்; நாம் நற்கதிக்குச் செல்லவேண்டும். அதற்கு ஒரே மார்க்கந்தான். தெய்வத்தை நினைந்து நினைந்து, உருகி, உருகி, பிரார்த்தனை செய்ய வேண்டும். இதை அப்பர் மற்றொரு பாட்டில் தெளிவாக்கி இருக்கிருர்.

பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசில்வேண்டில்
சுற்றி நின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுவேன் ! கேள் ! நெஞ்சே துஞ்சா [வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்ளேன் [என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழிலாரூரா என்றே போற்றுநில்லே.

கோவில் வழிபாட்டினால் மனிதன் தன் பாவங்களைப் போக்கிக் கொள்ளுகிறான். அமைதி பெறுகிறான்—எல்லா மகிழ்ச்சியிலும் மூழ்குகிறான். சிந்தை செம்மையாகிறது. சமுதாயத்தில் வெறுப்பு இல்லாமல் அன்போடு வாழ்கிறான். இப்படி ஒவ்வொருவரும் பலனை அடைவதால் தானாகவே சமுதாயம் நல்ல சிந்தை உடையவர்களாகப் பெற்று ஓங்கி வளர்கிறது.

கோயில்கள் ஏற்பட்ட தத்துவத்தைக் கவனித்தால், சமுதாய நலத்திற்காகவே கோயில்கள் உண்டானவை என்று தெரிகிறது. சமுதாயத்திற்கு அருள்பாலிக்கும் இடங்கள் கோயில்கள். கோயில் பூஜைகளை அதற்காகவே வகுத்தார்கள். அப்பூஜைகளின் இறுதியிலே மழை பெய்யவும் வளங்கள் நிரம்பவும் அரசு ஓங்கவும், தீயவை மாயவும், பக்தி எங்கும் நிறையவும் சர்வ ஜனங்களும் சுகமாக வாழவும் இவ்வாறான பிரார்த்தனைகளோடு கோயில் பூஜை முற்றுப் பெறுகிறது.

இப்பொழுது தஞ்சைப் பெருங் கோயிலைப் பற்றியும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலைப் பற்றியும் கொஞ்சம் கவனிக்கலாம்.

தஞ்சைப் பெருங் கோயில் இராஜராஜ சோழரால் கட்டப்பட்டது. பத்தாம் நூற்றாண்டில் இருந்த சோழ அரசர்கள் வரிசையில் முன்னிருப்பவர். அவர் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் மிகஉன்னத நிலையில் விளங்கியது. வீராதிவீரர் அநேக நாடுகளை வென்றார். அந்த நாடுகளெல்லாம் அவர் வம்சத்தாரிடம் இல்லை. அவர் வம்சமே இல்லாமல் போய்விட்டது. என்றாலும் இறை வழிபாட்டுக்கென அவரால் கட்டப்பெற்ற தஞ்சைப் பெரிய கோயில் அவர் புகழை இன்னும் பறைசாற்றிக் கொண்டு வியப்பையும் விழிப்பையும் உண்டாக்கி வருகிறது.

இவர் சிறந்த சிவபக்தர். சிவனுடைய பெருமையை எப்படிச் செய்கையில் உணர்த்துவது? தான் வழிபடும் இறைவனுக்கு எல்லாம் பெரியதாக லிங்கம், அம்மை, நந்தி, ஆலயம், கோபுரம்- அமைத்தார். தனது போர் வெற்றி செல்வக் குவியல்களைக் காணிக்கையாக வழங்கினார். பெருவுடையார் கோவிலைக் கட்டினார். அங்கே சிற்பக்கலைகள் சீருடன் திகழவும், வண்ணக்கலை உயர்ந்து விளங்கவும், இலக்கியம் வளரவும் தேவாரப் பதிகங்கள் ஓதப்பெறவும், ஆடல் பாடல் பல கலைகளும் செழிக்கவும் கோயிலில் ஏற்பாடு செய்தார்; அவற்றிற்கு வேண்டிய நிதிகளைக் கொடுத்தார்; நிபந்தங்களையும் கட்டளைகளையும் அமைத்தார்; கோயிலைச் சமுதாயத்தோடு இணைத்து அமைத்தார்; ஏனெனில் மக்கள் வாழ்விற்கு, உயிர் உணர்ச்சி செம்மையாயிருப்பதற்கு, கலைப்பண்பாட்டிற்கு, காட்சியழகுக்கு, சமுதாய நல்வாழ்வு வளர்ச்சிக்கு நடுநாயகமாக இந்நாட்டின் நிகழ்ந்தன என்பதை இராஜராஜர் நன்கு அறிந்து உணர்ந்தவர்; அதனால் தான் சமுதாய நலனுக்காக இந்தப் பேரெடுப்பான செயலைச் செய்தார்.

இங்கு மதுரையைப் பற்றி சற்று கவனிப்போம். நமது கோவில் நகரங்களில் மிகத் தொன்மையும், வரலாற்றுப் பெருமையும், புகழும், பலவகை யெழிலும், பெற்று இன்றும் சிறந்து விளங்குவது மதுரையே. இந்த விழுமிய சிறப்பினுக்கு ஆதாரமாக அடிப்படையாக விளங்குவது இந்த மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயமே.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட பரிபாடலில் இக் கோயில் தன்மையைப் பற்றி அடியில் கண்டபடி கண்டிருக்கிறது.

**"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர் பூவின்**
**இதழகத் தனைய தெருவம் இதழகத்து**
**அரும் பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்**
**தாதின் அனையர் தண் தமிழ்க் குடிகள்"**

இதனால் இந்தக் கோயில் பழங்காலம் முதற்கொண்டே சமுதாயத்திற்கு ஒரு தாமரைப் பொகுட்டு போல் நடு நாயகமாக இருந்தது. குடி மக்கட்கு உணவை அளித்தது. தெய்வ நறுமணத்தை வீசியது. கோவிலால் சமுதாயம் பலன் அடைந்தது.

நம்முடைய தமிழை இக் கோவில் வளர்த்து வந்திருக்கிறது. தமிழ்ச் சங்கம் இல்லாமல் தமிழ் இல்லை. தமிழும் சங்கத்திலே வளர்ந்தது; அச் சங்கமும் ஆலவாய் அண்ணல் கோவிலிலே இருந்தது. சங்கச் சான்றோர்களை இக் கோயில் வளர்த்தது போலும். நம்முடைய சுந்தரேசப் பெருமானே சங்கம் ஏறிப் புலவனாக, புலவரோடு வாதாட விரும்பினார் போலும். இதனால் சங்கத்தின் பெருமை நன்கு வெளிப்படுகின்றது. ஆகவே சங்கமும் புலவரும் தமிழும் தழைக்க இந்தக் கோவில் ஆதாரமாக இருந்து இருக்கிறது. நம் வான்புகழ் கொண்ட திருக்குறளுக்கு இடம் தந்ததும் இந்தக் கோவில்தான்.

திருஞான சம்பந்தர், மங்கையர்க்கரசி என்று தொடங்கும் பாசுரத்தைக் கவனித்தால் எவ்விதம் இந்தக் கோவில், வழிபாட்டில் சிறந்து இருந்தது. என்று புலப்படும். கூன் பாண்டியன் சிறிது காலம் கோயில் தொடர்பில்லாமல் இருந்தார், எனினும் அவர் அண்ணலின் அருளைப் பிறகு உணர்ந்துகொண்டு சிறந்த பக்தனாக விளங்கி நெடுமாறன் என்ற பெயரும் பெற்றார். மனக் கூன் நிமிர்ந்தது.

பிறகு திருவிளையாடற் புராணமும் பரஞ்சோதி முனிவரால் மதுரையிலேயே தோன்றியது. இது மிகச் சிறந்த புராணம். தினமும் சமுதாயத்தில் அநேகர் இந்த நூலை, பாராயண நூலாகப் பாராயணம் செய்து உய்ந்து வருகின்றனர். இந்த நூலிற்கு மூலம்-அடிப்படைக் கோயிலே.

பிற்பாடு நாயக்கர் ஆண்டகாலத்திலும், சிறப்போடு விளங்கியது இந்தக் கோயில். நாயக்கர் அரசர்களுள் திருமலை நாயக்கர் புகழ் பெற்றவர். அவர் சிறந்த பக்தர். கோவில் வழிபாட்டிற்கு அவர் ஒரு எடுத்துக்காட்டு. சமுதாய நலனுக்காகக் கோவில், மண்டபங்களைப் பெருவாரியாக விரித்துக்கட்டினார். அவர் சைவ, வைணவ பேதமில்லாதவர். சைவப் பெரியாராகிய குமர குருபரரையும் வைணவப் பெரியாராகிய பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் அவர்களையும் ஆதரித்த பெருமை திருமலை நாயக்கருக்கு உரியது. இவ்விரு பெரியார்களும் தமிழ் இலக்கியத்தில் மிகச் சிறந்த இடம் கொண்டவர்கள். குமர குருபரர் பெருமை வாய்ந்த மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழைப் பாடியவர், இவர்

மீனுட்சி அம்மன் பிள்ளைத் தமிழைப் பாடி வரும் போது மீனுட்சி அம்மனே குழந்தை யாகப் பிரசன்னமாகி மன்னன் மடியில் உட்கார்ந்து குமரகுருபரருக்கு ஒரு முத்து மாலையைப் பரிசாகக் கொடுத்துவிட்டு மறைந்தது. பிள்ளைப் பெருமாள் அய்யங் கார் பல சிறு பிரபந்தங்களை இயற்றிஞர்.

மேலும் திருமலை நாயக்கர் காலத்தில் பல கிறித்துவர்கள் முகமதியர்கள் நாட் டில் குடியேறிவிட்டார்கள். இந்து மதஸ் தர்களுக்கு தாராளமாகப் பரந்த மனப் பான்மையுடன் வசதிகளையும், உரிமைகளை யும் வழங்கினுர் எல்லா மதங்களையும் சமரசமாகப் பாவித்தார். இது தான் உண்மைப் பக்தி வழிபாட்டுக் காரரின் நடை. 32 அறங்களை நடத்தி காட்டின அம்மையின் மகன் வேறு எப்படி நடந்து கொள்ள முடியும்? 32–அறங்களையும் வளர்த்துக் கட்டின கோயில் மீனுட்சி கோயில். சமுதாய வாழ்வில் கோவிலுக்கு இன்றியமையாத பங்கு உண்டு என்பது இதிலிருந்து தெரிகிறது.

பல்லாயிரம் ஆண்டுகளாக மீனுட்சி சுந்தரேசுவரர் கோயில் தன் தெய்வீக மதுரத்தை சமுதாயத்துக்கு அளித்துக் கொண்டே வந்திருக்கிறது. அதன் மதுரமும், புகழும், செயலும் இன்னும் ஓங்க வேண்டும். தெய்வத் தன்மை பொருந்திய திருஞான சம்பந்தர் அப் படியே பாடியிருக்கிறுர். எதிர் காலத்தில் எல்லா நாட்டிற்கும், இறைவியும், இறை வனும், ஆனவர்கள் மதுரைக் கோயிலில் மீனுட்சி சுந்தரேசுவராாகப் பெயர் கொண்டு எழுந்தருளியிருப்பவர்; அவர் அருளால் இடரெல்லாம் நீங்கி உலக மக் கள் யாவரும் இன்பத்துடன் இனிது வாழ வேண்டுமென்பது என் பிரார்த்தனை.

அரசர் செய்ய வேண்டிய இந்த மகத் தான திருப்பணியைத் தலைவராக இருந்து நடத்தி வரும் நண்பர் ராஜன் அவர் களுக்குப் பொதுமக்கள் நன்றி உரியது.

# கோயிற் பொருளாதாரம்

டாக்டர் பா. நடராஜன், எம். ஏ. டி. லிட்., எம். எல். ஏ.

தமிழக வரலாற்றிலே அருளுக்கும் பொருளுக்கும் தொன்றுதொட்டே ஒரு நேரடித் தொடர்பு இருந்து வந்துள்ளது. தென்னாட்டுக் கோயில்கள் தமிழர் அருள் வாழ்விற்காக எழுந்தனவாயினும், அவைகள் பொருள் வாழ்வுக்கும் அடிகோலின சமயம், அரசியல், பொருளாதாரம் என்பவற்றை வாழ்வின் தனிப்பெருந் துறைகளாகத் தமிழர் கருதினர் இல்லை. சமயத் துறையில் வலிமைகொண்ட, வளர்ச்சி பூத்த, கொள்கைகள் வேரூன்றித் தழைத்த காலத்தில் பொருளாதாரத் துறையிலும் தமிழகம் பெருவாழ்வைக் கண்டுள்ளது. கடவுள்நெறி மங்கி, வாழ்வில் காரிருள் சூழ்ந்த களப்பிரர் ஆட்சி அகல, ஆறுவது ஏழாவது நூற்றாண்டிலே பல்லவராட்சியில் சமயநெறி தலையெடுக்கலாயிற்று. இங்ஙனம் முகிழ்த்த தமிழர் சமய மறுவாழ்வு பல்லவர் காலத்தும் அவர் பின்னே வந்த பெருஞ்சோழர் காலத்துமாக ஏறக்குறைய ஐந்நூறு அறுநூறு ஆண்டுகள் இடையீடின்றித் தழைக்கலாயிற்று. இந்த ஐந்நூறு அறுநூறு ஆண்டுக்காலப்பகுதிதான் தமிழரின் கோயிற் காலமும்; பொருளாதார வளப்பக்காலமும்; அதுவே தமிழர் பொற்காலமும் எனலாகும். அன்றுதான் தமிழர்கள் காலிலும் கலத்திலும் நாற்றிசையுஞ் சென்று வெற்றிமேல் வெற்றிகள் கண்டதுவும்; நாவாய்ப் படைகளைக் குவித்துக் கீழைக் கடலிலும் மேலைக் கடலிலும் கப்பலோட்டி, சாவகம், புட்பகம், சிங்களம், கடாரம் காம்போஜம் போன்ற பற்பல நாடுகளிலும் தமிழ்க்கொடி பறக்க விட்டதுவும்; சென்ற திசையெங்கும் கோயில்கள் எடுத்து, கலை வளர்த்து, தமிழ் பரப்பி, வாணிபம் பெருக்கி, திரை கடலோடித் திரவியம் ஈட்டி, தமிழகப் பொருளாதார வளர்ச்சியைக் கண்டதுவும்.

இத்தகைய வளரும் சூழ்நிலையில் நாட்டின் பொருளாதார வாழ்வின் உயிர்நிலையாகப்பெரும் கோயில்கள் விளங்கி வந்தன. புதைந்துகிடந்த பொன்னும் பொருளும் திரண்டு வெளிவருதற்கும், பல்லாயிரம் மக்கட்கு வேலை வாய்ப்பு அளித்தற்கும் கோயிற்றிருப்பணி பெருந்துணை புரிந்தது. உழைப்பும் சேமிப்பும் கைகோர்த்து நடைபோட பாழ்ந் தரிசுகள் பசுமை நிலங்களாக மாறின. காடுபடர்ந்த கரும் பாறைகள் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் அழகுக் கலை மாளிகைகளாக மாறின. அவற்றைச் சூழ்ந்து மன்னர்கள் தம் அரண்மனைகளையும், மக்கள் தம் குடியிருப்புகளையும், வணிகர்கள் தம் அங்காடிச் சாலைகளையும் அமைக்கலாயினர். அலுவலகங்கள் பலதோன்றி அரசின் துறைகள் விரிவடைந்ததும் அக்கோயில்களைச் சார்ந்துதான்.

இதனால் மக்கள் வாழ்வில் புத்தம் புதிய திருப்பங்கள் மெத்தப்பல ஏற்பட்டன. கலைபயில் வாழ்வு எங்கும் மலர்ந்தது. கவின் தொழில்திறன் மிகச் சிறப்படைந்தது. படையெடுத்துப் பகையழித்துக்கொண்டு வந்த ஒன்னார் தெறு பொருளின் நிதியமெல்லாம் களஞ்சியங்களில் புழுங்கிக் குவிந்து கிடக்காமல், பல்லவர் காலம் முதற்கொண்டு தமிழகத்தின் கலை வாழ்வில், தொழில்வாழ்வில் புரளலாயின.

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாபித்
தொன்னகரம் துகளாகத் துளைநெடுங்கை வரை யுகைத்தும்
பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசன் முன் கொணர்ந்தார்"

என்று சேக்கிழார் பெருமான் அறுபத்து மூவரில் ஒருவரான சிறுத்தொண்டர் பெருமானை வியந்து கூறியுள்ளார். இவ்வாறு வென்று ஈட்டிய செல்வமனைத்தையும் கலையார்வம் படைத்த தமிழ் மன்னர்கள் கோயிற்பணிக்கென வகுத்தளித்தனர். வெற்றிபெற்று மீண்ட வீரர்களுக்கு வேலையில்லாது வெறிதே இருக்கும் நிலை எய்தா வகையில், கோயில் திருப்பணிகள் அவர்களுக்குத் தொழில் வாய்ப்பினை நல்கிக் கொண்டிருந்தன. போரில்லையெனில் கலைப்பணி, கலைப்பணி யில்லையெனில் போர் — என்றிவ்வாறு ஆக்கவேலையும், அழிவுவேலையும் ஒன்றையொன்று தழுவி, பொருளாதார வாழ்வில் தோன்றும் நிலையற்ற நிலை ஏற்படாதவாறு நிரந்தர வேலை வாய்ப்பினை வழங்கி வாழ்வை அரண் செய்து நின்றது. உழைப்பு மிகுந்தது. உழைப்பையுண்ட கல்லெல்லாம் கலையாயின., பொருளாயின, கதைபேசின. பொருளாதாரச்சக்கரம் விரைந்து சுழன்று சமூகமனைத்திற்கும் பொருள் பரவலாய்ப் பாய்ந்தது. கல வல்லுநர்முதல் கல்சுமக்கும் சிற்றுள்வரை பல்கிவந்த தொழிலாள மக்கள், வாழ்க்கை வளம்பெற்றனர்.

இங்ஙனமாக, கோயிற்றிருப்பணிகள் பெருநிலையடைந்தது சோழரின் ஆட்சிக் காலத்தேயே. தஞ்சைப் பெரிய கோயில் இன்றும் அதன் வரலாற்றை இறுமாந்து பேசிக்கொண்டிருக்கிறது. கலைஞனின் கற்பனைத்திறனையும் எண்ணற்ற வினைஞரின் வியர்வையும் குழைத்து வண்ணந்தீட்டித் தமிழகம் எங்கும் வடிவழகைப் படைத்துவிட்டனர். தமிழ்நாட்டுக் கோயில்களில் வானளாவிய கோபுரங்களையும் வனப்பு மிகுந்த மண்டபங்களையும் நோக்கும்போதெல்லாம், தமிழகப் பொற்காலச் சிற்பிகள் நூற்றுண்டுகளாக எழுப்பிய சிற்றுளியின் ஒலித்திரள். பொருளியலார் காதுகளில் என்றும் நீங்காது ரீங்காரம் செய்து கொண்டிருக்கும்.

கோயில்களை அமைத்த பெருமக்களே சாலைகளை அமைத்தார்கள்; குளங்களைத் தொட்டார்கள். நந்தாவிளக்குகளையும் அமைத்தார்கள். காலம் செல்லச்செல்ல "கோயில் இல்லாஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று கூறுமளவிற்கு மக்களின் பொருள்வாழ்வுக்கும், அருள் வாழ்வுக்கும் கோயில் இன்றியமையாக் கேந்திரமாகிவிட்டது.

கோயில்களால் அறவாழ்வு பெருக்கெடுக்கவே, பொது நலத்துக்கெனப் பலர் தமது உடமைகளை உரிமையாக்கினர். சோழப்பெருவேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் தேவதானம், திருவிடையாட்டம், பள்ளிச்சந்தம், மடப்புறம், சாலோபோகம், பிரம்மதேயம் என்று அளவற்ற நிலபுலங்கள் கோயில்களுக்கு அளிக்கப்பட்டன. கோயில்களுக்கு அர்ச்சனை செய்யும்பொருட்டு அர்ச்சனாபோகம் என்றும், பொதுமக்களுக்கு வைத்தியம் செய்யும் பொருட்டு வைத்திய போகமென்றும், கூத்து நிகழ்த்தற்பொருட்டு கூத்தச் சாக்கையர்க்கு நிருத்த போகமென்றும், மானியங்கள் பல வழங்கப்பட்டன. பதியிலார் காணி, நட்டுவக்காணி, சாக்கைக் காணி, கூத்தாட்டுக்காணி, வீணைக்காணி

என்பனபோன்ற இறையிலி நிலங்களையும் கோயில்களுக்கு அளித்தார்கள். இவற்றெடு தொழில் வருவாயில் ஒரு பகுதியையும் மக்கள் கோயில்களுக்கென வழங்கினுர்கள். எனவே தனிவுடமைகள் பொதுவுடமைகளாக மாறின. பொருளாதார மேடு பள்ளங்கள் நிரக்கலாயின.

கோயில்கள் நாளடைவில் பல்கலைக் கழகங்களேயாகி விட்டன. சிற்பம் ஓவியம், இசை, நடனம், நாடகம், சமய சாத்திரக்கலைகள்—அனைத்தும் அங்கே புகட்டப்பட்டன. உணவு விடுதிகளும் மருத்துவ விடுதிகளும் மக்களுக்கு இலவசமாக நடத்தப்பட்டன. அந்தணர்களும், குயவர்களும், கொல்லர்களும், உழவர்களும் கோயிலோடு தொடர்பு கொண்டு வாழ்ந்து வந்தமை சதுர்வேதிமங்கலம், சல்லிய விருத்தி, குலாலவிருத்தி, காருவிருத்தி முதலிய கல்வெட்டுக் குறிப்புகளால் தெரியவருகிறது. திருக்கோயில் மூல பண்டாரம் நெருக்கடியான காலங்களில் மக்கள் பொருளியல் வாழ்வுக்கு உற்றுழி உதவியது. கோயில் பண்டாரத்திலிருந்து பொருட்களைக் குறித்த வட்டிக்குக் கடனுக வழங்கினுர்கள். உற்றுழி உதவி பெற்றதாலும் உறுபொருள் பெற்றதாலும் நலிந்த மக்களுக்குப் புதுத் தொழில்கள் செய்வதற்கு இயன்றது. பஞ்சங்கள் ஏற்பட்ட காலத்து, கோயில் நிதியம் நிவாரணப் பணிகளுக்குப் பயன்பட லாயிற்று. சமய குரவர்களாகிய அப்பர், சம்பந்தர் காலத்தில் நாடாண்ட முதலாம் நரசிம்ம வர்மன் ஆட்சியின் இறுதியிலும் பிற காலங்களிலும் பல்லவப் பேரரசில் பெரும் பஞ்சங்கள் ஏற்பட்டன. அக்காலங்களில் கோயிற் பண்டாரத்துப் பொற்காசுகளை மக்களின் புனர் வாழ்விற்காக வாரிவழங்கியதாக அறிகிறேும். கி. பி. 1152–ல் சோழநாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தில் கோயில் களஞ்சியம் பொருளுதவி செய்ததை ஆலங்குடிக் கல்வெட்டுப் பகரும்.

இவ்வாறு மக்களின் அன்ருடப் பொருளியல் வாழ்க்கை, திருக்கோயில்களோடு பின்னி இணைந்துவரலாயிற்று. பணிகள் பலமேற்கொண்டு தொண்டாற்றி நின்ற திருக்கோயில்களில் மன்னர்கள் ஆண்டுதோறும் விழவெடுத்து மக்களை மகிழ்விக்கலாயினர். இத் திருவிழாக் காலங்களில் நாற்றிசை மக்களும் ஒருங்குதிரண்டனர். பல் பொருளும் ஒருங்கு குவிந்தன. வாணிபம் தழைத்தது. பொருளாதாரச் சக்கரத்தில் விரைந்த சுழற்சி ஏற்பட்டது. பொருள் வளம் மிகுந்தது; பரவலடைந்தது.

வாழ்வின் மறுமலர்ச்சிக்கு உறுதுணையாய் விளங்கிய கோயில்கள் பல்லவர் காலம் முதற்கொண்டு சோழர் காலம்வரை தமிழகத்தில் மிகப்பலவாக எடுக்கப்பட்டன. ஆனுல் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர், தமிழர் சமயம், அரசியல், பொருளாதாரம்-எல்லாம் தாழ்வுற்றன. இந்நிலை ஏறக்குறைய முந்நூருண்டுகளிருந்து, பின்னர் விஜயநகர ஆட்சி வந்த காலையில்தான் நீங்கியது. விஜயநகரப் பேரரசின் சிற்றரசராகத் திகழ்ந்த நாயக்கர்கள் சமயவாழ்வுக்கும் பொருளாதார வாழ்வுக்கும் நீங்காதிருக்கும் நெருங்கிய தொடர்பின் சூட்சுமத்தை உணர்ந்துகொண்டனர். மதுரை நாயக்க மன்னர்கள் “அல்லொத்த பூங்குழல் அங்கையற்கண் அம்மை” ஆலயத்திற்குச் செய்த திருப்பணிகள் இன்றும் வியப்பினைத்தருவனவாகும். திருமலைநாயக்கர் காலத்தில் மதுரை மாநகரம் சீரும், சிறப்புடனும், நல்லநகர அமைப்புடனும் தலை

நகராய் விளங்கியது. வெளி நாட்டாரும் அதன் புகழைத் தெரிந்து வரையலா யினர். சிவராஜதானியாம் மதுரையை நேரிற் கண்ட பாட்ரிக்கெடிஸ் Patrick Geddes என்னும் நகர அமைப்பு நிபுணர் சில ஆண்டுகளுக்கு முன் மதுரை அமைப் பின் மாண்பைக் கண்டு வியந்து சென் றனர். நான்மாடக் கூடலாம் இம்மா நகரில் அங்கையற்கண் அம்மை ஆலயத் திற்குத் திருமலைராஜனுக்குப் பின் னே **தமிழவேள் பி. டி. ராஜன்** தலைமேற் கொண்டு நடத்திவரும் திருப்பணி, வர லாற்றில் அழியா இடம்பெறுக. அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து, தமிழர் அருள்வாழவுக்கும் பொருள் வாழ்வுக்கும் பொன்றுத்துணை நிற்பாராக.



## தாயே சரணம் சரண்

நாற்றிசையும்

கொண்டாடப் பெற்றதொரு கோமளமே யாமளையே
தண்டா மறைத்திருவே தையலே—மண்டலங்கள்
எங்குமொத்து நின்றருளும் ஈச்வரியே மாமதுரை
அங்கயற்கண் நாயகியே அம்மையே—எந்தமிடர்
அல்லல்வினை எல்லாம் அகற்றியே, அஞ்சல் என்று
நல்லசவு பாக்கியத்தை நல்கியே—வல்லபத்தின்
ஆசுமது ரஞ்சித்ர வித்தாரம் என்று அறிஞர்
பேசுகின்ற உண்மைப் பெருவாக்கு—நேசமுடன்
தந்தென்னை ஆட்கொண்டு, சற்குருவாய் என்அகத்தில்
வந்திருந்து புத்தி மதிகொடுத்துச்—சந்ததமும்
நீயே துணையாகி, நின்று இரட்சி, அங்கயற்கண்
தாயே சரணம் சரண்.

— திருப்போரூர் சிதம்பரசுவாமிகள்
மீனாட்சியம்மை கலிவெண்பா

# தமிழ்நாட்டுக் கோயில்களும் அறநிலையப் பாதுகாப்புச் சட்டமும்

அ. உத்தண்டராமன், M. A., I. A. S. (Ret.)

தமிழகத்தில் பண்டு தொட்டே சைவமும் வைணவமும் பரவியிருந்தன என்பது புதை பொருள் ஆராய்ச்சி வல்லுனர், வரலாற்று நூலாசிரியர் முதலியோர் கண்ட முடிபு. வடநாட்டில் சிந்து வெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட புதை பொருட்களில் சிவலிங்கங்களும் உருவங்களும் பல்லாயிர ஆண்டுகளுக்கு முற்பட்டனவாகக் கருதப்படுகின்றன. இராமாயணம் மகாபாரதம் முதலிய புராதன வடமொழி நூல்களிலும் தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பழந் தமிழ் நூல்களிலும் சிவன், திருமால், முருகன், கொற்றவை முதலிய தெய்வங்களைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இராமாயணத்தில் இராமேஸ்வரம், திருவெண்காடு (சுவேதாரண்யம்) பற்றிய குறிப்புக்களும் மகாபாரதத்தில் அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்தபோது காவிரி முதலிய புண்ணிய நதிகளில் நீராடி, பல திருக்கோயில்களைத் தெரிசித்து, மதுரையில் பாண்டிய மன்னன் சிவபூசை செய்து பெற்ற மகளை மணந்த செய்தியும் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் மதுரை, திருப்பரங்குன்றம், பழமுதிர் சோலை, திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், திருவரங்கம், திருவேங்கடம், காஞ்சி முதலிய தலங்களைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.

ஆதியில் மரங்களின் அடியில் தோன்றிய கோயில்கள் நாளடைவில் மண், மரம், செங்கல், சுண்ணும்பு, உலோகங்கள் முலியவற்ருல் கட்டப்பெற்றன. இவை குறித்தகால அளவில் அழியுந் தன்மையுடையவையாக இருந்ததால் பல்லவர் ஆட்சியில் மலைகளையும் பெரும்பாறைகளையும் குடைந்து அமைக்கப் பெற்ற குடவரைக் கோயில்கள் தோன்றின என்பது செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த மண்டகப்பட்டுக் குடவரைக் கோயிலிலுள்ள கல்வெட்டிலிருந்து அறிகிரும். இத்தகைய குடவரைக் கோயில் மகாபலிபுரம், மாமண்டூர், திரிசிராப்பள்ளி, சித்தன்னவாசல் முதலிய இடங்களில்உள்ளன. பின்னர் கற்களைக்கொண்டு மாபெருங் கோயில்களைக் கட்டினர். காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயில் மகாபலிபுரத்திலுள்ள கடற்கரைக்கோயில் முதலியன இத்தகைய கற்றளிகள். பிற்காலப் பல்லவர் காலத்தில் தோன்றிய சமய குரவர்களான நாயன்மார்களும், ஆழ்வார்களும் சைவத்தையும் வைணவத்தையும் தமிழகம் முழுவதும் நிலைநாட்டினர். அரசர்களும் சமயப் பற்றுடையவர்களாயிருந்தனர். சமயவளர்ச்சிக்கு ஆதாரமான நிலையங்கள் திருக்கோயில்களே என்பதை நன்குணர்ந்த சோழ மன்னர்களும் காவிரியின் இருகரைகளிலுமுள்ள கோயில்களைக் கற்றளிகளாக மாற்றியமைத்தனர். மலைகளோ, குன்றுகளோ பாறைகளோ இல்லாத தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் பல பகுதிகளில் கற்றளிகள் அமைக்க அரசர்களும் மக்களும்

என்னபாடு பட்டிருப்பார்கள் என்பதை உணர்ந்தால் அவர்களுடைய பக்தியின் மேன்மை நன்கு விளங்கும்.

பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து அரசர்கள் திருக்கோயில்களைப் பராமரிப்ப திலும் தெய்வ பக்தியிலும் சிறந்து விளங் கினர் என்பது நன்கு புலப்படுகின்றது. கோயில்கள் எப்படி ஆட்சி செய்யப் பட்டன என்பது குறித்துப் போதியசான்று கள் இல்லை எனினும் அவை அரசர்களா லும் அரசமாதேவியராலும் மக்களாலும் நன்கு பாதுகாக்கப்பட்டன என்பது கல் வெட்டுக்களிலிருந்து நன்கு புலனாகும். பேரரசர்களிலிருந்து சாதாரணக் குடி மக்கள் வரை அனைவரும் திருக்கோயில் களில் திருக்குளங்கள் நந்தவனங்கள் முதலியன அமைக்கவும், திருவிளக்கேற்ற வும், காலந்தவறாமல் பூசைகள் திருவிழாக் கள் நடைபெறவும், பழுதுபார்த்துத் திருப் பணிகள் செய்யவும் நிலங்களையும், பொன் னையும் கால்நடைகளையும், ஆபரணங் களையும் பாத்திரங்களையும், பிறபொருட் களையும், வாரி வழங்கினர். கோயில் நிர்வாகத்தைப் பற்றிய பல செய்திகளையும் கல்வெட்டுக்களில் காண லாம். சிறிய கோயில்கள் அர்ச்சகர்கள் பொறுப்பில் விடப்பட்டிருந்தன. சில கோயில்கள் ஊராட்சி மன்றத்தினர் மேற் பார்வையிலும், பெரிய கோயில்கள் தனிக் குழுவினர் ஆளுகையிலும் இருந்தன. கோயில் நிர்வாகம் 'ஸ்ரீகாரியம் செய்தல்' எனவும் கருவூலம் 'பண்டாரம்' எனவும் கூறப்பட்டுள்ளன. இன்றும் கன்னியா குமரி மாவட்டத்தில் கோயில் நிர்வாகி ஸ்ரீகாரியம் எனவும் கருவூலம் பண்டாரம் எனவும் அழைக்கப்படுவதைக் காண் கிறோம். திருக்கோயில்களின் நடைமுறை களையும் கணக்குகளையும் கண்காணித்து அரசாங்க அதிகாரிகள் ஸ்ரீகாரிய ஆராய்ச்சி செய்ததாகச் சில கல்வெட்டுக் களிலிருந்து அறிகிறோம். சில கோயில் கள் அடுத்துள்ள மடங்களின் ஆட்சியில் இருந்தன. பல்லவராட்சியில் பௌத்த சமண மடங்கள் சிறந்து விளங்கின. சைவமும் வைணமும் வளர்ச்சிபெற சைவ வைணவ மடங்கள் பெரிதும் உதவி புரிந் தன. அவை, கலைக் களஞ்சியங்களாகவும் சமயப் பிரசார நிலையங்களாகவும் விளங் கின. மக்களுக்குச் சமய அறிவையும் ஒழுக்கத்தையும் கற்பிக்கவும் யாத்திரிகர் களுக்கு வசதிகள் செய்து கொடுக்கவும், நோயாளிகள் கால்நடைகள் சிகிச்சை பெறச் செய்யவும், திருமுறைகளைப் பாது காக்கவும், திருப்பதிகங்கள் ஓதுவிக்கவும் மடங்கள் பெருமளவில் தொண்டு புரிந்து வந்தன.

பின்னர் விஜயநகர மன்னர் காலத் திலும் மராட்டியமன்னர் ஆட்சியிலும் பல கோயில்கள் புதுப்பிக்கப்பெற்றன. நித்திய நைமித்திக பூசைகளுக்காகப் பல நிபந்தங்கள் ஏற்படுத்தப்பெற்றன. திரு விழாக்களில் ஆடல்பாடல்கள் உயரிய நிலையில் நிகழ்ந்தன. சிற்பங்களும் ஓவியங்களும் விவாகத் திருவுருவங்களும் அமைக்கப்பெற்றன.மக்களிடையே சமயப் பற்றும் அறிவும் பெருகி வளர்ந்தன.

கிழக்கிந்தியக் கம்பெனியார் அற நிலையங்கள் மேற்பார்வை சம்பந்தமாக 1817-ல் ஒரு ஒழுங்குமுறைச்சட்டம் வகுத் திருந்தனர். விக்டோரியா மகாராணியார் காலத்தில் சமய விவகாரங்களில் அரசாங் கம் தலையிடுவதில்லையென்று பிரகடனம் செய்யப்பட்டு, திருக்கோயில்களும் அற நிலையங்களும் ஊரார்வசமே ஒப்புவிக்கப் பட்டன. மேற்பார்வையும் கண்காணிப்பும்

இல்லாமையாலும் கிராமங்களிலுள்ள பல வகைப் பூசல்களின் விளைவாகவும் கோயில்களின் நிர்வாகமும் நிதிநிலைகளும் சீர்குலைந்தன. 1842-ம் ஆண்டுமுதல் 1863-ம் ஆண்டு வரை, பெயரளவில் ரெவின்யூ போர்டார் மேற்பார்வையில் அறநிலையங்கள் ஆட்சி நடைபெற்றது. 1863-ம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்கீழ்,'கோவிலாட்சி மண்டலவாரிக் குழுவினர்' மூலம் அறநிலையங்கள் கண்காணிக்கப்பட்டுவந்தன போதிய மேற்பார்வையின்மையால் இந்த ஏற்பாடும் தக்க பயனளிக்கவில்லை.

1925-ம் ஆண்டு அந்தநாள் முதலமைச்சர் பனகல் அரசர் பெருமுயற்சியால் விரிவானதோர் சட்டம் இயற்றப்பட்டு, ஓய்வு பெற்ற உயர் நீதிமன்ற நீதிபதி சர். டி. சதாசிவய்யர் என்ற அறிஞர் தலைமையில் அது அமுலுக்குக் கொண்டுவரப் பெற்றது. 1927-ல் அச் சட்டம் திருத்தப் பெற்று, அதே தலைவர் மேற்பார்வையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. ஒவ்வொரு அங்கத்தினரும் குறிப்பிட்ட மாவட்டங்களிலுள்ள அறநிலையங்களைக் கண்காணித்துவந்தனர். தலைவர் மேலாளராக இருந்ததுடன் சில பெரிய கோயில்களைத் தாமே நேரடியாகவும் கண்காணித்து வந்தார். கோயில்கள் சம்பந்தமான வழக்குகளை இக்குழுவினர் விசாரித்துத் தீர்ப்புக்கூறினர். நீதிமன்றங்களில் வழக்குத் தொடரவும் உரிமை வழங்கப்பட்டிருந்தது. நடைமுறையில் காணப்பட்ட பல்வேறு குறைகளை நீக்கவும், சட்டத்தை நல்லமுறையில் அமுல் நடத்தவும், அடிக்கடி சட்டம் திருத்தப்பட்டது. இவ்வாறு 1928, 1929, 1930, 1931, 1934, 1935, 1938, 1939, 1944, 1946, 1947-ம் ஆண்டுகளில் பல திருத்தங்கள் செய்யப்பட்டன.

நம் நாடு சுதந்தரம்பெற்றபின் 1951-ம் ஆண்டில் மறுபடியும் இச்சட்டம் முழுதும் ஆராயப்பட்டுச் சீர்திருத்தஞ் செய்யப்பட்டது. இச்சட்டத்தின்கீழ் ஆட்சிக் குழுவினருக்குப் பதிலாக ஒரு ஆணையர் மேற்பார்வையில் தனி அரசாங்கத்துறை அமைக்கப்பட்டது. ஆணையரின் கீழ் துணையாணையரும் உதவியாணையரும் பார்வையாளரும் பணிபுரிந்தனர். வருவாய்க்கேற்பத் தனி நிலையங்களுக்கு நிர்வாக அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். 1954லும் 1956லும் சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன.

அறநிலையச் சட்டத்தின்கீழ் ஏற்பட்ட நீதிமன்றத் தீர்ப்புகளின் மூலமும் நடைமுறை அநுபவங்களின் மூலமும் காணப்பட்ட குறைபாடுகளை நிவிர்த்தி செய்யவும் சட்டத்தையும் விதிகளையும் சீரியமுறையில் அமுல் நடத்தவும் 1959-ம் ஆண்டு மறுமுறை சட்டம் முழுதும் புனராலோசனை செய்யப்பட்டு உருவாக்கப்பட்டுள்ளது. இப்போது 1-1-60 லிருந்து அமுலிலிருக்கும் சட்டத்தின் முக்கிய அம்சங்கள் என்னவென்றால்:

1) அறநிலைய ஆட்சித்துறைத் தலைவரான ஆணையர் அல்லது துணை ஆணையர்களில் ஒருவராவது நீதித்துறையைச் சேர்ந்த நீதிபதியாக இருக்கவேண்டும்.

2) திருக்கோயில்களிலும் ஏனைய அறநிலையங்களிலும் நிர்வாக அதிகாரிகளாயிருப்பவர்கள் அரசாங்க அலுவலர்களாக்கப்பட்டு அரசாங்க சேமநிதி, ஓய்வு ஊதியம் முதலிய உரிமைகள் பெற்றுள்ளனர்.

3) மடங்களுக்கெனச் சட்டத்தில் தனி அதிகாரம் ஒதுக்கப்பட்டுள்ளது.

மடங்கள் சம்மந்தமான காரியங்களை ஆணையர் மேற்பார்வையில் கவனிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

4) மடங்களைத்தவிர மற்ற அறநிலையங்களுக்கும் திருக்கோயில்களுக்கும் நிர்வாகிகள் நியமிக்கும் அதிகாரம் ஆணையருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

5) ஒவ்வொருஉதவியாணையர் மேற்பார்வையிலுள்ள கோயில்களுக்கும் அறநிலையங்களுக்கும் அறங்காவலர்களை நியமிக்கவும் மற்றும் நிர்வாக சம்மந்தமான காரியங்களைக் கண்காணிக்கவும் மண்டலக்குழு அமைக்கப்பட்டுள்ளது. இக்குழுவின் தலைவரும் அங்கத்தினரும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்படுவார்கள். உதவியாணையர் இக்குழுவின் செயலாளர். இவருக்கு வாக்குரிமை கிடையாது.

6) பெரிய கோயில்களுக்கும் நிர்வாக ஊழல்கள் காரணமாக அரசாங்கத்தாரால் விளம்பரப்படுத்தப்பட்ட கோயில்களுக்கும் தர்மகர்த்தர்கள் நியமனம் செய்யும் அதிகாரம் ஆணையருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

7) அறநிலைப் பாதுகாப்புத்துறை அமைச்சரைத் தலைவராகவும் அரசாங்கக் காரியதரிசியையும் ஆணையாளரையும்,அரசாங்கத்தாரால் நியமிக்கப்பெற்ற உத்தியோகச் சார்பற்ற 12 அங்கத்திளரையும் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

8) கோவில்களிலும் கோவில்களையடுத்தும் உள்ள ஆக்கிரமிப்புக்களை நீக்குவதற்குத் தனி விதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

9) அறநிலையங்களில் உள்ள நகைகள், பொன் வெள்ளி முதலியவைகளாற் செய்யப்பட்ட விலையுயர்ந்த பொருட்களை மதிப்பிடவும் குறிப்பிட்ட காலத்துக்கொருமுறை தணிக்கை செய்யவும் ஒரு தனி உதவியாளரும் தணிக்கையாளரும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

10) வருவாய் அதிகமாக உள்ள அறநிலையங்கள் கோயில்களிலிருந்து வருமானம் குறைவாக உள்ள நிலையங்களுக்கும் அறப்பணிகளுக்கும் ஆணையர் அனுமதி பெற்று உதவிசெய்ய வகை செய்யப்பட்டிருக்கிறது.

11) அறநிலையங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கும் பொறுப்பு துணையாணையருடையது. அவர் தீர்ப்பின்மேல் அப்பீல் அல்லது ரிவிஷன் விசாரணை செய்யும் அதிகாரம் ஆணையருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மண்டலக் குழுவினர் ஆணையரின் மேலும் முடிவுகளின்மேலும் விசாரணைசெய்து தீர்ப்பளிக்கும் பொறுப்பு ஆணையருக்களிக்கப்பட்டுள்ளது. சட்டத்தின்கீழ் விசாரணை முடிந்தபின்னர் நீதிமன்றங்களில் வழக்குத் தொடரலாம்.

கடந்த சில ஆண்டுகளில் அரசாங்கம் பத்துலட்ச ரூபாய் சிதைவுற்ற கோயில்களின் திருப்பணிக்காக மான்யமாக வழங்கியது. வருவாயுள்ள கோயில்களின் உபரி நிதியிலிருந்து அனுமதிக்கப்பட்ட உதவித்தொகைகளைக் கொண்டும் மக்கள் நன்கொடைகளைக்கொண்டும் அரசாங்க மான்யத்தைக் கொண்டும் நூற்றுக்கணக்கான கோயில்கள் பழுதுபார்க்கப் பெற்று கும்பாபிஷேகம் செய்யப் பட்டுள்ளன. கோயில் நிர்வாகம் பல துறைகளில் முன்னேறியிருக்கிறது. சில கோயில்களில் கூட்டுறவுப் பண்ணைகளும் பால் பண்ணை

களும் நடத்தப்படுகின்றன. பழனி, திருச்செந்தூர், திருநெல்வேலி, குற்றாலம், திருவெண்காடு,சுசீந்திரம் முதலிய இடங்களில் தேவாரப்பாடசாலைகள் நடத்தப் படுகின்றன. தேவாரத் திருமுறைப் பயிற்சி, திவ்யப்ரபந்தப் பயிற்சி, நாதசுரப் பயிற்சி, அர்ச்சர்களுக்கு ஆகமப் பயிற்சி வகுப்புகள் அவ்வப்போது நடத்திவரப் படுகின்றன. பழனியில் ஒரு கீழ்த்திசைக் கல்லூரியும் நாதசுர இசைப் பயிற்சிக் கல்லூரியும் இருக்கின்றன. இராமேஸ்வரம் தேவஸ்தானத்தாரால் ஒரு வடமொழி தென்மொழிக் கீழ்த்திசைக் கல்லூரி நடத்தப்படுகிறது.திருநெல்வேலியில் காந்திமதிபெண்கள் உயர்நிலைப்பள்ளி நடத்தப்படுகிறது. திருவெண்காட்டிலும் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஒன்று இருக்கிறது. சத்திரங்கள்அறுதை விடுதிகள் குடிதண்ணீர்க் குழாய்கள் கல்யாண மண்டபங்கள் முதலிய வசதி பல கோயில்களில் செய்யப்பட்டுள்ளன. திருப்புகலூர், வைத்தீஸ்வரன் கோவில், பண்பொழி கோயில்கள் இலவச சித்த வைத்தியசாலைகள் நடத்துகின்றன. கதாகாலட்சேபப் பயிற்சிக் கல்லூரி திருவையாற்றில் நடத்த ஏற்பாடாகியிருக்கிறது. பல கோயில்களுக்குத் தல வரலாறுகள் எழுதப்பட்டுள்ளன. பல சமய நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன. ஆட்சித்துறைத் தலைமை யலுவலகத்திலிருந்து திருக்கோயில் என்ற மாத இதழ் வெளியிடப்படுகிறது. கோயில்களில் சமயச் சொற்பொழிவுகள், கதாகாலட்சேபங்கள், இசை நிகழ்ச்சிகள், வார வழிபாடுகள் முதலிய சமயப்பணிகள் நடைபெற வசதிகள் செய்யப்படுகின்றன.

கன்னியாகுமரி மாவட்டமும் திருநெல்வேலி மாவட்டத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் செங்கோட்டை தாலுகாவும் தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட்டபின் 1–4–60 வரை கேரள சட்டத்தை யனுசரித்தே கோயில்களின் நிர்வாகம் நடைபெற்றுவந்தது. ஆனால் தேவஸ்வம் போர்டுக்குப் பதிலாக ஆணையரே போர்டாரின் அதிகாரங்களையும் கடமைகளையும் செய்து வந்தார். 1959ல் சட்டம் இயற்றப்பட்டு 1–4–60 முதல் தேவஸ்வம் போர்டு ஒன்று அமைக்கப்பட்டது. தலைவரும் இரண்டு அங்கத்தினர்களுள் ஒருவரும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்படுகின்றனர். ஒருஅங்கத்தினர் திருவிதாங்கூர் அரசரால் நியமனம் செய்யப்படுகின்றனர். தேவஸ்வம் சட்டம் குறிப்பிட்ட கோயில்களுக்கே ஏற்பட்டது. கிராமங்களிலுள்ள பல கோயில்களும் அறநிலையங்களும் சட்டத்தால் பாதிக்கப் படாமலிருந்தன. 1–4–60 லிருந்து சென்னை மாநிலச் சட்டம் அந்தக் கோயில்களுக்கும் அறநிலையங்களுக்கும் பொருந்தும். இவை சம்பந்தப்பட்டவரையில் தேவஸ்வம் போர்டாரே ஏரியா கமிட்டியாகவும் உதவி ஆணையர் செயலாளராகவும் பணியாற்றுகின்றனர். இந்த உதவி ஆணையரே தேவஸ்வம் போர்டுக்கும் செயலாளராக இருக்கிறார். இவர்கள் கீழ்பணி செய்யப் பார்வையாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். தேவஸ்வம் போர்டார் ஆணையர் மேற்பார்வையிலும் அவருடைய கண்காணிப்பிலும் பணிபுரிகின்றனர். போர்டார் தீர்ப்புக்கள், தீர்மானங்கள் முடிவுகளின் மேல் ஆணையருக்கு அப்பீல் அல்லது ரிவிஷன் விண்ணப்பம் செய்து கொள்ளலாம். திருவிதாங்கூர் அரசருக்குப் பண்டுதொட்டு உள்ள உரிமைகள் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் பெரும்பாலும் அவரால் செய்யப்பட வேண்டிய பணிகளாகவே உள்ளன.

சென்னை மாநிலத்தில் அறநிலைய ஆட்சித்துறை மேற் பார்வைக்குள் கொண்டு வரப்பட்டுள்ள கோயில்களும் அறநிலையங்களும் எண்ணுயிரத்துக்கும் மேற்பட்டவை. இன்னும் கவனத்துக்கு வராமலிருப்பவைகளும் ஆண்டு வருமானம் இருநூறுக்குக் குறைவாக இருப்பதால் எண்ணிக்கையில் சேர்க்கப்படாமலிருக்கும் சிறிய கோயில்களும் அறநிலையங்களும் ஏராளமாக இருக்கின்றன. ஆண்டுக்குரிய வருமானம் இருநூறுக்கு மேற்பட்ட நிலையங்களிலிருந்து வருவாய்க்குத் தக்கவாறு கட்டணம் வசூல் செய்யப்பட்டு அந்த நிதியிலிருந்தே இந்த அறநிலைய ஆட்சித்துறை அலுவலர்கள் அனைவரின் ஊதியமும் இந்த இலாகாவை நடத்துவதற்கான இதர செலவுக்களுக்கான தொகையும் கொடுக்கப்படுகின்றன.

எந்த அரசாங்கத் துறையும் மக்கள் பூரண ஒத்துழைப்பின்றிச் சீரியமுறையில் நடைபெற இயலாது. சமயப்பற்றும் தெய்வபக்தியும் ஒழுக்கமும் சிறந்து விளங்கும் தமிழ்நாட்டு மக்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் இந்தத் துறை ஊழியர்களுக்குப் பூரணமாக அளிக்கப்பட்டு வருகிறது. திருச்செந்தூர், பழனி, திருவரங்கம், திருவெண்காடு, திருவானைக்கா முதலிய திருக்கோயில்களில் நடைபெற்ற கும்பாபிஷேக வைபவங்களில் மக்கள் பெருமளவில் பங்கு கொண்டானர். இப்போது நடைபெறும் மதுரை மீனுட்சியம்பிகை சமேத சொக்கலிங்கப் பெருமாள் கும்பாபிஷேகப் பெருவிழாவில் மக்கள் பேரார்வத்துடனும் மட்டிலா மகிழ்ச்சியுடனும் பங்கு கொள்ளத் துடித்துக் கொண்டிருக்கின்றனர். அங்கயற்கண்ணியொடுமமர்ந்த ஆலவாயண்ணல் அருளால் உலகெங்கும் பிணியின்மை, செல்வம், விளைவு இன்பம் நிலவுக.

'காலம் உண்டாகவே காதல் செய்து உய்மின் கருதரிய
ஞாலம் உண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலம் உண்டான் எங்கள் பாண்டிப் பிரான் தன் அடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்குகின்ருன் வந்து முந்துமினே.'

# தமிழ்நாட்டுக் கோயில்களின் நிர்வாகம்

பேராசிரியர் எம். வி. சுப்பிரமணியன், எம். ஏ., எல். டி.,

மதிப்பிற்குரிய மாபெருந் தலைவராகிய **ஸர். பி. டி. இராஜன்** அவர்களுடைய அன்புக் கட்டளையைச் சிரமேற்கொண்டும், நெடுநாளைய நண்பர் பேராசிரியர் அருணாசலக் கவுண்டர் வேண்டுகோளுக்கு இணங்கியும் நான் இந்தப் புனிதமான சிறப்பு மலரில் ஓர் கட்டுரை எழுதத் துணிகிறேன். ஸ்ரீ மீனாட்சி அம்பாள் கும்பாபிஷேக மலரில் எனக்கு ஒரு இடம் கொடுத்ததுபற்றி எனது உளங்கனிந்த நன்றியைத் திருப்பணிக் குழுவினருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்ற 17 ஆண்டுகளாக நெல்லையில் சுவாமி நெல்லையப்பர்—ஸ்ரீ காந்திமதி அம்பாள் தேவஸ்தான தர்மகர்த்தாக் குழுவின் உறுப்பினராகப் பணியாற்றியதின் பயனாக, நான் தமிழ் நாட்டுக் கோயில்களின் நிர்வாக முறையை ஒருவாறு அறிந்திருப்பதால், அதன் சாதக பாதகங்களை எடுத்துரைக்கலாமென்று நினைக்கிறேன். மான்ட்போர்ட் அரசியல் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட, அமைச்சர் சபையின் முதல் அமைச்சர், காலஞ்சென்ற பனகல் இராஜா 1926-ஆம் ஆண்டு வகுத்த அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் இந்துக் கோயில்கள், மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள் முதலியவற்றின் ஒழுங்கீனங்களை அறவே நீக்கிச் சீர்படுத்தின. முதலில் இயற்றப்பட்ட சட்டத்திற்குத் திருத்தங்கள் செய்யப்பட்டு, இந்து அற நிலைய ஸ்தாபனங்கள் நன்றாகச் செயல்பட்டு வருதற்குப் பெரிதும் உதவியிருக்கிறார்கள்.

இந்துக்கள் அல்லாதவர்களில் ஒரு சிலர் "நமது அரசாங்கம் மதப்பற்றற்ற அரசாங்கம் அல்ல" என்று வாதிக்கின்றனர். அவர்களது கூற்று தப்பிதம் என்பதைக் காண்பிப்பது அவசியமாகும். ஜனநாயகத்திற்கே இருப்பிடமாகச் சொல்லக்கூடிய ஆங்கில அரசு ஒரு **"மதப்பற்றுள்ள அரசாங்கம்"** என்பது எனது துணிபு. பிரிட்டனில் பேரளவில் முடியாட்சியும், உண்மையில் மக்கள் ஆட்சியும் நடைபெறுகின்றன. ஆனால் இங்கே அரசர் அரசி பதவிக்கு வருகிறவர், இங்கிலாந்தின் **தாபிதத் திருச்சபை** Established Church யைச் சார்ந்தவராக இருக்கவேண்டும். கத்தோலிக்கர்கள், யூதர்கள் ஆகியோர் அரசபதவி ஏற்க முடியாது. எப்படி பாகிஸ்தான் குடியரசிலும் இந்தோனீஷியா குடியரசிலும் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவரே குடியரசின் தலைவராக இருக்க முடியுமோ, அப்படியே தாபிதத் திருச்சபையைச் சேர்ந்தவர்தான் பிரிட்டனில் அரசர் அரசி பதவி வகிக்க முடியும். நமது அரசாங்க அமைப்பின்படி இங்கே ஜனாதிபதி பதவிக்கு எவரேனும் நிற்கலாம். ஒரு குறிப்பிட்ட மதத்தினர்தான் அந்தப் பதவிக்கு நிற்கலாம் என்பது கிடையாது. மேலும், பிரிட்டிஷ் பிரபுக்கள் சபையில் House of Lords இரண்டு ஆர்ச் பிஷப்புக்களுக்கும் சில தாபிதத் திருச்சபையின் பிஷப்புக்களுக்கும் அங்கம் வகிக்க உரிமை உண்டு. அவர்கள் உறுப்பினராக விளங்குகிறார்

கள், நமது மடாதிபதிகளுக்கு எந்தச் சட்டசபையிலாவது அங்கம் வகிக்க அரசியல் சட்டம் இடம் தருகிறதா என்று கவனியுங்கள். நமது நாட்டில் இந்து மடாதிபர்களுக்கு ஒருவித அரசியல் உரிமைகளும் வழங்கப்படவில்லை. மேலும் இங்கிலாந்து இந்தியாவை ஆண்ட சுமார் இருநூறு ஆண்டுகளில், ஒரே ஒரு இராஜப் பிரதிநிதி—கவர்னர் ஜெனரல்தான் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவர். அவர் தாம் நமது இந்திய மக்களின் அன்பைப் பெற்ற "ரிப்பன் பிரபு". பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அடிக்கடி கேள்விகள் கேட்டதன் பயனாக, சென்ற இரண்டாம் உலக யுத்தத்தில் கத்தோலிக்க மதத்தைச்சார்ந்த ஸர். ஆர்தர் ஹோப் சென்னையிலும், ஸர். ஹெர்பெர்ட் வங்காளத்திலும் கவர்னர்களாக நியமனஞ் செய்யப்பட்டனர். இது மாத்திரமல்ல. பிரிட்டிஷ் அரசரோ, அரசியோ தாபிதத் திருச்சபையின் தலைவருமாவார். ஆனால் நமது ஜனாதிபதிக்கு ஒருவித மத ஸ்தாபனத்துடன் தொடர்பு கிடையாது. இதேமாதிரிதான் அமெரிக்க அரசாங்கமும் ஒருவித மதப்பற்றற்ற அரசாங்கம். அந்நாட்டில் ஒரு தாபிதத் திருச்சபை என்பது ஒன்று கிடையாது. எவரேனும் ஜனாதிபதி ஆகலாம். தற்சமயம் அமெரிக்க ஜனாதிபதியாக விளங்கும் கென்னடி கத்தோலிக் மதத்தைச் சேர்ந்தவர். எனவே அமெரிக்க ஐக்கியநாட்டைப் போல நமது அரசாங்கமும் **மதப்பற்றற்ற அரசாங்கம்** என்பதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை.

நமது நாட்டில் அற நிலையச் சட்டம் இயற்றப்பட்டு அதற்கு என்று ஒரு தனி மந்திரி இருப்பதால் நான் முன்கூறியபடி இந்துக்கள் அல்லாத ஒருசிலர் நமது அரசாங்கம் மதப் பற்றுள்ள அரசாங்கமென்று கூறுகின்றனர். இந்த அபிப்பிராயம் முற்றிலும் தவறு. 1858-ஆம் வருடத்திய விக்டோரியா பேரரசியின் பேரறிக்கையின் விளைவாக பிரிட்டிஷ் அரசாங்கமும் நமது இந்துமத ஸ்தாபனங்களில் தலையிடாமல் இருந்தமையால் அநேக கோயில்களில் நிர்வாக ஊழல்கள் மலிந்திருந்தன. ஊழல்களை நீக்கி, அற நிலையங்கள் நன்றாகச் செயல்பட காலஞ்சென்ற இராஜா பனகல் அவர்கள் "அற நிலையப் பாதுகாப்புச் சட்டம்" கொண்டுவந்தார்கள். இந்தச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட அறநிலையப் பாதுகாப்புக் கமிஷனரோ, அவர் உதவி அதிகாரிகளோ, சிப்பந்திகளோ பெறும் சம்பளம் பொது நிதியிலிருந்து எடுத்துத் தரப்படுவதில்லை. அற நிலையப் பாதுகாப்புக் கமிஷனரின் செலவுக்கு அதன்கீழ் இருக்கும் ஒவ்வொரு கோயிலும் அதன் வருமானத்திற்கேற்ப ஒரு பகுதி கொடுக்கவேண்டியிருக்கிறது. எனவே அறநிலையப் பாதுகாப்பு இலாகா, இந்து மத தர்ம ஸ்தாபனங்களின் வருமானத்திலிருந்து நடத்தப்படுகிறதே தவிர, பொது வரிகளிலிருந்து அதற்கு ஒருவித உதவியும் கிடையாது என்பதை வற்புறுத்த விரும்புகிறேன். ஆனால் அரசாங்கம் மோகினி கிராண்ட், டஸ்டிக் கிராண்ட் ஆகியவை சிலபெரிய கோயில்களுக்கு ஆண்டுதோறும் வழங்குகிறது. தமிழ்நாட்டின் ஒவ்வொரு கோயிலுக்கும் ஏராளமான நிலங்கள் முன்பு இருந்தன. சில கோயில் நிலங்களைப் பொதுஜன உபயோகத்திற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் எடுத்துக்கொண்டமையால் இவற்றிற்கு நஷ்டஈடாக ஒரு தொகையை ஆண்டுதோறும் அரசாங்கம் அளித்து வருகிறது. ஆனாலும் அரசாங்கம் ஒவ்வொரு கோயிலிலிருந்து எடுத்துக்கொண்ட நிலங்கள்

அதிகம், ஆனால் கொடுக்கும் உதவித் தொகை (கிராண்ட்) கண்ணைத் துடைக்கும் காரியந்தான்! இந்து அற நிலையப் பாதுகாப்புச் சட்டம் அமுல் நடந்து வந்ததிலிருந்து, நமது கோயில் நிர்வாகம் திறம்படச் செயல்பட்டு வருகிறது என்றால் அதுமிகையாகாது. ஸர். சி. பி. இராமசாமி அய்யர் தலைமையின்கீழ் அமைக்கப்பட்ட அகில இந்து மத ஸ்தாபன குழு, தமிழ் நாட்டிலே நிர்வாகம் சரிவர நடைபெறுகிற தென்றும், வடநாட்டில்தான் சில இடங்க ளில் ஊழல்கள் இருக்கின்றன என்றும் சொல்லியுள்ளார்கள். இவ்வாறு நமது அற நிலையங்கள் செயல்படுவதற்குக் காரணம் சமீப காலத்தில் கமிஷனர் பதவி வகித்த ஸ்ரீ டி. எம். சின்னையா பிள்ளை, M.A.,B.L., ஸ்ரீ உத்தண்டராம பிள்ளை I.A.S. அவர்களும் தற்போது கமிஷனராக விளங்கிவரும் ஸ்ரீ எம். எஸ். சாரங்கபாணி முதலியார் பி. ஏ., பி. எல். அவர்களும் அவர்களது சகாக்களும், பல கோயில் களின் தர்மகர்த்தாக்களின் ஆற்றலும் பணியுமே. மேலேகூறிய அதிகாரிகள் இந்துமதத்தில் ஊறிப்போய் அதில் அதிக சிரத்தை உள்ளவர்கள். அப்பேர்ப்பட்ட அதிகாரிகள்தான் புனிதமான கோயில்கள், அற நிலையங்களை நல்ல முறையில் செயல் படுத்த முடியும். கோயில்களில் நியமிக்கப்பட்டிருக்கும் தர்மகர்த்தாக்கள் பெரும்பாலும் ஆத்மீக சிந்தனையும், இந்து மதத்தில் பற்றுதலும் உள்ளவர்களாக இருப்பதால் நிர்வாகம் சரிவர நடைபெறு கிறது. தர்மகர்த்தாக் குழுவினர், அற நிலையக் கமிஷனர் அவர்களால் நியமிக்கப் படுகிறார்கள். இக்குழுவின் பதவி காலம் ஐந்து வருடங்கள். ஆனால் இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை தர்ம கர்த்தாக்கள் கூடித் தம்முள் ஒருவரைக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறார்கள். அநேகமாக எல்லாக் கோயில்களிலும் தர்மகர்த்தாக்குழுத் தலை வரின் தேர்தல் ஏகமனதுடன்தான் நடந்துவருகிறது. எனவே தர்மகர்த்தாக் குழுவில் அரசியல் சபைகளில் காணப் படும் சண்டை சச்சரவுகள் கிடையாது. தர்மகர்த்தாக்குழு மாதம் ஒருமுறையாவது கூடி, கோயில் நிர்வாக விஷயங்களைக் கவனிக்கிறது. அவசியம் இருந்தால் அவசரக் கூட்டங்களும் நடத்துகிறது. ஒவ்வொரு பசலி ஆண்டு துவங்குமுன் தர்மகர்த்தாக்குழு தனது கோயிலின் வரவு செலவு திட்டத்தை Budget தயாரித்து டெப்டி கமிஷனரின் அனுமதிக்கு அனுப்பு கிறது. அவர் அனுமதித்தபடி தான் செலவு செய்ய முடியும். எனவே தர்மகர்த் தாக்கள் இஷ்டப்படி கோவில் பணத்தை விரயஞ் செய்ய முடியாது. இந்தக் கட்டுப்பாடு கோயில் நிர்வாகத்திற்கு மிக மிக அவசியம். ஆனால் சில விஷயங் களுக்குத் தர்மகர்த்தாக் குழு அதிக பணம் செலவழிக்க வேண்டுமென்று கருதினால், டெப்டி கமிஷனர் அனுமதி கொடுக்கத் தயங்குவதில்லை. கமிஷனர், டெப்டி கமிஷனர், அஸிஸ்டண்ட் கமிஷனர் ஆகிய அதிகாரிகள் தர்மகர்த்தாக்குழுவின் உறுப் பினர்களுக்கு நல்ல மதிப்புக் கொடுத்து அவர்கள் அபிப்பிராயத்தைப் பரிசீலனை செய்து கொள்ளுகிறார்கள். தர்மகர்த்தாக் கள் உள்ளூரில் செல்வாக்கு உள்ள பெரி யார்கள். அவர்களுக்குத்தான் கோயில் விஷயத்தில் மக்கள் என்ன செய்ய விரும்பு கிறார்கள் என்பது நன்கு தெரியும். இதைத் தெரிந்து தான் நாங்கள் வகுத்த பல திட் டங்கள் வெற்றிகரமாக நடைபெற ஆதரவு தந்திருக்கிறார்கள். உதாரணமாக, 1957-ஆம் வருடம் ஜுன் மாதத்திலிருந்து எங்கள் தர்மகர்த்தாக் குழு ஓர் உயர்நிலை மகளிர் பள்ளியை ஸ்ரீ நெல்லையப்பர் காந்தி மதி தேவஸ்தான ஆதரவின்கீழ் நிறுவ வேண்டும் என்று அதற்குத் திட்டமிட்டு,

நிதியை ஒதுக்கி, கமிஷனர் அவர்களிடம் அனுமதி கேட்ட போது, அவர் அனுமதித்து, உயர்நிலைப் பள்ளியைத் துவக்க எங்களுக்குப் பரிபூரண ஒத்துழைப்பைக் கொடுத்தார். 1957-ஆம் கல்வி ஆண்டில் முதல் ஆறு பாரங்களுடன் தொடங்கப்பட்ட ஸ்ரீ காந்திமதி அம்பாள் உயர்நிலைப்பள்ளி, ஒரு தேவஸ்தானத்தினுல் நடத்தப்பட்டு வரும் பள்ளிகளில் முதன் முதல் தோன்றியதாகும். அப்பொழுதே ஒரு அன்பு ஆசிரமும், ஒரு ஆரம்பப் பள்ளிக்கூடமும் தொடங்கப்பட்டன. இப்பள்ளியின் மூலம் நமது மகளிர் இந்து கலாசார சூழ்நிலையில் கல்வி கற்க ஏதுவாக இருக்கிறது. விரும்பும் மகளிருக்கு இந்துசமய போதனை, தேவார திருவாசகப் பாராயணம் ஆகியவை நடத்தப்படுகின்றன. ஸ்ரீகாந்திமதி மகளிர் பள்ளியில் வருடா வருடம் மாணவிகள் S. S. L. C. தேர்வில் 100க்கு 95 வீதம் வெற்றியடைவதால் பள்ளி, கல்வி உலகில் ஒரு உன்னத ஸ்தானம் வகித்து வருகிறது. நாங்கள் எடுத்த முயற்சி வெற்றி அடைந்ததற்குக் கமிஷனர், டெப்டி கமிஷனர் அவர்களின் அனுமதியும் ஆதரவும் தான் முக்கிய காரணமாகும்.

எனவே அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ், கோயில் நிர்வாகம் திறம்படச் செயல்பட வேண்டுமானுல், தர்மகர்த்தாக் குழுவுக்கும், கமிஷனர் டெபுடி-கமிஷனர் அவர்களுக்கும் நெருங்கிய தொடர்பும் ஒத்துழைப்பும் தேவை. கோயில் நிர்வாகம் இன்னும் திறம்படச் செயல்பட வேண்டுமானுல் சில சீர்திருத்தங்கள் அவசியமாகும். சில தேவஸ்தானங்களில் தர்மகர்த்தாக்கள் அரசியல் காரணங்களுக்காக நியமிக்கப்படுகிருர்கள். கோயில் ஒரு தார்மீக இடம். அங்கே பணி செய்வதற்குத் தகுதியுடையவர்கள் தான் நியமிக்கப்பட வேண்டுமே ஒழிய, அரசியல் காரணங்கள் குறுக்கிடலாகாது. மேலும் தேவஸ்தான ஊழியர்கள், சிப்பந்திகள் ஊதியம் உடனே உயர்த்தப்படவேண்டும். இதர இலாகாக்களின் ஊழியர்களின் சம்பளப்பட்டியலுடன் தேவஸ்தான ஊழியர்களின் சம்பளப் பட்டியலை ஒப்பிட்டுப் பார்த்தால், கோயில் ஊழியர்களின் நிலைமை நன்கு புரியும். இந்தச் சீர் திருத்தம் உடனடியாக ஏற்பட வேண்டும். கடைசியாக, 2 லட்சம் 3 லட்சத்திற்கு மேல் வருமானம் உள்ள தேவஸ்தானங்கள் மகளிர் உயர்நிலைப் பள்ளிகளை நடத்த வேண்டும். நமது மகளிர் மூலமாகத்தான் நமது சமயம் காக்கப்பட வேண்டும். எனவே அம்மகளிர் இந்து கலாசார சூழ்நிலையில் கல்வி கற்பதற்கு, செல்வம் மிகுந்த தேவஸ்தானங்கள் வசதிகள் அளிக்கவேண்டும். பழனி தேவஸ்தான ஆதரவில் ஒரு பெரிய கல்லூரி உருவாக இருப்பது பாராட்டுதற்குரியது.

கோயில் நிர்வாகம் என்பது கோயில் வருமானத்தை எடுத்துச் செலவு செய்தல் மட்டுமன்று. நமது பழங்கால மன்னர்கள் அரும் பெருங் கோயில்களைக் கட்டுவித்தனர். அவற்றை நாம் பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும். கோயில் வருமானத்திலிருந்து கோயில் திருப்பணி செய்வது முடியாத காரியம். திரு பி. டி. இராஜனின் தலைமையில் மதுரை மக்கள் ஸ்ரீ மீனுட்சி அம்பாள் கோயிலுக்குச் செய்துவரும் திருப்பணி ஒரு எடுத்துக் காட்டாகும். ஒவ்வொரு தேவஸ்தானத்திலும் இம்மாதிரி ஒரு திருப்பணிக் கமிட்டி அமைத்து, அந்த தேவஸ்தானத்தின் திருப்பணியைச் செய்ய முன் வர வேண்டும். தற்காலத்தில் கடவுள் பக்தியும், சமய உணர்வும் மக்களிடம் நன்கு காணப்படுகின்றன. அவற்றைப் பயன் படுத்த வேண்டுவது அந்தந்த தேவஸ்தான தர்மகர்த்தாக் குழுவின் கடமை. ○

# மரகதக் கல்

பி. எஸ். மணி

நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சந்தா சாகிப் | — | தளபதி |
| மீனுட்சி தேவி | — | மதுரை நாயக்க அரசி |
| அங்கயற்கண்ணி | — | ராணியின் தோழி |
| வீரப்பன், சந்தணம் | — | மதுரை அரண்மனைச் சேவகர் |
| தூதுவன் | — | சந்தாசாகிபின் ஆள் |

## காட்சி 1.

*[மதுரை நாயக்க மன்னர் அரண்மனை. குதிரையின் டக் டக் என்ற குளம்பொலிச் சத்தம். சந்தாசாகிப்பின் தூதுவன் குதிரையினின்றும் இறங்கி, அரண்மனை வாயிலில் சேவகன் வீரப்பனையும், சந்தணத்தையும் சந்தித்தல்.]*

**தூதுவன் :** (பெருமூச்சு வாங்க) யாரப்பா, நான் உடனே ராணி மீனுட்சி தேவியாரைச் சந்திக்க வேண்டும்...

**வீரப்பன் :** ஐயா! தாங்கள் யாரு?.... எதற்காக எங்கள் அரசியாரைப் பார்க்கணும்?

**சந்தணம் :** நீங்க விவரம் சொன்ஞத்தான் உங்களை...

**தூது :** என்னப்பா! இன்னும் குலம், கோத்திரம், ஊரு, பேரு எல்லாம் கேட்கலியே...எல்லாம் சேர்த்துக் கேட்டுடுங்க... அப்பறம்......

**வீர :** ஐயா! கோவிச்சுக்கிடாதிங்க ........அரண்மனைக்கு வர்றவங்களை அதெல்லாம் விசாரிக்காம இருக்கமுடியுமா? அதுவும் ராணி அம்மாவைப் பார்க்கணும்னு எல்லாம் தெரியாமே அனுப்ப முடியுமா?

**சந்த :** ஆமா, ஆமா.

**தூது :** இந்தாங்க! பக்கவாத்தியம்.... கொஞ்சம்...உங்க ஆமா பல்லவியை நிறுத்துங்க சொல்லறேன்....

**வீர :** உங்களைப் பார்த்தா அன்னிய நாட்டுக்காரரு மாதிரி...

**சந்த :** ஆமா, ஆமா...

**தூது :** ரொம்ப சரி! நான் அன்னிய நாட்டுத் தூதுவன்தான். அவனைத்தான் இத்தனை மரியாதையாக வரவேற்கிறீங்க, இல்லையா....?

**சந்த :** ஆமா, ஆமா.

**வீர :** நீ கொஞ்சம் சும்மா இரு, சந்தணம் அண்ணே. ஆமா... நீங்க யாரு? உங்க கையிலே ஏதோ ஓலை... இல்லை... அவசரச்செய்தி ஏதாவது...

**தூது :** நான் தளபதி சந்தா சாகிப்பின் தூதுவன்.

**சந்த :** (வியப்புடன்) சந்தா சாகிப்பா? அண்ணே! நினைச்சபடியே போர் வந்து விட்டது. அரசர் இல்லைன்னு... சந்தா சாகிபு...

**வீர :** கொஞ்சம் பொறு அண்ணே! அவரு விஷயத்தைச் சொல்லட்டும்.

எதற்கு இப்படி அனுவசியமா அல்லா டறே.

**தூது :** இந்தாங்க ஐயா, உங்க கிட்டே வாதம் செய்துகிட்டிருக்க எனக்கு நேரமில்லே. நீங்க உடனே....

**வீர :** ராணிகிட்டே அழைச்சுகிட்டுப் போறேன்...வந்த விஷயத்தைச் சொல்லல் லியே இன்னும்....?

**தூது :** சொல்லிடறேன்...சொல்லிட றேன்...உங்க நாட்டரசர் விஜயரங்க சொக்கநாதர் கொலுவீற்றிருக்கிருர் எங்கள் தளபதியின் சிறையிலே.

**சந்த :** ஆ!...அண்ணே! ... நினேச்ச படியே நடந்துவிட்டது. நம்ம அரசரைக் காணுேமின்னு தவிச்சுக்கிட்டிருந்தோமே, இப்ப அவரு அங்கிட்டில்ல மாட்டிக்கிட் டிருக்காரு...?

**வீர :** ம்...அதற்கென்ன? ராணியை எதற்காகப் பார்க்கணும்...?

**தூது :** இந்தா ஐயா, இந்த ஓலேயைப் படி. உனக்கு விபரமாகச் சொல்ல நம் மாலே மாளாது. தொண்டைத் தண்ணி வற்றிப்போச்சு.

**வீர :** கொடுங்க, இப்படி...

**சந்த :** அண்ணே! என்ன எழுதி யிருக்குது....? அரசருக்கு என்ன ஆபத்து? அடடே உன்னிடம் போய்க்கேட்கிறேனே, நீயும் நானும் தற்குறியாயிற்றே? அதிலே யிருக்கிறதே...

**தூது :** ஹஹ்ஹஹ்ஹா...!

**வீர :** (மெதுவாக) உஷ்!...நீ சும்மா இரு அண்ணே, அது ராஜாங்க விஷயம். நம்ம எதற்குத் தலேயிடணும்? இந்தா, சந்தணம், நான் இவரை அரசியாரிடம் அழைச்சுக்கிட்டுப் போறேன். நீ வெளி யிலே கவனிச்சுக்க.

**சந்த :** ஆமா, நீ போய்ட்டு வா, ஒரு ஈ, துரும்பு உள்ளே நுழையாது...

## காட்சி 2.

(அரசியும் அங்கயற்கண்ணியும் உரையாடிக் கொண்டிருக்கிருர்கள். வீரப் பன் அவசரச் செய்தியுடன் வருகிருன்)

**வீர :** தேவி, வணக்கம்.

**அங்கயற்கண்ணி :** (அரசியிடம்) அவன் பதற்றத்தைப் பார்த்தால் ஏதோ ஒரு அவசரச் செய்தி....

**ராணி (மீனுட்சி);** என்ன வீரப்பா?

**வீர :** மகாராணி, தர்பார் மண்டபத் தில் தங்களுக்காக சந்தாசாகிப் தூதுவன் ஒருவன் காத்திருக்கிருன்.

**ராணி :** என்ன? சந்தாசாகிப்பின் தூதுவனு? போர் முழக்கச் செய்தியோ?

**அங்க ;** அரசர் இன்று இருந்தால் சந்தாசாகிப் தூதுவன் தலேகாட்டுவானு?

**ராணி :** பாண்டிய மன்னர்கள் போருக்கு அஞ்சமாட்டார்கள். போர் என் ருல் பெருவிருந்தாயிற்றே அவர்களுக்கு.... அங்கயற்கண்ணி....

**அங்க :** இதை நான் நன்கு அறி வேன் தேவி. போர் என்ருல் நீங்களும் பின்வாங்க மாட்டீர்கள் என்பது எனக்கு நன்ருகத் தெரியும்.

**ராணி :** வீரப்பா அன்னியர் தூது வனே மரியாதையோடு வரவேற்பாய். இருக்கை கொடு. வருகிறேன் இதோ.

**வீர :** ஆகட்டும் தேவி. (போகிருன்)

**அங்க :** தேவி, பகைவனுக்கு இத் தனே மரியாதை காட்டவேண்டுமா?

**ராணி :** தூதுவரை அவமதிப்பது அரச பீடத்துக்கு அழகல்ல. அங்கயற் கண்ணி. வா, போகலாம்.

## காட்சி 3.

*[தர்பார் மண்டபம். ராணி மீனாட்சியும் அங்கயற்கண்ணியும் சந்தாசாகிப்பின் தூதுவனைக் காணல்]*

**தூது :** பாண்டிமாதேவியாரே, வணக்கம். எங்கள் தளபதி சந்தாசாகிப் தங்களுக்கு ஓலையொன்று அனுப்பி யிருக்கிறார். இதோ....

**ராணி :** அப்படியா? அங்கயற்கண்ணி, அந்த ஓலையின் வாசகம் என்ன?

**அங்க :** (உரக்க) உங்கள் "அரசர் விஜயரங்க சொக்கநாதர் எங்கள் சிறைச் சாலையின் விருந்தினர்; அவர் விடுதலை பெற விலையுயர்ந்த மரகதக் கல்லும், ஏராளமான பொருளும் கொண்டு வந்தால், தங்கள் விருப்பம் நிறைவேறும்....அரசருக்கு விடுதலை."

—சந்தாசாகிப்.

**ராணி :** ஓலையைப் பார்த்தாகி விட்டது. நீங்கள் போகலாம்... தங்கள் செய்திக்கு நன்றி.

**தூது :** வருகிறேன் மகாராணி. (போகிறான்).

**அங்க :** தேவி, நம் அரசர் மகம்மதிய அரசனின் கைதியா? அதிசயமாயிருக்கிறதே ?

**ராணி :** நடவாதது நடந்துவிட்டது. எல்லாம் என்னால் வந்த வினை. (விம்மியழுகிறாள்)

**அங்க :** தேவி! நிச்சயம் அரசர் அவனிடம் சிக்கியிருக்க மாட்டார். நம் பொருளைப் பறிக்க சந்தாசாகிப் கையாளும் சூழ்ச்சி. இதைக்கண்டு ஏமாறவேண்டாம்.

**ராணி :** இல்லை, அங்கயற்கண்ணி. உண்மையாய்த்தானிருக்கும். அன்று நடந்த நிகழ்ச்சி......

**அங்க :** (வியப்புடன்) என்ன நடந்தது, தேவி ?

**ராணி :** ம்.......கேள் துயரம் வரும்போது தொடர்ந்து வரும் என்பார்கள். அன்றுமட்டும் நான் அரசரிடம் உண்மையை மறைக்காமலிருந்திருந்தால்...... (விம்மி அழுகிறாள்)

**அங்க :** என்ன தேவி......

**ராணி :** அன்று என் நாக்குத் துண்டிக்கப்பட்டிருக்கக் கூடாதா ? உண்மையைக் கூறியிருந்தால்.........இத்தனை விபரீதங்களும் நேர்ந்திருக்குமோ ? 'பெண் புத்தி பின் புத்தி' என்பது சரியாகி விட்டதே.

**அங்க :** அன்று என்ன நடந்தது ? உங்கள் பேச்சு புரியாப் புதிராயிருக்கிறதே ?

**ராணி :** மன்னர் அன்று கொற்கையிலிருந்து கிடைத்த அருமையான மரகதக் கல்லைப் பரிசாக அளிக்கவந்தார். அப்பொழுது அவர் சகோதரி இடைமறித்து, அம் மரகதக் கல் தனக்கு வேண்டுமென்று கெஞ்சினாள், அரசர் தங்கையைப் பொருட்படுத்தாமல்........

**அங்க :** தங்களுக்குக் கொடுத்து விட்டாராக்கும்! அரசர் தம் அருமைத் திரு மனைவியாருக்கு அளித்ததில் அதிசயமில்லையே ?.......

**ராணி :** இல்லை, அங்கயற்கண்ணி! அரசர் தம் தங்கையாருக்குக் கொடுக்காமல் எனக்குக் கொடுத்தால், அரசரின் தங்கையாருக்குப் பொறாமையும், என்னிடம் வெறுப்பும் ஏற்பட்டுவிடுமல்லவா? ஆகையால்.........

**அங்க :** கோபத்துடன் அரசரிடம் நடந்துகொண்டீர்களா, அரசி ?—

**ராணி :** ஆம்! வேண்டுமென்றே அந்த மரகதக் கல்லைப் பழித்தேன்—அரசர் தம் தங்கையாரிடம் கொடுத்து விடுவார் என்று எதிர்பார்த்தேன். கடைசியில் என்னையே பழித்துவிட்டு மரகதக் கல்லை வீசியெறிந்துவிட்டுப் போய் விட்டார். அந்த மரகதக் கல் என் வாழ்வுக்கே யமனாக வந்துவிட்டது.

**அங்க :** அம்மா! அழாதீர்கள். விரைவில் தங்கள் துன்பம் தீரும்.

**ராணி :** எப்படியம்மா தீரும்? அரசர் எதிரியின் வலையிலல்லவா சிக்கிவிட்டார். அவரை மீட்பது எப்படி?

**அங்க :** தேவி! சந்தா சாகிப் மரகதக் கல்லும், பொருளும் தந்தால் அரசரை விடுவிப்பதாக வாக்களித்திருக்கிறானே........

**ராணி :** ......ம், சந்தாசாகிப் பேராசைக்காரன். அவன் இலேசில் அரசரை விடுதலைசெய்ய இசைந்துவிட மாட்டான். அவனை நானே பொன்னும், மரகதக் கல்லும் எடுத்துச் சென்று கெஞ்சிக் கேட்டால்தான்.......

**அங்க :** அரசி! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? அதனால் உங்களுக்கே ஆபத்து நேர்ந்துவிட்டால்......

**ராணி :** என் உள்ளத்தரசர் சிறையில் வாடும்போது நான் இங்கே மாட மாளிகையில் வாழ்வது அழகா? அவரது துயர் துடைக்க எத்தகைய இன்னலையும் ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்.

**அங்க :** அப்படியானால் நானும் உங்களுடன் வருகிறேன், அரசி. மரகதக் கல்......

**ராணி :** கவலைப்படாதே! அந்தத் துரதிருஷ்டக் கல் என்னிடந்தான் இருக்கிறது. அந்தக் கல்லை அரசர் என்மீது வீசியெறிந்துவிட்டுப் போய்விட்டது நல்லதாகப் போயிற்று. இல்லாவிட்டால்....... அந்த துராசைக்காரன் ஆசையை நிறைவேற்றமுடியாமல் போய்விடும்!

## காட்சி 4.

[சந்தாசாகிப்பின் பாசறை. சந்தா சாகிப்பைக் காண ராணி மீனாட்சியும், அங்கயற்கண்ணியும் வருகின்றனர்.]

**அங்க :** தேவி! இதோ, அந்தப் பேராசைக்காரனின் பாசறை நெருங்கி விட்டது.

**ராணி :** (பெருமூச்சு விட்டுக் கொண்டே) அப்பா! வந்துவிட்டதா?

**அங்க :** அரண்மனை அந்தப்புரத்தில் ரத்தினக் கம்பளங்களில் நடந்துசெல்ல வேண்டிய பூப் பாதம், இன்று கல்லிலும் முள்ளிலும் நடந்து புண்பட்டுவிட்டது....

**ராணி :** வாழ்க்கைப் பாதை கரடு முரடானது தானே அங்கயற்கண்ணி—இன்பமும், துன்பமும் மாறிமாறித்தான் வரும். இதற்கு விலக்கு யாரும் இல்லை. இப்பொழுது துன்பத்தின் எல்லைக்கே வந்துவிட்டோம்.........என்ன செய்வது, எல்லாம் விதிப்பயன்.

**அங்க :** நான் முதலில் சென்று தங்கள் வரவைச் சந்தாசாகிப்பிடம் அறிவிக்கிறேன்.

**ராணி :** ஓ......! புலிக் கூண்டில் நுழைவதற்குப் புலியின் நோக்கம் முன்னறிவது அவசியம். ஜாக்கிரதையாகச் சென்று வா. (மாற்றம்)

**தூது :** (அங்கயற்கண்ணியிடம்) யார் நீ? எங்கே வந்தாய்? வேற்றுநாட்டுப் பெண்மணிக்கு இங்கு என்ன வேலை?

**அங்க :** ஐயா! உங்கள் தலைவர் ஆணையின் பேரில்தான் இங்கு வந்திருக்

கிறோம். மதுரை நாயக்க அரசி ராணி மீனாட்சி தேவி வந்திருக்கிறாள் என்று சொல்லு.

**தூது :** அப்படியா ? இதோ எங்கள் தலைவரிடம் அறிவிக்கிறேன்.........

**தூது :** (பாசறைக்குள் சென்று) மதுரை நாயக்கரசி தன் தோழியுடன் வந்திருக்கிறார். தங்களைக் காண விரும்புகிறார்.

**சந்தா :** ஹஹ்ஹஹ்ஹா ... மீனாட்சி தேவியாரே வந்து விட்டாரா ? பழம் நழுவிப் பாலில் விழுந்தமாதிரிதான் (உம்) உள்ளே அழைத்துவா.

(மாற்றம்)

## காட்சி 5

(ராணி மீனாட்சியாரும் அங்கயற்கண்ணியும் பாசறைக்குள் வருகிறார்கள்.)

**அங்க :** தாங்கள் விடுத்த ஓலையின் படி எங்கள் அரசி மரகதக்கல்லும், பொன்னும் கொணர்ந்திருக்கிறார். எங்கள் அரசரைத் தாங்கள் விடுதலை செய்ய வேண்டும்.

**சந்தா :** ஹஹ்ஹஹ்ஹா......என்ன உங்கள் அரசி பேசாமடந்தையோ? இல்லை பேசினால் முத்து உதிர்ந்துவிடும் என்று பயப்படுகிறாளோ?

**அங்க :** கதிரவனைப் பிரிந்த தாமரையைப்பார்த்து, "ஏன் சாம்பியிருக்கிறாய்?" என்று கேட்பது மாதிரி யிருக்கிறது. நீஙகள பேசுவது...... அரசர் விஜய ரங்க சொக்கநாதரைப் பார்க்காமல் அரசி ஒரு வார்த்தைகூடப் பேசமாட்டார்கள்.

**சந்தா :** (எரிச்சல்) போதும் உன் வியாக்கியானம்-நீ விலகிச் செல்... அரசி மீனாட்சி தேவியாரே, உங்கள் வருகையால் இந்தப பாசறையும், நானும் பாக்கியசாலிகளானோம்.

**ராணி :** தளபதி, தங்கள் விருப்பப்படி பொன்னும், மரகதக்கல்லும் கொணர்ந்திருக்கிறேன். என் இல்லத்தரசரைத் தாங்கள் விடுதலை செய்ய வேண்டும்.

**சந்தா :** (நகை) இந்தப் பொன்னும், மரகதமும் யாருக்குத்தேவை? இவற்றைப் போல் பன்மடங்கு என் அரண்மனையில் இருக்கின்றன... நான் வேண்டுவது.......

**ராணி :** (கோபத்துடன்) என்ன? சொன்ன வாக்கைக் காற்றில் பறக்க விடுத்து, கண்டது பேசுவதுதான் உங்கள் அரச வழக்கோ?

**சந்தா :** ஹஹ்ஹா... இந்த மரகதக் கல்லைக் குதிரைலாயக்காரனுக்குப் பரிசாக அளியுங்கள். பிடிவாதம் வேண்டாம்... எனக்கு வேண்டியது இவற்றை எல்லாம் விட உயர்ந்த... தாங்கள்தான்... தயக்கம் தேவையில்லை.

**ராணி :** துரோகி! நயவஞ்சகா; என் ஆருயிர் அரசரை ஏமாற்றிச் சிறை செய்தாய்... என்னையுமா கவரப் பார்க்கிறாய்? மதுரை மூதூரை எரித்துச் சாம்பலாக்கிய கண்ணகியின் பரம்பரையைச் சேர்ந்தவள் நான். என் கோபம் பொல்லாதது .....

**சந்தா :** அடடா; தமிழ் வளர்த்த மதுரையம்பதியின் நாயகியே; கோபத்திலும் உனக்குத் தமிழ் நன்கு பேசுகிறது.... ஆனால் உன்னைப்போன்ற அறிவின் சிறந்த நாயகிக்காகவே நான் இத்தனை காலம் தவம் கிடந்தேன்...

**ராணி :** கயவனே கண்ட விதம் பேசாதே .... என்னை மறந்துவிடு - என் கணவர் விடுதலையே நான் வந்த காரியம்.... இதோ நீ விரும்பிய பொன்னும் பொருளும், அந்த மரகதக்கல்லும்....

**சந்தா:** (நகை) அழகின் வடிவே, என்னைப் பைத்தியமாக அடிக்காதே - என் இல்லத்தரசியாக நீ அமைந்தால், உன் அரசருக்கு விடுதலை... மதுரை மீது படையெடுக்கும் ஆசையையும் விட்டுவிடுகிறேன் .. இல்லாவிட்டால்...?

**ராணி:** இல்லாவிட்டால்....?

**சந்தா:** உன் கணவர் சித்திரவதைக்குள்ளாவார்.... இதோ; (உரக்க) யாரங்கே?-

**தூது:** கூப்பிட்டீர்களா, தளபதி?-

**சந்தா:** (கடுமையான குரலில்) ஆம்; உடனே சென்று விஜயரங்க சொக்கநாதரது இரு கைகளையும் தறிக்கவேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகச் சித்திரவதை செய்து அவரைத் துன்புறுத்த வேண்டும் போ, உடனே செய்... என் கட்டளையை நிறைவேற்று.

**ராணி:** ஐயோ, வேண்டாம்; உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். அவரை ஒன்றும் செய்யவேண்டாம்...

**சந்தா:** ம்....... போ...... எதையும் காதில் வாங்கிக்கொள்ளாதே.... ஓடு...

**ராணி;** அங்கயற்கண்ணி; உடனே சென்று, அவனைத் தடுத்து நிறுத்து. அரசரைக் காப்பாற்ற விரைந்து செல்.... ம்.... ஓடு....

**சந்தா:** ஹஹ்ஹா.......... இந்தப் பெண்ணு காப்பாற்றப்போகிருள்? - பாவம் போகட்டும்... அவளுக்கும் சிறையில் ஒரு பாகம் திறந்து வரவேற்கும். ஹஹ்ஹா... இப்பொழுது விஜயரங்கர் கைகளை இழந்திருப்பார்... இன்னும் சில நேரத்தில் கண்களையும்...

**ராணி:** கொடுமைக்காரனே; உன்னைத் தண்டிக்க யாருமில்லையா? பெண் தீயைப்போன்றவள்; நெருங்கிஞல் சுட்டுவிடும்.

**சந்தா:** எங்கே, பார்க்கலாம்...... (நெருங்கிஞன்)

**ராணி:** துராத்மாவே; அருகில் நெருங்காதே; மரகதக்கல்லே; உன்ஞல் தானே இத்தனை துயரமும்......

(மரகதக்கல்லை கோபத்துடன் வீசுகிருள். அது உடைந்து, சிதறித் தெறிக்கும் சத்தம். சிதறிய சில்லுகளைப் பொறுக்கி எடுத்தவாறு)

இவற்றை உண்டு மாய்வேன். நீ இன்னும் நெருங்கிஞல், ஒரு பெண்ணைக் கொன்ற பாபம் உன்னைச் சேரும்.

**சந்தா:** (அருகில் நெருங்கி கைகளைப் பிடித்து) மீஞட்சிதேவி! வேண்டாம்! வேண்டாம்!

**ராணி:** ஆ நீங்களா! இந்தக்கை..?

**சந்தாசாகிப்:** வேடம் தாங்கியிருந்த (விஜயரங்க சொக்கநாதர்) ஹஹ்ஹா......ஹஹ்ஹா

**ராணி:** இந்தக் குரல்........அரசே! இதென்ன சோதனை? இதென்ன நாடகம்?

**விஜய:** தேவி! என்னைக் கண்டு பிடித்து விட்டாயா? என் வேஷம் வெளிப்பட்டு விட்டதே?

**ராணி:** அரசே! என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு ஒரு நம்பிக்கை...உங்கள் வீரத்தில் ஒரு திடமான நம்பிக்கை. நாயக்க அரசர் விஜயரங்க சொக்கநாதர் போரில் எதிரியின் கையில் எளிதில் சிக்க மாட்டாரென்பது. அந்த நம்பிக்கை வீண் போகவில்லை...உங்களையா சந்தாசாகிப் சிறை செய்துவிட முடியும்? எனக்குத் தெரியாதா?

**விஜய:** பெண் திலகமே! நீ நடிப்பில் தான் கெட்டிக்காரி என்பதுமட்டுமல்ல புத்திசாலித்தனத்திலும்....

**ராணி:** போதும், அரசே! உங்களைப் பிரிந்து இத்தனை நாள் பட்ட வேதனைக்கு விடிவு வந்ததே, அதுவே போதும். பாராட்டுதல் வேண்டாம்....வாருங்கள், அரண்மனைக்குப் போகலாம்...

**விஜய:** நீ முதலில் நாடகமாடினாய்...அந்த நாடகத்துக்குப் பதில் நாடகமாடினேன்...இதில் தவறில்லையே....?

**ராணி:** உங்கள் சகோதரிக்கு மரகதக்கல் கிடைக்க நான் உங்களிடம் உண்மையை மறைத்ததால் பலவித அபகீர்த்திக்கும் இன்னலுக்கும் உள்ளானேன்...

**விஜய:** உன் நடிப்பு பிரமாதம்! ஆனால் நீ அவ்வளவு ஆணவத்துடன் நடந்திருக்க வேண்டாம்...

**ராணி:** அதை மறந்து விடுங்கள், அரசே! உங்களிடம் அவதூறாகப் பேசியதை யெல்லாம் மறந்து மன்னியுங்கள்... உங்களைப் பிரிந்து...

**விஜய:** தேவி! ஊடலும் பிரிவும் அன்புபெருக வழி வகுத்துவிட்டதல்லவா?

**அங்க:** ராணி! மகாராணி! ஒரு நற்செய்தி ..

**விஜய:** (நகை) உன் நற்செய்தி அவளுக்குப் பழசாகி விட்டது...அவள் முன்பே கிரகித்துக் கொண்டு விட்டாள். உன் கட்டியம் தேவையில்லை...

**ராணி:** அவனைக் கோபிக்க வேண்டாம்...எனக்காக அவன் பட்டபாடு ..

**விஜய:** (ஊம்) நான் பட்ட பாடு அப்பப்பா!...அரண்மனையை விட்டு இதற்காக ஒரு மாதம் ஒத்திகை நடத்தினேன்... என் நாடகம் வெற்றிகரமாக முடிந்து விட்டது...

**ராணி:** இனி உங்கள் வேஷத்தைக் கலைக்கலாம்...இந்த வேஷத்தோடு நீங்கள் வந்தால் நாட்டில் இன்னும் பல கற்பனைகள் எழுந்து என்மீது தூஷணைகள் பெருகும்...இத்தனை நாள் நான் பட்டபாடு போதும்...

**விஜய:** (சிரித்துக் கொண்டே) உத்தரவு, மகாராணி!



# நான் மீனாட்சி பிள்ளை

கவியோகி சுத்தானந்த பாரதியார்

நந்தனுக்கு, தில்லை எப்படியோ அப்படி எனக்கு **மதுரை.** தாயார் அடிக்கடி மதுரை செல்வார்; நானும் கூடப் போவேன். எதற்கு? காமாக்ஷியுடன் சென்று மீனாக்ஷியைக் காணவே. மதுரை **மீனாக்ஷியம்மனையே** என் உண்மைத்தாயெனக் கருதினேன். மாமாவீட்டிற்றுற் மூட்டைகளை இறக்கியதுமே, நேராக நான் கோயிலுக்கு ஓடுவேன்; பொற்றாமரையில் குளிப்பேன். சூடன் வாங்கிக்கொண்டு நேரே மீனாக்ஷி சந்நிதிக்குள் புகுவேன். யாருமில்லாவிட்டால் கர்ப்பக் கிரகத்துக்குள்ளேயே சென்று "அம்மா வரதேவி! நான் உன் முழந்தை; ஓம் சுத்த சக்தி ஓம்" என்று தேவிபாதத்தை அணைத்துக் கொண்டு பரவசமாகி இன்பக் கண்ணீர் விட்டு நிற்பேன்......அந்தச் சைதன்ய விக்ரகமும் என்னுள்ளிருந்து "வா மகனே! நன்றாயிரு" என்பதுபோலிருக்கும். சூடனை நானே கொளுத்தி, இந்தச் சுடச் சுடர்போல் நான் உன்னுடன் கலக்க வேண்டும் என்றேன். பிறகு அங்கிருக்கும் குங்குமத்தை எடுத்து இட்டுக் கொண்டு வெளியேவந்து வெளிமண்டபக் கிளிகளிடம் "மீனாக்ஷி மீனாக்ஷி!" என்பேன். கிளிகள் "மீனாட்சி மீனாட்சி" என்று வழக்கப்படி கீச்சிடும். எனக்குப் பரம சந்தோஷமாயிருக்கும்.

**"போ, உன் அம்மா கிட்ட"**

கோடை விடுமுறை, அம்மாளும் நானும் மதுரைக்கு வந்தோம். மாமா என்னை என்றுமில்லாத பிரியமுடன் பேணினார்; ஒரு நாள்முழுதும் அம்மாளுடன் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார். தத்து தத்து என்று என் காதில் விழுந்தது. ஆம், என்னை மாமா தெத்தெடுத்து பெரிய அந்தஸ்திற்குக் கொண்டுவர நினைத்தார். இதை நான் யூகித்தே கோயிலுக்குச் சென்று அம்பிகை முன் நின்று "அம்மா! நான் உன் குழந்தை, பணம் எதற்கு? உன் அருளே வேண்டும்; என்னைக் காப்பாற்று" என்று வணங்கிவந்தேன். அப்போது சுந்தரேசர் பிராகாரத்தில் "**மற்றுப் பற்றெனக்கின்றி நின்திருப் பாதமே மனம் பாவித்தேன்**" என்று பாசுரம் நடந்தது. தமிழ் வேதம் என் உள்ளத்தைத் தொட்டது.

ஐந்தாறு நாட்கள் இப்படியே சென்றன. புதன்கிழமை மாலை; அம்மா "வாடா செல்லம்" என்று எனக்கு மகமல்பட்டில் செய்த நிஜார், சட்டை மாட்டினாள். மாமா பட்டுக் குல்லாய் போட்டு என்னைத் தமது நிதிச்சாலைக்கு அழைத்துச் சென்றார். முதலில் கிராமபோன் வைத்தார். "**இனியேது எனக்குனருள் வருமோ எனக் கருதி ஏங்குதே நெஞ்சம் ஐயோ**" என்ற தாயுமானவர் பாடல் என் மனதைத் திறந்தது "இன்றைக்கிருப்பாரை நாளைக்கு இருப்பரென்று எண்ணவோ திடமில்லையே" என்று நானும் சேர்ந்து பாடினேன். "நீ இந்தமாதிரி பாட முடியுமோ?" என்றார் மாமா. "திருவருள் இருந்தால் பாடுவேன்" என்றேன். பிறகு "மாதர் பிறைக் கண்ணியானை ...கண்டறியாதன கண்டேன்" என்ற தேவாரம் நடந்தது, நானும் "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்று பாடி

னேன்......"செல்லம்! கண்டறியாதன எல்லாம் காட்டுகிறேன்; பார்" என்ருர்.

பெட்டகம் திறந்தது. செடிப்பவுன் களும் மோகராக்களும் நவமணிகளும் குவிந்து கிடந்தன. வெள்ளி தங்கச் சாமான்கள் பல, பள, பள.........!

**மாமா:** பார் கண்டறியாதன ......

**நான்:** இதுதாஞ, பூ ....... இதெல்லாம் உனக்கு ஏது மாமா?

**மாமா:** எல்லாம் என் சொத்துடா... செல்லம்.

**நான்:** உனதா? "இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ திடமில்லையே" ...... இப்போதுதானே இதைக் கேட்டோம்.

**மாமா:** அதிகப்ரசங்கி! வேதாந்தம் வேண்டாம்; கேள் செல்வம் இந்தப் பங்களா உனக்கு வேண்டுமா?

**நான்:** ஆகாச பங்களா போதுமா.

**மாமா:** அதிகப்ரசங்கி. பவுன் மோகரா, நகை, வெள்ளி தங்கமெல்லாம் பார்......

**நான்:** இதெல்லாம் எதற்கு மாமா? யாருக்காக வைத்திருக்கிருய்?

**மாமா:** உனக்குத்தானடா......செல்வம், இந்த மாளிகை, பணம் எல்லாம் உனக்குத் தருகிறேன்......எனக்குப் பிள்ளையாயிருக்கிருயா?

சிறிதுநேரம் திகைத்துநிற்கிறேன்... நான்மட்டும் 'சரி' என்று தலையசைத்திருந்தால்போதும். மறுநாளே தத்தெடுத்திருப்பார் எனவிதியே மாறியிருக்கும். நான் பாரிஸ்டராகி மாடியில் சட்டநூல்களைப் புரட்டிக்கொண்டிருப்பேன். ஆனுல் யோகியாயிருக்க முடியாது. எனக்கு இன்னது சொல்வதென்றே தெரியவில்லை. அப்போது வாசலில் ஓர் அந்திப் பிச்சைக்காரன் வந்தான். "அம்மா, பிச்சை! பசி பொறுக்கமுடியவில்லை. அம்மா ...... ஏழைக்கிரங்கு அம்மா......" என்னும் பிச்சைக்காரன் குரல் என் மனதில் ஒரு புரட்சியை உண்டாக்கியது.

**மாமா:** என்னடா செல்வம் ...... சும்மா விழிக்கிருய்? பார் எவ்வளவு பவுன்! எல்லாம் உனக்கு; எனக்குப் பிள்ளையாயிரு ...... ஆகட்டுமா ...... சொல்.

**நான்:** மாமா! நான் அம்மாபராசக்தி, மதுரை மீனுக்ஷிபிள்ளை. உனக்கேன் பிள்ளையாவேன்?

**மாமா:** ஹா, என்னடாசொன்ஞய்? செல்லம்! நீ என்பிள்ளை; உனக்கு இந்தப் பங்களா சொத்து சுகமெல்லாம் தருகிறேன்.

**நான்:** இவ்வளவு சொத்து எதற்கு மாமா? .......

**மாமா:** எதற்கா ........ நன்ருய்ச் சாப்பிட்டுச் சுகமாக அட்டணக்கால் போட்டுக்கொண்டிருக்கலாம். .......

**நான்:** மாமா! நாம் சும்மா சாப்பிட்டிருக்கவா வந்தோம்...... நான் சாப்பாட்டு ராமனில்லை; நான் ஒன்றுசொல்கிறேன். இதெல்லாம் என் அம்மா தந்த சொத்து. அதோ ஏழை அலறுகிருன்! ஏழைக்குத் தா, புண்ணியம் உண்டு.

**மாமா:** சை, அதிகப்ரசங்கி! குட்டி வேதாந்தி! சொத்தைக்கேள். இரு என் பிள்ளையாக .... சொந்தத்தை அனுபவி ...

**நான்:** இதோ அனுபவிக்கிறேன், மாமா .......

நான் பெட்டகத்தில் குவிந்த பவுன்களில் கைபோட்டு அள்ளினேன். இதெல்லாம் அந்தப் பிச்சைக்காரனுக்கு' என்று ஓட அடிஎடுத்தேன், மாமா கண் சிவந்தது... "சீசீ", அதிகப்ரசங்கி... என்று கையிலிருந்ததைப் பிடுங்கிப் பெட்டகத்தில் போட்டார். 'டப்' என்று அதை மூடிப் பூட்டினார். நான் வெளியே வந்துவிட்டேன். அவரும் கஜானாவைப் பூட்டிவிட்டு வந்தார். அப்போது என் தாய் காமாக்ஷி வந்து "செல்லையா மாமா பிள்ளையாயிரு.......இந்தப்பவுன்களா, சொத்து...... எல்லாம் உனக்கு..."என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

**நான் :** ஏனம்மா, உனக்கு இப்படிப் புத்தி போனது. நான் அம்பிகைபிள்ளை.

**மாமா :** அப்படியானால் அம்பிகைதான் உனக்குச் சோறு போடுகிறாளோ....?

**நான் :** தடையில்லாமல்.... எனக்கு, உனக்கு, ஈ எறும்புக்கும் என் அம்மா மதுராம்பிகைதான் சோறு போடுகிறாள்...

**மாமா :** அம்மா மதுராம்பிகை போ, உன் அம்மாகிட்ட... இன்றிரவு எப்படிச் சாப்பிடுகிறாயோ பார்க்கிறேன் போ உன் அம்மாவிடம்...

கட்டளை பிறந்துவிட்டது. நான் மௌனமானேன். பேசாமல் மாடியில் ஏறி, கோயில் கோபுரத்தையே பார்த்திருந்தேன். அது 'உன் அம்மா இங்கே இருக்கிறாள், வா' என்று அழைப்பது போல் இருந்தது. நான் மெல்லக் கொல்லைப்புறமாக நழுவி, ஆவேசமாக அம்மன் சந்நதிக்கே ஓடினேன். உலகையே மறந்தேன்.

**அடைக்கலம்**

கூட்டமில்லை; பட்டருமில்லை. அம்மா முன் நின்றேன். "ஓம்சுத்தசக்தி; நீயே என் அம்மா.... நான் உன் பிள்ளை. என்னைக் காப்பாற்று தாயே" என்றதே நினைவிருக்கிறது. பிறகு அம்பிகை பாதத்தில் விழுந்தேன். பாதத்தைத் தொட்டேன்... நின்றேன்... செல்ல முடியவில்லை. அப்படியே சந்நிதானத்தில் சாய்ந்தேன். உடலை மறந்தேன். விம்மி விம்மி அழுதேன். இதயம் "பட் பட்" என்று குதிரை ஓட்டம் போல் அடித்துக்கொண்டது. நரம்புகளில் எறும்பூர்வது போல் ஓர் மின்சார விறுவிறுப்பு; மனதில் புதிய எக்களிப்பு; உள்ளத்தில் பனிக்கட்டி வைத்ததுபோல் ஓர் குளிர்ந்த இன்பம்; கடுங்கோடையில் வேர்த்து விறுவிறுத்தவனுக்கு, தேனும் பாலும் இளநீரும் கலந்து கொடுத்தால் எப்படியிருக்கும்? அத்துடன் தெளிந்த பாலாற்றில் நீந்தினால் எப்படியிருக்கும்; அப்படிப்பட்ட அனுபவம் அந்த நிமிஷத்தில் உண்டானது. நாவில் ஒரு சுழற்சியெழுந்தது. மூளையில் புருவ நடுவிலிருந்து உச்சி மூளையூடே ஒரு தீபம் எரிவது போல் ஒளி பொலிந்தது. ஐந்து நிமிஷம் அதே அனுபவம்; பிறகு சட்டென்று எழுந்தேன். என்னை யாளுடைய சுத்த சக்தி முகத்தைப்பார்த்தேன்; புன்னகை பூத்திருந்தது; அபயக்கரம் 'அஞ்சாதே மகனே' என்பது போலிருந்தது. என்முன் விளங்கியது அப்போது சிலையாகத் தோன்றவில்லை. என் குழந்தையுள்ளத்தில் உருக்கொண்ட சுத்த சக்தி வடிவாகவேயிருந்தது. நான் "அம்மா, அம்மா, அம்மா" என்றேன். பிறகு "அம்மா பரதேவி தயாபரியே" என்றேன்......... அதைத் தொடர்ந்து வந்தது பாட்டு;

> அம்மா பரதேவி தயாபரியே!
> சும்மா உலகின் சுமையாக விரேன்!
> எம்மாத் திரமுன் பணியிங் குளதோ
> அம்மாத் திரம் வைத்தடி சேர்த்தருள்வாய்.

பரதேவீ, நான் உனக்காகவே உன் பணிக்கே வாழ்வேன். எம்மட்டில் உன்

பணியுள்ளதோ அந்த மட்டில் இந்த வினையுலகில் வாழ்வி. காரியம் முடிந்ததுமே என்னை உன் திருவடியில் சேர்த்துக்கொள். ஓம் சுத்த சக்தி என்று வணங்கி, நேராக எனது தியானபீடமான வன்னிமரத்தை நோக்கினேன்.

நான் வெளியே வந்த பிறகுதான் கூட்டமும் வந்தது. அதுவும் வியப்பே, நாலைந்துபேர்கள் மட்டும் என்னைக் குறிப்பாகப் பார்த்தார்கள்; நான் ஒரே நோக்காக வன்னிமரத்தடியில் அமர்ந்தேன்.

**பிரசாதம்**

எத்தனை மணியென்று தெரியாது. கணகணவென்று சந்நிதி மணியடித்தது; வண்டும், சங்கும் அருவியும் சேர்ந்து பாடுவது போன்ற நித்தியகானனந்தம் என்னுள் இசைத்தது. அந்தி தீபாராதனையாகிறது. தேவாரதிருவாசகங்கள் முழங்குகின்றன. ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' என்ற தேவாரநாதம் காது குளிர வருகிறது. உள்ளே ஒரு பிரார்த்தனை, "அப்பனே அம்மையே'' நானும் இந்த மாதிரி அருட்பாடலால் உன்னை ஆராதனை செய்ய அருள்! பிஞ்சுக்கவி ஒன்று எழுந்தது;

பிறந்ததும் உனக்கே. வளர்ந்ததும் உனக்கே
பிதற்றும் கவியும் உனக்கேதான்.
துறந்ததும் உனக்கே, கரைந்ததும் உனக்கே
சுத்த சுதந்தரச் சுடரேஓம்!
நிரந்தரமான பரஞ்சுடரொளியே!
நிலவுயர் ஞான விளக்காகும்
வரந்தரு வாயென் மனதினில் வளரும்
வானமுதே அருளுருவே ஓம்!.....

'எப்படிப்பாடினரோ' என்ற பாட்டு அப்போதுதான் எழுந்தது.

அருளுருவே "ஓம் சுத்த சக்தி'' என்று நான் வாய்விட்டுச் சொன்னபோது "யாரது'' என்று சத்தம் கேட்டது. நான் இருந்த இடம் இருள் மூலை; நான்தான் என்றேன். யார் நீ...... என்று வந்தவர் தேவேந்திரபட்டர். அவரை எனக்குத் தெரியும்; என்னை அவர் அறிவார். "அட நீயாடா....... இந்தா பிரசாதம்'' என்று இனிய சர்க்கரைப் பொங்கல் தந்தார். என்ன வியப்பு! என் அம்மா எனக்கு அன்னமும் அளித்தாள். ஆச்சரியம்! அன்று யாரோ கட்டளை நடத்தி விநியோகம் செய்வித்தார். அதை எல்லோருக்கும் தந்த பிறகு பிரகாரத்திற்கும் கொண்டு வந்த பட்டர், என்னையும் கண்டுதந்தார். அதுவே உண்மை, என்றாலும் பராசக்தியே என் உட்பசி தீர்த்ததாக உணர்ந்தேன். நான் பிரசாதம் உண்ணும்போதே என்னை ஊரெல்லாம் தேடித்திரிந்து, மாமாவும் வந்து சேர்ந்தார். "மாமா அம்மா என்னை ஊட்டுகிறாள் பார்; இந்தா நீயும் சாப்பிடு'' என்று பிரசாதம் தந்தேன்; அவர் வியந்தே போனார். அன்றுமுதல் நான் யாரிடமும் கையேந்தியதில்லை; பசி என்று பறந்ததில்லை. உணவு என்னைத் தேடிவந்தாலே உண்பது; எனது உட்புறப் பசிகளையும் என்னையும் என்வாழ்வையும் சுத்த சக்திக்கே பூரண சரணாகதி யாக்கினேன். பிறகு நடந்ததெல்லாம் திருவருள் இச்சை தவிர எனது முயற்சியே இல்லை. வந்ததும் போனதும் சுத்த சக்தியிச்சை. நான் இருந்தபடியே குழந்தையாயிருக்கிறேன். அன்று முதல் இன்றுவரை என் வாழ்வை நடத்துவது மதுராம்பிகையே.

(ஆத்மசோதனை)

[சுத்தானந்த பாரதி]

சிந்தை செய்கை சொல்வளஞ்
செழிக்க வென்னு ளத்திலே
சந்ததமும் வந்திருந்து
சக்தியைப் பொழிவோய்
சுந்தரேச ரோடிலங்கும்
சுத்தசக்தி யன்னையே
சந்த மிக்க செந்தமிழ்

# மங்கையர்க்கரசியார்

இரகுபதி சாமிநாதன், M. A.

பெண்மையின் பேரருள் இல்லையேல் உலகமே இல்லை. உலகை வாழ்விப்பதும் வளர்ப்பதும் அன்னையின் அருளே. தாய்மையின் நல்லறம் தளர்ந்தால் சமுதாய நிலையும் தளரும். உயிரைக் காத்து, உணர்வை வளர்த்து, உயிரினுக்குயிராய் நின்று இன்பந்தந்து, வையத்தின் போக்கையும் மாற்றிப் புதுமையுறச் செய்து மண்ணவரை விண்ணவராக வாழ வைக்கும் அன்னை, ஆற்றல்கொண்ட பராசக்தியின் அருள் வடிவம். உண்மையொளியும், தூய நல்லுணர்வும் நிரம்பப் பெற்ற பெண்மையின் பேராற்றலை உலகம் என்றென்றும் போற்றும். அறங்காத்த பெண்மணிகளால் நமது தாய்த்திருநாடு 'வான்புகழ் பெற்றது'.

கண்ணகியையும், காரைக்காலம்மையாரையும், திலகவதியாரையும் பெற்றுத் தந்த தமிழ்த்தாய், தென்னவன்தேவி மங்கையர்க்கரசியாரையும் பெற்ருள். மங்கையர்க்கெல்லாம் தனியரசியாகத் திகழ்ந்த இம் மாது நல்லாள் மணிமுடிச் சோழன் மகள். 'மானி' யெனும் திருப்பெயர்தாங்கித் திருமகளை யொத்த பெருமகள். அழகிலும், அறிவிலும், கற்பிலும், கடவுளுணர்விலும் தலைசிறந்து விளங்கிய தனி மகள். தொண்டை நாட்டிலே திலகவதியாரும் பாண்டிய நாட்டிலே மங்கையர்க்கரசியாரும் அருள்வழி காட்டி, நாட்டை நல்லாற்றுப் படுத்தியிராவிடின் சைவ நெறியின் வரலாறே வேறுவிதமாக அமைந்திருக்கும். தமது தளரா முயற்சியாலும், திமிர்ந்த ஞானச் செருக்கினுலும் ஒரு சமுதாய வாழ்விற்கே வழி வகுத்துக் கொடுத்தனர் இவ்விரு பெண்மணிகளும்.

மங்கையர்க்கரசியார் இளமையில் பெற்ற சமயக்கல்வியும், உலகியற்கல்வியும், உரிமையுணர்வும் அவருக்கும், அவர் கணவனுக்கும், நாட்டிற்கும், சமயத்திற்கும் தக்கவழியில் பயன்பட்டது. இயல்பாகவே பெண்ணுக்குரிய அருள்தன்மை தூயநற்கல்வியால் மேன்மையுறும். மங்கையர்க்கரசியார் பெற்ற கல்வி ஒரு சமுதாயத்தையே வாழவைத்தது. அவர் பெற்ற கல்வி அவரைக் கற்புடைச் செல்வியாகவும், உரிமை காக்கும் திறனுடையவளாகவும் வாழச்செய்தது. கணவன்வழி மனைவி நிற்றலே கடமை யெனினும், தமது விருப்பத்திற்கு மாருனதொரு வழியைப் பின்பற்ற அவர் விரும்பவில்லை. அப்படிச் செய்யுமாறு அவர் வற்புறுத்தவும் படவில்லை. கணவனும் நாடும் வேருெரு வழியில் விரைந்து சென்றுகொண்டிருந்தபோதும், தனது கொள்கையை மாற்றிக் கொள்ளும் கோழைத்தனம் அவரிடம் தோன்றவில்லை. கொள்கை மாற்ரு அக்கோமகள் தன்னுரிமையைக் காத்து நின்றதோடன்றி மன்னனையும் மற்றவரையும் தன்வழிக்கே கொணர்ந்தார்.

நாடெங்கும் சமணமும் பௌத்தமும் பெருஞ்செல்வாக்குப் பெற்று வளர்ந்த காலத்திலே, கி. பி. ஏழாம் நூற்ருண்டிலே வாழ்ந்தவர் மங்கையர்க்கரசியார். மாமன்னராலும் மக்களாலும் பேராதரவு

பெற்றிருந்த சமணத்துறவியர் மதுரையைச் சுற்றியுள்ள குன்றுகளில் பெருமளவில் வாழ்ந்து வந்தனர். சைவம் நிலையிழந்து கிடந்ததைக்கண்டு அரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் வருந்தினர். அவ்விருவரது அழைப்பினால், நாளும் தமிழிசையால் சைவம் பரப்பிய ஞானசம்பந்தர் மதுரைக்கு வந்தருளினார். அவரது வரவுகேட்டுச் சமணரும் மன்னரும் கலங்கி நிற்க, அரசியாரும் அமைச்சருமோ இனித் தென்னவனும் நாடும் திருந்தி விடும் என மகிழ்ந்திருந்தனர். சமணர் இழைத்த கொடுமைகளையெல்லாம் சம்பந்தர் ஆலவாய்ச் சொக்கனருளால் வென்று, வெண்ணீற்றின் புகழை நிலைநாட்டினார். மன்னன் கூனுடன், வெப்பு நோயும் நீங்கப்பெற்றுச் சைவனானான். மன்னனைப் பின்பற்றி மக்களும் சைவ நெறியைப் பின்பற்றினர். பாண்டி நாட்டிலே சைவம் மறுமலர்ச்சி பெற்றது.

''மானின்னேர் விழி மாதராய்வழுதிக்கு மாபெருந் தேவி'' என்று காழிச் செல்வனால் முன்னிலைப்படுத்திப் பாடப் பெற்ற பேறு பெற்றவர் இப்பெருமகள் ஒருவரே. செந்துவர் வாயும், சேலனவிழியும், பந்தணை விரலும், திருநுதலும், முத்தாரமும் சந்தணக் குழம்பும் நீறும் அணிந்த திருமார்பும் பெற்றுத் திகழ்ந்த பண்ணின் நேர்மொழிப் பாண்டிமாதேவியார் பணியெய்து பராவியதால்தான் பாண்டிய நாட்டில் சைவம் தழைத்தது என்று ஆளுடைப்பிள்ளையார் பன்முறை பாராட்டியுள்ளார். அரசியாரின் பெருமையை அருகிருந்து உணர்ந்த அவர்,

''செந்துவர் வாயாள் சேலன கண்ணாள்
சிவன் திருநீற்றினை வளர்க்கும்
பந்தணைவிரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிடை நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்
தண்ணெருக் கம்மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல்
ஆலவாயாவதும் இதுவே''

என்று பாராட்டுகிறார்.

''வரிவளையார் மானிக்கும் அடியேன்''

என்று பாடுகிறார் சுந்தரரும்.

''மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளினாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே''

என்று சேக்கிழார் போற்றுகிறார்.

இப் பெருமக்கள் புகழ்ந்து போற்றிய பாண்டிய நாட்டரசி மங்கையர்க்கரசியாய் உயர்ந்தாள். சைவம் காத்த சிவக்கொழுந்தாய்த் திகழ்கிறாள். சைவமும், தமிழும் உள்ளளவும் இவர் புகழ்நிலை நிற்கும்.

# பாண்டியன் வரகுணன்

ஔவை. எஸ். துரைசாமி பிள்ளை

சங்ககாலப் பாண்டிய வேந்தருக்குப்பின் இடைக்காலத்தில் விளங்கிய வேந்தர் வரலாற்றுக் குறிப்பு வேள்விக்குடிச் செப்பேடுகளிலும் சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் காணப்படுகிறது. பாண்டியன் கடுங்கோன் முதலாக வரும் பாண்டியர் குடி நிரலிலுள்ள இரண்டாம் இராசசிம்மன் மகனான வரகுணன் சோழநாடு முழுவதும் வெற்றிகண்டு வீறு பெற்றான். இவ் வரகுணனைக் "கொன்றவர்கள் தொழு கழற்கால் கோவரகுணமகாராசன்" என்று சின்னமனூர்ச் செப்பேடு சிறப்பித்துக் கூறுகிறது.

இவ்வேந்தன் கி. பி. 792 முதல் 835 வரை ஆட்சிபுரிந்தவன். இவன் மதுரையில் இருந்து ஆட்சிபுரிந்துவருகையில், சோழ நாட்டில் அரசுபுரிந்த வேந்தன் பகையானான்; அதனை

"பொன்னோடு முத்தம் கொழிக்கும் துறைப் பொன்னிநாடன்
நின்னோடு அமராற்ற நினைந்தெழும்; நீயும் நேர்வாய்
அன்னோன் உனக்குப் புறகிட்டகன்று ஓடும்; நீயும்
பின்னோடி எட்டிப் பிடிப்பாரின் துரத்தும் எல்லை

(திருவிளை. வரகுண. 15)

எம்மை யாமே வழிபட்டிருக்கும் இடமாகிய திருவிடைமருதூரை அடைவாய்; அப்போது உன்னைப்பற்றிப் படரும் பழி பாவம் நீங்கும்" என்று இறைவன் சொல்லியருள வரகுணன் அறிந்தான்.

இங்ஙனம் மதுரைச் சொக்கநாதன் திருவருள் பெற்ற வரகுணன் பெரும் படையுடன் சோழநாட்டிற்குச் சென்று தன்னை எதிர்த்துப் பொருத பல்லவரையும் சோழரையும் வென்று மிகுபுகழ் எய்தினான். அப்பகுதியில், காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் இடையே இடவை என்ற ஓர் ஊர் சிறந்த நகரமாய் விளங்கிற்று. அங்கே வாழ்ந்த சோழர்குடித் தோன்றல், வரகுணனது மாண்பை வியந்து தன் மகளை அவனுக்கு மணம் செய்வித்தான். வரகுணனும் தன் மனைவியுடன் திருவிடைமருதூரில் தங்கிச் சிவ வழிபாடும் சிவப்பணியும் புரிந்தொழுகினான். அவன் மனைவியும் இடைமருதிறைவன் திருவருளில் தோய்ந்து சிறப்பெய்தினாள். அதனை மணிவாசகப்பெருமான் பெரிதும் வியந்து, "நலந்திகழும் கோல மணியணிமாடம் நீடுகுலாவும் இடவை மடநல்லாட்குச் சீலமிகக் கருணையளிக்கும் திறம் அறிவார் எம்பிரான் ஆவாரே" என்று புகழ்ந்துரைக்கின்றார்.

வரகுணன் என்ற பெயரைக்கூறும் போதே, பரஞ்சோதியார் தன்னை மறந்து, அவனுடைய திருவருட்பற்றையும் திருப்பணிச் சிறப்பையும் நினைந்து சிந்தையுருகுகிறார். வரகுணனுடைய பேராற்றலை "மன்னர் ஏறு, அடையார்க்கு ஒரு மடங்கலேறு; அடல் வேல் தென்னர் ஏறு எனத் தோன்றிய வரகுணதேவன்" (திருவிளை: வரகுண. 63) என்று சிறப்பிப்பவர், திருவிடைமருதூர் மேலைக் கோபுரத்தை அவன் பெயராற் சமைத்த திறத்தை, "மேலை வாயிலாற் போவான் அன்னதிரு

மணிக்கோபுரந் தன் பெயரினுற் செய்து சின்னுள்'' (திருவிளை. வரகுண. 24) தங்கிச் சிவவழிபாடும் திருப்பணியும் செய் தான் என்று செப்புகின்ருர்.

திருக்கோயில் திருப்பணி யென்ருலே தென்னுட்டில் வரகுணதேவன் பெயரே முன்னணியில் நிற்கும். பழங்காலச் சோழருள் கோச்செங்கணுன், ''இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது'' செய்தான் எனத் திருமங்கையாழ்வார் கூறுவர். நாங்குனேரி வட்டத்து இராதாபுரத்திலுள்ள கல்வெட்டுக்கள், அவ்வூர்ச் சிவன் கோயிலே வரகுணீச்சுரம் என்றும் அவ்வூர்க்கு வரகுணபாண்டியபுரம் என்றும் பெயரிருந்தமையைக் குறிக்கின்றன.

(A. R. 350 to 1930)

இவ் வரகுணன், திருவிடைமருதூரில் இருந்தபோது, அங்கே அவன் செய்த திருப்பணிநலத்தை அவன் காலத்துக்குச் சிறிது பின்னே பட்டினத்தடிகள் பெரிதும் பாராட்டிப் பாடியுள்ளார். வரகுணனைப் ''பெரிய அன்பின் வரகுணதேவர்'' என்று பரிந்து பேசுகின்ருர்.

இவ் வேந்தர் பெருந்தகைக்கு இறைவன்பால் இருந்த அன்புக்கு ஓர் எல்லையில்லை. இடைமருதூரிலே இருக்கையில் கள்வன் ஒருவனைக் கைப்பிடியாகக் கொணர்ந்து காவலர் நிறுத்தினர்; அவன் மெய்யில் திருநீறு இருந்தது கண்டு வேந்தன் அவன் கையிற் கட்டவிழ்த்து விடுதலை செய்யுமாறு பணித்தான்; இரவில் சில நரிகள் ஊளையிடக்கேட்டு, அவ்வோசை, சிவ சிவ என்னும் ஓசைபோல்வது என எண்ணி, அவற்றிற்கு ஆடைகள் பல அள்ளி வீசினுன்; நீராடச் சென்றபோது, அந்நீர்நிலையில் தவளைகள் கத்தியது, அரகர என்ற முழக்கம் போல்வது என நினைந்து காசும் பொன்னும் கலந்து அப்பொய்கையில் தூவினுன். இதனை,

'' வெள்ளைநீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப்பித்தும்;
ஓடும்பல் நரியூளைக் கேட்டுஅரனைப்
பாடின என்று படாம்பல அளித்தும்;
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவியும் ''

மகிழ்ந்தான் என்று பட்டினத்தார் பாடுகின்ருர்.

ஒருகால் வரகுணன் மருதூர் வட்டத்தில் உலாவி வருகையில், தனித்துக் கிடந்த ஒருவன் தலையோட்டைக் கண்டான். அதுபோலத் தன் தலையும் இவ் விடைமருதூர் எல்லையில் கிடக்கும் சிவநலம் பெறல் வேண்டும் என்று அத்தலையையும் சிவன் திருவருளையும் வேண்டினன். திருக்கோயில் முற்றத்து நாய்கள் கூடியிருப்பது கண்டு, நாய்கட்கென நாய்க்கட்டம் என்ற ஒரு கட்டிடத்தை வரகுணன் கட்டினன். அங்கே உதிர்ந்து கிடந்த வேப்பம் பழங்கள் சிவலிங்கம் போல்வது கண்டு, அவற்றை உதிர்த்த வேம்புகட்கு விதானம் அமைத்தான். தன் உள்ளம் எதை விரும்புகிறதோ அதுவே ஈசற்கும் விருப்பாம் என்ற எண்ணத்தால் தான் மனத்தால் விரும்பி மணந்த இடவை நங்கையை மருதூர் இறைவற்கே கொடுத்து இன்புற்ருன். இச்செயல்களைப் பட்டினத்தடிகள், திருவிடைமருதூர்க்கண் தாம் இருந்து பாடிய மும்மணிக் கோவையில்,

'' மருதவட்டத்து ஒருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி

உம்மைப் போல எம் இத்தலையும்
கிடக்கவேண்டும் என்று அடுத்தடுத்து
இரந்தும்;
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்த தென்றுநாய்க் கட்டம் எடுத்தும்;
காம்பு அவிழ்ந்து உதிர்ந்த கனியுருக்கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்;
விரும்பின கொடுக்கை பரம்பரற்கு என்று
புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வரகுண தேவர்''
(மும்மணி 28)

என்று பாடுகின்றார். ஒட்டுப்பற்றின்றி உலகைத்துறந்த செல்வப் பட்டினத்தடிகளே நம் வரகுணனைப் பாடுகின்றார் எனின் வேறு கூறுவது மிகை.

இவ்வேந்தன் முடிவில் மதுரைச் சொக்கநாதனை வேண்டி, சிவலோகத்தின் சிறப்பை இந்த இப்பிறப்பிலேயே காண வேண்டும் என விழைந்தான். வேண்டுவார் வேண்டுவதை வேண்டியாங்கு நல்கும் விமலனுதலால் அவன் விருப்பத்தை நிறைவேற்றுகின்றார். நந்தியெம்பெருமான் வரகுணனுக்குச் சிவலோகத்தின் சிறப்பெல்லாம் காட்டிச் சிவபெருமான் உமையம்மையுடன் வீற்றிருக்கும் திருவோலக்கத்தை வரகுணனுக்குக் காட்டினார். அது கண்டு பரவிய வேந்தன் கண்களைத் திறந்ததும், சிவலோகம் மதுரையாகவும், வீற்றிருந்த பெருமானும் பெருமாட்டியும் சொக்கநாதனும் மீனாட்சியுமாகக் காட்சி தந்தனர். இதனைப் பரஞ்சோதியார்,

'' தன்புலன்களும் கரணமும் தன்னவேயாக்கி
அன்புடம்பு கொண்டு அவனெதிர் அருட் சிவலோகம்
பின்பு பண்டுபோல் மதுரையாம் பிராட்டியும் தானும்
முன்பு இருந்தவாறு இருந்தனன் சுந்தரமூர்த்தி''

என்று உரைத்து, அன்று தொட்டு மதுரையும்

'' பூவுலகின் சிவலோகம்
என்ன இசைபடப் பொலிந்து ''

விளங்குகின்றது எனப்புகழ்ந்து இன்பத்தால் விம்மிதம் எய்துகின்றார்.

# தலை அடியார் – வாதவூரர்

கருமுத்து திரு. தி. மாணிக்கவாசகம், பி. ஏ.

**தெய்வத் திருப்பணி :**

மதுரை மீனுட்சி-சுந்தரர் திருக்கோவில் திருப்பணி மிகவும் நல்லமுறையில் மேற்கொள்ளப்பெற்று முடிந்துள்ளது. இத்திருப்பணி தெய்வத்திருப்பணி. இப்பெருங்கோவிலின் கோபுரங்களும், உட்புற வெளிப்புறப் பகுதிகளும் செப்பம் செய்யப்பெற்றுச் சீரும் சிறப்பும் எய்தி மிளிர்கின்றன. இப்பெரும் பணியில் ஈடுபட்ட கலைச்சிறப்புத் தொழிலாளர் பலரும் போற்றத்தக்கவகையில் தத்தம் பணிகளைச் செய்துள்ளனர். வானளாவிய கோபுரங்களில் அடிமுதல் முடிவரை அமைந்துள்ள பல்லாயிரக்கணக்கான சிற்பங்களையும், சித்திரங்களையும் உருவாக்கிய சிற்பிகளும், தொழில் வல்லுநர்களும் வறிதே பொருளுக்காகவும், ஊதியத்திற்காகவும் உழைத்தார்கள் என்று கருதுவது இயலாது. தெய்வத் திருப்பணி என்ற இடையருத எண்ணமும், கடவுள் பற்றுமே அவர்களை இத்தகைய அரிய வேலைப்பாடுகளைச் செய்யத் தூண்டின எனக் கொள்ளவேண்டும்.

"ஆவுடையார் கோவில் திருப்பணி அடங்கலுக்குப் புறத்தி" என்றொரு வாசகம் வழங்கிவருகிறது. இவ்வாசகத்தில் 'அடங்கல்' என்பதற்கு 'ஒப்பந்தம்' என்பது பொருள். அதாவது தொழிலாளர் 'இந்த வேலைக்கு இவ்வளவு பொருள் வேண்டும், இத்தனை நாட்களில் முடித்துத் தருகிறோம்' என்று முன்கூட்டியே ஒப்பந்தம் செய்துகொள்வது என்பது இதன் பொருளாகும். 'புறத்தி' என்பது புறம்பானது என்னும் பொருள்தருவது. ஆகவே கோவில் திருப்பணிகள் எல்லாம் ஒப்பந்தக் கூலிக்கோ, ஊதியத்துக்கோ செய்து முடிக்கப்படுவதன்று. உண்மையான இறைப்பற்றும், கலை ஆர்வமும் கொண்டு முடிக்கப்படும் செயலே இத் திருப்பணியாகும்.

**வாதவூர் :**

மங்கலப் பாண்டி வளநாட்டின் தலைநகராகிய மதுரையம்பதியில் எழுந்தருளியிருக்கும் மீனுட்சி – சுந்தரர் திருக்கோவிலுக்குத் திருப்பணி நிறைவேறிக் குடமுழுக்கு நடைபெறும் இந் நன்னுளில், இப்பழம்பதியோடு அரசியல் தொடர்பும், சமயத் தொடர்பும் ஒருங்கே கொண்டு சிறந்து இறுதியில் சிவானுபூதி எய்திய தலை அடியார் தலைவராம் வாதவூரரைப் பற்றி நினைவுகொள்வது சாலப்பொருத்தம் உடையதாகும். வாதவூரர் என்பது திருவாதவூரில் பிறந்தவர் என்னும் பொருளுடையது. வாதவூரர் என்பது மாணிக்கவாசகர்க்குப் பிள்ளைத் திருப்பெயர். மாணிக்கவாசகர் மணிவாசகர் எனவும் வழங்கப்பெறுவர். இவர் இளமையில் அரசியற் கலைநூலும் சமயசாத்திரங்களும் நன்கு கற்று அறிவிற் சிறந்து விளங்கினுர். இவரது திறமையைக் கேள்விப்பட்ட அன்றைய மதுரை மன்னன் அரிமர்த்தன பாண்டியன் இவரைத் தன் முதலமைச்சராக அமர்த்தி மகிழ்ந்தான். இவருக்குத் 'தென்னவன் பிரமராயர்'என்ற சிறப்புப் பட்டமும் அளித்து, பெருமைப்

படுத்தினுர். இவர் அந்தணர் குலத்தினர். சிறந்த சைவர்.

ஒருநாள் பாண்டியன் இவரை அழைத்து வேண்டும் பொருளைக் கொடுத்துச் சோழநாட்டிற்குச் சென்று குதிரைகள் வாங்கிவரும்படி ஏவினுன். அவ்வாறே சென்ற வாதவூரர் திருப்பெருந்துறை என்னும் சைவத் திருப்பதியை அடைந்தார். அங்கே குருந்த மரத்தடியில் ஞானுசிரியர் வடிவில் சிவ பெருமான் எழுந்தருளி மாணவர் பலர்க்கு அருளற ஞானம் வழங்கிக்கொண்டிருந்த காட்சியைக் கண்டு, ஈடுபட்டுப் பரவசமாகி வந்த வேலையையும் மறந்து நின்ருர். இறைஅன்பு மீதூரப்பெற்ற வாதவூரர் அழகாகப் பாடிநின்ருர். இவரது பாடலைச் செவிமடுத்த ஞானுசிரியர் இவருக்கு 'மாணிக்கவாசகர்' என்ற சிறப்புப் பெயரை வழங்கி மறைந்தருளினுர். கொண்டுசென்ற பொருளையும் ஆண்டுள்ள கோவிலுக்கே திருப்பணி செய்து தல யாத்திரை புறப்படலானுர். நாட்கள் பல ஆகியும் திரும்பி வராத திருவாதவூரருக்கு மன்னன் ஓலை எழுதினுன். அதற்கு வாதவூரர் 'ஆவணி மூலநாளிலே குதிரைகள் வரும்' என்று மறுகடிதம் எழுதினுர். குறித்த நாளில் வாராமையால் மன்னன் இவரைச்சிறைப்படுத்தினுன். மணிவாசகர் மணிமிடற்றனை நினைத்தபோது, இறைவனே குதிரையாளாக வந்து குதிரைகளை மன்னன்பால் கயிறு மாற்றிக் கொடுத்தான். ஆனுல் அன்றிரவே குதிரைகள் எல்லாம் நரிகளாக மாறின. மணிவாசகர் மீண்டும் துன்புறுத்தப்பெற்ருர். இதனை அறிந்த சிவபெருமான் வையையில் வெள்ளப்பெருக்கை ஏவி அச்சுறுத்தினுர். ஆற்றிற்கு அணைபோட வீட்டிற்கொரு ஆள் வரவேண்டுமென்பது அரசன்ஆணை. ஆனுல் வந்தி என்னும் முதியவள் ஒருத்தி வேலை ஆள் கிடைக்காமல் வருந்த, சிவபெருமானே கூலியாளாய் வந்து மண் சுமந்து அருளினுர். இங்ஙனம் பரியை நரியாக்கியதும், மண் சுமந்தருளியதும் மாணிக்க வாசகரின் பெருமையை அரசனுக்கு அறிவுறுத்தவே சிவபெருமான் மேற்கொண்ட திருவிளையாடல்கள் ஆகும்.

இறுதியில் மன்னன் மணிவாசகரின் மாண்பினை உள்ளவாறு அறிந்தான். மணிவாசகரும் அரசியல் விடுதலை பெற்றுத் தலங்களுக்குச் சென்று திருப்பதிகங்கள் பாடித் தில்லை சென்று புத்தரை வாதில் வென்று இறுதியில் கூத்தப்பெருமான் திருவடியில் மறைந்தனர். இதுவே இவரது வரலாற்றுச் சுருக்கம். சைவ சமய குரவர் நால்வருள் இவர் காலத்தால் பிற்பட்டவர். இவரது காலம் கி. பி. 9-ம் நூற்ருண்டு என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. இவர் அருளிய நூல்கள் இரண்டு. ஒன்று திருவாசகம், மற்ருென்று திருக்கோவையார். இவ்விரண்டும் தித்திக்கும் தீந்தமிழில் இயன்ற பத்திப் பரவச நூல்களாகும்.

**திருவாசகம் :**

மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகம் ஓதி உணருங்கால் உலப்பிலா ஆனந்தத் தேனைச் சொரியவல்லது. 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்பது பழமொழி. இவ்வருள்நூல் அவரது பண்டைய உலகியல் வாழ்வையும், இம்மை வாழ்வையும் விரிவாகக் கூறுகிறது. பழம்பிறப்பினைச் சிவபுராணத்தில் விளக்குகிருர்.

'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்

கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்
களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'

இவ்வாறு பழைய பிறவிகளைப்பற்றி எண்ணி எண்ணி அலமருகின்றார். இம்மை வாழ்வில் கருக்கொண்டது முதல் தொடங்கிக் கூறுகின்றார். காளைப் பருவத்தில் மகளிர் கூட்டத்தில் மயங்கிக் கிடந்த நிலையைக்குறித்தருளுகிறார்.

'காருறு கன்னியர் ஐம்புலன் ஆற்றங்
கரைமரமாய்
வேருறு வேளைவிடுதிகண் டாய்விளங்
குந்திருவார்
ஊருறை வாய்மன்னும் உத்தரகோச
மங்கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை
வளர்ப்பவனே.'

பின்னர் இறுதியில் இறைவன் ஞான குருவாய்த் தோன்றித் தன்னை ஆட்கொண்ட திறத்தையும் வியந்து பாடுகின்றார்.

'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை
கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்
ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற
வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய்
கோத்தும்பீ.'

வாதவூரர் அருளிய திருவாசகத் தேனில் பலகாலும் மூழ்கித் திளைத்த இராமலிங்கஅடிகள் இவரைப் போற்றிப் புகழ்வது மனங்கொள்ளத் தக்கது.

'வான் கலந்த மாணிக்க வாசகநின்
வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ்
சாற்றினிலே
தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித்
தீஞ்சுவைகலந்து என்
ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல்
இனிப்பதுவே.'

**திருக்கோவையார் :**

தமிழில் வழங்கும் கோவை நூல்களுள் தலைசிறந்ததாகப் போற்றப்படுவது திருக்கோவையார். இதில் தில்லையில் எழுந்தருளியுள்ள கூத்தப்பெருமானைத் தலைவனாகவும், தன்னைத் தலைவியாகவும் வைத்துப் பாடப் பெற்ற பாடல்கள் நானூறு இடம்பெற்றுள்ளன. இலக்கியச் சுவையும் பக்தி நலனும் ஒருங்கே அமைந்த இந்நூல் கற்போர் உள்ளத்தைக் கனிவிக்கும் தன்மையது. மணிவாசகர், தான் கூறக்கருதும் கருத்துக்களை மக்கள் வாழ்க்கையில் பயிலும் வழக்குகளோடும், மரபுகளோடும் பொருத்திக் கூறுவது மகிழ்ச்சிக்குரியதாகும். இவரது தேனூறும் நானூறு பாடல்களுள் ஒன்றினைச் சான்று காட்டி இந்நூலின் இன்பத்தைப் புலப்படுத்தினால் சாலும். ஒரு தலைவனும், தலைவியும் உடன்போக்குச் சென்றுவிட்டார்கள். செவிலித்தாய் பின்தொடர்ந்து போகிறாள். வழியில் எதிரில் இருவர் ஆணும், பெண்ணுமாக வரக்காண்கிறாள். அவர்களை வினவுகிறாள். 'என்னால் தேடப்படுகின்றார் மீண்டார்கள் எனக்கருதி மகிழ்ந்தேன்; அதுகிடக்க, இவ்வாறு நும் மோடொத்த ஒழுக்கத்தினராய் முன்னே இருவர் போகக் கண்டீரோ' என்று வினவுகிறாள். அப்பாடல் வருமாறு:

'மீண்டார் எனஉவந்தேன் கண்டு நும்மை
இம்மேதகவே
பூண்டார் இருவர் முன்போயினரே புலியூர்
எனை நின்று
ஆண்டான் அருவரை யாளியன்னாய்—
கண்டேன் அயலே
தூண்டா விளக்கனையாய் என்னையோ
அன்னை சொல்லியதே'

இவ்வாறு இனிக்கும் தன்மையுடைய இவ்விரு பெரும் அருள் நூல்களும் நாளும் ஓதி உணர்ந்து உயர்வுபெறும் தன்மையனவாகும். வாழ்க மணிவாசகர் திருநாமம். வளர்க சைவம். ○

# ஸ்ரீ மீனுட்சி அம்மனைப் பாடிய இரண்டு அருட்புலவர்கள்

ஸ்ரீ ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்

## I. மதுரையும் நாயக்க மன்னனும்

பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டில் பாண்டிய மன்னர்கள் மதுரையைத் தங்கள் தலைநகராகக்கொண்டு, பல நூற்றுண்டுகளாக, கீர்த்தியுடனும் வீரத்துடனும் அரசாண்டார்கள். அக்காலமுதலே மீனுட்சி சுந்தரேஸ்வரர் ஆலயமும், பல புலவர்கள் வீற்றிருந்த தமிழ்ச் சங்கமும், பாடல்பெற்ற வைகைநதியும் மதுரையின் தனிச் சிறப்புகளாகக் விளங்கிவந்தன. அத்துடன் சொக்கேசனின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களுக்கு நிலைக்களனுகவும் மதுரை திகழ்ந்தது.

இவ்வாறு தமிழ்நாட்டின் சரித்திரத்தில் பெயர்பெற்றிருந்த மதுரையின் புகழ், பாண்டிய மன்னர்களின் ஆட்சி சீர்குலைந்த பிறகு மங்கத்தொடங்கியது. கி. பி. 14ம் நூற்றுண்டில் நிகழ்ந்த முஸ்லிம் படையெடுப்பால் மதுரைக்குப் பல தீங்குகள் ஏற்பட்டன. முஸ்லிம் ஆட்சி அரைநூற்றுண்டு காலத்திற்கும் குறைவாகவே நிலைத்திருந்தபோதிலும், அதன் விளைவுகளை மக்களால் தாங்கமுடியவில்லை. மீனுட்சி சுந்தரேஸ்வரர் கோவில் மூடப்பட்டது; இதன் கோபுரங்களும் மற்ற பல பகுதிகளும் அழிக்கப்பெற்றன. பின்னர் விஜயநகரத் தளபதி கம்பண்ண உடையார் மதுரையின் மீது படையெடுத்து முஸ்லிம் ஆட்சியை முடித்தபின்புதான் ஆலயம் திறக்கப்பட்டுப் பூசைகளும் நடைபெறத் தொடங்கின. ஆலயமும், நகரமும் அவ்வப்போது ஆட்சி செய்தவர்களால் ஓரளவு பரிபாலிக்கப்பட்டபோதிலும், கி. பி. 17ம் நூற்றுண்டில் நாயக்க அரச வம்சத்தைச் சேர்ந்த **திருமலை நாயக்கரின்** ஆட்சி காலத்தில்தான், மதுரையும் அதற்கு நடுநாயகமாக விளங்கும் மீனுட்சி சுந்தரேஸ்வரர் ஆலயமும், அவற்றின் பழம்புகழுடன் உயிர்த்தெழுந்தன.

திருமலைநாயக்கர் தமதுதீராத நோய் தீர்ந்ததின் விளைவாக, திருச்சியை விட்டு மதுரையையே தமது தலைநகராக்கி, மீனுட்சி சுந்தரேஸ்வரர்களைத் தமது குல தெய்வங்களாகக்கொண்டு லட்சக்கணக்கான பொருள் செலவுசெய்து ஆலயத்திற்குத் திருப்பணிகள் செய்தார். அத்துடன் ஆலய வழிபாடுகளும் உற்சவங்களும் முறையாகவும் ஒழுங்காகவும் நடைபெறவும் ஏற்பாடுகள் செய்தார். ஆலயத்திற்கு முன்புறம் அற்புதமான சிற்பங்களைத் தாங்கும் தூண்களைக் கொண்ட வசந்தமண்டபத்தை (புதுமண்டபமென்ற பெயருமுண்டு) கட்டினுர். ஆலயத் தெப்போற்சவத்திற்காக, பெரிய தெப்பக்குளம் ஒன்றை வெட்டி, நான்குபக்கங்களிலும் வரிசை வரிசையாகப் படித்துறைகளையும் மத்தியில் அழகான மண்டபத்தையும் நிர்மாணித்தார். ஏராளமான ஆபரணங்களைத் தங்கத்திலும், நவரத்னங்களிலும் செய்து தமது தெய்வங்களுக்கு அணிவித்தார். தினமும் ஆலயத்துக்குச்சென்று வழிபடும் போது ஆயிரம் பொன்னும், சுவாமியும் அம்பாளும் வெளியில் எழுந்தருளி மாசி

வீதிக்கு வரும்போதெல்லாம் ஆயிரம் பொன்னும் காணிக்கை செலுத்தி வந்தார். உற்சவங்களை நடத்தவும் ஆலயத்தின் நிர்வாகத்திற்கும் பல கிராமங்களைக் கொடுத்தார்.

திருமலைநாயக்கர் மிகுந்த சமயப்பற்றும் கலைப்பற்றும் உடையவர். அலங்காரமான கட்டிடங்களையும் ஆடம்பரமான மாளிகைகளையும் எழுப்பிய இந்த மன்னர் சிறந்த புலவர்களையும், அறிவு மேதைகளையும், ஞானிகளையும் அடிதொழுது ஆதரித்தார். கொஞ்சகாலம் இருபெரும் புலவர்களும் ஞானிகளும் உறுதுணையாயிருந்து, அவரது, அறப்பணிகளுக்கு ஊக்கம் கொடுத்தது நாயக்கரின் பெரிய பாக்கியம் என்றே சொல்லவேண்டும். குழந்தைப்பருவத்திலேயே செந்தில் முருகனின் அருள்பெற்று, தமிழ்ப்புலவரானவரும், தமிழ்நாட்டில் நிலவிய சைவ சமயம், சைவசித்தாந்த தர்சனம், ஆகியவைகளின் ஒளியை வடநாட்டில் பரப்புவதற்கு விளக்காக, காசியில் ஒரு பெரிய மடத்தை நிறுவியவருமான ஆதிகுமரகுருபரசுவாமிகளும், தமிழ்நாட்டில் தோன்றிய வடமொழிக் கவிஞர்களில் முதன்மையாகவிளங்கும் நீலகண்ட தீட்சிதரும் தான் இருபெரும் புலவர்கள். இவ்விருவரும் மதுரையில் வாழ்ந்து, மீனாட்சியம்மையைத் துதித்துப் பாடல்கள் இயற்றி அத்தேவியின் அருளைப்பெற்று, திருமலை மன்னனின் ஆட்சிக்கும் சமயப்பணிக்கும், கலைப்பணிக்கும் உதவிசெய்து, அவனுடைய மரியாதையையும் ஆதரவையும் அளவற்றுப் பெற்றிருந்தார்கள்.

## II. குமரகுருபரசுவாமிகள்

ஆதிகுமரகுருபரசுவாமிகளின் முழுப் பெருமையையும் இன்று தமிழ்மக்கள் நன்கு அறிந்திருப்பதாகச் சொல்ல முடியாது. அவர்கள் நெல்லை ஜில்லாவில் தாம்பிரபரணிக் கரையிலுள்ள ஸ்ரீவைகுண்டம் என்ற ஊரில், சைவப் பற்று மிகுந்த குடும்பத்தில் ஊமைக் குழந்தையாகப் பிறந்தார். பெற்றோர்கள் மனம்நொந்து குழந்தையின் ஐந்தாவது வயதில் அதைத் திருச்செந்தூர் முருகன் சன்னதிக்குக் கொண்டுபோய் மனமுருகிப் பிரார்த்தனை செய்ததின் பயனாக, குழந்தைக்குப் பேச்சும் கவித்திறனும் அருளாகக் கிட்டின. கந்தர்கலிவெண்பா என்ற பாடல் அவர் உள்ளத்திலிருந்து அருள் வாக்காகப் பொங்கி எழுந்தது. இந்த ஞானப்பாடல், திருமுருகாற்றுப்படை, அருணகிரிநாதரின் கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி ஆகிய முருகன் தோத்திரப்பாடல்களுக்குரிய பெருமையை அடைந்தது. குழந்தைக்கவி குமரகுருபரர் என்ற பெயரும் பெற்றார். பெற்றோர் அடைந்த மகிழ்ச்சியைக் கூறவும் வேண்டுமோ.

குமரகுருபரர், தமது படிப்பு முடிந்த பிறகு, உலகப்பற்றைத் துறந்து, சிவபெருமான்மீது தேட்டம் கொண்டு ஆத்மஞான வாழ்க்கையில் ஈடுபட்டுத் தல யாத்திரைசெய்யப் புறப்பட்டார். சிறந்த தமிழ்ப் புலவராயிருந்ததால் ஆங்காங்கே பல நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் மதுரையில் இருக்கும்போது 'மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ்' என்ற பிரபந்தத்தை ஆக்கினார். மீனாட்சியம்மன், நாயக்கமன்னன் கனவில் தோன்றி, தம் மீது பாடப்பெற்ற இந்தப் பாடலைத் தக்க முறையில் அரங்கேற்றுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யக் கட்டளையிட்டார். ஆச்சரியத்துடன் எழுந்த மன்னன், தன் மந்திரிமுதலியோர்களிடம் இந்தக்

கனவைப்பற்றிச் சொல்லவே, அவர்கள் விசாரித்து சுவாமிகள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்தார்கள். நாயக்கரே சென்று அம்மனின் கட்டளையையும், தமது பாக்கியத்தையும் மகிழ்ச்சியுடன் தெரிவிக்க, அடிகள், அம்மனின் அருளை வியந்து ஆனந்தமடைந்து அரங்கேற்றலுக்கு இசைந்தார். மீனாட்சியம்மன் சந்நிதியில் குமரகுருபரரின் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றல் அரசன்முன்னிலையில் சில தினங்கள் நடைபெற்றது. சுவாமிகளின் தம்பி குமாரகவி, ஒவ்வொரு செய்யுளையும் படிக்க, அவர் அதற்கு விளக்கம் கொடுத்து வந்தார். முத்தப் பருவத்தின் இந்த முதல் பாட்டில் சுவாமிகள், தம்மை மறந்து பெரிதும் ஈடுபட்டு அதற்கு விரிவுரையை ஆர்வத்துடன் கூறிக்கொண்டிருந்தார்.

"காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே! உயிர்ஆல
வாலத்து உணர்வு நீர்பாய்ச்சி,
வளர்ப்பார்க்கு, ஒளிபூத்து அருள்பழுத்த
மலர்க்கற் பகமே எழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்
சோலைக்கிளியே, உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணை ஆகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே! முத்தம் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தம் தருகவே."

இந்த சமயம் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. நாயக்கர் மடிமீது ஒரு சிறு பெண் குழந்தை வடிவத்தில் மீனாட்சியம்மனே வந்து உட்கார்ந்து கேட்டு உகந்து, ஒரு முத்துமாலையை சுவாமிகள் கழுத்தில் போட்டு மறைந்தார். தம் மடியில் உட்கார்ந்திருந்த குழந்தை அர்ச்சகரின் பெண் என்று நினைத்திருந்த திருமலைநாயக்கர், பின்னர் உண்மைதெரிந்து பரமானந்தம் அடைந்தார். குமரகுருபரசுவாமிகளுக்கு, ஏராளமான பொன், பல்லக்கு முதலிய வரிசைகளைக்கொடுத்து மரியாதைசெய்து அப் பெரியாரை மதுரையிலேயே இருக்கும்படி மன்னன் வேண்டினன். சுவாமிகளும் அதற்கிசைந்து மதுரையில் தங்கி நாயக்கருக்கு வேண்டிய உதவியும் உபதேசமும் செய்துவந்தார். அப்போது மதுரைக்கலம்பகம் நீதிநெறி விளக்கம் ஆகிய நூல்களையும் எழுதினர். கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் தோன்றின தமிழ்க் கவிஞர்களில் குமரகுருபர சுவாமிகளே முதன்மையானவர். அழகான கற்பனை, ஆழ்ந்த கருத்து, எளிமையும் இனிமையும் கலந்த வாக்கு, ஓசைப்பண்பு, செய்யுட்களின் சரளமான நடை ஆகியவைகளைக் கவனித்தால், மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழையும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழையும் எழுதியிருக்கும் சுவாமிகளே, இவ்வித பிரபந்தங்களை ஆக்கியிருக்கும் தமிழ்ப் புலவர்களில் சிறந்தவர் என்று கூறலாம்.

காலக்கிரமத்தில் சுவாமிகள் திருமலை மன்னனிடம் விடைபெற்று அவன் அளித்த பெருஞ் செல்வத்துடனும், தமது பரிவாரத்துடனும் பல தலங்களைத் தரிசித்து, தர்மபுரம்மடத்துத் தலைவர் மாசிலாமணி தேசிகரை ஞானசிரியனுகக் கொண்டு, சைவ மரபின்படி துறவு பூண்டதும், சிதம்பரத்தில் கொஞ்சகாலம் தங்கித் தமிழ்ப் பிரபந்தங்கள் இயற்றியதும், பின்னர் வடநாடு சென்று காசியில் பல வருடங்கள் வசித்ததும் சரித்திரப் பிரசித்தம். காசியில் சுாவமிகள் வாழ்ந்ததைப்பற்றியும் அவர் செய்த அருட்செயல்களைப் பற்றியும் போதிய விபரங்கள் சரித்திர பூர்வமாகக் கிடைக்காவிட்டாலும் ஒரளவு தெரிந்து கொள்வதற்கு ஆதாரங்கள் இல்லாமலில்லை.

## குமாரசுவாமிமடம் ஸ்தாபனம்

குமரகுருபர சுவாமிகள், எல்லாரும் போல, கங்கையில் நீராடி விசுவேசுவரரைத் தரிசனம் செய்து புண்ணியம் சம்பாதித்துத் திரும்புவதற்கு வாராணசிக்குச் செல்லவில்லை. அவ்வித நோக்கத்துடன் ஸ்தல யாத்திரையும் தீர்த்தாடனமும் செய்து வந்தபிறகே துறவு பூணவேண்டுமென்று மாசிலாமணி தேசிகர் கட்டளையிட்டபோது குமரகுருபரர், அதை நிறைவேற்றமுடியாமல், சிதம்பர வாசம் கொஞ்சகாலம் செய்துவிட்டு சந்நியாசத்தை, குருமுகமாகப் பெற்றுக்கொண்டார். முதலில் காசிக்குச்செல்லத் தயங்கியவர், பின்னர் போனதுமன்றி, அங்கேயே தங்கிவிட்டார். தமது வாழ்க்கைப்பணியைத் தெளிவுடனும் திடநெஞ்சுடனும், விரிந்த மனப்பான்மையுடனும், அமைத்துக்கொண்டு, அதற்கு முன்னுல் வேறு எந்தச் சிவனடியாரும் செய்யக்கருதாத முறையில், திறமையுடனும் ஆர்வத்துடனும் சமயத்தொண்டாற்றினுர். வடநாட்டில் பலகாலங்களில் சைவம் செழித்தோங்கித்தான் இருந்தது. அக்காலத்தில் வைணவ பக்தி இயக்கங்களும், ராமன், கிருஷ்ணன் வழிபாடுகளும் வெகுவாகப் பரவியிருந்த போதிலும், சைவத்தைப் பின்பற்றியவர்களும் ஆங்காங்கே இருந்தார்கள். கைலையங்கிரியையே தமது நிரந்தர இருப்பிடமாகக் கொண்ட சிவபெருமான், புண்ணியபூமியாகிய நமது பாரத நாட்டில் எழுந்தருளியிருக்கும் எண்ணிறந்த ஸ்தலங்களில் புனிதமான கங்கைக்கரையில் அப்பெருமான் விசுவேஸ்வரராகக் காட்சியளிக்கும் காசியே மிகப் பவித்திரமான க்ஷேத்ரம் என்பது சைவர்கள் எல்லோருக்கும் — ஏன். இந்துசமயிகள் யாவருக்கும் — பொதுவாக உடன்பாடுதான். ஆகையால் குமரகுருபரசுவாமிகள் காசியிலேயே தங்கவேண்டுமென்று தீர்மானித்ததில் வியப்பு ஒன்றுமில்லை. வேருெரு கருத்தும் அவர் உள்ளத்தில் வேரூன்றியிருந்தது. தமிழ்நாட்டில் சில தனிச்சிறப்புகளுடனும் பண்புகளுடனும் வளர்ந்திருந்த சைவ சமயத்திற்கும் தத்துவ ஞானத்துறையில் நுண்ணிய கருத்துக்களுடன் விளங்கிவரும் சைவ சித்தாந்த தர்சனத்திற்கும், வடநாட்டில் ஒரு நிலைக்களன் அவசியமென்றும் அங்கிருந்து வடநாட்டுமக்களிடம் தமிழ்நாட்டு சமய, ஞான, இலக்கிய, கலைச்சிறப்புக்களையும் நுட்பமான கருத்துக்களையும் பரப்ப வேண்டுமென்றும், சுவாமிகள் தீர்மானித்தார். செயலாற்றலிலும் ஈடுபட்டார்.

இந்த நோக்கத்தை நிறைவேற்ற வடநாட்டு மொழியை, குமரகுருபரரும் அவருடன் சென்றவர்களும் கற்கவேண்டியது அவசியமாயிற்று. எளிதில் கற்றுக்கொண்டார்கள் என்று நாம் ஊகிக்கலாம். முகலாய மன்னனின் அழைப்பை ஏற்று அவனை பார்க்கப் போகும்போது, சுவாமிகள் சரஸ்வதியைக் குறித்து 'சகலகலாவல்லிமாலை' என்ற பாடலை இயற்றியதாகவும், உடனடியாக அந்நிய மொழியறிவை அருளாகப் பெற்ருர் என்றும் சொல்லப்படுகிறது. வட நாட்டில் அன்ருட வாழ்க்கையை நடத்துவதற்கே, சுவாமிகளும் அவரது பரிவாரங்களும் அந்நாட்டு மொழியை எளிதில் தெரிந்திருப்பார்கள். அத்துடன் சைவ சமயப் பிரச்சாரம் செய்வது சுவாமிகள் முக்கிய நோக்கமாதலாலும், அந்தப் பிரதேச மக்களின் மொழி மூலம் செய்தால்தான் அங்குள்ள மக்கள் புரிந்து கொள்ளக்கூடுமாதலாலும், பாட்ஷாவைப் பார்க்கப் போவதற்கு வெகு காலத்திற்கு முன்னதாகவே அவர் வட நாட்டு மொழி

யைக் கற்றிருப்பார். தெய்வ கிருபையால் எவ்வித சக்தியையும் பெற்று எதையும் சாதிக்கலாம் என்பதே இக்கதையின் தொனிப்பொருள். சுவாமிகள் எந்த தருணத்தில் இந்தப் பாடலை எழுதியிருந்தாலும் சரி, அது அற்புதமாய் அமைந்திருக்கிறது. தமிழில் இதைப்போல் இலக்கிய நயங்களுடைய நாமகள் தோத்திரம் வேறில்லை. அறிவு மீதும், ஞானத்தின் மீதும், கலைகளின் மீதும் குமரகுருபரர்க்கு இருந்த தேட்டமே அவர் நாமகளை விளித்து,

"விண்கண்ட தெய்வம் பல கோடி
உண்டேனும், விளம்பில் உன்போல
கண்கண்ட தெய்வம் உளதோ"

என்று பாடுவதற்குக் காரணம் என்று, எளிதில் எவருக்கும் புலப்படும்.

குமரகுருபரர், தமது சமயப்பணிக்கு, முஸ்லிம் சிற்றரசர்களிடமிருந்தும் மக்களிடமிருந்தும் எழுந்த எதிர்ப்புகளையும் தடங்கல்களையும், தீரமுடன் சமாளித்து, பாட்ஷாவின் நன் மதிப்பையும் மரியாதையையும் இறுதியில் பெற்றது அவருடைய ஆற்றலை எடுத்துக் காட்டுகிறது. பாட்ஷாவின் கருணையால் கிடைத்த இடம் பொருளை வைத்தும், நாயக்க மன்னன், தமக்கு முன்னாலே நல்கியிருந்த அளவற்ற பொருளை வைத்தும் காசியின் மத்தியில், கங்கைக் கரையில் குமரகுருபரர் குமாரசுவாமி மடத்தை ஒரு பெரிய கோட்டைபோல் கட்டி, பக்கத்திலுள்ள கேதாரநாதர் கோவிலையும் புதுப்பித்து, திருப்பணிகள் பல செய்தார். மடத்திற்கு ஏராளமான சொத்தும் சேகரித்து வைக்க முடிந்தது. அதனால் அன்று முதல் இன்றுவரை காசியில் சைவசமயப்பணியும் அறப்பணியும் நடந்து வருகிறது. இந்த மடத்திற்குப்பின்னால் தலைவராக வந்த தில்லை நாயக சுவாமிகள், தமிழ் நாட்டிற்கு வந்து, திருப்பனந்தாளில் காசி மடத்தை ஸ்தாபித்து, தாய் நாட்டுத் தொடர்பை, குமாரசுவாமி மடத்திற்கு ஏற்படுத்திக்கொண்டார்.

சைவ சமய தீர்க்கதரிசிகளிலும், தமிழ் இன்னிசைக் கவிஞர்களிலும் சித்தாந்த ஞான பண்டிதர்களிலும், மீனாட்சியம்மனின் அருட் செல்வர்களிலும் முன்னணியில் வீற்றிருப்பவர்களில் குமரகுருபர சுவாமிகளும் ஒருவர்; ஆனால் வட நாடு சென்று, என்றென்றும் புனிதமாயிருக்கும் காசியில் ஒரு பெரிய மடத்தை ஸ்தாபித்து அதன் மூலம் சமயத் தொண்டு ஆற்றியதில், இவர் தமக்கு நிகரில்லாத சைவச் செம்மல்; இத்துறையில் இவர், ஆதி சங்கரர், ராமானுஜர் போன்றவர்களை ஒத்தவர்.

## III. நீலகண்ட தீட்சிதர்

நீலகண்ட தீட்சிதர் வட மொழியில் மூன்று பெரிய காவியங்களையும், சிற்றிலக்கியம் என்று கருதக்கூடிய பல நூல்களையும், மீனாட்சியம்மனைக் குறித்து "ஆநந்த சாகரஸ்தவம்" என்ற 107 சுலோகங்களடங்கிய ஒரு நெஞ்சை உருக்கும் தோத்திர நூலையும் எழுதிய மகாகவி. அத்துடன் லௌகீக வாழ்விலும் உயர்ந்த நிலையில் இருந்தவர். அவர் பல வருடங்களாக, திருமலை நாயக்கருக்கு முதன் மந்திரியாயிருந்து, அவர் செய்த மீனாட்சியம்மன் கோயில் திருப்பணிகள் உற்சவாதிகள் முதலியவைகளை நிர்மாணிப்பதிலும் நடத்துவதிலும் ஊக்கம் காட்டி, பெரும் பங்கு கொண்டவர். இன்றுள்ள பெரும்பாலான தமிழ் மக்கள் நீலகண்ட தீட்சிதரைப் பற்றிக் கேட்டிருக்கவேமாட்டார்களாதலால், அவர்களுடைய வாழ்கை நூல்கள்

ஆகியவைகளைப்பற்றிச் சுருக்கமாகவாவது எழுதுவது புனிதமான மீனாட்சி அம்மன் ஆலய கும்பாபிஷேகத் தருணத்திற்குப் பொருத்தமாயிருக்கும்.

நீலகண்ட தீட்சிதர், காஞ்சீபுரம் பக்கத்திலுள்ள அடையப்பலம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். பல கவிஞர்களையும் தத்துவ ஞானிகளையும் தோற்றுவித்த ஒரு குடும்பத்தில் பிறந்தார். கி.பி. 16ம் நூற்றுண்டில் சிறந்து விளங்கி, வட மொழியில் நூற்றுக்குமேல் நூல்கள் எழுதி, அக்காலத்தில் வேலூரை ஆண்ட நாயக்க மன்னரால் ஆதரிக்கப்பட்ட அப்பய்ய தீட்சிதர், இந்த ஊரைச் சார்ந்த சிவபக்தர். இவருடைய சகோதரனின் பேரன் நீலகண்ட தீட்சிதர். நீலகண்டனின் பெற்றோர்கள் அவர் சிறு குழந்தையாயிருக்கும்போதே காலமாய்விட்டபடியால் அப்பய்ய தீட்சிதரே பையனை வளர்த்து, கல்வி புகட்டினர். குடும்பத்தில் சொத்துப் பிரிவினையின் காரணமாக ஏற்பட்ட மனக்கசப்பு காரணமாக, நுண்ணிய அறிவையும் பேராற்றலையும் பெற்ற நீலகண்டர், தமது 12வது வயதில், பாட்டனரின் ஆசியைப் பெற்று, தனது தாயாருடன் தெற்கே புறப்பட்டார். கொஞ்ச காலம் தஞ்சாவூர் ஜில்லாவில் வசித்து, தனது கல்வியை அபிவிருத்தி செய்துகொண்டு மதுரையில் வந்து குடியேறினர். தமது பிரசங்கங்களின் விளைவாக மக்களின் நன் மதிப்பைப் பெற்றார். ஒரு சமயம் இவர் 'தேவி மகாத்மியத்தை'ப் பற்றி பிரவசனம், ஆயிரக்கணக்கான மக்கள் கேட்க, செய்துகொண்டிருந்தார். இரவில் நகரத்தைச் சுற்றும் வழக்கமுடைய திருமலை நாயக்கரும், பிரவசனத்தைக் கேட்டு ஆனந்தித்தார். பின்னர் தீட்சிதரையும் அழைத்து நடத்திய வித்வத்சபையில் நடந்த ஒரு நிகழ்ச்சியின் பயனாக, திருமலை நாயக்கர் அவரைத் தமது பிரதம மந்திரியாக்கினர். தீட்சிதரின் மேதையும் நுண்ணறிவும் தமது அரசாட்சிக்கு ஒரு பெரிய அரணாக இருக்கும் என்று நாயக்கர் கருதி வந்தார்.

திருமலை நாயக்கர் தொடங்கிய மீனாட்சியம்மன் கோவில் திருப்பணிகள் கி.பி. 1626 முதல் 1633 வரை தொடர்ந்து நடந்தன. முன்னால் கூறியது போல், இந்த வேலைகளுக்கு மந்திரி தீட்சிதரே மேற்பார்வையாளராக இருந்தார். புது மண்டபம் என்று சொல்லப்படும் வசந்த மண்டபத்தைக் கட்டும்போது பிரதம சிற்பியான சுமந்திரமூர்த்தி ஒரு தூணுக்கு ஏகபாத மூர்த்தியைச் செதுக்கி முடித்து, அதை நிறுத்த நன்னாளும் பார்த்திருந்தார். ஏகபாதமூர்த்தி என்பது, பிரம்மாவும் விஷ்ணுவும் சிவனிடமிருந்து உற்பத்தியானதாக இருந்த ஐதிகத்தைக் கொண்டு செதுக்கப்பட்ட உருவம். இந்தத் தூணை வைக்கக் கூடாதென்றும், வைப்பது சாஸ்திரங்களுக்கு விரோதமெனறும் வைணவர்கள் நாயக்கரிடம் சென்று ஆட்சேபிக்கவே, மன்னன், இது சம்பந்தமாக சாத்திரங்களைக் கற்ற பல பெரியோர்களின் வாதங்களை ஆறு மாதங்கள்வரைக் கேட்டு, இறுதியில் சிற்பி செதுக்கிய மூர்த்தியுள்ள தூணை நிறுவ அனுமதி கொடுத்தார். இந்தத் தகராறில் சைவர்கள் பக்கம் வாதாடியவர் மந்திரி நீலகண்ட தீட்சிதரே.

### ஆனந்த சாகரஸ்தவம்

இந்த மண்டபத்தின் சிற்ப அமைதி சம்பந்தமாக, பின்னர்த் தோன்றின ஒரு நிகழ்ச்சியின் விளைவாகவே ஆநந்த சாகரஸ்தவம் என்ற பாடல் பிறந்ததாக ஒரு கதை வழங்குகிறது. சிற்பிகளுக்கு அரசனை சுமந்திரமூர்த்தி மண்டபத்தின்

மத்தியிலுள்ளத் ஒரு தூணுக்குத் திருமலை நாயக்கரின் உருவத்தையும், அவர் பக்கத்தில் சில ராணிகளுடைய உருவங்களையும் அமைத்துக் கொண்டிருந்தான். நாயக்கரின் பட்டமகிஷியின் உருவத்தைச் செதுக்கும்போது, அவர் துடையில் ஒரு துண்டு சிதறி பின்னம் ஏற்பட்டது. சிற்பி பல தடவை முயன்றும் இதைத் தவிர்க்கமுடியவில்லை. அவன் இதை தீட்சிதரிடம் சொல்லி, கவலைப்பட்டான். மந்திரி சிந்தனை செய்து, இதில் ஏதோ தெய்வீகம் இருப்பதாகக் கருதி, சிற்பியிடம், ஒரு கால் பட்ட மகிஷியின் துடையில் மச்சம் இருக்கலாம் என்று கூறி, மேற்கொண்டு வேலையைத் தொடர்ந்து, செய்யக் கட்டளையிட்டார். ஒரு நாள் மன்னன், ராணியின் உருவத்தைப் பார்த்து, துடையிலுள்ளபின்னத்தைப்பற்றி வினவ, சிற்பி நடந்ததைச் சொன்னான்.

தீட்சிதருக்கு, தமது பட்ட மகிஷியின் துடையிலுள்ள மச்சம் எப்படித் தெரிந்தது என்று நாயக்க மன்னன் கலக்கமடைந்து, பின்னர் மந்திரியின் மீது சந்தேகம் கொண்டான். மறு நாள் காலையில், தீட்சிதரின் கண்களைப் பிடுங்கி விட வேண்டுமென்ற எண்ணத்துடன், தமது காவலாளிகளைக் கூப்பிட்டு மந்திரியை உடனடியாக அழைத்து வரும்படியாகக் கட்டளையிட்டான். தீட்சிதர் பூசை செய்து கொண்டிருக்கும்போது காவலாளிகள் அரசனின் ஆணையைத் தெரிவித்தார்கள். இந்த அழைப்பு அசாதாரணமானதால் மந்திரி, சற்று சிந்தனையில் ஆழ்ந்து உண்மையை ஊகித்துக்கொண்டார். காவலாளிகளிடம், மன்னனின் எண்ணத்தை, தாமே பூர்த்தி செய்துவிட்டதாக நாயக்கரிடம் கூறும்படி சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டு, பூசையில் உபயோகித்த கற்பூர ஜ்வாலையைத் தம் கண்களில் வைத்துக்கொண்டு பார்வையை இழந்தார். இதை அறிந்த மன்னன், தாம் அவசரத்தில் செய்த முடிவின் தவற்றையும், தமது உத்தமமான மந்திரிக்குச்செய்த அபசாரத்தையும் நினைந்து வருந்தி ஓடோடியும், தீட்சதர் வீட்டிற்குச் சென்று மன்னிப்புக் கேட்டு வருந்தினான். இந்தச் சமயத்தில் தீட்சிதர் ஜகன்மாதாவாகிய மீனாட்சியம்மையை நினைந்து ஆநந்தசாகரஸ்தவப் பாடல்களை உணர்ச்சியுடன் பாடினார். அம்மனின் அருளால் இழந்த பார்வையை அவர் மீண்டும் பெறவே, மன்னன் மகிழ்ச்சியும் ஆறுதலுமடைந்தான் என்பதுதான் கர்ண பரம்பரையாக வழங்கும் கதை. பின்னர் தீட்சிதர் அரச சேவையை உதறித்தள்ளிவிட்டு நெல்லை ஜில்லாவில் தாம்பிரபரணிக் கரையிலுள்ள பாலாமடை கிராமத்தில் வாழ்ந்தார். அவருடைய சமாதியும் அவ்வூரில் இருக்கிறது.

ஆநந்த சாகரஸ்தவம் மிகச் சிறந்த தோத்திர நூல்களில் ஒன்று; அத்துடன் அது ஒரு அற்புதமான ஞான நூலாயும் இருக்கிறது. வேதாந்த சிகாமணியும் ஞானபண்டிதருமான தீட்சிதர், சாத்திர அறிவு, ஞானமார்க்கம், வேதாந்த விசாரணை முதலியவைகளால் பயனில்லை என்றும், பக்தி மார்க்கத்தின் தராதரத்தையும் நுட்பமாக அலசி, எல்லா மோட்ச சாதனங்களைப்பற்றி, தர்க்கரீதியாக விவாதித்து, இறுதியாகத் தம்மையே அம்மனிடம் ஒப்புவித்துவிடுவதாக உணர்ச்சியுடன் கூறுகிறார். தேவியின் திவ்ய மங்கள சொருபத்தை அழகான சுலோகங்களில் ஆர்வத்துடன் வர்ணிக்கிறார். இந்தப் பாடல், எல்லோரும் மூலத்திலாவது மொழிபெயர்ப்பிலாவது, படித்து இன்புறத்தக்கது. இதன் தமிழ், ஆங்கில

மொழிபெயர்ப்புகள் ஸ்ரீ ஒய். மகாலிங் சாஸ்திரிகளால் செய்யப்பெற்று, பல வருடங்களுக்குமுன் ஸ்ரீ காமகோடி பீட கோசஸ்தானத்தால் பிரசுரிக்கப்பட்டிருக் கிறது.

நீலகண்ட தீட்சிதர் வடமொழியி லுள்ள மகா கவிகளில் ஒருவராகக் கருதப் படுகிறார். அவர் 'சிவலீலார்ணவம்' என்று மதுரை ஈசனின் அறுபத்து நான்கு திரு விளையாடல்களைப் பொருளாகக் கொண்டு ஒரு பெரிய காவ்யத்தைச் செய்திருக் கிறார். இது அவர் மதுரையில் மந்திரியா யிருந்தபோது எழுதிய காவ்யம். சிவபெரு மானின் 64 திருவிளையாடல்கள் தமிழ் நாட்டின் சைவ சமயத்தையும் பண்டைத் தமிழ் இலக்கியத்தையும், மதுரையம்பதி யிலுள்ள ஆலயத்தின் தொன்மையையும் சேர்ந்த ஒரு சிறப்புப்பொருள்; வடநாட் டைச் சேர்ந்த வடமொழிப் புராணங்களைத் தழுவிய பொருள் அல்ல. ஸ்காந்தத்தி லுள்ள ஹாலஸ்ய மகாத்மியம் வட மொழியிலிருந்தபோதிலும், பொருள் தமிழையும் தமிழ்நாட்டுச் சைவத்தை யும் சேர்ந்தது. நீலகண்ட தீட்சிதர் இதைக் கையாண்டு ஆக்கிய மாபெருங் காப்பியம் வடமொழியிலிருந்தபோதிலும் அது தமிழ்க்கலைச்செல்வமே என்று தயக்க மின்றிக் கூறலாம். அவர் எழுதியிருக் கும் மற்றிரண்டு காவ்யங்களான 'கங்கா வதரணம்', 'நீலகண்டவிஜயசம்பு' ஆகி யவை நமது பாரதநாட்டு புராணக்கதை களைத் தழுவிச் செய்யப்பட்ட சிறந்த நூல்கள். இவற்றின் இலக்கிய நயங்களைப் பற்றி வடமொழிப்புலவர் பெரிதும் புகழ்ந் திருக்கிறார்கள். நகைச்சுவை ததும்பும் சில சிறிய நூல்களையும் நளசரித்திரம் என்ற முற்றுப்பெறாத நாடகத்தையும், சிவபரமாகச் சில சமய நூல்களையும் எழுதியிருக்கிறார்.

நீலகண்ட திட்சிதர், தமது நூல் களில் காசியின் மகிமையைக் குறிப்பிட்டு அந்த க்ஷேத்திரத்திற்குப் போக வேண்டு மென்ற ஏக்கத்தைச் சில பாடல்களில் வெளியிட்டிருக்கிறார். இருந்தபோதிலும் அவர் வாழ்நாளில் அவருக்கு இறுதி வரை காசியாத்திரை கிட்டவில்லையென்று ஸ்ரீ மகாலிங்கசாஸ்திரிகள் கருதுகிறார். ஆனால் சில ஆண்டுகளுக்கு முன்பு நீலகண்ட தீட்சிதரின் வாழ்க்கையைப் பற்றியும் நூல்களைப் பற்றியும் அருமை யான ஒருநூலைத் தமிழில் எழுதி வெளி யிட்ட ஸ்ரீ பி. எஸ். கிருஷ்ணன் சொல்வ தாவது: "முடிவில் அவர் காசியை அடைந்து, கங்கையில் நீராடி, தன் வாழ்நாள் விருப்பத்தைப் பெற்றார் என்பது அவருடைய சிவலீலார் ணவத்திலிருந்து தெளிவாகிறது." தமது வாழ்நாள் முழு வதும் காசிக்குப் போகவேண்டுமென்று ஏங்கிய தீட்சிதருக்கு இறுதியாகக் காசி யாத்திரை கிட்டியது என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்வதை ஏற்றுக்கொண்டாலும், இந்த விஷயத்தில் தீட்சிதரைவிட, சாஸ்வத காசிவாசம் பெற்ற குமரகுருபரசுவாமிகள் அதிக அதிர்ஷ்டசாலியாய் இருந்திருக் கிறார், என்று கூறிக் கட்டுரையை முடிப்போம்.

# சுந்தரர் இறைவனுடன் அசதி ஆடல்

வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A.

ஆரூரர் அருளிய தேவாரப்பாக்களில் அருமையாகவும் அற்புதமாகவும் அமைந்துள்ள ஒரு பகுதி அவர் தமக்குள்ளதோழமையுரிமைகொண்டு தம்மைத் தடுத்தாட்கொண்ட சிவபிரானிடம் *அசதியாடல் ஆகும். அவர் பதிகங்களுள் அசதி ஆடல் மிக்குள்ளன 2, 5, 14, 18, 32, 36, 43, 44, 46, 49, 95 எண்ணுள்ளவை. இவற்றுள் சிலவற்றை சண்டுக்கூறுவாம்.

**1. உமக்கு ஆட்செய அஞ்சுகின்றேம்**

[பதிக எண் 2]

இறைவா! உமது தோலாடையின் மேல் சுற்றிக் கட்டியுள்ளதும் பாம்பு; கையிற் கொண்டதும் பாம்பு; உமது கையில் உள்ள பாம்புக்கு ஐந்து படம் இருக்கின்றதே; அதைப் போகும்படி விடாதீர்; உடுப்பதற்கு உடையும் உண்பதற்கு சோறும் தந்து உம்மால் ஆளமுடியவில்லை; உடலில் உறுநோயைக் களைந்தும் ஆளமுடியவில்லை; ஆனல் ஆள்களை ஆள வல்லவர்தாம் நீர் — இக்காரணங்களால் உமக்கு ஆட்செய அஞ்சுகின்றேம்.

**2. ஓணகாந்தன் தளியுளாருடன்**

[பதிக எண் 5]

ஓணகாந்தன் தளியுளீரே! கங்கையாளோ வாய்திறவாள், கணபதியோ வயிறுதாரி. வேலவனே குமரன்—பிள்ளை. இவர்களைக் கோலால் அதட்டி ஆள்வதில்லை. எமக்குத் தெரிந்ததெல்லாம் சொல்லி உம்மை வாழ்த்திஞலும் வாயைத் திறந்து, உண்டு, இல்லையென்று நீர் சொல்வதில்லை; நீர் எம்மை ஆள்வான் இருந்து என்ன பயன்; பலிதிரிந்து ஐயம் ஏற்கும் தொழிலையும் ஒளிக்க மாட்டீர்.

உம்மீது அன்புவைத்து உமது திருவடிக்குப் பணிசெய்யும் தொண்டர் உம்மிடமிருந்து பெறுவதற்கு உம்மிடம் என்ன இருக்கிறது! உமது ஆரமோ பாம்பு; நீர் வாழ்வதோ ஆர்ஊரோ (ஆரூர்); ஒற்றியூர் (ஒற்றிவைத்துவிட்டபடியால்) அது உமது ஊரன்று, உமது ஊரோ காடு; உடையோ தோல்.

கச்சிக் காமக்கோட்டம் (எல்லாம் தருவதற்கிருந்தும்) நீர் போய் ஊர்ப் பிச்சை கொள்வது என்ன காரணம்?

**3. இவரலா தில்லையோ பிரானுர்**

[பதிக எண் 14]

பாச்சிலாச்சிரமத்து எம்பரமர் பித்தர் போலிருந்து நம்மை வேண்டாராயிருந்தால் என்ன! ஆட்கொண்டு பின்னர் இரங்கி ஒருபேச்சும் பேசாதிருப்பாராஞல்

* அசதி ஆடுதல் — பரிகசித்தல், வேடிக்கை வார்த்தை கூறுதல் "அமிர்தனுரோடு........ வானேர் அசதி யாடிடங்கள்" (சூளாமணி சீய 192). அசதி — வேடிக்கை வார்த்தை (திவாகரம்). ஒறுக்கப்படுவார் இவர் என்று அங்கு அசதி ஆடி (சிந்தாமணி 1871); 2002 உரை.

தான் என்ன! மெய்யர் போல் நடித்து இவர் பொய் சொல்வதாய் இருந்தால்தான் என்ன! இவர் பிணம் சுடுகாட்டில் ஆடுபவ ராய் இருந்தால்தான் என்ன! நான் பேசின பேச்சை இவர் பொறுக்காவிட்டால்தான் என்ன!—இவரலா தில்லையோ பிரானுர்.

### 4. இவர்க்கு ஆட்படோம் என்பது [பதிக எண் 18]

இவர் i மான்தோலை உடுத்துப், புலித்தோலைத் தோளில் இட்டு, யானைத் தோலைப் போர்ப்பவர் என்று தெரிந்திருந் தால், ii குறப்பெண்ணைத் தம் மகனுக்கு மணவாட்டியாகக் கொண்ட தரும சீலர் இவர் என்று தெரிந்திருந் தால், iii செத்தவர் தலையில் பலி ஏற் பதுதான். இவரது செல்வமென்று தெரிந் திருந்தால், iv இவருக்குச் சொந்த ஊர் கிடையாது, ஒற்றிவைக்கப்பட்ட ஒற்றியூர் தான் ஊர் என்று தெரிந்திருந்தால்—நாம் இவர்க்கு ஆட்பட்டு இருக்கமாட்டோம்.

### 5. "கோடி" என்னும் தலத்தில் இறைவன் தனியாய் இருப்பதைக் கண்டு வருந்தியது [பதிக எண் 32]

கோடிக் குழகீர்! கடற்காற்றே கொடி தாய்க் கரைமேல் அடிக்கிறது; அயலில் குடியிருப்பார் யாரும் இல்லை; உமக்கு யார் துணையாக இங்கு இருக்கின்றீர். காடோ பயங்கரமாயிருக்கிறது; தேவி அஞ்சும்படி ஆந்தைகளும் கோட்டான் களும் மரப்பொந்திலே ஒன்றுகூடி ஒரு பாற் குழற மிக்க பொல்லாதவரும் கொடிய வருமான வேடர்கள் ஒருபாற் சார, இக் கோடியில் (தனியே) வீற்றிருக்கிறீரே!

### 6. அகப்பொருட்டுறையில் அசதி யாடினது [பதிக எண் 36]

பைஞ்ஞீலி ஆரணிய விடங்கரே! நீர் சூடுவது கொன்றை; உமது ஊர்காடு; உமது கையில் ஓடு; நீர் அணிவது எலும்பு—இந்தக் கோலத்துடன் என்ன செய்யப் போகின்றீர்? உம்மீது காதல் கொள்பவர் உம்மிடத்திலிருந்து பெறக் கூடியது யாதுதான் உளது?

தமிழ்ப் பண்பாடு தெரிந்தவர்தாமே நீர்; அங்ஙனமிருக்கச் செங்கண் பாம்பு ஒன்று முன்கையில் ஆட எதிர்வந்து நிற் கின்றீரே! ஏன் இப்படிச் செய்கின்றீர்? உமக்குப் பலி (ஐயம்) நாங்கள் கொடுக் கவும் மாட்டோம்; கொண்டுவந்து இடவும் முடியாது. பக்கத்தில் ஒரு பெண்ணோடு வந்து நிற்கின்றீரே; ஆதலால் நாங்கள் பலி கொண்டுவந்து இடமாட்டோம். நீர் நடமின்; இங்கு நில்லாதீர்.

### 7. திருமுதுக்குன்றப் பெருமானுடன் [பதிக எண் 43]

முதுகுன்றரே! அடியாரும் நீருமாய் ஆடி அசைந்து வீடுகள்தோறும் பாடிச் சம்பாதித்த பொருளெல்லாம் யாருக்காக, உமையாளுக்குத்தானே! ஏன் திசை திசையாய்த் திரிந்து பலி ஏற்கிறீர். இனி பக்தியுடன் பலி இடுவாரிடம் மாத்திரம் பலி கொள்ளும்.

உம்முடைய காதலி (தேவி) ஊர்கள் தோறும் அறம் செய்ய, நீர் பலியிடுமின் என்று வீடுதோறும் நிற்பது அழகா! இஃது என்ன கூத்து!

நாய் குலைத்துநிற்கச், சென்று வீட்டு வாசல்களிற் பலிகொள்ளப் போகின்றீரே; இது உமது வாழ்க்கைக்கு அழகா! இதுவும் ஒரு வாழ்க்கையா!

தொண்டர்கள் உம் புகழைப் பாடு கின்றார்கள்; தேவர்கள் உம்மை ஏத்துகின் றார்கள்; நீரோ திரிந்து திரிந்து வீடுகள்

தோறும் பலிக்குச் செல்கிறீர்! இது பான்மையா! (பண்பா!) மனம் நைந்து உம்மை விரும்பி வேண்டுவோர்க்கு நானே ஆகட்டும் என்று நீர் சும்மா இருந்தால் அவர்கள் இறந்தபின் நீர் என்ன செய்யக் கிடக்கின்றது.

**8. ஏசி அசதி ஆடல்** *[பதிக எண் 44]*

மதயானையின் தோல்தானு எம்பிரானுக்கு அகப்பட்டது போர்ப்பதற்கு! வேறு ஆடை ஒன்றும் கிடைக்கவில்லையா! அங்கையிற் கொள்வதற்கு எரியன்றி வேறு ஒன்றும் கிடைக்கவில்லையா! கையிற் பிடிப்பதற்கு பாம்பன்றி வேறொன்றும் கிடைக்கவில்லையா! அது கடித்தால் விஷம் ஏறிவிடுமே என்று அஞ்சுகின்றேன். சுடலை நீறுதானு பூசும் சந்தனமாக எம்பிரானுக்குக் கிடைத்தது. சுடலைக் குறுங்காடு, புதர்க்காடுதானு ஆடுதற்கு அரங்கமாக எம்பிரானுக்குக் கிடைத்தது. வெள்ளை மாடுதானு எம்பிரானுக்கு ஏறிச் செலுத்தக் கிடைத்தது. வேறு ஒன்றும் கிடைக்கவில்லையா!

**9. நாகைக் காரோணத்துப் பெருமான்** *[பதிவு எண் 46]*

நாகைக் காரோணத்துப் பெருமானே! எனக்குப் பட்டாடைகளும் சந்தனுதிகளும் கிடைக்கும்படி செய்யாது சும்மா நீர் இருப்பது என்ன வஞ்சனை! கடல் விஷத்தை உண்ட மயக்கம் ஓரிடத்தில் இருக்க ஒட்டாமல், உமது புத்தியைக் கலக்குகின்றது போலும். உம்முடைய படர் சடைகளையும் பாம்புகளையும் காட்டி, என்னை வெருட்டி வேஷம் போட்டால் நான் எப்படி உன்னை அணுகமுடியும்!

மண்ணுலகு விண்ணுலகு, எல்லாம் உம்மதே ஆட்சி; தேவி, குழந்தை முருகன் இவர்களை நான் நாடேன்; பெருவயிற்றுக் கணபதிக்கு விஷயம் ஒன்றும் தெரியாது; ஆதலால் நீர் சும்மாயிருப்பது நீதியோ சொல்லுவீராக; என்னுடைய சுகநிலைக்கு வேண்டியவற்றை நீர் தாரீரேயாகில் உமது திருமேனி வருந்தும்படி உம்மைப் பிடித்து வருத்துவேன்; அதனுல் பின்பு என்னை இரக்கமில்லாதவன், கொடியவன் என்று சொல்லாதீர்.

திருவாரூர்த் திருக்குளத்தில் எடுத்த நிதியில் (12,000 பொன்னில்) மூன்றில் ஒருபாகம் இப்போது எனக்கு வேண்டும். நீர்தராவிட்டால் ஒருபோதும் உம்மை அடி எடுத்து வைத்துபபோக விடேன்.

வீண் பேச்சுக்கள் பேசி மடவார்தம் கைவளைகளை நீர் கொண்டால் இமவான் மகள் உமது செய்கையைப் பொறுத்திருப்பாளா! சொல்லும்.

**10. திருமுருகன் பூண்டியில்** *[பதிக எண் 49]*

எம்பெருமானே! திருமுருகன் பூண்டியில் குடியிருந்துலவும் தீரம் நீர் உடையவராயிருந்தால் ஏன் (வேடுபறிச் சமயத்தில் எனக்கு உதவாது) இருக்கிறீர்.

முருகன் பூண்டியாம் இவ்வூரின் எல்லையை (வழிப்பறிக்காரர்களிடமிருந்து) காப்பது என்பதில்லையானுல், நீர் ஏன் இங்கு வாசம் செய்கிறீர்.

(ஆறலைத்து ஆடையைப்பறிப் போர்களாகிய) முரட்டு வேடர்கள்கூடி வாழ்கின்ற இந்த முருகன் பூண்டியை விட்டு (வேறு பத்திரமான இடத்துக்குப் போக) உம்முடைய எருதின் கால் ஒடிந்துபோகவில்லையே, நன்ருய்த்தானே இருக்கிறது. பின்னை ஏன் இந்த (ஆபத்தான) ஊரில் வசிக்கிறீர்.

## 11. திருவாரூர்ப் பெருமானே!

திருவாரூரீர்! நான் உமக்கு முழு அடிமை; என்னை நீர் விற்கவும் விற்கலாம்; ஏனெனில் நான் உமக்கு ஒற்றி வைக்கப்பட்டவன் அன்று. நான் ஒரு குற்றமும் செய்ததில்லை; அப்படியிருக்க என் கண்ணை ஏன் குருடாக்கினீர்; உமக்குத்தான் அதனுல் பழி ஏற்படும்; நீர் மற்றக் கண்ணையும் தராவிட்டால் நீர்தாம் வாழ்ந்துபோம்

என்றும் ஒழுக்கம் தவருது பாடும் அடியார்கள் கண் தெரியாது குன்றிலே முட்டிக் குழியிலே விழுந்தால் நீர்தாம் வாழ்ந்துபோம்.

அன்புடைய அடியார்கள் தம்முடைய கஷ்டங்களை எடுத்துச் சொல்லி முறையிட்டால் அவர்களைத் துன்புறுத்தி மறுபிறப்புக்கு ஆளாக்குவதாலுல் நீரே வாழ்ந்து சுகமாயிரும்.

பேயொடு நட்புக் கொண்டாலும் அதனின்றும் பிரிதல் வருத்தம் தரும் என்பார்களே! நீர் என்ன செய்தாலும் நான் உம்மைவிட்டுப் பிரியேன்.

நாய் போலத் திரிந்து, உமக்கு ஆட்பட்டவர் உம்மிடம் வந்து முறையிட்டால் நீர் வாய் திறவாது இருக்கின்றீர்! நீர்தாம் சுகமாய் வாழ்ந்திரும்.

இங்ஙனமெல்லாம் இறைவனுடன் தமக்குள்ள தோழமை உரிமையால் தமக்கு வேண்டியவற்றையெல்லாம் நயந்து பெற்ற காரணத்தால் *"நயத்துக்குச் சுந்தரனுர்" என ஆன்ருேரால் சுந்தரர் பாராட்டப்பட்டனர்.

### மீனுட்சி அம்மையின் துதி

ஊனுட்சி செயும் ஒருபால்; ஒருபால்
நானுட்சி செயும் அதனுல் நலிவேன்
மீனுட்சி சரண் என வேண்டிடிலோ
வானுட்சி பெறத் தருவாள் அவளே.

வேலுமயிலும் துணை

---

## இது என்ன மாயம்?

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி,
விண்ணாய் இருசுடராய், இத்தனையும் வேறுகி,
பண்ணாய் இசையாப் பணுவலாய், எங்கண்ணும்
கண்ணுனுய், என்உறு கண் காணுவாறு என்கொலோ?

முன்னு முது பொருட்கும் முன்னு முது பொருளாய்,
பின்னும் புதுமைக்கும் பின்னுகும் பேர்ஒளியாய்த்
தென்னு! மதுரைத் திருவாலவாய் உறையும்
என்நாயகனே! எளியேற்கு இரங்காயோ?

— பரஞ்சோதி முனிவர்
திருவிளையாடற் புராணம்

# மதுரையின் இசை மேதை

M. P. N. சேதுராமன், M. P. N. பொன்னுசாமி

சங்கீத உலகமானது இருளால் சூழப்பட்டு இசைவாணர்களும் சந்தேக விபரீத பயப் பிராந்தியுடையவர்களாய், உண்மை வழிதெரியாது மயங்கியிருந்த காலத்திலே மதுரையில் உதயசூரியன் போலத் தோன்றினூர் பொன்னுசாமிப் பிள்ளை, என்று பிடில் சின்னசாமி ஐயர் அவர்கள் எழுதியிருக்கிறூர்கள். பழந் தமிழ்நாட்டிலே வழக்கிலிருந்த இசை நாடக இலக்கண நூல்கள் இறந்துவிட்டதால், அவற்றின் இயல்பு பாகுபாடு முதலியவற்றை அறிதற்கு இல்லை. வட மொழியிலே இடைக்காலத்தில் எழுந்த இசை நூல்கள் பல. எனினும் வடநூல் ஆசிரியர்கள் சங்கீத சம்பிரதாயங்களைத் தங்கள் யுக்தி மனப்போக்கிற்குத் தகுந்தபடி அவ்வப்போது மாற்றிவந்ததால், இசை உலகிலே முன்னேற்றம் தடைப்பட்டு ஒரே குழப்பம் நிலவியிருந்தது. எனினும் பழந்தமிழ் இசை நூல்களான முதுநாரை, முதுகுருகு முதலிய மறக்கப்பட்டோ சிதைவுற்றோ இருந்தபோதிலும், தமிழ்நாட்டிலே பரம்பரையாய் வந்த பழக்கத்தின்பயனூய் ஒரேவித இசைப்பயிற்சி தான் நிலவி யிருந்தது. தஞ்சாவூரிலே அச்சுதப்பநாயக்கர் காலத்திலே (1548—1626) அவருக்கு மந்திரியாய் இருந்த கோவிந்த தீட்சிதர் வடநூல்களைத் தழுவி அப்போது அனுபவத்திலே இருந்துவந்த சங்கீதத்தை மாற்றியமைக்க விரும்பி, சங்கீத சுதாநிதி என்ற நூலை எழுதினூர். அவரது குமாரர் வேங்கடமகி என்பவர் கர்த்தா ராகங்களை 72 ஆகப் பிரஸ்தரித்து, 'சதுர்த்தண்டிப் பிரகாசிகை' எழுதினூர். தமிழ்நாட்டு மரபுகளையும் வடநாட்டுச் சம்பிரதாயங்களையும் சமரசப்படுத்தும் அவர் முயற்சி பெரிய மயக்கத்தில் முடிந்தது. அவரைப் பின் பற்றியே சங்கீத நூல்கள் பல எழுதப்பட்டதால் சங்கீதக் கோட்பாடுகள் பெருங்குழப்பத்துக்குள்ளாகி, இசைக் கலைவளர்ச்சி பாதிக்கப்பட்டது. என்றும் எங்கும் இயற்கையாய் உள்ள 32 கர்த்தா ராகங்களைத் தவிர வேங்கடமகி மிகைப்படுத்தியுள்ள 40 ராகங்கள் அனுபவத்துக்கோ, இலக்கணத்துக்கோ ஒத்து வரவில்லை; இவருடைய மேள கர்த்தாக்களிலே பலவும் புத்தி சாதுரியத்தைப் புலப்படுத்துவனவே அன்றி அனுபவத்துக்கு ஒத்து வரா என்று, அவரே கூறியுள்ளார். இவை அநேகமாய் மறைந்தும் விட்டன.

அவருடைய கற்பனைகள் பலவும் பயன்படாமல் போனதில் வியப்பில்லை. எனினும், கழிந்த 300 ஆண்டுகளாய் அவருடைய கோட்பாடுகள்தான் வழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது. இயற்கைக்கு விரோதம் எனினும் இசைவாணர் யாரும் இதை மறுக்க முன் வரவில்லை. இந்த உண்மையை முதல் முதல் தைரியமாய் எடுத்துரைத்தவர் எங்கள் பாட்டனூர் பொன்னுச்சாமிப்பிள்ளை அவர்கள்தான். '32 மேள கர்த்தாக்களே பழமையான சங்கீதமுறையில் கொள்ளப்பட்டன. அவையே பழந்தமிழ் இசைநூல் முறைமைக்கும் ஒத்திருக்கின்றன. அவற்றை 72 ஆகப் பெருக்கிக்காட்டும் பிற்கால முறை வெறும் கற்பிதமே' என்பது இவர் கொள்கை. இதை வலியுறுத்திப்

"பூர்வீக சங்கீத உண்மை" என்ற நூலை அவர் இயற்றியபோது, அதைப் போற்றுத இசைப்புலவர் அக்காலத்திலே யாரும் இல்லை என்று சொல்லலாம். 'இதைச் சித்தாந்தம் செய்யத்துணிந்த தங்களுக்கு நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன்' என்று அரிகேசவநல்லூர் பிரம்மஸ்ரீ முத்தையாபாகவதர் எழுதியிருக்கிறார். இயற்கையாய் உள்ளதாயும் பூர்வீகத்தைத் தழுவியதாயும் அனுபவத்திற்குப் பொருத்தமாயும் பண்டைத் தமிழ்நாட்டுச் சங்கீதங்களையும் தழுவி, சுதிபேதத்தின் விவரங்களை விளக்கிக்காட்டி, அவர் சித்தாந்தப் படுத்தியிருக்கிற இந்நூல் சங்கீத உலக அபிவிருத்திக்குப் பேருபகாரமாயிருக்கும் என்கிறார் கே. வரதாச்சாரியார்.

எல்லா வித்வான்களும் சகலவாத்தியங்களிலும் உபயோகித்துவருகிற 12சுதி பேத ஸ்தானங்களில் அனுவசியமாக இன்னும் 4 நூதனப் பெயர்களை அதே ஸ்தானத் துவனிகளுக்குச் சேர்த்து 16 பேதமாக்கி, ஆரம்ப அப்பியாசிகள் முதல் நிபுணர் பலரையும் குழப்பி மயக்கி வந்த கோட்பாடுகளைத் தகர்த்து, 12 சுர பேதங்களையே நிலைநிறுத்தி, அதற்குரிய 32 மேளகர்த்தா ராகங்களையும் முன்னுள்ள படியே அமைத்து, எங்கள் பாட்டனார் இசைப் பயிற்சியை எளிமையாக்கினார். இனிமை ஆக்கினார். இதுதான் சங்கீதத்திலே அவர் புரிந்த சாதனை.

மதுரையின் இசைமேதையாய் விளங்கிய அவர் பழம்பெரும் பரம்பரையைச் சேர்ந்தவர். ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர்க்குப் பணிபுரியும் பேறுபெற்ற கே. முத்துக்கருப்பபிள்ளை அவர்களுக்கும் வெள்ளையம்மாள் அவர்களுக்கும் புதல்வராய்ப் பிரமாதி வருஷம் ஆனிமாதம் (—1879 ஜூன்) தோன்றினார். இவருக்கு முன் பிறந்தவர் மூவர். 1 ராமனாதபுரம் சமஸ்தான வித்வான் அய்யாச்சாமிப் பிள்ளை. 2 வழக்கறிஞர் சின்னச்சாமிப் பிள்ளை. 3 தவுல்வித்வான் செல்லையா பிள்ளை.

மதுரையார் என்ற தனிப்பெரும் புகழ் வாய்ந்த எங்கள் பாட்டனார், கையாண்டு வந்த நாயனம் தற்காலத்திலே பெரும்பான்மையாகக் கையாளப்பெறும் பாரி என்னும் நீண்ட குழல் அல்ல; வடிவத்திலே சிறியதான திமிறி. இதைக் கொண்டுதான் அவர் தேவ கானங்களைப் பொழிந்துவந்தார். வீணை வாசிப்பதிலும் அவர் தேர்ந்துவிளங்கினார். கலைவாணியின் அவதாரமெனப் போற்றப்பெற்ற வீணை வித்தகி தனம்மாள், பிள்ளை அவர்களோடு ஒருசமயம் பேசிக்கொண்டிருந்த போது, அவர்களுடைய வீணையை வாங்கி அவர்கள் மெய்மறந்து பரவசப்படும்படி பிள்ளையவர்கள் வாசித்துக்காட்டினார்கள். அப்போது தனம்மாள் 'வீணையிலே இவ்வளவு தேர்ந்த வாசிப்பு வாய்ந்திருக்கும் தாங்கள் ஏன் வீணையைத் தொழிலாகக் கொள்ளக்கூடாது' என்று வினவினார்கள். அதற்குப் பிள்ளையவர்கள் 'இது உண்மைதான். ஆனால் என்னுடைய பரம்பரையிலே எல்லோரும் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர்க்கு நாதோபாசனை செய்து வந்திருக்கிறார்கள். அந்த இறையருள் அருகிலேயே திளைத்துச் சேவை செய்ய நாதசுரம் ஒன்றால்தான் முடியும்' என்றார்.

கழிந்த 600—700 வருஷங்களாகவே முரண்பட்ட கோட்பாடுகளைக்கொண்டு, இசைவாணர்களையும் ரசிகர்களையும்

மருட்டிவந்த கர்நாடக சங்கீதத்தை எளிமையாக்கி, அதற்கு 1923ல் மைசூர் சென்று, ரசிகரான மகாராஜாவின் ஒப்புதல்பெற்ருர். ஒப்புதல் பெறுமுன், மகாராஜா ஆக்ஞைப்படி, சங்கீத சாஸ்திர பண்டிதரான பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியார்களுடன் தர்க்க வாதம் புரிந்து, அவரது மனப்பூர்வமான சம்மதம் பெற்ருர். அமதாபத் நகரிலே கூடிய அகில இந்திய சங்கீத மாநாட்டிலே கலந்துகொண்டு, இந்தியா முழுவதும் ஒரேவித சங்கீதம் பரவச்செய்வதற்கு தமது வழிதான் பின்பற்றத்தக்கதென்பதை மெய்ப்பித்தார். பலநூறு ஆண்டுகளாகவே மயக்கத்திலிருந்து வந்ததும் சீர் நேர்மை இல்லாததும் கலப்புற்றதுமான சங்கீதத்தை விலக்கி, கலப்பற்றதும் பூர்வீக உண்மையானதும் அனுபவத்தில் உள்ளதுமான சங்கீதத்துக்குப் புத்துயிர் கொடுத்தவர் எங்கள் பாட்டஞர். 1800 வருஷங்களுக்கு முன்னமேயே தமிழ்நாட்டிலே பிரபலம் பெற்றிருந்த சப்த சுரங்களும் அவற்றின் கிரம வரசைகளும் இவரால் விளக்கம் பெற்றன. இதனுல் 700 வருடங்களாகவே சங்கீதஉலகிலே நிலவிவந்த குழப்பங்கள் நீங்கின; ஐயங்கள் நிவிர்த்தியாயின. அப்பியாசிகள் வெகு துரிதமாக அப்பியாசித்துப் பிரபலமாவதற்கு வழிகோலிய இம் மகானே, மதுரைக் கும்பாபிடேக நன்நாளிலே நாம் நினைவுகூர்வோமாக. எங்களால் முடிந்தவரை எங்கள் தாத்தாவைப் பின்பற்றி ஸ்ரீ மீனுட்சியம்மன் அருளில் வாழ விரும்புகிறேம். சாஸ்திரீய சங்கீதத்தைச் செயல்படுத்தி வருகிறேம். இவ்வரிய வாய்ப்பினை எங்களுக்கு நல்கிய மதுரைக் கும்பாபிடேகக் குழுவினருக்கு எங்கள் நன்றியைச் சமர்ப்பிக்கிறேம்.

---

## ★ பாரில் ★

அரியா சனம் உனக்கே ஆனுல் உனக்குச்
சரி யாரும் உண்டோ தமிழே — தண்டமிழே

ஈங்குனது சங்கத்தால் ஈசர் உயர்ந்தாரோ
ஓங்கும் அவரால் நீ உயர்ந்தாயோ

தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே என் முத்தமிழே — புத்திக்குள்
உண்ணப் படுத்தேனே

இருந்தமிழே உன்னுல் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றுலும் வேண்டேன்.

—சொக்கேசர் தமிழ்விடுதூது

# ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகள்

சொக்கலிங்க ஐயா *

ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகள், பாண்டி நாட்டிலே புராதன சிவஸ்தலங்களுள் ஒன்றுயதும், மதுப்பிரியமுனிவர் முதலிய ஆன்றோர்கள் பூசித்துப்பேறுபெற்ற சிறப்புடையதுமான கோயிலூரென்னும் சாமிவன சாமீப்பியம்பெற்று அதன் கீழ்த் திசையிலுள்ள காரைக்குடியிலே, தன வைசியர் குலத்திலே இளையாற்றக்குடிக் கோயிற் கழநிவாசற்குடி வகுப்பிலே, மெய்யப்ப செட்டியாரென்னும் புண்ணிய சீலர் பூர்வ சென்மங்களிற் புரிந்துவந்த பெருந்தவத்தாலொரு சற்புத்திரராய் வந்தவதரித்து வளர்ந்து வந்தார்கள்.

இவர்கள், பாலியந்தொடுத்தே "கற்க கசடறக்கற்பவை கற்றபின் நிற்கஅதற்குத்தக" என்ற தேவசுருதி இலக்கண இலக்கியர்களாய், நன்னூல் பலகற்றுத் தெளிந்த அறிவும், அதற்கு இயைந்த ஒழுக்கமும் வாய்ந்து, சாதுசங்கங்களைப் பலகாலடுத்து வழிபடுஞ்சத்துவ வியல்பை மேற்கொண்டு நெறி வழுவாது ஒழுகி வருவாராயினுர்கள்.

இவ்வாறொழுகும் பிரமசரியத்தின் மேற் சிலநாள் இல்லற வொழுக்கமேற் கொண்டு, அதிலுவர்ப்புத் தோன்ற, அக்காலத்தில் இத் தனவைசியர் குலத்தில் வந்தவதரித்துத் துறவிலும் நல்லொழுக்கங்களிலும் பிரசித்திபெற்றுக் கோயிலூரிலிருந்த துறவு சுவாமிகளிடத்து விளங்கிய சீலங்களைக்கண்டு பிரீதியுடையர்களாய், அவர்களிடத்துப் பல துறவு நூல்களைப் பயின்று வந்தார்கள். அந்நாளின் இடை இடையே சிதம்பராதி சிவக்ஷேத்திர யாத்திரை செய்து சிலநாள் அங்கே தாமதித்து சமுசார துக்க நிவர்த்தியிற் பேராசையுடையர்களாய்ச் சிவகைங்கரியஞ் செய்து வந்தார்கள்.

இவர்களுக்கு, அந்நாளிற் சிலகாலம் ஒரு வயிற்று நோயிருந்தது. அக்காலத்திலே பாண்டிநாட்டுச் சிவக்ஷேத்திர யாத்திரை செய்யக்கருதி முதலில் துவாதசாந்த புரமாகிய மதுராபுரிக்குவந்து, பொற்றுமரையிலே ஸ்நானஞ்செய்து ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேச தெரிசனஞ்செய்துகொண்டு சில நாளங்கிருந்தார்கள். அப்போது வயிற்று நோய் சாந்தமானது தெரிந்து, இத்தலத்திலே நமக்குத் திருவருள் துணைசெய்யுமென்று பொதுவகையான் மதித்துக் கொண்டு, தாம்கருதி வந்தபடி ஏனைய சிவஸ்தலங்களுக்குஞ் செல்லுங்கால், வயிற்றுநோய் மீளவும் வந்தது. வரினும் உத்தேசித்தபடி அத்தலங்களைத் தெரிசித்துக்கொண்டு மீண்டும் மதுரைக்கு வந்தார்கள். வந்தவுடன் அவ்வயிற்றுநோய் சாந்தமாயது. அது நோக்கி அம்மதுராபுரியில் மேலுஞ்சிலநாள் வசிக்குங் கருத்துடையவர்களாயிருந்தும், உடன்வந்த நண்பர்கள் கருத்துக்கிணங்கி அம்மதுராபுரியினின்றும் ஒருவாறகச் சென்று கோயிலூரையடைந்தார்கள்.

---

* சென்ற தலைமுறையிலே பிரபல சைவ சித்தாந்தியாய்த் திகழ்ந்த ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்கள். 1890-ல் எழுதப்பட்டது.

அப்போது இடையிலே சாந்தமான வயிற்றுநோய் முன்போலவர, அதுகண்டு இஃதென்னேயோ வென்ருலோசித்து, இவ் வயிற்று நோய்க்குத்தான், அநாதிதொடுத்துத் தொடர்ந்து வந்த பிறவிநோய்க்குத் தான், பரம அவுழ்தம், துவாதசாந்தபுர மாகிய மதுராபுரிவாசமே யென்று துணிந்து, பசுவைநோக்கிய கன்றுபோல மதுராபுரியை நோக்கி அளவுகடந்த அன்பும் ஆராமையும் பொருந்தக் கண்ணீரும் கம்பலேயு முடையவர்களாய் "எம்பிரானெனேயேன்று கொளுங்கொலோ" என்னும் வேண்டுகோளுடையர்களாய்ச் சென்று மதுராபுரிக்கு வந்து பொற்றுமரை ஸ்நானஞ்செய்து சித்திவிநாயக ஸ்ரீமீனுக்ஷிசுந்தரேசுர தெரிசனஞ் செய்து கொண்டு அங்கிருந்தார்கள். திருவருளினுலே வயிற்றுநோய் முற்றும் நீங்கி விட்டது. அதனுலும், முன்னுள்ள அதி விருப்பத்தாலும், சீவ பரியந்தம் இம்மதுராபுரி யெல்லேயைவிட்டு நீங்குவதில்லே யென்று உறுதியான விரதமேற்கொண்டு, குடும்பப் பற்று முற்றும் நீக்கிச்சிவதீக்ஷாதி சிவ சம்ஸ்கார முற்றும்பெற்று அம்மதுராபுரி நிவாசராய் வீற்றிருந் தருளினுர்கள்.

அப்படி வசித்துவருங் காலமுழுதும் தினந்தோறும் பொற்றுமரையிலும்* புறத்தொட்டித் தீர்த்தத்திலும் ஸ்நானஞ் செய்து ஜெபதபதியானபூசாதி சிவநியமங்களே முடித்துக்கொண்டு, திருவனந்தல் முதலிய ஸ்ரீமீனுக்ஷிசுந்தரேச பூசா காலங்களெல்லாந் தவருது தரிசித்து, உச்சி காலத்துக்கு முன்மீட்டும் அத்தீர்த்த ஸ்நானஞ்செய்து, உச்சிக் கால தரிசனமுஞ் செய்தலும், இதற்கிடையே அநேக பிரதக்ஷிண நமஸ்கார பாராயணுதிகள் செய்தலும், பின்பு அபராந்ந காலத்தில்ஒருவேளே புசித்தலும், போசனுனந்த்தரம் பொற்றுமரை ஸ்நானம் செய்து, நியமானுஷ்டான பரர்களாய்த் திருமாலேத் திருப்பணி செய்தலும், சைவ சித்தாந்தசாஸ்திர சிரவணுதிகள் புரிதலும், அர்த்த சாமபூஜா காலத்திற்றவருது தரிசித்தலும், சொக்கநாதஸ்வாமி சுவர்ண ரத்தின மயமான சிவிகையூர்ந்து எழுந்தருளுந் திருக்கோலந் தெரிசித்துக் கொண்டு சென்று, மீனுக்ஷியம்மையாராலயத்தை யடைந்து திருப்பள்ளியறைப் பூஜா தரிசனஞ் செய்தலும், அது பரிபூர்த்தியானபின் புறம் போந்து ஆடிவீதி பிரதக்ஷிணஞ் செய்து சென்று நிராகார சீலர்களாய் திருமடத்திற் பூமியிற் சயனித்தலுமாகிய நித்திய நியமங்களே மேற்கொண்டு இந்நியமங்களில் ஒன்றேனும் ஒருசிறிதேனும் ஒருதினமேனும் ஒருகாலமேனும் தவருது திருவருளுடனின்று செலுத்த உள்ளக் கிளர்ச்சியோடு நடத்திவந்தார்கள்.

இப்படி வருங்காலத்திலே, சுவாமிகள் சிவாலயத்திருப்பணி செய்து பெரும்பேறடைதற்குரிய பெருந்தவம் பூர்வஞ்செய்துள்ள, அமராவதிப்புத்தூர் வயி. நா. க. ராம. வகையினரைப்பற்பல திருப்பணியிற் புகுத்தி யுய்விக்கத் திருவுளங்கொண்டு, முதலில் புஷ்பத்திருப்பணியிற் றெடங்குவித்து, அதனேத்தாங்களே வகித்து நடத்தி வந்தார்கள். அத்திருப்பணி நடந்து வர வர அவர்களுக்குப் பொருளபிவிருத்தி முதலிய லாபகரங்கள் மிகுந்து வந்தன.

அதன்பின், ஸ்ரீமீனுக்ஷியம்பாகோயில் முதற்பிரகாரத்து வடக்குத் திருமதில்

---

* இப்புறத் தொட்டித் தீர்த்தஸ்நானம் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசுரர் மகாபாதனுக்கு ஆக்ஞாபித்த முறையை அனுசரித்து மேற்கொண்டது.

மிகப்பழுதாயிருந்ததை நோக்கி அம்மட்டிலதனைச் சீரணோத்தாரணஞ் செய்விக்கலாமென்று மிகலெகுவாகச் சொல்லி இணக்கி அத்திருப்பணியிற் றொடங்குவித்தார்கள். அவர்களும் நமது சுவாமிகள் சொல்வனவெல்லாம், உத்தமோத்தம சிவ புண்ணிய விசிஷ்ட மாவதொன்றே, பொருள்விருத்தி முதலிய இன்மைப்பயன்களைத் தருதலும் தேரேதெரிகின்றோம் என்றெழுகின்ற உள்ளக் கிளர்ச்சியால் சுவாமிகள் சொல்வதைச் செய்வதில் அதிப்பிரியர்களாய் அத்திரு மதிற்றிருப்பணியைப் பூர்த்தி செய்தார்கள். அப்போதும் பொருள் விருத்தி முதலிய பற்பல நலங்கள் மேலும்மேலும் கைகூடி வந்தன, அதனுலவர்கள் மன ஊக்கந் தெரிந்து, அம் முதற் பிரகாரத்தளவரிசை இரண்டாம் பிரகாரத் தளவரிசை திருப்பள்ளியறை முழுதும் சொர்ணமய மாக்குதல் முதலிய திருப்பணிகள் செய்வித்தார்கள்.

அவைகள் பூர்த்தியானவுடன், அம் முதற் பிரகாரத் திருமதிலில் கல்வி யறிவில்லாரும் சாட்சி மாத்திரத்தில் கண்டின்புறவும், கற்றவர்களும் இவை, கேள்விப் பொருளைக் காட்சியளவையில் அனுபவமாகக் காட்டும் எடுத்துக் காட்டென்று கொண்டாடவும், பெரியபுராணத்தை அனுசரித்து உண்மை நாயன்மார்களது நாம ரூப சரித்திர விசேடங்களைச் சித்திர வரிசைகளாகத் தமது திருக்கரத்தாற் குறித்துக்கொடுத்து எழுதுவித்தார்கள்.

அதன் பின்பு, சுவாமிகோயில் முதற் பிரகாரத் திருமதில் பெலமாயிருந்தாலும், மண்டபங்கள் மிகப்பழுதாயும் பலமுடுக்குகளாயும் பிரகாரம் வருவதற்கு முட்டுப்பாடாயும் இருந்தமையால் அவை முழுதும் பிரித்துப் புதிதாகப்பிரகாரம் நேராய்வரும்படி ஒழுங்குபெறச் செய்து அத்தெற்குத் திருமாளிகைப் பத்தியில் அறுபத்துமூன்று நாயன்மார்களைப் பிரதிஷ்டை செய்யக் கருதி, அந்நாயன்மார்களிற் சில மூர்த்திகள் இல்லாமலும், உள்ள மூர்த்திகளுக்கும் பூசை முதலியன இல்லாமலும், இரண்டாம் பிரகாரத்து நிருதிமூலையில் கவனிக்கப் படாமலிருப்பதைக்கண்டு திருவுள்ளம் வருந்தி, அம்மூர்த்திகளுடன் மேலும் வேண்டிய மூர்த்திகளைச் சிற்ப முறைப்படி செய்வித்துப் பூர்த்தியாக்கி, மேற்கருதிய படி அத்திருமாளிகைபத்தியில் சிற்பவர்க்க முறைப்படி பீடமெடுத்து, அதன்மேல் அவ்வுண்மை நாயன்மார்களைப் பிரதிஷ்டை செய்வித்து, ஈசுரஷூ தைமீ கி. பி. 1878 நடந்த ஸ்ரீமீனுக்ஷிசுந்தரேசுரமஹா கும்பாபிஷேகத்துடன் கும்பாபிஷேகம் செய்வித்து, நித்திய பூசையும் அந்நாயன்மார்கள் திரு நட்சத்திரந்தோறும் விசேஷ பூசையும் நடத்திவரச் செய்தார்கள்.

அதன்மேல், சொர்ண ரத்தின ரசிதாதிகளால் ரிஷப கைலாச நந்தியாதி வாகனங்களும், முத்துக்கவச கீரீடகங்கண குண்டல கோளகாதிய திருவாபரணங்களும், இன்னும் பற்பல இன்றியமையாதவைகளும் செய்வித்தார்கள்.

அதன்மேல், சுவாமி சந்நிதியிலுள்ள பெரிய கீழைக்கோபுரம் பழுதாயிருப்பதைக்கண்டு, அதனுல்அபாயம்வருமென்று கருதி கவர்மெண்டார் அந்தமட்டிற் சித்திரைவீதியிற் சனங்கள் செல்லாமல் அடைத்துவைத்ததுமன்றி, அக்கோபுரத்தையும் இடித்துவிடுவதாகக் குறித்திருந்த சமயம், அக்கோபுரத்தினுள்ளேறிப் பார்க்கப் பயந்து எல்லாரும் ஒதுங்குவது தெரிந்து நமது சுவாமிகள் திருவருளே துணையாகத்துணிந்து, அதனுள் ஏறி எங்

கும் பார்த்து இதைப்பெலப்படுத்தலா மென்று நிச்சயித்துக்கொண்டு, வெளி வந்து வயி. நாக. ராம. நாகப்பச்செட்டி யாரவர்கள் வெங்கடாசலச் செட்டியாரவர் கள் இருவரிடத்தும், இக்கோபுரத்தை இடிக்க விடாமல் பாதுகாத்தற்கோர் உபா யம் உண்டு, அதற்கான செலவுதொகை யும் சுருக்கமாகச் செய்யலாம்: அஃதாவது ஒன்பது நிலையுள்ள இக்கோபுரத்தினது அடி நிலைமாத்திரம் முற்பக்கம் பிற்பக்கத் திலுள்ள நாலு துவார பாலகர்களையும், அந்த வரிசையிலுள்ள மற்றுஞ் சுதைகளை யும் தெளிவாகச் செய்து வர்ணம் வைத்து விட்டால், யாருக்கும் இடிக்க மனந்துணி யாதென்று இதமாகவும் பொருத்தமாகவும் எடுத்துச்சொல்லி, அச்சொல்நயத்தினு லேயே அவ்விருவரும் அதற்குடன்பாடு செயக்கண்டு, குறித்தபடியே அதிசீக்கிரம் செய்வித்துக் காட்டிய அளவில், அவ்விரு வரும் மிக மகிழ்ந்து, அக்கோபுர முழுவ தும் அவ்வாறு செய்ய மிகப்பெருந்தொகை செல்லக் கூடியதாயிருந்தும், இவ்விதமே இக்கோபுர முழுவதுஞ் செய்விக்க வேண்டு மென்று அவர்களே கேட்டுக்கொள்ள, அவ்வாறே ஒன்பது நிலையும் பரிபூர்த்தி செய்வித்து மேலும் அம்பாசந்நிதிக் கீழைக்கோபுரம் தெற்கு மேற்கு வடக்குக் கோபுரங்களையும் பெலப்படுத்தி அவ்வாறே செய்வித்து நிறைவேற்றினுர்கள்.

இத்திருப்பணிகள் நிகழும் காலமெல் லாம் நமது சுவாமிகள் நித்திய நியம மாக மேற்கொண்ட சுவர்ணபத்மினி ஸ்நா னுனுஷ்டான செப தபதியான பூஜாதிகள் அவ்வக்காலவெல்லை கடவாதுபுரிந்து, திரு வனந்தல் முதலிய காலங்கடோறும் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசசிவதெரிசனுதி செய்து வருகின்ற அக்காலங்களினிடையிடையே, கோபுரங்களிலேறிச் சிற்பர்கள் செய்து வருஞ் சுதாவிக்கிரகாதிகளைத் தங்கள் திருக்கரத்தால் திருத்திக்காட்டி அவ்வாறு செய்வித்தலும், அங்கங்கே சிவபரத்துவ விளக்கமாகச் சிவாகமாதிகளிலுள்ள சிவ சம்பந்தமான மூர்த்திகளைத் தாங்களே குறித்துக்கொடுத்து இன்னவிடத்துஇன்ன விக்கிரகங்களைச் செய்கவென ஆக்ஞாபித் துப் பின்னரும் நேரிற் பார்த்துத் திருத் தஞ்செய்தலும், பொற்றாமரையைச் சார்ந்த வடக்குத்திருமதிலில் ஆரம்பித்து அறு பத்துநான்கு திருவிளையாடல் சரித்திரங் களை, அப்புராணத்துக்கு இஃதோர் காட்சிப் புலனும் உரையென்று அறிஞரெலாம் வியப்பச்சித்திரரூபமாக எழுதுவித்து, யாவரும் அக்காலத்துநடந்த அத்திரு விளையாடல்களை இக்காலத்து நேரிற் காணப்பெற்றேமென்று மகிழச்செய்த லும், தங்களது அரும்பெரு மகிமை தெரிந்து தங்களைத் தரிசிக்கப்பெறுதலே பெரும்பேறென்று வந்து வணங்கும் உத் தம பக்தர்களுக்குச் சிவசாஸ்திரோபதே சஞ்செய்து, கற்றதனுலாயபயன் வாலறி வனுகிய சிவன் நற்றுடொழலே யென் றுண்மை விளக்கி, அதனை இறுகப்பற்றி நிற்கச்செய்தலும், "தாம் பிரமங்கண்டவர் போல் தம்மைக்கண்டாங்கதுவே, நாம் பிரமமென்பவர் பால்நண்ணுதே" என்பது முதலிய உண்மை நூல்களை யெடுத்து விளக்கி நாம் பிரமமென்னும் மாயாவாத முதலிய அந்நியசமயங்களிற் புகுதாமல் விலக்கச்செய்தலும், அத்தகைய உத்தம பத்தருள்ளே பெருஞ் செல்வர்களாயுள்ளா ரைக்கொண்டு திருநந்தனவனமுதலிய திருப்பணி செய்வித்தலுமாகிய இவைபோ லின்னும் பற்பல சிவகைங்கரியங்களையே செய்துவந்தார்கள்.

இத்தகைய சிவபுண்ணியமெல்லாஞ் செய்து முற்றினவர்களுக்கே உண்மை

நாயன்மாரது ஒப்புயர்வில்லாத் திப்பிய கைங்கர்யமாகிய உத்தமோத்தம சிவபுண்ணியங் கைகூடுமென்னும்உண்மை விளக்குதலாக, "உத்தமச் சிவபத்தரிற் பெரிதுத்தமர்களாய்ச் சைவப் பிரபுகுல சிரேஷ்டர்களாயுள்ள தேவகோட்டை மெ. வகையார் வயி. நாக. ராம. வகையார், மற்றும் அன்பர்களாகிய எல்லாருக்குந் தமது திருவுள்ளக் கருத்தைத் தெரிவித்து அவர் யாவருங்கொடுத்த பெரும் பொருள்கொண்டு ஸ்ரீ மீனுக்ஷியம்மையார் சந்நிதி வீதியிலே குருபூசை மடாலயம் செய்வித்து அதில் வெகுதான்யஹூ தைமீ"த்திலே கண்ணப்பநாயனுர் குருபூஜா விசேஷ சுபதினத்திலே, முன்னரே சிற்பவிதிப்படி தங்களாற் செய்விக்கப் பெற்ற உண்மை நாயன்மார் திருவுருவத் திருப்படம் பிரதிஷ்டை செய்வித்து நித்திய பூசையும் கண்ணப்பநாயனுர் குருபூசை முதலாக நைமித்திகவிசேஷ குருபூஜை முதலியனவும் நடத்தி, இவைகள் எப்போதும் நடந்துவருதற்குரிய மூலதனப்பெருக்கமும் நிறைத்து வைத்து, இத்தகைய உத்தமோத்தும சிவபுண்ணியப் பிரதிஷ்டாபகர்களும் பரிபாலகர்களுமாகிச் சைவசித்தாந்த சன்மார்க்க சற்சன சேவியர்களாய் வீற்றிருந்தருளினூர்கள்.

இந்தப்பிரகாரம் ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகள் மதுராபுரியின் எல்லைகடவாது வீற்றிருந்தருளித் தமது காலமுழுவதும் மனம் வாக்குக்காயங்கள் மூன்றினுலும் சிவகைங்கர்யம் செய்தமர்ந்த சிவநியமச் சிறப்பினுலும் நிர்மலாந்தக்கரண விசேஷ நிரந்தர சிவத்தியான ஞானயோக சீலத்தினுலும், தங்கள் காலமுழுவதும் சிவவிஷயமாகவே செலுத்திவந்தார்கள்.

இவ்வாறு ஸ்ரீ மெய்யப்பசுவாமிகள் முப்பத்தைந்து வருஷகாலம் சிவானுபூதிப் பெருஞ்செல்வர்களாய் நம்மனேர்க்கெல்லாம் சிவநியமநிதரிசன பூதர்களாய்; இம் மதுராபுரியெல்லை கடவாது வீற்றிருந்தருளிக், கலியப்தம் 4987 பார்த்திப ஹூ மாசிமீ" 5உ (15—2—1886) சோமவாரம் துவாதசி திதி திருவாதிரை நட்சத்திரம் மிதுனலக்கினம் கூடிய சுபதினத்திலே அகண்டாகார சச்சிதானந்த சொரூப ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசுவரர் திருவடி நிழலிற் கலந்தருளினூர்கள்.

இவர்களாற் செய்யப்பெற்ற திருமாலைத்திருப்பணி நியமமும், உண்மை நாயன்மார் குருபூசை நியமமும், திருநந்தனவனத்திருப்பணி முதலிய பலவகைத் திருப்பணிகளும் மதுரைத் திருபணியாளராகிய வயி. நாக. ராம. வகையாராலும் ராம. மெ. வகையாராலும் நடைபெற்றுவருகின்றன.

இவர்களாற் சைவசமயத்தில் சத்திய புத்தியும் சிவபக்தியும் திராவிடவேத பாராயண சிவபூசாதி சிவநியமமும் சிவ சாத்திர பிரக்ஞையும் பெற்றுச் சீடர்களாகும் பெருந்தவம வாய்ந்தோர் நம்மனேர் பலர்.

நம்மையெல்லாம் தங்கள் சீடர்களாக ஒப்புக்கொண்டு நம்மை வழிப்படுத்திய நமது குருமூர்த்திகள் ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகளாதலால் குருவைத் துதித்தல் உத்தம சிவபுண்ணியமென்பது பெரியோர்கள் ஆணையாதலால் குருஸ்துதி ரூபமாகிய ஸ்ரீ மெய்யப்பசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதியென்னும் நூலை அறிவிற் சிறியனுகிய தமியேன் குருப்பிரசாத சித்தியின் பொருட்டுச் செய்தேன்.

—○—

# மதுரைக் கோயிலில் வயிநாகரம் திருப்பணி

பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் *

தென் பாண்டி நாட்டில் தேவாரத் திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள் பதினுன்கனுள் திருவாலவாயாகிய மதுரைத் துவாத சாந்தத் தலமென்றும் இங்கு எழுந்தருளியுள்ள சொக்கலிங்கப் பெருமான் எல்லார்க்கும் முன்னே தோன்றி முளைத்தவன் என்றும், சைவப் பெரு நூல்கள் சாற்றுகின்றன. இத்திருத்தலத்துத் திருக்கோயில், திருக்கோபுரங்கள், மண்டபங்கள், தீர்த்தங்கள், வாகனங்கள் ஆகிய திருப்பணிகள் தேவர்கோனுகிய இந்திரன் முதல் மன்னர்கள் மாந்தர்கள் வரை, பல திருப்பணிச் செல்வர்களால் பண்டைக் காலந்தொட்டுச் செய்யப்பெற்று வந்துள்ளன.

'திருவாலவாயுடையார் திருப்பணி மாலை' என்னும் சிறிய நூலொன்றை மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர்களும் சிவ நெறியையும், செந்தமிழையும் தமது இரு கண்களெனப் போற்றி வந்தவர்களுமாகிய பாலவனத்தம் குறுநில மன்னர் பாண்டித்துரைத் தேவரவர்கள் பரிசோதித்து, செந்தமிழ்த் திங்களிதழின் வெளியீடாகத் தந்திருக்கிருர்கள். இந்த நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரவேச வகுப்பு மாணவர்களுக்குப் பாடமாக அந்தக் காலத்தில் இருந்தது. இதில் தேவேந்திரன் பல யுகங்களுக்கு முன்னர் பிரதிஷ்டை செய்த தங்கவிமானம் முதல் 18 ஆம் நூற்ருண்டில் அழகிரி நாயக்கர் அமைத்த மண்டபம் வரை, பல திருப்பணிகள் கூறப்பெற்றுள்ளன.

பாண்டி நாட்டை ஆண்டு வந்த நாயக்க மன்னர்கள் மதுரைத் திருக்கோயிலுக்குச் செய்த திருப்பணிகளுக்குப் பிறகு அதில் சரியான கவனம் வைத்து வேறு யாரும் அப்பணியை மேற்கௌ்ளாமையால் காலப்போக்கில் திருக்கோயில் சிற்சில பழுதுகளை அடையத் தொடங்கியது. அந்த வேளையில்தான் எனது முப்பாட்டனராகிய நாகப்ப செட்டியார் அவர்கள் மதுரைத் திருக் கோயிலைச் செப்பனிட்டுக் குடமுழுக்கு விழாச் செய்யத் திருவுளம் பற்றினுர்கள். செட்டி நாட்டில் திருக் கோயில் திருப்பணிகள் செய்த எல்லாச் செல்வர்களுக்கும் நாகப்பசெட்டியார் அவர்களே வழிகாட்டியாக இருந்தார்கள். அவர்கள் காலத்திற்கு முன்பு சிவதர்மங்கள் பலவற்றை நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் செய்து வந்தவர்களாயினும் திருக்கோயில் திருப்பணி என்பது நாகப்ப செட்டியார் அவர்களாலேயே முதன்முதலில் மேற்கொள்ளப் பெற்றது என்பதும் அங்ஙனம் மேற்கொள்ளப் பெற்றது மதுரைத் திருப் பணியே என்பதும் ஈண்டு நினைவு கூர்தற்குரியன.

---

* தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி, தத்புருஷ தேசிகர், தேவகோட்டை.

மதுரைத் திருப்பணியைத் தொடங்கி, பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது பாண்டிய நாட்டில் உள்ள பதிகம் பெற்ற மற்றைத் திருக்கோயில்களையும் பழுது பார்த்துப் புதுப்பிக்க இவர்கள் எண்ணிஞர்கள். அந்த எண்ணம் திருப் பரங்குன்றம் அம்பாள் கோவில், திரு வாதவூர் அம்பாள் கோவில், திருப்புத்தூர் அம்பாள் கோவில், திருவாப்பனூர்த் திருக் கோயிலில் சில பகுதி, திருக்கானப்பேர் சோமேசர் கோவில், திருவேடகந்திருக் கோயிலில் சிலபகுதி ஆகிய திருப்பணி கள் நிகழுமாறு செய்தது.

தன வணிக நாட்டில் அமராவதி புதூர் என்னும் ஊரில் வயிநாகரம் இராம நாதன் செட்டியாரவர்களின் மக்களாக நால்வர் தோன்றினர். நாகப்ப செட்டி யார், வெங்கடாசலஞ் செட்டியார், அண்ணு மலைச் செட்டியார், சுப்பிரமணிய செட்டி யார் என்பது அவர்களது திருப் பெயர் கள். இவர்களுள் மூத்தவர்களான நாகப்ப பரும் வெங்கடாசலரும் மதுரைக்கு வந்து சடாமுனி சந்திலுள்ள துட்டுக் கிருஷ்ணய் யர் வீட்டில் நூல் வியாபாரமும் ஜவுளி வியாபாரமும் நடத்திவந்தார்கள். அப் போது தங்களுக்கு இருந்த சிறிய பொருள் வசதிக்குத் தக்கபடி நாள்தோறும் அபிஷேகத்துக்கு அரைப் படி பாலும் சாத்துவதற்கு மாலைகளும் கோயிலுக்குக் கொடுத்து வழிபாடு செய்து வந்தார்கள். நாள் ஏறஏறப் பொருள் வசதியும் வாணிப வசதியும் மீனுட்சி அம்மையின் திருவரு ளால் மேலோங்கின. ஊதியமும் மிகப் பெருகியது.

ஒவ்வொரு நாளும் அர்த்த யாம தரிச னத்துக்குத் திருக்கோயிலுக்கு வரும் நிய மமுடைய இவ்விருவர்களுக்கும் இப்போது திருக் கோயிலிருந்த சீர்கேடான நிலை பெரிதும் வருத்தத்தைத் தந்தது. கி. பி. 1858-ல் மதுரைக் கோயிலிருந்த நிலையை எங்கள் குடும்பத்தில் பெரும்புல வராயிருந்த ‘வித்துவசிரோமணி’ இராம நாதன் செட்டியார் அவர்கள் சில பாடல் களில் எடுத்துச் சொல்லியிருக்கிறுர்கள். அவற்றில் “திருக் கோயில் முழுவதிலும் பகலில் ஒரே இருள் மயம். இரவில் தூண் விளக்குகள் மின்மினி போலக் கண் சிமிட்டிக்கொண்டிருக்கும். தேள், நட்டுவக் காலி, பாம்பரணை, பெருச்சாளி, உண்ணி, சுண்டெலி ஆகியவைகள் கோயிற்பகுதி களைத்திலும் கூடிக்கும்மாளம் அடிக்கும். வழிபாட்டிற்கு வரும் தொண்டர்களுக்கு இந்த விஷப் பிராணிகளால் அடிக்கடி துன்பம் நேரும். கோயில் வாசலில் விஷந் தீர்க்கும் மந்திரவாதிகள் வேப்பிலையும் கையுமாகப் பலரிருப்பர். அப்பொழுது மதுரைக் கலெக்டராக இருந்த ஸ்பென்சன் துரை அவ்விதப் பிராணிகளைக் கொன்று கொண்டு வந்தவர்களுக்குச் சன்மானங்கள் வழங்கினர். கோபுரங்களிலுள்ள மரங்கள் மைத்திருந்தன. தள வரிசை இருந்தும் இல்லாதனவாயின. தட்டோடுகள் வெடித்துத் தண்ணீர் சொட்டிக்கொண்டி ருந்தன. மண்டபங்கள் எல்லாம் கால் சாய்ந்து ஒதுங்கியிருந்தன,” என்னும் கருத்துக்கள் காணப்பெறுகின்றன.

1863-ஆம் ஆண்டில் மதுரைக் கோவில் நிர்வாகம் ஐந்து உறுப்பினர்கள் கொண்ட ஒரு குழுவிடம் அரசினரால் ஒப்படைக்கப்பட்டது. அக்குழுவுக்கு நாகப்ப செட்டியார் தலைவராக இருந்தார் கள். திருக்கோயில் நிர்வாகம் தமது பொறுப்பில் வந்தவுடன் நாகப்ப செட்டி யார் அவர்கள் தமது சகோதரர்களையும் கலந்தாலோசித்துக் கொண்டு திருப்பணி

செய்யத் தொடங்கினார்கள். முதலில்செய்த திருப்பணி சித்தி விநாயகர் கோயில் திருப்பணி. மீனாட்சி அம்மன் கோவில் முதற் பிரகாரத்தில் மதில் சாய்ந்திருந் ததைத் திருத்தஞ் செய்தார்கள். திருப் பள்ளியறை புதுப்பிக்கப் பெற்று ஊச லுக்குப் பொற்றகடு போர்த்தப் பெற்றது. கோயில் முழுவதிலும் தட்டோடுகள் பழுதுபார்க்கப் பெற்று வலிமை செய்யப் பெற்றன. மண்டபங்களின் இடைகளில் பாவு கற்களைத் தூக்கிச் சுற்றிலும் பல கணிகள் அமைக்கப்பட்டு இருட்படலங் கள் நீக்கப்பெற்றன.

இராஜ கோபுரங்கள் பன்னிரண்டி லும் வழிவழியாகத் தங்கி வாழ்ந்து கோயில்களிலும் சுற்றிலுமுள்ள மக்களுக் கும் பெருந் துன்பம் தந்து வந்த குரங்கு களெல்லாம் அப்புறப்படுத்தப்பெற்றன. எல்லாக் குரங்குகளையும் அப்புறப்படுத்து வதற்கு மேற்கொண்ட முயற்சி பெரு வியப்புத் தருவதாகும். குரங்குகளின் சேட்டையால் மனங்கலங்கிய திருப்பணிச் செல்வர்கள் அவற்றில் ஒன்றையேனும் கொலை செய்ய எண்ணினார்களில்லை. சாரா யக் குடங்களிலும், கட்குடங்களிலும் நிலக்கடலையை ஊற வைத்து, குரங்கு கள் எடுத்துத் தின்னுமாறு போட்டார்கள். எல்லாக் குரங்குகளும் நிலக்கடலை வாச னையில் மதிமயங்கி அக்கடலைகளைப் பொறுக்கித் தின்று மயக்கமடைய அவை களைத் தந்திரமாகப் பிடித்துப் பெட்டியில டைத்து நெடுந் தூரத்திலுள்ள மலைகளில் கொண்டுபோய் விட்டுவிட்டார்கள். பன்னி ரண்டு கோபுரங்களுக்கும் சுதை வைத்து வண்ணந் தீட்டிய செலவு எட்டு லட்ச ரூபாய்.

சித்திரை வீதி தெற்குத் திருமதிலை யொட்டித் திருக்கோயிலிடத்தில் உரிமை யோடு வாழ்ந்து வந்த பலரை அப்புறப் படுத்தினார்கள். சித்திரை வீதி திரு மதில் களைச் சுற்றி இருப்புக் கம்பி வேலியிட்டு அதில் பூஞ்செடிகள் வைத்து நந்தவன மாக்கினார்கள். சித்திரை வீதியை ஒழுங்கு படுத்துவதற்குச் செலவான தொகை ஒரு லட்சம். பதினாறுகால் மண்டபம், நூற்றுக் கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம், அட்டசத்தி மண்டபம் ஆகியவை பழுது பார்த்துப் புதுப்பிக்கப் பெற்றன.

திருக் கல்யாண மண்டபம் மிக அழகான முறையில் புதிதாகக் கட்டப் பெற்றது. அம்மண்டபத்தின் அலங்காரத் திற்கு நிலக் கண்ணாடிகள் முதலிய பல அலங்காரப் பொருள்கள் வாங்கி வைக்கப் பெற்றன.

பசுத் தொழு மண்டபம், ஆனைமால் மண்டபம், கிளி மண்டபம், வசந்தராயர் மண்டபம், முத்துராமலிங்கையர் மண்ட பம், கழுவேற்று மண்டபம், துவசத்தம்ப மண்டபம் ஆகியவைகள் திருத்தப்பட்டு திருப்பணி செய்யப்பெற்றன. தெப்பக் குளத்தின் மைய மண்டபம் பிரித்துத் திருத்தப் பெற்றது. பொற்றாமரைக் குளத்தங் கரையின் தள வரிசைகளும் ஆடி வீதிகளின் தள வரிசைகளும் அழகாகப் போடப்பெற்றன. புது மண்டபத்திலும் அட்சய மண்டபத்திலும் தட்டோடு பழுது பார்க்கப்பெற்று வர்ணந் தீட்டப் பெற்றது. பொற்றாமரைக்குப் படித்துறைகளும் கைப்பிடிச் சுவர்களும் அமைக்கப்பெற்றன. சுவாமி கோயில் முதற் பிரகாரத் திருமதிலில் அறுபான் மும்மை நாயன்மார்களின் வரலாற்றுச் சுதைச் சித்திரங்களும், கிளி மண்டபத் தட்டோடு அடிப்பகுதியில் மஹேஸ்வர

மூர்த்தங்களின் சித்திரங்களும், பொற்றாமரையின் வடக்கு கிழக்கு திருமதில்களில் திருவிளையாடற் புராண வரலாற்றுச் சித்திரங்களும் கண்கவர்வனப்பினவாய்த் தீட்டப்பெற்றன.

சுவாமி கோயில் முதற்பிரகார, இரண்டாம் பிரகாரத் தள வரிசைகள் புதிதாகப் போடப்பெற்றன. சுவாமி அம்பாளுக்குத் தங்க விமானங்களும், தங்கம் வெள்ளிகளாலான வாகனங்களும், திருவாபரணங்களும் செய்யப்பெற்றன. திருக்கோயில் தோன்றிய நாள் தொட்டுத் திருப்பணி நிறைவேறுதிருந்த மொட்டைக் கோபுரம் மக்கள் செய்த பல வகையான இடையூறுகளுக்கிடையில் சொக்கலிங்கப் பெருமான் புரிந்த திருவருளினுல் முழுக் கோபுரமாக ஆக்கப்பெற்றது.

வயிநாகரம் குடும்பத்தார் செய்த திருப்பணிகளின் விரிவுகளையும் திருவாபரணங்கள், வாகனங்களின் விளக்கங்களையும் முழுவதும் சொல்லுவதற்கு இச்சிறிய கட்டுரை இடங்கொடுக்காது. எல்லாத் திருப்பணிகளையும் தங்கள் குடும்பப் பொருள்களிலிருந்தே நாகப்ப செட்டியாரவர்களும் வேங்கடாசலஞ்செட்டியார் அவர்களும் செய்தார்கள். இதனை,

சீர்செய்த சித்திரைவீ திகள் நான்குக் குட்
பட்ட தெய்வக் கோவில்
ஆர்செய்தது? அரைக்காசு பெறும்கதவா
ணியும்பிறர்வந் தடித்த துண்டோ?
பேர்செய்த நாகப்ப பாண்டியனும் அவனு
டனே பிறந்த கீர்த்தி
வேர்செய்த வேங்கடா சலச் செழிய னும்
செய்து விளங்கி ஞரால்

என்ற பாடலறிவிக்கின்றது. இங்ஙனம் திருப்பணி, திருவாபரணம், வாகனம் ஆகிய எல்லாவற்றிற்கும் தங்கள் பொருளைப் பயன்படுத்திய நாகப்ப செட்டியாரவர்கள் சுவாமி அம்பாளுக்கு அபிஷேகம் செய்வதற்காக இரண்டு தங்கக் குடங்கள் நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் பொருளைக் கொண்டு செய்து வைத்திருக்கிருர்கள். இதை,

சிகரத்தார் விளக்கென்னச் செகத்தெல்லாம்
போற்றிசைக்கும் செல்வம் வாய்ந்த
நகரத்தார் சார்பாக ஞாலத்தாய் பாலூட்ட
நர்ஒன் ருலே
பகரத்தான் முடியாத பயோதரங்கள் இரண்டு
வைத்த பான்மை என்ன
மகரத்தார் கொடியாட்குப் பொற்குடங்கள்
இரண்டு செய்து வைத்தார் மன்னே

என்ற பாடல் தெரிவிக்கின்றது.

சேதுமன்னராகிய பாஸ்கர சேதுபதி அவர்கள் தந்த பொருளைக்கொண்டு அம்மன் தேரை அமைத்தார்கள் இவர்கள் திருப்பணிக் காலத்தில் 6-2-1878 ஈசுவர தை 26 ஆம் நாளில் மகாகும்பாபிஷேகம் நிகழ்ந்தது. மதுரைத் திருப்பணியின் பொருட்டு வயிநாகரம் குடும்பத்தார் அப்போது செலவு செய்த தொகை சற்றேறக் குறைய இருபத்தைந்து லட்சமாகும். இந்த இருபத்தைந்து லட்ச ரூபாய் தற்போதைய மதிப்புக்கு ஒரு கோடிக்கு மேற்பட்ட திருப்பணியைச்செய்தது என்பதும், இந்தத் தொகையில் கவனக் குறைவால் வீணுனது ஒரு சல்லி கூட இல்லை என்பதும், அத்தனை தொகையும் உசிதமான முறையிலேயே செலவு செய்யப் பெற்றது என்பதும், நினைவிலிருக்கத் தக்கனவாகும். "காசு வீணில் செலவிடார் உசிதமானதில் கன திரவியங்கள் விடுவார்" என்பது தனவணிகர் இயல்பல்லவா? நிலையாகச் செய்யப்பெற்ற இத்திருப்பணிகளுடன் குழித்தளிகைக் கட்டளை, அர்த்த சாமக் கட்டளை, பிரதோஷக் கட்டளை முதலிய நித்திய கட்டளைகளுக்கும் திருக்கல்யாண மண்டகப்படி முதலான நைமித்திகக் கட்டளைகளுக்கும் வயிநாகரம் குடும்பத்தார் பெரும் பொருளைப் பயன்படுத்தியிருக்கிருர்கள்.

# திருமலை நாயக்கர் திருப்பணிகள்

# 1623-1659

அ. கி. பரந்தாமனுர், M. A

### திருமலையின் பெருமை:

உயர்ந்த உருவம். பருத்தவுடல் பெருத்ததோள், சரிந்ததொந்தி, கடைந்தெடுத்த மூக்கு, முறுக்கியமீசை— இவை, திருமலைநாயக்கர் வடிவம். இரு மனைவியருடன் கூடிய திருமலையின் உருவத்தை மதுரை மீனுட்சியம்மன் திருக்கோயிலில் காணலாம்; திருப்பரங்குன்றம் திருமாலிருஞ்சோலைமலை திருவில்லிப்புத்தூர் கோயில்களிலே இவருடைய உருவத்தைப் பார்க்கலாம்; மதுரைப் புது மண்டபத்தின் தூணிலும் காணலாம்.

இவர் இறந்தும் இறவாத புகழ் பெற்றவர். மதுரை நாயக்கர் வரலாற்றை இயற்றிய பேராசிரியர் சத்யநாத ஐயர் M. A., திருமலையைப் பெருந்திறன் வாய்ந்த அரும்பெரும் மன்னரென்று பாராட்டியிருக்கிருர். ஏசுகழகத் தொண்டர்கள் அக்காலத்தில் எழுதிய கடிதங்களைத் திரட்டிச் சேர்த்து வெளியிட்ட பெட்ராண்ட் பாதிரியார், "மதுரையை ஆண்ட மன்னர்களுள் மலிபுகழ்மிக்கவர் இவர்" என்று குறிப்பிட்டிருக்கிருர். மதுரைத் திருப்பணிமாலை இவரை,

"பரராச சேகரன் பரராச பூஷணன்
பரராச திலகன்
பரராசர் பணிமுத்துக் கிருஷ்ணப்ப பூபனருள்
பால திருமலை பூபனே"

என்று போற்றுகிறது.

இவர் தம் வாழ்நாள் முழுவதும் பெரும் போர்களை நடத்திக்கொண்டேயிருக்கவேண்டியவராய் இருந்தார்; அப்போர்களுக்காகப் பெருஞ்செலவுசெய்ய வேண்டிய நிலையிலும் இருந்துவந்தார். இவர் எப்படி மதுரையம்பதியில் மீனுட்சியம்மன் கோயிலில் திருப்பணிகளையும் திருவிழாக்களையும் நடத்தவும், அழகிய அரண்மனையையும் சிற்பக்கலையழகுமிக்க அற்புதமான புதுமண்டபத்தையும் தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிதாக விளங்கும் அழகிய தெப்பக்குளத்தையும் அமைக்க ஏற்பாடு செய்தார் என்பது நம்மை வியப்புக் கடலில் ஆழ்த்தாமல் இராது. இவரது மாருத இறையன்பும் ஆருத கலையார்வமுமே இச்செயல்களைச் செய்துமுடிக்கத் தூண்டியிருத்தல் வேண்டும்.

### திருப்பணிகள்

இவர் வைணவராயிருந்தும் சமய வெறி இன்றிச் சிவன் கோயில்களுக்கும்



வைணவக் கோயில்களுக்கும் பல திருப் பணிகள் செய்துள்ளார். மீனுட்சியம்மன் கோயிலுக்கு இவர் மிகுதியாகத் திருப்பணி செய்திருப்பதைக் காண்கிறோம். மீனுட்சி யம்மன் சந்நிதியில் கிளிகள் இருக்கிற தெற்கு வடக்காயுள்ள ஒரு மண்டபம் இருக்கிறது. இது முன்பு கரியமாணிக்கப் பெருமாள் கோயில் சந்நிதியில் இருந்த தாம். கி, பி. 1311-ல் மாலிக்காபூர் படை யெழுச்சியில் முஸ்லீம்கள் அம்மண்ட பத்தை இடித்து விட்டார்களாம். அது சிதைந்த நிலையில் நீண்ட நாட்களாய் கிடந்ததாம். திருமலை, மதுரைக்கு வந்து நிலையாக மதுரையைத் தலைநகராக அமைத்து ஆட்சி செய்யத் தொடங்கிய தும், அச்சிதைந்த மண்டபத்திலிருந்த பெரிய அழகிய தூண்களையும் மற்றைய உறுப்புக்களையும் பெயர்த்துக் கொண்டு வந்து அங்கயற்கண்ணி அம்மன் சந்நிதியில் கட்டினுர். இம்மண்டபம் கரிய மாணிக்கப்பெருமாள் சந்நிதியில் இருந் தது என்பதற்கு அக்கால்களே போதிய சான்றுகளாகும். வைணவக் கோயில்களில் காணக்கூடிய அனுமார், பஞ்சபாண்டவர் உருவங்கள் அத்தூண்களில் பொறிக்கப் பட்டுள்ளன. சிதைந்த கரிய மாணிக்கப் பெருமாள் சந்நிதி பிற்காலத்தில் ஒருவாறு செப்பனிடப்பட்டது. ஆனுல், இதில் பெருமான்சிலை வைக்கப்படவில்லை. இக் கரிய மாணிக்கப்பெருமாள் சந்நிதியில் தான் இப்போது வாரவழிபாடு நடை பெற்றுவருகிறது.

திருமலைநாயக்கர் பின்னும் மீனுட்சி யம்மன் திருமுன்பு அறுகாற்பீடத்தில் இருபெருவாயிற் காவலர் (துவாரபாலர்) உருவங்களையும், சொக்கநாதர் திருமுன்பு அறுகாற்பீடத்தில் இருபெரு வாயிற் காவலர் உருவங்களையும் செய்துவைத்தார்; மேலும் அவ்விருவிடங்களிலும் கொடிக் கம்பங்களையும் (துவஜஸ்தம்பங்கள்) அமைத்து அவற்றிற்குப் பொன்னுல் கவ சம் செய்து மாட்டி அணிசெய்தார். இச் செய்திகளைத் திருப்பணி மாலைச் செய்யுட்கள் குறிப்பிடுகின்றன. மேலும் திருமலை, மீனுட்சியம்மன் கோயிலின் இடி பட்ட பகுதிகளைப் புதுப்பித்த அழகையும் அழுத்தத்தையும் திருப்பணிமாலை சிறப் பித்துக் கூறுகிறது. இவர் ஒடிந்த பழங் கற்களையும் உத்திரங்களையும் பிடுங்கி விட்டுப்புதியவற்றை அமைத்து, அரைத்த சுண்ணும்பை வெல்லச்சாறு விட்டு நன்ருகக் குழைத்துச் செங்கற்களை அடுக் காகப் பரப்பிக் கடுக்காயுடன் நெல்லிக் காய், தான்றிக்காய், உழுந்து இவற்றை ஒருமுறை இடித்து நன்னீரில் ஊறிய கடுஞ்சாறும் விட்டு ஊழிக்காலங்களிலும் அசையாத வச்சிரக்காரை இட்டு இடிபட்ட பகுதிகளைச் செப்பனிட்டுப் புதுப்பித்தார்.

**நிர்வாக சீர்திருத்தம் :**

திருமலை நாயக்கர் காலத்தில் மதுரைக் கோயில் ஆட்சி அபிடேக பண் டாரம் என்பவரிடம் இருந்ததாம். பண் டாரத்தின் ஆட்சியில் கோயில் சீர்கேடான நிலையில் இருந்தது. நாயக்கர் அப்பண்டா ரத்திடமிருந்து ஆட்சியை எடுத்துக் கொண்டு, கோயிலில் நாட்பூசைகளும் விழாக்களும் சிறப்பாக நடைபெறுவதற் குப் பல கட்டளைகளை ஏற்படுத்தியதோடு நீண்ட நாட்களாகக் கோயில் பட்டர்களுக் குள் பூசை செய்வது குறித்தும் மரியாதை பெறுவது பற்றியும் இருந்து வந்து பூசலை அகற்றிப் பட்டர்கள் நிருவாகத்தை ஒழுங்கு செய்து வைத்தார். இவ்வேற் பாடுகளால் கோயில் ஆட்சியில் ஒழுங்கும் அமைதியும் உண்டாயின.

**விழாக்களும் அணிகலன்களும் :**

நாயக்கர் இவ்வாறு பட்டர்கள் நிருவாகத்தை ஒழுங்கு செய்த பின்பு கோயிலில் நான்கு பெருவிழாக்களும் திருவிளையாடல் விழாக்களும் நடத்த ஏற்பாடு செய் செய்தார். இவ்விழாக்களை நடத்துவதற்காக இரத்தினத்தாலும் நன் முத்தாலும் செய்யப்பெற்ற குதிரை வாகனத் தலை முடிப்பாகை, இரத்தினக் கொண்டை, திருக்கலியாண முடி, நீல நாயகப் பதக்கம், குதிரை இரத்தின அங்கவடி, வீர கண்டை, இருதலைப் பட்சிப் பதக்கம், இரத்தின சூரிய காந்திப்பூ, இரத்தின வெண்டயம், நாகர் ஒட்டியாணம், குசாந்தரப் பதக்கம், துரைப் பதக்கம், சங்கு சக்கரப் பதக்கம், இரத்தினச் செங்கோல், பள்ளியறைக் காளாஞ்சி, சொர்ண கும்பா, பவளக்கொடி மாலை ஆகிய திருவாபரணங்களையும் செய்து கொடுத்தார்.

**மாசி விழாவை சித்திரைக்கு மாற்றியது:**

திருமலை நாயக்கர் காலத்துக்கு முன்னிருந்து மீனாட்சியம்மன் திருக்கலியாண விழாவும் தேரோட்ட விழாவும் மாசித் திங்களில் நடந்து வந்தன. நாயக்கர் இரண்டு பெரிய தேர்களைச் செய்து வைத்தார். மாசித் திங்கள் அறுவடை காலமாயிருந்ததால் தேர்களை இழுப்பதற்கு ஆள் கிடைப்பது அரிதாயிற்று. அக்காலத்தில் சித்திரா பௌர்ணமிக்குக் கள்ளழகர் பரவைக்கு அருகிலிருக்கும் தேனூர் வரை வந்து போவது வழக்கமாயிருந்தது. சித்திரைத் திங்கள் இளவேனிற் காலமாக இருந்ததாலும் மக்களுக்கு அறுவடை முடிந்து ஓய்வு காலமாக இருந்தமையாலும், பல ஊர்களிலிருந்து மக்கள் தேனூருக்கு ஆயிரக்கணக்காக வந்துகொண்டிருந்தார்கள். அதைக் கண்ட நாயக்கர் மாசித் திங்களில் நடந்து வந்த மீனாட்சியம்மன் திருக்கலியாண விழாவையும் தேரோட்டத்தையும் பெருமளவில் மக்கள் வந்து காணும்பொருட்டு அவை சித்திரா பௌர்ணமி விழாவையொட்டி நடைபெறவும், சித்திரையில் நிகழ்ந்துகொண்டிருந்த விழாவை மாசியில் நடக்கவும் மாற்றிவைத்தார்; இத் திருவிழாவிலேயே எட்டாம் நாளன்று மீனாட்சியம்மையார்க்கு முடிசூட்டுவிழாவையும் நடத்துமாறு செய்தார். தேனூர் வரைக்கும் சித்திரா பௌர்ணமிக்கு வந்து கொண்டிருந்த கள்ளழகரை மதுரை வண்டியூர் வரைக்கும் வருமாறு செய்தார். இவ்வாறு செய்ததால் சித்திரைப் பெருவிழா 5 லட்சம் மக்கள் கூடும் மிகப் பெருவிழாவாயிற்று.

மேலும் அவர் சோம சுந்தரப் பெருமான் மதுரையில் நிகழ்த்திய திருவிளையாடல்களையும் விழாக்களாக நடத்தவும் ஏற்பாடு செய்தார்; புரட்டாசித் திங்களில் அரண்மனையில் மிகச் சிறப்பாக நவராத்திரி விழாவில் தாம் கொலுவீற்றிருப்பது போலவே, திருக்கோயிலிலும் மீனாட்சியம்மன் கொலுவீற்றிருக்குமாறு செய்தார்.

**தெப்பக் குளமும் கட்டடங்களும்:**

திருமலை மன்னர் மதுரைக்கு வந்து ஆட்சி செய்யத் தொடங்கியதும் முதல் முதலாகச் செய்தது வண்டியூர்த் தெப்பக் குளத்தை வெட்டுவித்ததாகும். இந்தத் தெப்பக் குளம் தெற்கு வடக்கில் 1000 அடி நீளமும் கிழக்கு மேற்கில் 950 அடி அகலமும் 9½ லட்சம் சதுர அடிப் பரப்பும் உள்ளது. குளத்தின் நடுவில் அழகான மைய மண்டபம் உண்டு. இத்தெப்

பக் குள வேலை கி.பி. 1635 ஆம் ஆண்டில் பிப்ரவரித்திங்களில் முடிவு பெற்றது. கோயில் திருப்பணிக்கு மண்ணெடுத்த இடம் தெப்பக்குளமாயிற்று என்று சிலர் இத்தெப்பக் குளத்தைப்பற்றிய தவறுன செய்தியைக் கூறிவருகின்றனர். தெப்பக் குளம் வெட்டவே நடந்தது இத்திருப் பணி.

இத்தெப்பக் குளத்தை வெட்டி முடித்தபின்பு அவர் தமது பிறந்த நாளாகிய தைப்பூசத்தன்று முற்குறித்தவாறு தெப்பத் திருவிழா நடத்த ஏற்பாடு செய்து வைத்தார். இத் தெப்பக் குளத்தை வெட்டியபோதுதான் அவ்விடத்தில் ஏறக்குறைய 6 அடி உயரமும் 4 அடி அகலமும் உள்ள ஒரு மிகப்பெரிய விநாயகர்சிலை கிடைத்தது. அவ்விநாயகர் சிலை சோம சுந்தரப் பெருமான் கோயிலில் தெற்கு, திருச்சுற்றில் வைக்கப்பட்டிருக்கிறது. அவ்விநாயகரை முக்குறுணிப் பிள்ளையார் என்பர். அப்பிள்ளையாருக்கு 18 படி அரிசியில் மிகமிகப் பெரிய கொழுக்கட்டை செய்து படைப்பதுண்டு.

புது மண்டபம் நாயக்கர் கட்டிய சிறந்த கட்டடங்களுள் ஒன்று. இது 1628 மே திங்களில் தொடங்கப்பெற்று 1635 மே திங்களில் முடிவுற்றது. இதை சிற்ப வேலைப்பாடுகளுடன் கட்டி முடிக்க ஏழு ஆண்டுகள் சென்றன. வசந்த விழா நடைபெறுவதற்காக இம்மண்டபம் கட்டப்பட்டதாக மதுரைத் திருப்பணி மாலை கூறுகிறது. இம்மண்டபம் 333 அடி நீளமும் 105 அடி அகலமும் 25 அடி உயரமும் உள்ளது. இதில் 124 சிற்பத் தூண்கள் இருக்கின்றன. இதன் உள் வரிசைத் தூண்களில் திருமலை முதலிய பத்து நாயக்கர்களுடைய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இப்புது மண்டபத்தைக் கட்டிய சிற்பி சுமந்திர மூர்த்தி ஆசாரி என்பர்.

புது மண்டபத்தை முடித்துச் சில ஆண்டுகளான பின்பு திருமலை மன்னர் கி.பி. 1654 ல் நான்கு சித்திரை வீதிகளையும் உள்ளடக்கிக் கோயிலைப் பெரிதாக்கக் கருதி இராஜ கோபுரத்தைத் தொடங்கி வைத்தார். நாயக்கர் காலமாய்விட்டதால் அத்திருப்பணி நிறைவேறுமல் நின்றுவிட்டது. இராஜ கோபுரம் 60 அடி உயரமிருக்கிறது. "இக்கோபுரம் முடிந்திருந்தால் இந்தியாவிலிருக்கும் மிகச் சிறந்த கட்டடங்களுள் இதுவும் ஒன்ருக விளங்கும்" என்று மதுரை நகரவை ஆணையாளராக இருந்த ஷெணய் அவர்கள் தமது கோயில் நகரமான மதுரை என்னும் ஆங்கில நூலில் குறிப்பிட்டிருக்கிருர்.

திருமலை நாயக்கர் மஹால், திருமலை கட்டிய அற்புதமான அரண்மனையாகும். இதனைத் தென்னகத்துத் தாஜ்மஹால் என்பர். இந்த மஹால் அல்லாமல் திருமலை மதுரை நகரில் ஓடும் வையையாற்றுக்கு வடக்கில் தமுக்கம் என்ற கோடை விடுதியைக் கட்டினுர். இப்பொழுது இது காந்தியடிகளார் பொருட்காட்சிசாலையாக மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது.

**திருமலையின் முடிவு:**

கி. பி. 1584-க்குச் சரியான பார்த்திப ஆண்டு தைத் திங்கள் பூச நல்லோரையில், வடுகரான விசய நகர நாயக்கர் பரம்பரையில், முத்துக்கிருஷ்ணப்பராயருக்கு இரண்டாவது புதல்வராகப் பிறந்து, கல்விகேள்விகளிற் சிறந்து, தம் தமையனுராகிய முதலாம் முத்து வீரப்பருக்குப் பின் தமது 39 வது வயதில் கி.பி. 1623ல்

அரியணை ஏறி, மதுரை மீனாட்சியம்மன் கோயில், திருப்பரங்குன்றத்துப் பெரும் பெயர் முருகன் திருக்கோயில், வில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருவரங்கம் பெரிய கோயில், கள்ளழகர் கோயில் ஆகிய இவற்றில் திருப்பணிகள் செய்து மதுரைக் கோயிலில் சில இடங்களில் புதுப்பித்ததோடு அதில் பல சீர்திருத்தங்களை உண்டாக்கிப் பல திருவிழாக்களை நடத்துமாறு கட்டளைகளை ஏற்படுத்தி மதுரையைத் தலைநகரமாக்கியதால் புது மண்டபம், கோடை விடுதி (தமுக்கம்) மஹால், தெப்பக்குளம், இவை அமைத்து தலைநகராக்கி ஐந்து போர்களிலும் வெற்றிபெற்று விளங்குமாறு நின்று, 36 ஆண்டுகள் மதுரைப் பெருநாட்டை ஆட்சி புரிந்த பெருமை மிக்க நாயக்கர், முழுவுரிமையைப் பெற முயன்று வெற்றி கண்ட வீரர். தமக்குப் பின் வருவோர்களை உரிமை வேந்தர்களாய் ஆளுமாறு செய்த வித்தகர், 200 மனைவிமார்களோடு வாழ்ந்த திருமலை மன்னர், அந்தோ! தமது 75வது வயதில் கி.பி. 1659 பிப்ரவரிக்குச் சரியான விளம்பி ஆண்டு மாசித் திங்கள் 4 ஆம் நாள் இறவாப் புகழை நிறுவி மண்ணுலக வாழ்வை விட்டு மறைந்தார்.

## இது என்ன ஆச்சரியம்!

பாடல் மறையும் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டான் என்னே!
கூடல் போலக் கொடியேன் அகமும்
ஆடல் அரங்கா அமர்ந்தான் என்னே!

நீல வண்ணன் தேரு நிமலன்
ஆல வாயில் அமர்ந்தான் என்னே!
ஆல வாயான் அலரில் வாசம்
போல்என் உளமும் புகுந்தான் என்னே!

— பரஞ்சோதி முனிவர்
திருவிளையாடற்புராணம்

# கோயில்
# பாரத நாட்டின் உயிர்நிலை

கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரி

மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர் கோயில் கும்பாபிஷேகம் 28-6-63ல் நிகழ இருப்பது அளவற்ற மகிழ்ச்சியைத் தருகின்றது. பாரதநாட்டு மக்கள் ஒவ்வொருநாளிலும் மதுரை மீனாட்சி கஞ்சி காமாட்சி காசி விசாலாட்சி என்று கூறுவது யாவரும் அறிந்த சிறந்த உண்மை. தெய்வீக அருள்தான் நமக்குள் யாவர்க்கும் உயிர்க்குயிர். காசிமுதல் ராமேச்வரம் வரையிலும் உள்ள புனிதமான திருக்கோயில்கள் தான் பாரதநாட்டுப் பண்பின் வளர்ச்சிக்கும், கலை இலக்கியம் பக்தி தத்துவ ஞானங்களின் பெருமைக்கும் உயிர்நிலை—மூல காரணம். கங்கை முதல் தாம்பரபர்ணி வரையிலும் காசி முதல் கன்னியாகுமரி வரையிலும் உள்ள புனிதமான ஆறுகளாலும் கோயில்களாலுந்தான் பாரதநாடு புனித நாடாக ஏற்பட்டது. தீர்த்த க்ஷேத்திரப் பெருமைகளை நம்மவர்கள் போற்றுவது தொன்றுதொட்டே வந்த மரபு. வால்மீகி ராமாயணத்தில் தசரதர் இராமரை இளவரசராக ஏற்படுத்த முயன்றபொழுது, அந்த வைபவத்திற்கு முந்தியநாள் இரவில் இராமர் நாராயணன் கோயிலில் வழிபட்டு வணங்கித் தியானஞ் செய்தார் என்று கூறப்பட்டிருக்கின்றது. மாணிக்கவாசகர் திருவாசகத்தில் ஒவ்வொருவனும் தன் மனதைக் கடவுளுடைய திருக்கோயிலாக அமைத்துக் கொள்ள வேண்டுமென்ற நல்லுரையை நாம் கவனிக்கின்றோம்.

"இன்பம்பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பந் தொடர்பறுத்து, சோதியா—அன்பமைத்து
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து."

---

## இவளே கடவுள்

தவளே இவள்எங்கள் சங்கரனார்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக்கு அன்னையும் ஆயினள் ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்
துவளேன் இனிஒரு தெய்வம்உண்டாக மெய்த் தொண்டுசெய்தே.

— அபிராமி பட்டர்,
*அபிராமி அந்தாதி*

# கோயில்களும் கலைகளும்

K. சந்திரசேகரன், M. B., B. L.

இந்தியக் கலை Indian Art தனிச் சிறப்புக்கொண்டதென்பது இன்று உலகெங்கும் பிரசித்தம். கலைச் சிருஷ்டிகளை இன்று பொருட்காட்சிகளிலும் கண் காட்சிகளிலும் அதிகம் காண்கிறோம். இந்தப் பழக்கம் மேலைய நாடுகளிலிருந்து வந்துள்ளது. இந்தியப் பண்பாட்டின் அடிப்படையில் கலைகளுக்குக் கொடுத்திருந்த மதிப்பு ஒருகாலத்தில் மிகவும் அதிகம் என்பதை மெய்ப்பிக்கின்றன கோயில்கள். அவ்விடங்களில் எல்லாக் கலைகளின் சேர்க்கையை வெகு அழகாய் அமைத்துப் பரிபாலித்தவர்கள் நம்மவர்கள். அதிலும் தென்னாட்டின் கோயில்களே அருமையான நிருமாணங்களாய் அமைந்திருப்பதும் கலைகளின் அதிசயமான வளர்ச்சிக்கு இடம் தந்துள்ளதும் ஆகும்.

வாழ்க்கையும் கலையும் தனித்தனியாய்த் திகழ்வதாய் நம்மவர்கள் எண்ணியதேயில்லை. வாழ்க்கை வேறு கலைவேறு என்பதே இந்நாட்டில் தொன்று தொட்டு வந்த மரபில் கிடையாது. ஆதிகாவியமான வால்மீகி இராமாயணம் வாழையடி வாழையாய் இந்நாட்டுமக்களின் வாழ்க்கைத் தருமத்தின் ஆணிவேராக ஊன்றியுள்ளதை நினைத்துப்பார்க்கவேண்டும். மேலும், சீதையைப்போன்ற கற்புக்கரசிகளின் அடிச்சுவட்டையே பின்பற்றிய பெண் இனம் இங்குள்ளது. இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் நம் நாட்டில் வாழ்க்கையையும் இலக்கியத்தையும் ஒன்றிய இலட்சியங்கள் படைத்தவைகளாய்க் கருதிவந்ததே. மேலைநாகரிகம் கரைபுரண்டு ஓடி நம்மை அடித்திருக்கையிலும், பெண்கள் சுதந்திரத்தின் புதிய மோகங்களில் சிக்கியிருப்பினும் வாலிபர்கள் விஞ்ஞான அறிவின் முதிர்ச்சியினால் சிறிது மரபின் எல்லைகளைக் கடக்க எண்ணுகையிலும், பழைய நாகரிகத்தின் அழியாச் சின்னங்களாய்க், கோயில்களும், கோயில் வழிபாடுகளும் குறைவின்றிக் கண்காணிக்கப்படுவதை நல்ல சகுனங்களாகவே நாம் கருதவேண்டும். கோயில்களில் திருப்பணிகள் இன்று வழி வழியாய் வந்துள்ள மரபையொட்டித் திகழ்கின்றதையும் பார்க்கிறோம். எல்லாம் நன்மையை ஒருபக்கம் அளித்துக்கொண்டே வருகின்றன.

பொருட்காட்சி என்றோரு இடத்தில்தான் கலை சிருஷ்டிகளை வைக்கின்றார்கள் இன்றுள்ளவர்கள். பழைய காலத்தில் கோவில்களில் காணாத கலை வடிவங்களும், கலை சம்பந்தமான நிகழ்ச்சிகளும் வேறு இடங்களில் அவ்வளவு அதிகம் இருக்கா. சிலை செய்யும் அரிய நுட்பமான திறமை கோயில்களில் பார்க்கும் இடங்களிலெல்லாம் வெளிப்படுகின்றது. சிறு கல்லையும் உயிருடன் உருவமாய் அமைக்கும் ஆற்றல் சிற்பிகளுக்கு சுபாவமாய் இருந்திருக்கவேண்டும். இல்லையேல், மனித உருவமும், தெய்வ வடிவமும், பட்சிகளும் மிருகங்களும், கொடிகளும், மலர்களும், இன்னும் எவ்வளவோ தேவர்களும் அரசர்களும் வித்தியாசமின்றிக் கோயில் கோபுரங்களை அழகு செய்ய இயலுமா? கடவுள் படைப்பில் இத்தனை சிறு சிறு வித்தியாசங்களும், பேதங்களும் உண்டென்றால், கோபுரங்

களை நிருமாணித்த மனிதர்களும் இவ் விதமேதான் செய்துள்ளார்கள். வாழ்க்கையைத் தனியாக நினையாதபடி கலையும், வாழ்வும் ஒன்றேடொன்று இணைந்துள்ளதென்னும் உண்மையை வெளியிடும் அதிசயங்களில் ஒன்று கோயில்கோபுரம்.

தெய்வீக அம்சம் கோயில் கலை வடிவங்களில் காண்பதைப்போல வேறு எங்குமே காணுது. தெய்வத் திருக்கோலங்களை மதுரை மீனுட்சிஅம்மன்கோவிலில் காணுவிட்டால், வேறு இடங்களில் காண முடியாதுதான். மீனுட்சி தேவியின் திருக்கல்யாணத்தின் வைபவம் சிலைகளில் நேர்த்தியாய்த் தென்படுவதைப் பார்த்துப் பார்த்துத் திகட்டாதுதான் அனுபவிக்கிறேம்.

எதிரில் பத்திரகாளியைப் பல கைகளுடனும் அவைகளில் ஊன்றிய நீண்ட ஆயுதங்களுடனும், கடவாய்ப்பற்களின் கூர்மையுடனும் தெரியும் முகப்பொலிவுடனும் காண்கிறேம். கர்மாவை மனிதன் செய்யத் தவறுதல் கூடாது, ஆயினும் கருமாவின் பயனைத் தனதாகக் கொள்ளக் கூடாது. பயனை நினைத்துச் செய்வதை ஒழிப்பதே வாழ்க்கையின் தருமம் என்பது பகவத் கீதையின் சாரம். இதனையும் நினைப்பு மூட்டுவது காளியின் வதனத்தில் திகழும் அமைதி. கையிலுள்ள சூலம் கீழே அரக்கனைக் குத்திக்கொல்லும். ஆயினும் முகத்தில் துளியும் ஆயாசமோ அவசரமோ தெரியவில்லை. அமைதி ஒன்றே நிலைத்திருப்பதைப் பார்க்கையில் தான் கீதையின் தத்துவமும் சிற்பிகளிடம் உட்புகுந்திருப்பது வெளியாகின்றது.

கோயில்களில் தெய்வ வழிபாட்டின் முறைகளில் நாட்டியம் முக்கிய இடம் பெற்றுள்ளதை இன்றும் கவனித்தால் புலனுகும். தெய்வத்தின் அருளை அடக்கிக்கொண்டுள்ள தமிழ்த் திருவாசகங்களையும், தெய்வக் கலையான பரதநாட்டியத்தின் எல்லையில்லாத கருத்தோவியங்களையும் கோயில்களில் மட்டுமே ஒரு காலத்தில் வைத்திருந்தார்கள். பரதமுனியையே மறக்கடிக்கும் தற்கால நாட்டியங்களைக் காணுகையில்தான், எவ்வளவு தூரம் நாமும் கலையிலிருந்தும், பண்பாட்டினின்றும் வழுவியுள்ளோம் என்பது தெரியும்.

அன்ருடம் உபயோகிக்கும் வீட்டுச் சாமன்களான பாத்திரங்களிலும், சிக்குப் பலகைகளிலும் செய்துள்ள சகல வேலைப்பாடுகளைக் கவனித்தால் தெரியும், வாழ்க்கையின் ஊடே ஊடுருவிச் சென்றிருந்த கலையின் அற்புத உணர்ச்சி. எதை மனிதஉள்ளம் படைப்பதாயினும், உள்ளப் பெருக்கையே தான் அதில் வடிக்க வேண்டுமென்பது இங்குள்ள கலைத் தத்துவமானதால், வாழ்க்கை மேம்படுவதற்கான பற்பல உபாயங்களாகவே எல்லாக் கலைகளும் உருவாயின.

கோயில்களில் சிற்பம், கட்டடக்கலை, நாட்டியம், சங்கீதம், இன்னும் புஷ்ப மாலைகளைப் புனைவது, விளக்குகளை வரிசையாய் ஏற்றுவது போன்ற சிறியசிறிய விதரணையான செயல்களும் மண்டிக் கிடந்தன. ஒருவன் மனத்தைத் தன்னைப் படைத்தவனுடன் ஈடு படுத்தத்தேடிய கருவிகளில் கலைகளைப் போன்ற சாதனங்கள் முக்கியமானவை; அவைகளையும் கடவுள் வசிக்கும் திருக்கோயில்களிலேயே வளர்ப்பது போன்ற உயர்ந்த பழக்கங்களைப் பேணியவர்கள் நம் நாட்டவர்கள். அவர்களிலும் தென்னுட்டவர்கள் முக்கியமானவர்கள்.

ஆலயங்கள் இவ்வளவு பெரியபெரிய இடங்களாக இதர நாடுகளில் இருப்ப தில்லை. ஒரு நகரத்தின் எல்லாப் பாகங் களையும் கோயில்களில் காணலாம். அழ கான பண்டங்களையும், பொருள்களையும் சேமித்துள்ள விற்பனையாளர்கள் கூட கோயில்களில் தங்களுக்கான இடவசதி களைத் தேடிக்கொள்வார்கள்.

அருமையான நாதசுரவாத்தியம் தென்னாட்டு உற்சவங்களில் பரிமளிப் பதைப் போல் வேறு மேடைகளிலும் சுவைக்கப்படுவதில்லை. காரணம், தெய் வத் திருக்கோலங்களுக்கு இசைந்தவாறு அந்த வாத்தியத்தின் ஓசையும், கம்பீர மும் வெளியாகுவதே. மத்தளம், தவுல், இவைகளின் இடி முழக்கமும் ஜனக்கூட் டங்களில் ரசிக்கப்படுவதைப்போல் பெரிய கூட்டங்களில் இருப்பதில்லை.

நாட்டியமும் சங்கீதமும் தெய்வத் திற்கு அர்ப்பணிக்கப்படும் கலைகளாயின் அவைகளை இருப்பிடமாக்கிக் கொண்டுள் ளவை கோயில்களே. தென்னாட்டுச் சரித்தி ரத்தின் கலை ஏடுகளைப் புரட்டினால், எவ் வளவு வாத்தியக்காரர்களும், நாட்டியக் காரிகளும், நட்டுவனார்களும் கோயில் சம் ரட்சணையால் கலையை விடாது பெருக்கி வந்துள்ளார்கள் என்பது தெரியவரும்.

இன்று வேண்டுமானால் மக்கள் முன் னணியில் கலைகளுக்கு தொண்டு செய் வதன் பொருட்டு, அவைகளின் மரபுகளை யும் சம்பிரதாயங்களையும் மாற்றி இருக் கலாம். ஆனால் என்றென்றும் நிலைத் துள்ள பரமனையே ஒவ்வொரு கலையும் இங்கு ஆடிப் பாடிக் கூவி அழைப்பதை மாற்ற, சற்றும் இயலாதுதான். அவ்விதம் மாற்ற முயன்றால், கலைகள் இந்தியக் கலையின் தனிச் சிறப்பை, திலகமாய் நெற்றியில் இட்டுக்கொண்டு காணா என்பது ருசுவாகும்.

---

## கயவர்தம்மோடு என்ன கூட்டு ?

விழிக்கே அருள்உண்டு அபிராமி வல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்குஅவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து, பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோடுஎன்ன கூட்டுஇனியே.

## உனக்கே பரம்

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது
ஒன்றேயும் இல்லை, உனக்கே பரம், எனக்கு உள்ளவெல்லாம்
அன்றே உனதுஎன்று அளித்துவிட்டேன்; அழி யாதகுணக்
குன்றே அருட்கட லேஇம வான்பெற்ற கோமளமே.

— அபிராமி பட்டர்
*அபிராமி அந்தாதி*

# கோயில் வளர்த்த கலைகள் – ஓவியம்

மே. சு. இராமசுவாமி, B. A., B. L.

"கடவுள் கணக்கற்ற தோற்றங்கள் வாயிலாக வெளிப்படுகிறார். அவரது ஒவ்வொரு தோற்றமும் என் வணக்கத்துக்கு உரியது. ஆதலால், நான் மர வணக்கத்தை ஆதரிக்கிறேன்" என்றார் காந்தி அடிகள். இத்தகைய மரவணக்கந் தான் விக்கிரக வழிபாட்டின் ஆணிவேர்.

பழந் தமிழர்கள் செழித்து வளர்ந்த மரங்களின் நிழலில் கூடித் தங்கள் பொதுக் காரியங்களைக் கவனித்தார்கள். அவற்றின் அடியிலே தங்கள் பொது வழி வழிபாட்டுக்குரிய பலிபீடத்தை அமைத்தார்கள். சிதம்பரத்துத் தில்லை மரமும், காஞ்சி மாமரமும், திருநெல்வேலி மூங்கில் மரமும், மதுரைக் கடம்ப மரமும் மேற் கூறிய உண்மையை எடுத்துக் காட்டுகின்றன.

பலிபீடத்தின் மீது வண்ணம் கொண்டு தங்கள் கடவுளின் உருவத்தை எழுதின பழங்காலத் தமிழர். பலிபீடத்திற்குப் பதிலாக உருவத்தைச் செய்து அதற்கு வண்ணம் தீட்டினர். இத்தகைய மரத்தடியை மன்று எனவும் அம்பலம் எனவும் அழைத்தார்கள்.

நாட்டிலே போர் நடந்தது. மக்கள் போர் காரணமாகத் தங்கள் ஊரை விட்டு வெளியேறிச் சென்றனர். ஊரிலுள்ள மன்றைக் கவனிப்பாரில்லை. மன்றிலே வரையப்பட்ட பாவை மழையிலே நனைந்து வெயிலிலே காய்ந்தது. மேனி வாடி மனையின் கண் தலைவரைப் பிரிந்து தனிந்திருந்த தலைவியைப் பார்த்த வேம்பற்றூர் குமரனூர்க்கு இந்த மன்றத்து பாவை நினைவுக்கு வந்தது. அவர் பாடினார்: "மூனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத் துப் பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச்சா அய் வினையழி பாவை" என. (அகம் 157)

மழையிலே நனைந்து வெயிலிலே காய்ந்த இந்த மரத்தடிப் பாவைகளுக்குப் பாதுகாப்பாக செங்கல் சுண்ணும்புகளால் கட்டடங்கள் கட்டப்பட்டன. இத்தகைய கட்டடம் ஒன்றின் விட்டமரம் பகைவரின் யானை உராய்ந்ததால் கீழே விழுந்துவிடுகிறது. மன்றின் மாடத்திலே எழுதப் பெற்ற கவுடளின் தெய்வத்தன்மையும் அகன்றுவிடுகிறது ஊர்மக்கள் பகைவரை அஞ்சி ஊரை விட்டு சென்றுவிட்டதால் மன்றத்துத் திண்ணையை மெழுகுவார் ஒருவரும் இல்லை. இந்தச் செய்தியை,

> "இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
> மணிப்புருத் துறந்த மரஞ்சோர் மாடத்து
> எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று
> ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணை"

என அகநானூறு (167) தெரிவிக்கிறது.

கோயில் என்ற சொல்லுக்கு 'அரசன் அரண்மனை' என்பது பொருள்.

அரசர்களுக்கெல்லாம் அரசனான இறைவனுக்கு இருப்பிடமாகக் கட்டப்பட்ட கட்டடம் பின்னர் 'கோயில்' என அழைக்கப்படலாயிற்று. கோயில் இல்லா ஊரில்

குடியிருக்க வேண்டாம்' என்ற கொள்கையும் தமிழ் மக்கள் கடைபிடித்தனர்.

கோயில்களின் வெளிச் சுவர்களிலும் ஓவியங்கள் வரையப் பெற்றன. காவிரிப் பூம் பட்டினத்துக் கோயிலின் வெளிச் சுவர்களில் வரையப்பெற்ற ஓவியங்கள் தேர் ஓடுதலால் புழுதி அடைந்தன எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

"தேரோடத் துகள் கெழுமி
நீருடிய களிறுபோல
வேறுபட்ட வினையோபத்து
வெண்கோயிலின் மாசூட்டும்"

(பட்டினப்பாலை 47—50)

திருப்பரங் குன்றத்து முருகன் கோயிலின் அருகே இருந்த எழுத்து நிலை மண்டபத்தையும், அங்கே தீட்டப் பெற்ற ஓவியங்களைக் கண்டும் அவற்றின் கருத்தைக் கேட்டும் தெரிந்துகொள்பவர்களையும் பரிபாடலில் (19) காண்கிறோம். அம் மண்டபத்தின் ஒரு புறம் சூரிய சந்திரர்கள்; இன்னொருபுறம் மன்மதனும் இரதியும்; மற்றொரு புறம் அகலிகையின் சோகக் கதை இவை எல்லாம் எழுதப் பெற்றிருந்ததை பரிபாடல் நமக்குத் தெரிவிக்கின்றது.

மகேந்திரவர்மன் காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த கோயில்கள் மரத்தாலும், செங்கல்லாலும் சுண்ணும்பாலுமே கட்டப் பெற்றவை. குன்றுகளைக் குடைந்து அவ்வரசன் அமைத்த கோயில்களில் முதலாவதான மண்டகப்பட்டுக் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. "பிர்ம்மா, ஈச்வரன், விஷ்ணு இவர்கட்க்கு அழியக்கூடிய செங்கல், மரம், உலோகம், சுண்ணும்பு இவற்றின் துணையின்றி விசித்திர சித்தன் கட்டிய கோயில் இதுவே" என மாமண்டூர் குகையின் வெளி மண்டபத்து தூண்களிலும், மாமல்லபுர ஆதிவராக மண்டபத்தின் விதானத்திலும், அருகே உள்ள தூண்களிலும் தாமரை மலர்களின் சில ஓவியச் சின்னங்கள் புலனுகின்றன. மகேந்திர வர்ம பல்லவன் காலத்தவை எனக் கருதப்படும் இவையே தமிழ் நாட்டில் நாம் காணும் ஓவியங்களுள் பழமை வாய்ந்தவை.

தமிழ் நாட்டில் கற்களால் கோயில் கட்டும் வழக்கத்தை முதன் முதலாக ஆரம்பித்தது பல்லவ அரசனுன இரண்டாம் நரசிம்மவர்மன் தான். இவன் கட்டிய கோயில்களுள் இரண்டு பனைமலைக் கோயிலும் காஞ்சி கைலாசநாதர் கோயிலும் ஆகும். பனைமலைக் கோயிலின் கீழ்புற அறையிலே வரையப்பெற்றுள்ள பார்வதி தேவியின் திருவுருவமும் சைலாச நாதர் கோயிலைச் சுற்றியுள்ள சிறு மண்டபங்கள் சிலவற்றுள் காணும் ஓவியச் சின்னங்களும் ஆயிரத்திருநூறு ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டு ஓவியன் கையாண்ட வரியின் மென்மையையும் அழகையும் காட்டுகின்றன. பல்லவக் காலத்து ஓவியங்களில் வண்ணம் எவ்வளவோ அழிந்து விட்ட போதும் அமுது ஒழுகுவதுபோல் ஒழுகும் வரியின் உயர்வு மாமண்டூர்த் தாமரை மலர், கைலாச நாதர் கோவிலில் உள்ள பாதிமுகம், பனைமலைப் பார்வதிதேவி நம் மனத்தை ஈர்க்கிறது.

பாண்டியர்கள் காலத்து ஓவியங்கள் திருநெதிவேலி மாவட்டத்தில் கடையநல்லூருக்கு அருகே உள்ள வர்ணச்சி மலை என்ற திருமலைபுரக் கோயிலில் காணப்படுகின்றன. கோயில் ஏழாம் நூற்றுண்டில் வெட்டப்பட்டுள்ள தாயினும்

கோயிலின் உள் விதானத்திலும் தெற்குச் சுவரிலும் காணப்படும் ஓவியங்கள் ஒன்பதாம் நூற்றுண்டில் அரசு செய்த அவனிய சேகரன் என்ற ஸ்ரீவல்லபன் (கி. பி. 830-862) காலத்தவை எனக் கருதப்படுகின்றன.

ஏறத்தாழ இதே காலத்தில் தான் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள திருநந்திக் கரைக்கோயிலில் காணப்பெறும் ஓவியங்கள் எழுதப்பட்டன. பாதி தெரிந்தும் தெரியாமலும் இருக்கும் மனித உருவங்கள், மலர்கள், மேக நிரைகள், இவற்றினிடையே ஒரு கம்பீரமான முகம் புலனுகிறது. முகத்தை ஒரு புறம் சாய்த்து முக்கால் தோற்றத்தில் எழுதப்பெற்றிருக்கும் இந்த ஓவியம் சிவபெருமானைக் குறிக்கலாம் என்பது அறிஞர் கருத்து.

''பல்லவர்கள் காலத்திலிருந்து சிறிது சிறிதாக வளர்ந்து வந்த தமிழ் நாட்டு ஓவியக் கலையின் சிறந்த பகுதியை சோழர்கள் காலத்தில்தான் காண்கிருேம். முதலாம் ஆதித்த சோழன் காலத்துக் கட்டப்பெற்ற கண்ணனூர் பாலசுப்ரமண்யர் கோயிலின் கருப்பக் கிருகத்தைச் சுற்றிய பிரகாரத்தில் உள்ள கபோதத்தில் சில ஓவியச் சின்னங்கள் தென்படுகின்றன. ஆனுல் சோழர் கால ஓவியச் •சிறப்பை எடுத்து விளக்குபவை தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் கருப்பக் கிருகத்தைச் சுற்றியுள்ள சுவர்களில் காணப்படும் ஓவியங்களே. இவை கோயில் கட்டிய இரரஜ இராஜ சோழன் காலத்திலேயே, அதாவது பதினேராம் நூற்றுண்டின் ஆரம்பத்திலேயே எழுதப்பட்டவை.

மேற்குச்சுவரில் சுந்தரமூர்த்தி நாயனுரின் வாழ்க்கையிலிருந்து சில நிகழ்ச்சிகள் ஓவியப்படுத்தப்பட்டிருக்கின்றன. மணப்பந்தரில் இருந்த சுந்தரரை தடுத்தாட்கொண்ட காட்சி இவற்றுள் ஒன்று. நடுவில் கிழவேதியரும் மணமகனை சுந்தரரும் எதிரெதிராக நிற்கின்றனர். வேதியர் ஒருகையிலே குடை, மற்றக் கையிலே ஓலை. கூட்டத்தினரின் முகங்களில் வியப்பு, ஐயம், கோபம் முதலிய உணர்ச்சிகள். கூட்டத்தின் வலப் பக்கம் திருவருள்துறைக்கோவில். கோயிலின் உள்ளே சிலர் விரைந்து செல்கின்றனர். கதையின் நாடகப்பண்பு ஒருசிறிதும் சுவை குன்ருது இந்த ஓவியத்தில் தீட்டப்பெற்றிருக்கிறது. இந்த ஓவியத்தைப் பார்த்துத்தானே தாராசுர ஐராவதேசுரர் கோயிலில் கல்லிலே சிற்பி இந்த நிகழ்ச்சியைச் செதுக்கினுன்?

சுந்தரர் வாழ்க்கையில் இன்னெரு நிகழ்ச்சி. அவர் கைலைக்குச் செல்வது. இதுவும் மேற்குச் சுவரில் தீட்டப்பட்டிருக்கிறது. நன்கு அலங்கரிக்கப்பட்ட குதிரையில் சேரமான் பெருமான் நாயனூர் செல்கிருர், பின்னுல் வெள்ளை யானையில் வரும் சுந்தரரைத் திரும்பிப்பார்த்துக் கொண்டே, மேலே வானவீதியில் தேவர்களும் கந்தர்வர்களும் எதிர்கொள்கின்றனர். கீழே மீன்கள் நிரம்பிய அலையெறியும் கடல்.

''நிலைகெட விண் அதிர நிலமெங்கும்
அதிர்ந்தசைய
மலையிடை யானையேறி வழியே
வருவேனெதிரே
அலைகடலா லரையன் அலர் கொண்டுமுன்
வந்திறைஞ்ச''

எனவும்

''அரவொலி ஆகமங்கள் அறிவாரறி
தோத்திரங்கள்
விரவிய வேதஒலி விண்ணெலாம்
வந்தெதிர்ந்திசைப்ப''

எனவும் சுந்தரமூர்த்தி நாயனுர் திருநொடித்தான்மலைப் பதிகத்தில் பாடிக்

காட்டும் காட்சிகளையெல்லாம் இந்த ஓவியம் நன்கு விளக்குகிறது. ஓவியனின் நகைச்சுவையை வெள்ளை யானையின் வாலைப்பிடித்துத் தொங்கிச்செல்லும் சிவ நேயரின் உருவத்திலிருந்து உணர்ந்து இன்புறலாம்.

வடக்குச்சுவர் முழுவதையும் அடைத்திருக்கிறது திரிபுரதகன ஓவியம் காம்பீர்யம் நிறைந்த இந்த விஷயம் வா ே ஞ ராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி, நெடும்புறம் மறைத்து, வார் துகில் முடித்துக் கூர்முள்பிடித்து முப்புரத்தை எரிக்க முக்கண்ணன் நிற்கும் காட்சியாக மகத்தான முறையில் வரையப்பெற்றிருக்கிறது. எட்டுத் தோளுடன் தேரிலே நின்று கைகளில் ஆயுதங்கள் இருக்கவும், வில்லை வளைத்து அம்பை எய்யாமலே தன் புன்முறுவலால் முப்புரத்தை எரிக்கும் அசகாயமும் வெற்றி காணும் பெருமிதமும் அழகுடன் தீட்டப் பெற்றிருக்கின்றன.

மேற்கூறிய ஓவியங்களும் சுவர்களில் காணப்பெறும் ம ற் ற ஓவியங்களும் சோழர்காலப் பழக்கவழக்கங்கள் ஆடையணிகள் இவற்றைத் தெளிவாக விளக்குகின்றன. இக்காலத்தில் நடனக் கலை எவ்வாறு போற்றப்பட்டு வந்த தென்பதை இங்குள்ள சில ஓவியங்கள் நன்கு தெரிவிக்கின்றன. முகத்தைத் திருப்பி ஆடும் நடன நங்கையின் உருவத்தைப் பார்க்கப் பார்க்க "கைந்நின்ற ஆடல் கண்டால் பின்கண்கொண்டு கா ண ப தென்னே" என்ற நாவுக்கரசரது வாக்கு நினைவுக்கு வருகிறது.

புதுக்கோட்டையை அடுத்த நார்த்தா மலையில் உள்ள விஜயாலய சோழீச்சுரம் என்னும் கோ யி ல் ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்ட தென்றாலும், அங்கு விதானங்களிலும் சுவர்களிலும் காணப்படும் ஓவியங்கள் பதிமூன்றும் நூற்றுண்டைச் சார்ந்தவையாகக் கருதப்படுகின்றன. தமிழ்நாட்டுக் கோயில்களில் இங்குதான் முதன் முதலாக எல்லோரா ஓவியங்களிலும் கூர்ஜர சமணச் சித்திரச் சுவடிகளிலும் காணப் பெறும் கூரிய மூக்கும் வெளியே துருத்தும் கண்ணும் காட்சி தருகின்றன.

காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாள் கோவிலில் காணப்படும் ஓவியச் சின்னங்கள் விஜயநகரத்தின் தலைசிறந்த அரசராக விளங்கிய கிருஷ்ணதேவராயர் காலத்தவை. பதினேழாம் நூற்றுண்டில் தஞ்சாவூர்ப் பெருவுடையார் கோயிலில் காணப்பெறும் சோழ ஓவியங்களுக்கு மேலே நாயக்க அரசர்கள் ஓவியங்கள் வரையச்செய்தனர். இவை பு ரா ண க் கதைகளை வி ள க் கி ன. ஒவ்வொரு ஓவியத்துக்கும் அடியிலே ஓவியம் எதைக் குறிக்கிறது என்று தெலுங்கு எழுத்துக்களில் குறிக்கப்பட்டது. "இவை ஒன்றைப் பார்த்தாற்போல் மற்றென்றிருப்பதோடு ஒரு குறுகிய வரம்பிற்குட்பட்டு விகசிக்க வகை இல்லாமல் இருப்பதைக் காண்கிறேம். இவைகளில் பேதஉணர்ச்சி இல்லை, மலர்ச்சி இல்லை, பொருளுக்கேற்ப மாற்றிக்கொள்ளும் தன்மை இல்லை" என டாக்டர் பரமசிவம் கூறுவது உண்மை. கும்பகோணம் இராமசுவாமிகோயிலில் காணப்பெறும் ஓவியங்களும் இதே காலத்தைச் சார்ந்தவை.

மதுரை மீனுக்ஷிஅம்மன் கோயிலில் பொற்றாமரைக் குளத்துக்கு மேற்கேயுள்ள சடையலம்பு மண்டபத்து விதானத்தில் மீனுக்ஷியின் அஷ்டதிக்கு விஜயத்தையும்

மீனுக்ஷிசுந்தரேசுரர் திருக்கல்யாணத்தையும் ஓவியங்களாகத் தீட்டியிருக்கின்றனர்.

"எறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்து நின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோவிய"

மாகிய மீனுக்ஷியின் திருக்கல்யாணக் காட்சியை சிற்பி கல்லிலே கவினுற வடித்துவிட்டான். ஆனால் ஓவியனுக்கு அது 'தீட்டமுடியாத செவ்வியாகவே அமைந்துவிட்டதுபோலும். இந்தக் காட்சியில்தான் ராணிமங்கம்மாள் (கி. பி. 1689–1706), தளவாய் நரசப்பையர் முதலியோர் திருக்கல்யாணத்தைத் தரிசிப்பதாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. திருவாரூர், ஸ்ரீரங்கம், இராமேசுவரம், சுசீந்திரம், குற்ருலம் இங்குள்ள கோயில்களில் காணும் ஓவியங்கள் பதினெட்டாம் நூற்ருண்டைச் சார்ந்தவை. குற்ருலத்துச் சித்திரசபையில் பல ஓவியங்கள் நல்லநிலையில் இருக்கின்றன. நாயக்க அரசர்கள்காலத்தில் எழுதப்பெற்ற ஓவியங்களின் இயல்புகளில் சிலவற்றைக் கேரளநாட்டில் வடக்கே பள்ளிமனை சிவன்கோயிலில் இருந்து தெற்கே திருவனந்தபுரத்து ஸ்ரீ பத்மநாபசுவாமி கோயில்வரையுள்ள கோயில் ஓவியங்களில் காணமுடிகிறது.

இந்த ஓவியங்கள், நம் நாட்டுக் கோயில்களில் உள்ள சிற்பங்களையும் இசையையும்போல் அழியாதசெல்வங்கள். தத்துவத்தைக் கலையாக்கிக் காட்டுவதோடல்லாது, சமகாலப் பழக்கவழக்கங்கள், நடை உடை பாவனைகள் இவற்றை விளக்கும் இவ்வோவியங்களை இன்னும் அழிய விடுவது பெருந்தவறு. காலத்திற்கேற்ற முறையில் கோயில்களைப் பரிபாலித்து அழகுசெய்துவந்தால் இந்த இணையிலாச் செல்வங்களை நம் பின்வரும் மக்களுக்குப் பாதுகாத்துக் கொடுத்துவிடலாம்.

---

## அல்லல் தீர்ப்பது

பார்க்கும் திசைதொறும் பாசாங் குசமும் பனிச்சிறை வண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும்என் அல்லல் எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு மேனியும் சிற்றிடையும்
வார்க் குங் குமமுலை யும், முலைமேல் முத்து மாலையுமே.

— அபிராம பட்டர்,
அபிராமி அந்தாதி

# கோயில் வளர்த்த கலைகள் – சித்திரங்கள்

தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான், M. A., I. A. S. (Retd.)

குழலும், தும்புரு நாரதர்
பாடலும், குனித்துச்
சுழலும் கொம்பனார் ஆடலும்,
மூவர் வாய்த்துதியும்,
விழவில் செல்வமும், சுருதியும்
திசையெலாம் விழுங்கும்
முழவும் கண் துயிலாதது
முன்னவன் கோயில்.

என்று மதுரை நகரத்துக் கோயில் சிறப்பைப் பரஞ்சோதி முனிவர் பாடுகிருர். ஆம் ஆடலும் பாடலும், சிற்பமும் சித்திரமும், கவிதையும் இசையும் கலந்தினிக்கும் நிலைக்களமாக மதுரை மாநகர் பெருந் திருக்கோயில் இலங்கிற்று என்பதே திருவிளையாடற்புராணம் எழுதியவர் கண்டது. இதே நிலை தான் தமிழ்நாட்டின் எல்லாக் கோயில்களிலும்.

கோயிலை மையமாக வைத்தே நம் நாட்டு அழகுக்கலைகள் எல்லாம் உருவாகியிருக்கின்றன. கோயில்கள் இல்லாவிட்டால், தேவாரதிருவாசகங்கள் ஏது? திவ்யப்பிரபந்தப் பாடல்கள் ஏது? கோயில் என்று ஒன்று இல்லாவிட்டால் இன்னிசை எழுவது ஏது? சித்திரமும் சிற்பமும், நடனமும், நாட்டியமும் உருவாவது ஏது? நம் நாட்டுக் கவின் கலைகள் எல்லாமுமே சமயச் சார்புடையவையாகத்தான் இருந்திருக்கின்றன. அதனுல்தான் அருங் கலைகளைப்பற்றி ஆராய்வார்க்கு எல்லாம் கோயிலே நிலைக்களமாக அமைகின்றன. கோயிலைச் சுற்றி எல்லாக் கலைகளும் எப்படி வளர்ந்தன என்று நான் சொல்லப் போவதில்லை. கோவில் வளர்த்த ஓவியக் கலையைப் பற்றியே ஒரு சில வார்த்தைகள்.

தமிழ் நாட்டுக் கலைகளில், மிகவும் சிறந்திருப்பது சிற்பக் கலை தான். உலகில் உள்ள எல்லா சிற்ப வடிவங்களுக்கும் முதுகுக்கு மண்காட்டும் வகையில் சிற்பக் கலை இங்கு உருவாகியிருக்கிறது. இது சிற்பக்கலை நிபுணர்கள் எல்லாம் ஒப்புக் கொண்ட உண்மை. இந்த அளவுக்கு ஓவியக்கலை உச்ச நிலையை எய்தவில்லை என்பதும் வெள்ளிடைமலை. என்ருலும் பலரும் போற்றும் வகையில் அக்கலை உருவாகியிருக்கிறது என்பதும் மறுக்கமுடியாது. ஓவியம் என்ருல் சுவர்களிலும் திரைச்சீலைகளிலும் வண்ணத்தைத் தீட்டி வடிவங்களையும் காட்சிகளையும் வரைவதாகும். இக்கலையை மேல் நாட்டினர் மிகவும் திறமையுடன் வளர்த்திருக்கிருர்கள். அந்தப் பழைய இத்தாலி நாட்டிலே மைக்கேல் ஆஞ்சலோ, ரப்பேல் போன்ற அரியச் சித்திரக் கலைஞர்கள் இருந்திருக்கிருர்கள், பின்னரும் சர் ஜோஷுவா ரெய்னுல்ட்ஸ் போன்ற சித்திரீகரது சித்திரங்கள் எல்லாம் மேல் நாட்டு ஓவியக் கலைக்கு வளம் தருவதாகும். இந்த நிலைக்கு, தமிழனே இல்லை, வேறு இந்தியனே உயரவில்லை. அஜந்தா ஓவியங்கள் அருமையானது தானென்ருலும் வாடிகான் மண்டபத்தை இன்று அலங்கரித்து நிற்கும் சித்திரங்களுக்கு இணையாகாது தான். ஆயிரம் வருஷங்களுக்கு மேலாகி

யும் அழியாது நிற்கும் பெருமையுடையது என்பதே அஜந்தாவின் மகிமை. தமிழ் நாட்டிலோ அஜந்தா அளவிற்குக் கூட ஓவியக்கலை உருவாகவில்லை. தமிழ் நாட்டின் அஜந்தா என்று புகழ்பெற்றது சித்தன்ன வாசல் ஓவியங்கள். இவை தான் தமிழ்நாட்டில் காலத்தால் முந்தியவை. தொண்டைமான் புதுக்கோட்டைப் பகுதியில்உள்ள குடைவரைக்கோயில் ஒன்றில் இச்சித்திரங்கள் எழுதப்பெற்றிருக்கின்றன. பல்லவ மன்னன் மகேந்திர வர்மன் ஆதியில் சமணனாக இருந்து பின்னர் நாவுக்கரசரால் சைவனாக்கப்பட்டவன். அவன் சமணனாக இருந்த காலத்திலே அமைந்த இந்த சித்தன்ன வாசல் குடை வரையிலே தான் பல சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. குடை வாயிலின் உள்புறத்திலே உள்ள விதானத்தில் சமணர்களது மோக்ஷ சாம்ராஜ்யம் என்னும் சாமவ சரவணப் பொய்கை தீட்டப்பட்டிருக்கிறது.

அள்ளற் பழனத்து
அரக்காம்பல் வாயவிழ
வெள்ளம் தீப்பட்டது
என வெரீஇ

என்று அன்று முத்தொள்ளாயிரக் கவிஞன் பாடினனே அது போல தாமரை மலர்கள் நிறைந்த தடாகம், அங்கு புதுப்புனல் குடையும் ஆடவர் பெண்டிர் எல்லோரையும் அழியாவர்ணத்தில் எழுதி வைத்திருக்கிறான் ஓவியன். இந்த சாமவ சரவணப் பொய்கைச் சித்திரம் இன்று மங்கிவருகிறது. இங்குள்ள ஓவியங்களில் சிறப்பானவை என்று கருதப்படுபவை அங்குள்ள தூண்களிலே தீட்டப்பெற்றவைதான். ஒரு தூணை மகேந்திரவர்மனும் அவனது துணைவியாரும் அலங்கரித்திருக்கிறார்கள். இன்னும் இரண்டு தூண்களை நடனமாதர் இருவர் ஆக்கிரமித்துக்கொண்டிருக்கின்றனர். நடனப் பெண்களில் ஒருத்தி இடக் கையைத் தண்ட ஹஸ்த முத்திரையிலும் வலக்கையை அபய முத்திரையிலும் வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் காதுகளிலே இலைக் குண்டலங்கள் தொங்குகின்றன. தலையை மலர்கள் அலங்கரிக்கின்றன. அவள் ஆடும் நிலை அந்த ஆடும் பெருமானையே நினைவூட்டுவதாக இருக்கின்றது. இன்னொரு நடனக்காரி, அர்த்த மத்தளி என்ற முத்திரையைக் காட்டும் கைகளோடு ஒரே ஆனந்தக் களிப்பில் ஆடிக்கொண்டிருக்கிறாள். இச் சித்திரங்கள் தாம் தமிழ் நாட்டில் காலத்தால் முந்திய சித்திரங்கள். அஜந்தா சித்திர பாணியில் அமைந்திருப்பவை என்று பெருமையோடும் பேசுவதற்கும் உரியன.

இதனையடுத்துப் பல்லவர்கள் காலத்திலேயே உருவானதுதான் காஞ்சி கைலாசநாதர் கோயில் ஓவியங்கள். மகேந்திரவர்மனது சித்தன்னவாசல் ஓவியங்கள் ஆறும் நூற்றாண்டைச் சார்ந்த தென்றால், கைலாசநாதர்கோயில் ஓவியங்கள் ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவை. ராஜசிம்ம பல்லவன் கட்டிய கோயிலின் கருவறையைச் சுற்றிய சுவர்களிலே பல சித்திரங்கள் தீட்டப்பெற்றிருக்கின்றன. அவைகள் எல்லாம் மங்கி மறைந்துவிட்டன. இரண்டே இரண்டு வடிவங்கள்தாம் இப்போது அரைகுறையாய்க் காணக்கிடக்கின்றன. அதில் ஒன்று மலர் ஏந்திய கையனாய், கம்பீரமாக நிற்கும் மகாபுருஷன் ஒருவன். மற்றொன்று சோமாஸ்கந்த வடிவம். இவ்வடிவங்களில் பல பகுதிகள் சிதைந்து போயிருக்கின்றன. இந்தக் கைலாசநாதர் கோயில்சித்திரங்களுக்கும் பிந்தியவையே

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள பனை மலைக்கோயில் சித்திரங்கள். அங்கு தீட்டிய சித்திரங்களில் இன்று கொஞ்சம் உருப்படியாக இருப்பது குடைபிடித்த அரசியின் வடிவம் ஒன்றுதான்

பல்லவர் காலத்திற்குப் பின்னாலே கலை வளர்த்த பெருமன்னர்கள் சோழர்களே. அவர்கள் கவனம் எல்லாம் அரிய சிற்ப வடிவங்களைச் செப்புப்படிமமாக வடிப்பதிலே சென்றிருக்கிறது. கல்லிலும் செம்பிலும் கண்ணுதலைக் காட்ட முனைந்து வெற்றி கண்டவர்கள் அவர்கள். சோழ மன்னர்களில் தலை சிறந்தவனான ராஜ ராஜன் கட்டிய பெரிய கோயிலில் பெருவுடையார் கருவறையைச் சுற்றியுள்ள பிரகாரத்திலே, ராஜராஜன் காலத்திலேயே அழியா ஓவியங்கள் சில உருப்பெற்றிருக்கின்றன. இந்த ஓவியங்களின் அருமை அறியாத சிலர் இச்சித்திரங்களின் மீது சுதையைப் பூசி அதன் மீது தங்கள் கை வண்ணத்தைக் காட்டியிருக்கின்றனர். இந்தச் சுதைகளை அகற்றியே பழைய சித்திரங்களை வெளிக் கொணர்ந்திருக்கின்றனர் இன்றைய புதை பொருள் இலாகாவினர். இவர்களை இப்பணியில் ஊக்கியவர்தான் பிரபல சரித்திர ஆசிரியர் அமரர் S. K. கோவிந்தசாமி பிள்ளையவர்கள். சேரமான் சுந்தரர் வரலாறு சித்திரமாக உருவாகியிருக்கிறது. இன்னும் ராஜ ராஜன், கருவூர்த் தேவர், நடராஜரது வடிவம், யோகதக்ஷிணாமூர்த்தி, நடமாடும் அப்ஸரசுகள், விண்ணில் இசை மிழற்றும் வித்யாதரர்கள், கின்னரர்கள் எல்லாம் உயிர் ஓவியங்களாகத் திகழ்கின்றன. இவற்றை யெல்லாம் தூக்கியடிக்கும் வகையில் திரிபுராந்தகரது போர்க் கோலமும் உருவாகியிருக்கிறது அங்கே. பூமியைத் தேராகக் கொண்டு பிரமனையே சாரதியாக அமைத்து, கணேசனையும் கார்த்திகேயனையும், துர்க்கையையும் சேனைத் தலைவர்களாக முன்நடத்தி, கம்பீரமாகத் தேரில் ஆரோகணித்து வரும் திரிபுராந்தகரது வடிவம் கண்கொள்ளாக் காட்சி. இச்சித்திரம் ஒன்றுதான் மேல் நாட்டு ஓவிய விமர்சகர்களும் கண்டு அதிசயித்து நிற்கும் அற்புத அழகோடு விளங்குகிறது. ஓவிய உலகில் ஒரு ஒப்பற்ற சாதனை இக்காட்சி. ராஜராஜனுக்குமுந்திய சோழ மன்னர்களும் பிந்திய சோழமன்னர்களும் ஓவியக் கலையில் அக்கறைகாட்டியவர்களாகக் காணோம்.

பல்லவர்களும் சோழர்களும் தானா ஓவியங்களுக்கு உயிர் கொடுத்தார்கள்? பாண்டியர்களுக்கு இக்கலை வளர்ச்சியில் பங்கே இல்லையா என்று தானே கேட்கிறீர்கள்? பாண்டியர் காலத்து ஓவியங்கள் சில திருநெல்வேலி மாவட்டத்தில் திருமலைபுரத்தில் உள்ள கோயிலில் இருக்கின்றன. அவை எல்லாம் வேடர்களின் வடிவங்களும் தாமரை மலர்களுமே. சிறப்பாகச் சொல்லுவதற்கென்று ஒன்றுமே இல்லைதான்.

பாண்டிய மன்னர்களுக்குப் பின்பு தான் தமிழ் நாட்டின் பெரும் பகுதியை ஆண்ட நாயக்க மன்னர்கள் சிலரும் இக்கலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்கள் பெரிய பெரிய கோபுரங்களை எழுப்புவதிலும், பெரிய பெரிய பிரகாரங்களை அமைப்பதிலும், நூற்றுக்கால், ஆயிரக்கால் மண்டபங்கள் அமைப்பதிலுமே அக்கறை காட்டியவர்கள். மதுரை மீனாக்ஷி கோயிலின் சுவர் ஓவியங்கள் எல்லாம் இவர்கள் காலத்தவையே.

இன்றோ ஓவியக்கலை சிறப்பாக விளங்கக் காணோம். சிறப்பு மிக்கசித்திரங்

கள் தீட்ட இன்னமும் கற்றுக்கொள்ள வில்லே. வண்ணத்தையும் சுண்ணத்தை யும் கடந்து எண்ணத்தையும் புகுத்தி உரு வாக்கிய சித்திரங்களே தமிழனது ஓவியக் கலேயை உயர்த்துவனவாகும். அந்த ஓவி யங்களே நமது கோயில்களில் உருவாகி யிருக்கின்றன. கோயில் வளர்த்த கலேகளில் சிறப்பான தொரு பங்கு இந்த ஓவியக் கலேக்கும் உண்டு என்று தெரிந்து கொண் டோமானுல் அது போதும் நமக்கு.



வேடிக்கையும் சொகுசும் மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை எல்லாம் மறந்திருப்ப தெக்காலம்?

கும்பிக்கு இரைதேடிக் கொடுப்பார் இடந்தோறும்
வெம்பித் திரிகை விடுப்பதுஇனி எக்காலம்?

பட்டுடையும் ஒப்பனேயும் பாவனேயும் தீவினேயும்
விட்டுவிட்டு உன்பாதம் விரும்புவதும் எக்காலம்?

மனத்தைஒரு வில்லாக்கி வான்பொறியை நாணுக்கி
எனதறிவை அம்பாக்கி எய்வதினி எக்காலம்?

உள்ளம் அறியாது ஒளிந்திருந்த நாயகனேக்
கள்ளமனம் தெளிந்து காண்பதினி எக்காலம்?

—பத்திரகிரியார்.

# கருநாடக சங்கீதம்

பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி

உலக ஸங்கீதத்தில் கர்நாடக ஸங்கீதத்திற்கு தனிச் சிறப்புண்டு. லக்ஷணத்திலும், லக்ஷியத்திலும் இது சிறப்புற்றது. கர்நாடகம் என்பது இந்தியாவின் தெற்கேயுள்ள பிரதேசத்தைக் குறிக்கும் பதமாகும். "பழமை" என்னும் பொருளையும் கர்நாடகம் குறிக்கும். ஆகவே பண்டைக் காலத்திலிருந்து வளர்ந்து வந்து. தென்னிந்தியாவிலேயே பிரகாசிக்கும் இசை என்னும் பொருளுடன் கர்நாடக ஸங்கீதம் வழங்கப்பட்டு வருகிறது. பிற்காலத்தில் ஏற்பட்ட வடநாட்டு ஸங்கீதத்திற்கு ஹிந்துஸ்தானி ஸங்கீதம் என்னும் பெயர் ஏற்பட்டது. இதேமாதிரி பண்டைக் காலத்திலிருந்து வளர்ந்து வந்து, தென்னிந்தியாவில் சிறப்பாக விளங்கும் நாட்டியத்தைப் 'பரத நாட்டியம்' என்றும், பிற்காலத்தில் ஏற்பட்ட நாட்டிய வகைகளுக்கு கதகளி, கதக், மணிப்புரி என்னும் பெயர்கள் ஏற்பட்டுள்ளதையும் கவனிக்கலாம். தென் இந்தியாவின் கலைச் சிறப்பைப் பற்றி, பரதர் தனது நாட்டிய சாஸ்திரத்தில் (14 th cent. B. C.) 14-ம் அத்தியாயத்தில் பின் வருமாறு கூறுகிறார்,

" தத்ர தாக்ஷிணாத்யாஸ் தாவத் பஹுந்ருத்த
கீத வாத்யா கைசிகீ ப்ராயா ; சதுர
மதுர லலிதாங்கா பினயச்ச.........
.........தக்ஷிணஸ்ய ஸமுத்ரஸ்ய
ததா விந்த்யஸ்ய சாந்தரே"

[பல்வகை நடனங்களும், மதுரமான வாய்ப்பாட்டும், வாத்திய ஸங்கீதமும், லலிதமான அங்க அபிநயங்களும் நிறைந்த இந்நாடு, தெற்கு ஸமுத்திரத்தால் சூழப்பட்டும் விந்திய பர்வதத்திற்குத் தெற்கேயுமுள்ளது.]

இந்திய ஸங்கீதம், ராகம் என்னும் இசைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்க்கப்பட்டுள்ளது. ராகம் என்பது உலக ஸங்கீதத்திற்கே நம்மால் அளிக்கப்பட்ட ஓர் அருங்கொடையாகும். இதர நாட்டு ஸங்கீதங்களில் உபயோகிக்கப்படும் ராகங்களும், தாளங்களும் மிகக் குறைவே. ஆனால், இங்கு நூற்றுக் கணக்கான ராகங்களில் பெரியோர்கள் உருப்படிகள் செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு ராகத்தின் இசை வடிவமும், அதில் உபயோகிக்கப்படும் ஸ்வரங்கள், நுட்ப சுருதிகள், கமகங்கள், ரஞ்சகப் பிரயோகங்கள் முதலியவைகளினால் தெளிவாகின்றது. இதைப் பெரியோர்கள் தங்கள் உருப்படிகளின் மூலம் காண்பித்திருக்கிறார்கள்.

ஸப்த ஸ்வரங்களும், 12 ஸ்வர ஸ்தானங்களும் எல்லா தேசத்து வித்வான்களும் அறிந்திருந்த போதிலும் அவைகளை ஆதாரமாகக் கொண்டு, 72 மேளகர்த்தாக்களை பிரஸ்தரிக்கலாம் என்னும் கருத்து நம் நாட்டில்தான் உதயமாயிற்று. சுருதிகளின் பேதங்களை, உயிரெழுத்துக்களைக் கொண்டு விளக்கலாம் என்னும் கருத்தும் நம் நாட்டில்தான் உதயமாயிற்று. மஹேந்திரவர்மன் I (7-ஆம் நூற்றாண்டு) செதுக்கியுள்ள குடுமியாமலை கல்வெட்டில் இதைக் காணலாம். ரி க ம த நி யென்னும் ஸ்வரங்களில் ஒவ்வொன்றிலும் வரக்கூடிய 4 சுருதி பேதங்களை ரரிருரே ; ககிகுகே ; மமிமுமே ; ததிதுதே ; நநிநுநே என்னும் ஸங்கேதங்களைக் கொண்டு விவரித்திருக்கிறார். மேல்

நாட்டில் ஸ்வரங்களின் பேதங்களை Des, D, Dis என்று குறிக்கும் முறை சில நூற்றுண்டுகளுக்கு முன்புதான் ஏற்பட்டது.

தாளத்தை யெடுத்துக்கொண்டால், கர்நாடக ஸங்கீதத்தில்தான் அதிகமான தாளங்கள் பயன்படுகின்றன. கதி பேதங்களினுல், 35 தாளங்களிலிந்து 175 தாளங்கள் உற்பத்தியாகின்றன. இதைத் தவிர 108 தாளங்களும், சாபு தாள வகைகளும், பல ஸங்கீர்ண தாளங்களும் உபயோகப்படுகின்றன. அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்கள் பல அரிய தாளங்களுக்கு உதாரணங்களாக இருக்கின்றன. அபூர்வ தாளங்களாகிய சரப நந்தனம், ஸிம்ஹ நந்தனம், ஸிம்ஹ விக்ரீடிதம், விநாயக தாளம் முதலியவைகளிலும் பல்லவிகள் பாடப்பட்டு வருகின்றன.

பல வகையான உருப்படிகளையும், கர்நாடக ஸங்கீதத்தில் காணலாம்.

1. கலை சம்பந்தமான உருப்படிகள்.
2. பக்திப் பாடல்கள்.
3. நாட்டியத்திற்காக ஏற்பட்ட உருப்படிகள்.
4. கேய நாடகம், நிருத்திய நாடகம், குறவஞ்சி நாடகம், முதலிவைகளால் வரும் தருக்கள்.
5. பொது மக்கள் கானத்தில் காணப்படும் உருப்படிகள்.

என ஐந்து தலைப்புகளின் கீழ், உருப்படிகளைப் படிக்கலாம். ஸங்கீத கச்சேரிகளிலும், நடனக் கச்சேரிகளிலும், பஜனை, காலக்ஷேபம், கேய, நிருத்ய, குறவஞ்சி நாடகங்கள் முதலியவற்றிலும், தற்காலத்தில் பாடப்பட்டு வரும் உருப்படிகளைக் கணக்கிடின், அவை 5,000-த்திற்கும் மேல் செல்லும். ஆயிரக்கணக்கான உருப்படிகளை இயற்றின வாக்கேயக்காரர்கள் தென்னிந்தியாவிலேயே தோன்றினுர்கள். திருஞான சம்பந்தரை, உலக ஸங்கீதத்தில் அதிக இளமைப் பருவ வாக்கேயக்காரர் (The youngest Composer in the History of World Music) எனலாம். மனோதர்ம ஸங்கீதத்தைச் சார்ந்த ஆலாபனை, தானம், பல்லவி, நிரவல், கல்பனைஸ்வரம் முதலியவற்றைக் கையாளுவதில் கர்நாடக ஸங்கீத வித்வான்கள் பெரும்புகழ் அடைந்திருக்கிறுர்கள்.

சங்கீத சம்பந்தமான சிற்பங்களையும், நடனக்கலை சம்பந்தமான சிற்பங்களையும் பெருவாரியாக, தென்னுட்டில்தான் பார்க்கலாம். மதுரை, திருநெல்வேலி, ஸுசீந்திரம் போன்ற ஆலயங்களிலுள்ள இசைக்கல் தூண்கள் பிரமிக்கக்கூடியவை. இம்மாதிரி தூண்களை வேறெந்த நாட்டிலும் பார்க்கமுடியாது. இனிமையான நாத வர்ணத்துடன் கூடின இத்தூண்களை பிருந்தகான நிகழ்ச்சிகளில் பக்கவாத்தியமாகவும், சிலமுறை தாளக் கருவியாகவும், மற்றும் சிலமுறை சுருதிக் கருவியாகவும் பயன் படுத்தியிருக்கிறுர்கள். மதுரைக் கோயிலில் சுந்தரேச்வரர் பிரகாரத்தில் நடராஜப பெருமான் ஸன்னிதியிலுள்ள இரு தூண்களிலும் 35 ஸூளாதி தாளங்களின் அங்கங்களையும், ஸிம்ஹ நந்தன தாளத்தின் அங்கங்களையும் செதுக்கி வைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. இந்த சிற்பங்களினின்றும் 35 ஸூளாதி தாளங்கள் பல நூற்றுண்டுகளுக்கு முன்னேயே தமிழ்நாட்டில் வழக்கிலிருந்தன என்பது தெளிவாகிறது.

எப்படி ஒரு ராகத்தையெடுத்துக் கொண்டு நீண்டநேரம் ஆலாபனை செய்யலாமோ, அவ்வாறே ஒரு தாளத்தையும் எடுத்துக்கொண்டு ஆரம்பம், விஸ்தாரம், முடிவு என்னும் பகுதிகளின் கீழ் நீண்டநேரம் கல்பனையாக பிரஸ்தாரம் செய்து வாசிக்கலாம். மிருதங்க வித்வான்களும், தவில், கஞ்சிரா, கடம், வித்வான்களும் இம்மாதிரி தனி வினிகைகள் வாசிப்பதில் பெரும் தேர்ச்சி அடைந்திருக்கிறார்கள். மேல் நாட்டவர்களின் இசை அரங்குகளில், இம்மாதிரியான தாள வின்னியாசங்களைக் கேட்கமுடியாது. தற்காலத்தில் அமெரிக்கா 'ஜாஸ் பாண்டில்' (American Jazz Band) சில நிபுணர்கள் தாள வின்னியாசத்தைத் தங்கள் தோற்கருவிகளில் வாசித்துக்காண்பிக்க முயற்சி செய்கிறார்கள்.

பான்டீர பாஷையில் இயற்றப்பட்ட கீதங்கள் இப்பொழுதும் தென்னாட்டில் பாடப்பட்டு வருகின்றன.

மதுரை மீனாக்ஷியம்மன் பேரிலும், சுந்தரேச்வரர் பேரிலும், பிரசித்த வாக்கேயக் காரர்கள் பல உருப்படிகளையும் கும்மிகளையும் இயற்றி இருக்கிறார்கள். அவற்றுள் சிலவற்றைக் கீழே கொடுத்திருக்கிறோம்.

## மீனாட்சி பேரில் உள்ளவை

| உருப்படியின் வகை<br>1 | பாட்டின் பெயர்<br>2 | ராகம் — தாளம்<br>3 | வாக்கேயக்காரரின் பெயர்<br>4 |
|---|---|---|---|
| கீதம் | மீனாக்ஷி ஜயகாமாக்ஷி | ஸ்ரீராகம் — துருவ தாளம் | — |
| கிருதிகள் (நவரத்ன மாலிகை) | 1) ஸரோஜ தளநேத்ரி | சங்கராபரணம்—ஆதி | |
| | 2) தேவி மீனநேத்ரி | ,, ,, | |
| | 3) மீனலோசன ப்ரோவ | தன்யாசி — சாபு | |
| | 4) மறிவேறெ கதி | ஆனந்த பைரவி — சாபு | சியாமா சாஸ்திரிகள் (1762—1827) |
| | 5) தேவி நீபத ஸாரஸ | காம்போஜி — ஆதி | |
| | 6) மாயம்மயனி | ஆஹிரி — ஆதி | |
| | 7) நன்னுப்ரோவுலலித | லலிதா — சாபு | |
| கிருதி | மீனாக்ஷிமேமுதம் | பூர்வ கல்யாணி—ஆதி | முத்துஸ்வாமி தீக்ஷிதர் (1776—1835) |
| கிருதி | மாமவ மீனாக்ஷி | வராளி — சாபு | ,, |
| கிருதி | நின்னுமிஞ்சின | நாடகுறஞ்சி — ஆதி | ஸ்ரீனிவாசய்யர் |
| கிருதி | மீனநயன | தர்பார் — ரூபகம் | ஸுப்பராய சாஸ்திரி (1803—1862) |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| கிருதி | ஏமம்ம மீனநயன | கல்யாணீ — ரூபகம் | செய்யூர் செங்கல்வராய சாஸ்திரி (1810—1900) |
| கிருதி | ஸ்ரீமதுரா புரவாஸினி | ஸஹானா — ” | — |
| கிருதி | தேவி மீனாக்ஷிமுதம் | கல்யாணீ — ” | தச்சூர் சிங்காராசாரியார் |
| கிருதி | மீன லோசனியம்ப | தோடி — ” | முத்தய்ய பாகவதர் |
| ராக மாலிகை | நித்ய கல்யாணி | | ஸீதாராமய்ய |
| கேய நாடகம் | ஸுந்தரேச விலாஸம் | | செய்யூர் செங்கல்வராய சாஸ்திரி (1810—1900) |
| கேய நாடகம் | மீனாக்ஷியம்மன் திருக்கல்யாணம் | | கிருஷ்ணய்யர் |
| கேய நாடகம் | மீனாக்ஷி கல்யாணம் | | இலக்ஷ்மியம்மாள் |

### ஸுந்தரேஸ்வரர் (சொக்கநாதர்) பேரில் உள்ளவை

| | | | |
|---|---|---|---|
| ஸ்வர ஜதி | ஸாம்பசிவாயனவே | கமாஸ் — ஆதி | சின்னிக்கிருஷ்ணதாஸர் |
| கிருதி | எந்தோபரம்மானந்தமு | பிலஹரி — ரூபகம் | ” |



## எனை ஆட்கொண்டு அருளே

நந்தார்சுரர் செந்தாமரை வந்தார்தொழும் எந்தாய்
நாதா அதி பூதாசதுர் வேதாஇத கீதா
பந்தார்விரல் வண்டார்வரி வாண்தார்குழல் கொண்டாள்
பாகாஎனது ஆகாபர யோகசிவ லோகா
முந்தாதர கங்காதர சங்காரவி டங்கா
மூலாகம நூலாகுண சீலாதில சூலா
தந்தாஎன நின்றுடிய பொன்தாழ்மணி மன்றுர்
தாளாஅரு ளாளாநினது ஆளாஎனை ஆளே.

— பெரும்பற்றப்புலியூர்நம்பி
திருவிளையாடற்புராணம்.

# பரதநாட்டியமும் கோயில்களும்

கா. சங்கரனர்

நம் நாட்டில் தொன்று தொட்டு இன்று வரை அழிக்கப்படாத அருங்கலைகளுள் நாட்டியமும் ஒன்று. இதனைச் சதிர் என்ற பெயரால் வழங்கி வந்தனர். பரத நாட்டியம் என்பது இன்றைய வழக்கு. இந்திய நாட்டு நடனங்கள் நான்கு பிரிவுகளை உடையன:—

| | வழங்கும் பகுதிகள் | பெயர் |
|---|---|---|
| 1. | தமிழ்நாடு | பரத நாட்டியம் |
| 2. | கேரளம் | கதகளி |
| 3. | உத்தரப்பிரதேசம் | கதக் |
| 4. | வடகிழக்கு | மணிபுரி |

பரத நாட்டியம் என்றுலே நடராஜ வடிவம் நம் கண்முன் நிற்கும். பரதநாட்டியமும், நடராஜ வடிவமும் தமிழ் நாட்டிலே பிறந்த கலைச் செல்வங்கள். உலகம் தோன்றி இயங்கும் இயல்பினை உருவகப் படுத்திய வடிவம் நடராஜர். உயரிய கற்பனையில் எழுந்த நடராஜ வடிவம் வேறு எந்த நாட்டிலும் ஆக்கப்படாதது. குறிப்பாக இந்திய நாட்டின் எந்தப் பகுதியிலும் செதுக்கப்படாதது. இதன் அருமை, பெருமை நோக்கியும், தென்னுட்டிற்கே உரியவன் சிவன் என்பதையும் உணர்ந்த மணிவாசகப் பெருமான்

"தென்னுடைய சிவனே போற்றி
என் நாட்டவர்க்கும் இறைவா போற்றி"

என்றுர்.

நடராஜர் ஆடி இயக்கிய கரணங்கள், உடல் அசைவுகள் நடனத்திற் உட்பொருள்களாகும். பரமேஸ்வரர் எல்லா உலகங்களையும் ஆன்மாக்கள் நிமித்தம் படைக்க நினைத்தது மனோபாவம். நினைத்தஉடன் அசைத்தது அபிநய பாவம். அசைத்த உடன் உதித்த சக்தியைத் தழுவியது ரசபாவம். ரசபாவத்தினுல் ஓசை தொனித்தது ராகம். ராகத்தினுல் சக்தி சிவமாய் நடித்தது தாளம். பாவம் அபிநயம் ரசம் ராகம் தாளம் ஆகியவை நாட்டிய உட்பொருள்.

## பரத நாட்டியம்

மனிதனின் உட்கருத்து, உணர்ச்சி ஆகியவற்றை அறிவிக்கும் மொழி பரத நாட்டியம். இயல்-இசை-சிற்பம்-ஓவியம் ஆகிய கவின் கலைகளின் இணைப்பே பரத நாட்டியம். ஏனைய கலைகள் போல் ஐம் புலன்களுள் ஏதேனும் ஒன்றைப் பற்றி நில்லாது, எல்லாப் புலன்களையும் ஒரே காலத்தில் பற்றி நின்று இன்பம் அளிப்பது பரத நாட்டியம். கலைகள் அனைத்தையும் ஒன்றுகக் கூட்டிக்குழைத்த அமிழ்தம் பரத நாட்டியம். பலதரப்பட்ட ரசிகர்களையும் ஒன்றுபடுத்தி மகிழச் செய்வது பரத நாட்டியம்.. இத்தகைய பரதநாட்டியத்தை, கண்ணிமையால் பார்க்க வேண்டும் என்றும், சிறிது இமைத்து விட்டால் இமைக்கும் நேரத்தில் பாவ எழிலைப் பார்க்க முடியாது.... என்று ரஷியக் கலை அறிஞர் பாராட்டியிருக்கிறர். பரத நாட்டியம் தெய்வீக சம்பந்தம் உடையது. மும்மூர்த்திகளும், பிற தெய்வங்களும்

ஆடியருளிய அருட்கலையான பரத நாட்டியத்தை வளர்த்த பெருமை ஆலயங்களுக்கே உரியது.

**தாண்டவம்**

பாவம் - ராகம் - தாளம் – அபிநயம்-பாதக்கிரமம் ஆகிய ஐந்தும் தத்தமக்குரிய முறையால் சிவன், சக்தி, சதாசிவம், மகேஸ்வரன், சுத்த வித்தை என்னும் ஐந்து தத்துவங்களின் பால் நிலை பெற்று படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களாய் முடியும்.

பாவம்-ராகம்-தாளம்-அபிநயம்-பாதக்கிரமம் ஆகிய இவ்வைந்தும் கூடிய நிலைக்களமே பரமசிவத்தினது பஞ்சகிருத்தியங்கள்(ஐந்து தொழில்). பரமசிவத்தின் பால் நிகழும் **பாவம்** முதலிய ஐந்து தொழில்களைப் பொதுவாக ஆனந்தத் தாண்டவம் என்றும் சிறப்புப் பற்றி 12 வகை என்றும் அறிவு நூல் கூறும்.

தாண்டவங்கள் பல இருப்பினும் படைத்தல்-காத்தல்-அழித்தல்-மறைத்தல் அருளல் ஆகியவற்றை நிலைக்களனுகக் கொண்டு ஐந்து சபைகளில் கூத்தப் பெருமான் ஆடியிருக்கிருர். அவை:—

| **தாண்டவம்** | **ஆடிய இடம்** |
|---|---|
| ஆனந்த தாண்டவம்-பொது. | சிதம்பரம் பொன்னம்பலம் |
| 1. **படைத்தல்** முனிதாண்டவம் | திருநெல்வேலி தாமிரசபை |
| 2. இன்பம் **காத்தல்** சந்தியாதாண்டவம் | மதுரை வெள்ளியம்பலம |
| துன்பம் கௌரீதாண்டவம் **காத்தல்** | திருப்பத்தூர் ரத்னசபை |
| 3. **அழித்தல்** சங்கார தாண்டவம் | திருக்கடவூர் மயானம். |
| 4. **மறைத்தல்** திரிபுர தாண்டவம்- | குற்ருலம் சித்ரசபை |
| 5. **அருளல்**-காளீதாண்டவம் | திருவாலங்காடு |

**“ ஆனந்த தாண்டவம் ”**

பொதுவாக ஐந்து தொழிலும் சேர்ந்தது ஆனந்த தாண்டவம். இதை ஆடுகின்றவர் வடிவம் உடையவராதலால் சகளர், நடராஜர் எனப் பெயர் பெற்ருர். இவரது ஐந்து தொழில்களின் சின்னங்களாவன :—

> தோற்றம் துடியதனிற் ருேயுந் திதி
> யமைப்பிற்
> சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—
> ஊற்றமாய்
> ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ
> தம்முத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு.

1. துடி (உடுக்கை) யேந்திய மேல் நோக்கிய வலது கை—**படைத்தல்.**

2. தடுக்கும் கை பதாகையாகக்* கீழ் நோக்கிய வலது கை—**காத்தல்.**

3. அக்கினி யேந்திய மேல்நோக்கிய இடது கை—**அழித்தல்.**

4. ஊன்றிய திருவடி—**மறைத்தல்.**

5. தூக்கிய திருவடி—**அருளல்.**

*பதாகை :– நான்கு விரலும் தம்முள் ஒட்டி மேல்நோக்கி, பெருவிரல் மடக்கி நிற்பது.

**ஆனந்த தாண்டவம்**

ஆகாயத்தில் தோன்றும் ஒலியில் ஆண்டவன் நின்று உலகங்களை எல்லாம் படைத்து இயக்குவது போல, உடம்பினுள்ளும் நின்று அகக்கருவி, புறக்கருவிகளை இயக்கி அதனுள் வாழும் உயிர்க்குப்

பெரிதும் துணை செய்கிறான். நம் உடல் வளர்ந்து, நிலை பெறுவதற்கு இன்றியமை யாக் கருவி நெஞ்சப் பை. நெஞ்சப் பையின் அசைவு, ஒலிகளால் நடைபெறும். அங்குக் காணப்படும் மின் ஒளி இறை வனது திருமேனி. இங்ஙனம் நெஞ்சப் பையிற் காணப்படும் அமைதியினை உருவகப்படுத்தியது தில்லையம்பலத் திரு நடனமாகும். பொதுவாக ஆடிய ஆனந் தத் தாண்டவமென்பதும் இதுவே.

நெஞ்சப்பையில் அசையும் மின் ஞெளி இறைவன் - அதன் அசைவு திரு நடனம். அங்குள்ள முதல் எழுத்தின் ஒலி காலடியில் ஒலிக்கும் சிலம்பொலி.நெஞ்சப் பையின் சுற்றுவடிவு அவனைச் சூழ்ந் துள்ள சுடரொளி-எல்லா உயிர்களின் நெஞ்சப்பையில் நின்று திருநடனம் (அசைவு) இயற்றும் உண்மையினைக் காட்டுதற் பொருட்டே ஆனந்தத் தாண்ட வத்தைப் பொது என அறிவுநூல் கூறி நின்றது. இதன் கருத்தை உள்ளடக்கி மணிவாசகப் பெருமாள்.... **''நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே''–''தில்லை யுட் கூத்தனே! தென்பாண்டி நாட் டானே''** என்றார்.

உடலிற்கு இன்றியமையாத உறுப்பு நெஞ்சப்பைபோல, நில உலகின் நெஞ் சப்பை சிதம்பரமாகக் கண்டனர். அதன் வெளியிலே இறைவன் இடைவிடாது நடிக்கும் நடனம் பொதுவாகிய ஆனந்தத் தாண்டவமாம். இது பேரானந்தம் உண்டு பண்ணும்காரணம்பற்றி **''திருநடஞ்செய் பேரானந்தம் பாடிப் பூவல்லிக் கொய் யாமோ''** என்றார் மாணிக்கவாசகர்.

**கோயில்களில் பரதநாட்டிய உருப் படிகள்:-** செய்யப்படுவது செய்யுள். பாடப் படுவது பாட்டு, உருவாக்கப்படுவது உருப் படி. - வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளுக் கும் இசை உருப்படிகள் செய்தனர் அறிஞர். அவை, நால் வகை நிலத்திற்கு உரிய பாடல்கள், விளையாட்டுப் பாடல்கள், தொழிற் பாடல்கள், மற்றும் போர்க்குரிய பாடல்கள், நீர் ஆடுதற்குரிய பாடல்கள்) இறைவனைக் குறித்த பாடல்கள் முதலியன வாம். இதே போன்று பரதநாட்டியத்திற் கான உருப்படிகள் பல. அவற்றுள் கோயில்களில் வழங்கும் பரத நாட்டிய உருப்படிகளை ஆராய்வோம். பரதநாட்டிய வகை மூன்று கூறுகளாக உள்ளன :-

1. நாட்டிய நாடகம்—இது கதை தழுவியது
2. நிருத்தியம்—பாவங்களைத் தழு வியது
3. நிருத்தம்—தாளத்தை அடிப்ப டையாகக் கொண்டது.

**1. நாட்டிய நாடகம்:—**

ஆண்டவனுடைய பெருமை திருவிளை யாடல்களை நடித்துக்காட்டுவது, மகாபார தம், ராமாயணம், சிவலீலை ஆகியவற்றை நடிப்பது, இவற்றை, தமிழ்நாட்டில் பாக வத மேளம் என்றும் குச்சிப்பிடி என்று ஆந்திர நாடுகளிலும் வழங்கப்படும்.

**2. நிருத்தியம் : பாவத்தை தழுவிய** நடனம். பக்திப்பாடல்களின் பொருளை முகக்குறிப்புக்களாலும், செயல்களை அங்க அசைவுகளாலும் முத்திரைகளாலும் காட்டி ஆடப்படும். இவைகளுள் கவுத்துவம் என்பதும் ஒன்று. இது சாகித்யங்களா லும் சொற்கட்டுகளாலும் ஆக்கப்பட்டவை. எல்லாத் தலங்களுக்கும் கவுத்துவம் இயற்றி யிருக்கிறார்கள். மதுரை கும்பா பிஷேக சிறப்பு மலரின் நினைவாக மதுரை சொக்கநாதர் கவுத்துவம் இந்தக்கட்டுரை யின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

**3. நிருத்தம்:** தாளத்தையே அடிப்படையாகக் கொண்டது நிருத்தம். சாகித்தியங்கள் வராமல் சொற்கட்டுகளை அடிப்படையாகக் கொண்டு அமைத்த உருப்படி. இவை சதி, பேரணி நாட்டியம் முதல் பாத சாரி, தேசசாரி நாட்டியம் ஈருக 24 வகை நாட்டியங்கள் உண்டு.

(உ-ம்) "பேரண நாட்டியம்" உலக உற்பத்திக்காக ஆடிய நிருத்தமாகும்—சித்திர நாட்டியம் – இது குண்டலி நிமித்தம் ஆடிய நிருத்தம் – தாளம் சிம்ம நந்தனம். இவை சொற்கட்டுகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. சுத்த நிருத்தம் என்றும் பெயர் பெறும். லய வாத்தியங்கள் மட்டும் இதன் பக்கக் கருவிகள்.

**நவசந்தி கவுத்துவம்**

கோயில்களில் நடைபெறும் சடங்கு முறைகளில் பரத நாட்டிய அடிப்படையில் கவுத்துவங்களின் வகைகளுள் இதுவும் ஒன்று. கோயில்களில் ஆண்டுதோறும் நடைபெறும் விழா ஆரம்ப தினத்தன்று நடைபெறும் துவஜாரோகண (கொடியேற்றம்) திக்குபந்தன நிகழ்ச்சிகளில், நவசந்திகளுக்கு அதிபதிகளான பிரமன் - இந்திரன் - அக்கினி – எமன் - நிருதி – வருணன்-வாயு–குபேரன் ஆகிய தெய்வங்களுக்கு,பரத நாட்டிய பூர்வமான நிகழ்ச்சிகள் நடைபெறும். ஒவ்வொரு சந்திக்கும் பாடுவதற்கான ஜதிகள், உருப்படிகள், ராகம், நிருத்தம், தாளம் முதலிய நாட்டிய அம்சங்களை இணைத்திருக்கிருர்கள்.

(உ-ம்) **பிரமசந்தி** கீதம் – மத்தியமாவதி. வாத்தியம் (தாளம்) திஸ்ரலகு – நிருத்தம் – கமல நிருத்தம். இவை போன்று மற்ற சந்திகளுக்கும் உண்டு:

பெரிய கோயில்களில் கீத - வாத்ய நிருதத்தோடு, கோயில் கருவிகளான கொம்பு, சின்னம் – சங்கு, முகவீணை முதலிய துளைக்கருவிகளும், சுத்தமத்தளம் பஞ்சமுகம், நகரா முதலிய பிற தோல்கருவிகளும் அடங்கிய சர்வ வாத்தியங்களுடன் நவசந்தி நடனத்தை நடத்தி வந்தார்கள். மதுரை மீனுட்சி திக்கு விஜய காலத்திலும் உபயோகிக்கப் பெறும்.

**சோடச உபசாரங்கள்**

பதினாறு வகையான மரியாதைகள் ஆண்டவனுக்கு ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. அவைகளில் ஆவாஹனம் — ஸ்தாபனம் – பாத்யம் இன்ன பிற வகைகளோடு கேயம் – வாத்தியம் – நர்த்தனம் ஆகியவகைகளுள் நிருத்தமும் ஒன்று.

நாட்டியங்கள் வழங்கும் பகுதி, பரத நாட்டியச் சிறப்பும் கடவுள் தத்துவமும் பரத நாட்டிய இசை உருப்படிகளை கோயில் வழிபாட்டோடு இணைத்த தன்மையும் இயன்ற அளவு குறுகிய அளவோடு எழுதப்பட்டது.

பரத நாட்டியம் தெய்வத்தன்மை வாய்ந்ததன்காரணமாக கோயில்வழிபாட்டு முறையில், ஆண்டவனுக்குரிய சடங்குகளிலும் 16 வகை மரியாதைகளுள்ளும் நர்த்தனம் என்ற பகுதியை நடத்தி வரப்பட்டது. தற்காலம் நிறுத்தப்பட்டிருக்கிறது. அரசியல் சட்டத்தால் மீண்டும் "நர்த்தன" வழிபாட்டை நடத்துவதற்காக அரசாங்கம் ஆவன செய்தால் தெய்வீக சம்பந்தமான நடனமுறை புத்துயிர் பெறும்.

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும் பனித்த சடையும்
பவளம் போன் மேனியிற் பால் வெண்ணீ
றும் இனித்த முடைய எடுத்தபொற்பாத
முங் காணப்பெற்ருல் மனித்தப் பிறவி
யும் வேண்டுவதே யிந்த மா நிலத்தே.

ஆட லேற்றினன் கூடலாலவாய்
பாடி யேமனம் நாடி வாழ்மினே. ○

தக்கிட—தகதத்தி || கிடத-கரு குந்த ||
கிண்ண—ஜெக்க || ணகரு—தகதிகி ||
ஜெகரு—ண, கதி
ணகரு—ணம்திகி || தக்கு—தரிகிடா
தாம்,—தகஜெக || ஈச—ரதிவிதி ||
நடன—தங்குகு || டிங்கு. தென்கயி ||
லாச—ததகிட || தக்கிடதகி—திக்கிட—
கிடதகி ||
தொங்கிடதகி—னங்கிட கிடதகி ||
தகுந்த—தகுதகு
தகு ந்த—தா,, || சிரித்து—முப்புரம் ||
எரித்து—மதகரி || யுரித்து-புரிசடை ||
விரித்து—வைகையில் || மண், சு—
மந்தவர் ||

தகணங்கி—தகதரிகிடதக || தத்த
தொம்-கா திகி ||
ணங்கதொ—திக்கத்தக்க || ணங்கத்—
தொங்கா ||

அய்யர்—கலியுக || மெய்ய-ரடியவர் ||
தங்க-மேனியர் || துங்க—சங்கரர் ||
தங்கு—தத்தக || டிங்கு—ஜெம்தக ||
தக்குடுதக—ணம், திக்குடு || தொங்கு
டுதக—ணம், நங்குடு
நங்கிட—நங்கிடகிடதகி || இலகு—பல
கல்வி ||

ஞான—வசனம் || விறகு—விலைகூறி ||
வேங்கை—புலியுரி || நரியப்—பரியதின்
மீதி-லேறிய || தெ,க்ஷி—ணர்உமை
ல, க்ஷி—ணர்,, || தங்கு—டிங்குகு ||

டிங்கு—தாகுகு—திமித-திமிதிமி ||
திமித—தித்தக || வளையல்—விற்றொரு

ஞான—சம்பந்தர் || ஏட—தேயெதி
ரேற—வே,, || நீறி—லாதவர் ||
வீறு—பேசிய || நிபுணர்—சமணரை ||
கழுவி—லேற்றிய || நீதி—நாயக ||
ஞர்,—தத்,த || நதியை—மதியை ||
முடித்த—வேணியர் || மதனை
—யெரியர ||
விழித்த, பார்வையர் || மதுரை—
அழகிய ||
சொக்க—நாயகர் || நடன—மிடுதுங்க
கவுத்—துவமே || கற்று—நித்தமும்
உட்க—ளிப்பவர் || முத்தி—பெற்றிடுவர் ||
தத்த—தொம்தகதகதொம்ர் || தகதக
தொம் || தகணம்தகதிகிதகதிதிகிட
தாம்;

—O—

# கவுத்துவங்கள்

சிவ. பிருந்தாதேவி

பாரத தேசத்திலே மட்டும் இல்லாமல் உலகத்திலேயே நம் தமிழ் நாடு மணிவிளக்கெனத் திகழ்கிறது. இதற்குக் காரணம் இதன் கலைவளமே. இதன் கலைகளிலே தலைசிறந்தது பரதநாட்டியம்; பரதநாட்டியத்தின் தனி மாண்பு என்னவென்றால் நிகழ்ச்சிகளின் தத்துவங்களைச் சொல்கொண்டு இயம்பாது, அபிநயத்தாலேயே புலனாகும்படி செய்தல். பாவமும் ராகமும் தாளமும் பக்குவமாக ஐக்கியம் அடைந்து, நேர்த்தியாகப் பரிணமிப்பதுதான் பரதநாட்டியம். இதயத்தைக் கவர்ந்து உற்சாகம் உண்டாக்கக்கூடிய பாவனையே நாட்டியத்தின் வேர்; அபிநயம் அதன் பூ; ரஸானந்தம் அதன் கனி.

கார்மேகத்தைக் கண்ட மயில் உற்சாகங் கொண்டு தோகைவிரித்தாடுகிறது; அதுபோலவேதான் நடி நடனமாடுவதும். 'காரினில் செருக்கிய கலாப மஞ்ஞைபோல் நாரியர் ஒருநடம் நடிப்ப' என்பர் கம்பர். இந்நாரியர் பலதிறத்தர் ஆவர். அரசர் முன் ஆடும் நடி ராஜதாசி; பொது மன்றில் ஆடுபவள் அலங்கார தாசி; ஆலயத்திலே ஆடுபவள் தேவதாசி. இவள் உருத்திரகணிகையர் மரபிலே தோன்றியவள். சிவந்த மேனியும் அழகும் வாய்ந்தவள். அன்னம் போன்ற நடையினள்; திரைச்சீலையை விலக்கிக்கொண்டு இவள் மேடையிலே தோன்றுவது கார்மேகத்தினின்றும் வெளிப்படும் மின்னல் போல, பூரணசந்திரன்போல, புஷ்பித்த பூங்கொடிபோல என்றெல்லாம் வருணிக்கப்பட்டுள்ளது. ரத்தினாபரணங்கள் புனைந்து, பிரகாசிக்கும் பொற்சரிகை உடை தரித்து கச்சணிந்து பொற்பதுமை போலப் பொலிவாள். புனுகு, களபம் பூசி, அன்னம்போல் ஒலிக்கும் சதங்கை அணிந்து, சமபத நிலையிலே நின்று, அவள் அலாரிப்புப் பிடிக்கும் போதே, மேடையில் அல்ல, காண்பவர் மனங்கள் என்னும் அரங்கின் மீதுதான் ஆடுவாள். இதெல்லாம் பழங்கதை.

நாட்டியம் நான்கு விருத்திகளில் நிலைபெற்று நிகழ்வது. அறநூல் காவிய நீதி விஷயமாய் வளர்ந்து, வீரம் கருணைகளை விளங்கச் செய்வதைப் **பாரதவிருத்தி** என்பர். கோபம் அருவருப்புகளைத் தோன்றச் செய்வது **ஆரபடிவிருத்தி**. கர்மம் ஞானம் பக்தி யோகங்களாய் விரிந்து அற்புதப் பயன் தருவது **சாத்துவதி விருத்தி**. நாயக நாயகி பாவங்களாய்ச் சிருங்கார ஹாஸ்யங்களை விளக்குவது **கைசகிவிருத்தி.** இம்முறையிலே சிலப்பதிகாரத்தில் மாதவி ஆடிக்காட்டும் கடயம் மரக்கால் முதலிய பதினோராடல்களும் அமரர்கள் ஆடியவை.

இந்த நாட்டியத்தின் ஒருவகைதான் கவுத்துவம்; இதைக் கவுத்தம் என்றும் வழங்குவர். பரத வகையிலே பழமையான சம்பிரதாயத்தை அடிப்படையாகக் கொண்ட இது, நடராஜப் பெருமானை எழுந்தருளச் செய்கிற காலத்தும், உருத்திர கணிகையர் திருமாங்கல்ய தாரண காலத்தும் நட்டுவனாரால் கூறப்படும் சொல்லும் ஜதியும் கலந்து, முட்டுக்காரர் (மிருதங்கக்காரர்) தாளக் கட்டுடன்

நடைபெறும். பிள்ளையார் கவுத்துவம், மகாலிங்கக்கவுத்துவம், மதுரைச் சொக்கேசர் கவுத்துவம் போன்ற பல கவுத்துவங்கள் உண்டு.

நவசந்திக் கவுத்துவங்களிலே, பிரம சந்தி, இந்திர சந்தி, அக்கினி சந்தி, யம சந்தி, நிருதி சந்தி, வருண சந்தி, வாயு சந்தி, குபேரசந்தி, ஈசான சந்திக் கவுத்துவங்கள் உண்டு. எட்டுத்திக்குகளுக்கும் எட்டுத் தேவர்கள்; இந்த எண்மருக்கும் முற்பட்டவர் பிரம்மா. ஆதலின் பிரமசந்திக் கவுத்துவம் முதலில் பாடப்பெறும்.

சிவாலயங்களிலே திருவிழா நடைபெறும் காலங்களில், விழா நன்கு நடைபெற, திக்பந்தனம் அதாவது திசைகட்டுதல் மரபாகும். இதேபோல உற்சவம் முடிந்ததும் திக்விசர்ஜனம் அதாவது திசையவிழ்த்தல் வழக்கமாகும். எட்டுத் திசைகளிலும் வேத பாராயணமும் தேவார பாராயணமும் மிருதங்க தாள ஜதியுடன் நடனமும் நடைபெறும்; அந்தந்த திசை பாலர்க்கு உகந்த ராகங்களும் நாதசுரத்தில் வாசிக்கப் பெறும்.

ஒவ்வொரு சந்தியிலும் குறிப்பிட்ட தேவதையை ஆவாகனம் செய்து, வரவழைத்து பூசை முதலிய உபசாரங்கள் செய்து, " ஈசுவரனுடைய உற்சவத்திலே நீ உன்னுடைய திக்கைப் பாதுகாத்து மகிழ்ச்சி கொள்ளுவாய் " என்று மந்திரம் சொல்லுவார்கள்.

ஒவ்வொரு திக்கிற்கும் ஒவ்வொரு இராகம், தாளம், வாத்யம், நிருத்தம் இவைகளோடு கூடிய உபசாரம் திக் பந்தனத்தில் நடக்கும். நான்கு வேதங்களுக்கு அதிபதி பிரம்மா. சங்கீதம் முதலிய சகல கலைகளும் பிரம்மாவிற்குள் அடக்கம். நட்டுவாங்க ஜதிகள் பலவும் பிரம்மாவின் உருவத்தை வருணிக்கின்றன. புல், பூண்டு, செடி, கொடி, தாவரம், மக்கள், மனு, தேவர் அனைவரையும் படைப்பவர் பிரம்மா. சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மாவிற்கு வாத்யம், சச்சத்புடம். யாழ், குழல், மிருதங்கம், சங்கு, படகம் முதலிய ஐவகைக் கருவிகள் சேர்ந்தது சச்சத்புட வாத்யமாகும்.

இவ்வாத்யம் மனதைக் கவரும் மத்யமாவதியில் " சரி மா பநி ஸா " வென ஒலிக்கிறது. அந்த ஒலியைக்கேட்போம். பிரம்மசந்திக்குத் தாளம் — பிரமதாளம்

இராகம் — மேகராகம்
நிருத்தம் — கமல நிருத்தம்
கீதம் — மத்யமாவதி
வாத்யம் — சச்சத்புடம்

தக்கிணம் தரிகிட தகிர்தகிட திந்தீம்
திக்கிணம் திரிகிட திகிர்தகிட தொந்தொம்
தக்கிணத திக்கிணத தொங்குதொங்
கிடதக
தாதா வெனும் பிரம சந்தியும் **சாவித்திரி**
**காயத்திரி சரஸ்வதி மங்கையர்**
**சமேதராய்**
தத்தீனு தகதீனு தகதித்தி தாதாம்
**சதுர்வேத சங்கீத தருமநூ லாதியும்**
**சகலகலை ஞானமும் இரவுபக லாதியும்**
**ரூபிக ரித்துத் துதித்துத் தொனிக்கவே**
தக்குதிக் காதியாய் திரியக்கு தாவரம்
மக்கள்மனு தேவராம் உப்பிரம ராதியாய்
சகலபுவ னசிருஷ்டி கர்த்தரா மதனசிம்
மாசனு தீபதற்கு சச்சத்புடம் வாத்யம்
தத்தடீ டிங்குதா மத்யமா வதிகீதம்
சரிமா பநீசா கமலமது நிருத்தம்
சதுரஅம் சாசியம் பிரமதா ளம்தத்தி
தகதித்தி தாதா மேகரா கப்பண்

விளங்கியே அடியவர்க் கருள்செயும் பிரமனது
சந்திக் கவுத்துவம் தகிர்தகிட திகிர்தகிட
தக்குதிக் குதக்கிட்ட தொங்கிட
கிடதகிடன்
தங்கி கிடதக திக்கிதாம் தத்த!

**வானம்பாடி கவுத்துவம்:**

எங்கள் மூதாதையரில் பரத வித்வான் ஒருவர் காலைவேளையில் ஊரையடுத்த ஒரு காட்டின் வழியே சென்றார். வானம்பாடிப் பறவை வானில் மிக மகிழ்ச்சியுடன் பறந்துகொண்டிருந்தது. அதனைக் குறி வைத்து அடித்து வீழ்த்த ஒரு வேடன், வில்லை வளைத்து அம்பு தொடுத்தான். அம்பு தைத்த வானம்பாடி நிலை தடுமாறி, உயிர்த் துடிப்புச் சிறிது சிறிதாகக் குறைந்து உணர்வற்றுக் கீழே வீழ்ந்தது. வேடன், அதை எடுக்க ஓடி வந்தான்.

அப்போது அந்தப் பறவை தன்னை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு இறக்கையை இரண்டு தடவை உதறி, ஜிவ்வென்று பறந்து விட்டது. இதனைக் கண்ட பரத வித்வான் நட்டுவாங்கச் சொற்கட்டுகளால் வரும் ஒலியிலிருந்தே மேற்கண்ட நிகழ்ச்சியைக் கவுத்துவமாக இயற்றியுள்ளார். சொற்களைக் கொண்டு இது போலும் ஒரு சம்பவத்தை வருணித்த வான்மீக மகரிஷியின் வாக்கு இராம கதைக்கு மூலமாயிற்று.

இந்த வானம்பாடிக் கவுத்துவத்தை என் தந்தையார், என் சகோதரி மிருதங்கம் ரெங்கநாயகி அம்மாளுக்கும், என் சகோதரர் பிடில் உலகநாதபிள்ளைக்கும் (A. I. R. திருச்சி) சொல்லும் பொழுது நான் கேட்டிருக்கிறேன்.

**வானம்பாடி,**

**ஜெம் தாரிக்கும் ஜே ஜே ஜே**
**—ஜகத்தில் ஜெயம் நமதே, என்றும்,**
**ஜெம் தாரிக்கும் ஜே**
**—வாழ்வது நாமே, என்றும்,**
**ஜெகனம் கிடதக தொர்ரம ஜே**
—ஜெகத்தில் நமக்கு நிகர்
ஒருவரும் இல்லை;
ஜெயம் நமதே என்ற செருக்கில்
வானமுகட்டில் பறந்து
கொண்டிருக்கிறது. அப்போது,
**துக்கு துக்கு ஜே கிட்ட**
**தொம்தாரிக்கு ஜே கிட்ட**
—என்று வேடன் பெருமிதத்தோடும் தன்னம்பிக்கையுடனும்

**டிகுடிகு டிட்டேகு**—என்று வில்லை வளைத்து,

**தர்ரேகு கிர்ரேகு**—என்ற ஒலியுடன் காற்றைக் கிழித்துக் கடு வேகமுடன் செல்லும் அம்பை விட்டதும்,

**கிண்**— என்ற தொனியுடன் வானம்பாடியின் தலையில் அடிபடுகிறது.

**ஜெக ஜெக தாம்**—என்று நிலை தடுமாறிய வானம்பாடி,

**தக்குந் தாதி தக்குந் தாதி**—என்று தள்ளாடிக் களைப்படைகிறது.

**தாகிரி கிண்ணம்** — என்ற தொடரில் ஒலிஉயிர்த்துடிப்புக் குறைந்துவருவதைத் தெரிவிக்கிறது.

**கிரிகிரி கிண்ணம்**— என்று கிறுகிறுத்து வேகமாக மயங்கி,

**கிண்ணம்** — என்று உயிரின் ஒடுக்க நிலையில் மயக்கமுற்றுக் கீழேவிழுகிறது. இதனைக் கண்ட வேடன் வெற்றி கிட்டி விட்டதென மகிழ்ந்து

**தஜ்ஜெணு தஜ்ஜெணு** — என்று மிடுக்கு நடையுடன் வானம்பாடியை எடுக்கச் செல்லுகிறான்.

அப்போது வானம்பாடி அம்பு தைத்த மயக்கத்திலிருந்து ஒருவாறு சமாளித்துக் கொண்டு,

**துத்துகுதா துகுதுகுதா தோதிகிதிகி துத்துகுதா**—என்று சிறகை இரண்டு முறை உதறிக்கொண்டு, பறந்துவிட்டது.

இனி முழுக் கவுத்துவத்திற்கும் வருவோம்....வெறும் தாளக் கட்டிலேயே இச் சம்பவம் விவரிக்கப்பட்டுள்ளது வியப்பே. வானம்பாடியின் செருக்கும், வேடனின் தன்னம்பிக்கையும் இதிலே காணலாம்.

தர்ரகஜெம்ஜெம் குக்குந் தாரி
குந்த கிடத கிடதக தரிகிடு
ஜெம்ஜெம் தாரி ஜெனகுடு ஜெனகுடு
ஜெம் தாரிக்கும் ஜே ஜே ஜே
ஜெம் தாரிக்கும் ஜே ஜே ஜே
ஜெகணம் கிடதக தொர்ரம் ஜே
துக்கு துக்கு ஜே கிட்ட
தொம் தாரிக்கும் ஜே கிட்ட
டிகுடிகு டிட்டேகு டிட்டேகு தர்ரேகு
கிர்ரேகு கிண்ணக ஜெகஜெக தாம்
தக்குத்தாதி தக்கு தக்கும்தாதி
தக்கும்தாதி
தாகிரி கிண்ணம் தாகிரி கிண்ணம்
தாகிரி கிண்ணம் தாகிரி கிண்ணம்
கிரிகிரி கிண்ணம் கிரிகிரி கிண்ணம்
கிரிகிரி கிண்ணம் கிரிகிரி கிண்ணம்
கிண்ணம் கிண்ணம் கிண்ணம்
கிண்ணம்
கிண்ணம் கிண்ணம் கிண்ணம்
கிண்ணம்
தஜ்ஜெனு தஜ்ஜெனு துத்துகுதா
துகுதுகுதா
தோதிகி திகிதிகி துத்துகு தா —
தக்கிட்ட குகும் தத்தித் தா —
தொங்கிட கிடதகி டன் — தங்கி
கிடதக தக்கி தாம் தத்த !

**சிம்மநந்தன சித்திர நாட்டியம்**

கவுத்துவங்களைக் கட்டிய பெரியவர்கள் சித்திர நாட்டிய ஜதிகளையும் கண்டு பிடித்து, மற்றவர்கள் கண்ணிற்கும் கருத்திற்கும் களிப்பை உண்டாக்கியிருக்கிறார்கள்.

விளம்ப, மத்திம திரிகாலங்களில் ஜதிகளை நட்டுவனார் சொல்ல, மிருதங்கம் முழங்க, வேய்ங்குழல் மிழற்ற, குரல் இசைக்க, சதிராடும் நடியின் பாதத்தில் பாதசரம் கிலுங்கிக் குலுங்க, இச் **சித்திர நாட்டியம்**, சமதளத்திலே வைத்த கம்பளத்தின்மேல் பரப்பிய குருத்து மணலிலே சதிராடும் நடியின் காலடையின் குறியினால் சிம்மம்போல் காட்டப் பெற்றால் அது சிம்ம நந்தனமாகும். காலடையின் குறி, பதுமம், நாகம், நாரிகேளம், இரதம், கஜம்போற் காட்டப்பெற்றால் முறையே பதுமபந்தம் நாகபந்தம், நாரிகேளபந்தம், ரதபந்தம், கஜபந்தமெனப் பெயர் பெறும்.

இங்கு சிமமநந்தன சித்திரநாட்டிய ஜதி, விளம்ப மத்திம திரிகாலத்தோடு கூடியது.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் சுந்தரேசுவரர் பிரகாரத்தில் நடராஜர் சந்நிதியில் உள்ள இரண்டு தூண்களிலே ஒன்றில் சிம்ம நந்தனதாளமும் மற்றொன்றிலே 35 தாள வகைகளும் பொறிக்கப் பட்டுள்ளன. தாளம் சம்பந்தப்பட்ட வரையிலும் இவையேதான், நமக்குக் கிடைத்திருக்கும் சிற்பங்கள். இதைக் கருதும் போது, நம் முன்னோர்கள் இத்தாளக் கட்டுகளை எப்படிப் போற்றியுள்ளனர் என்பது புலனாகாமற்போகா. சிம்ம நந்தனம் பின்வருவது:

1) தத்தி தகதி தத்ததீன்ன தா
தத்த டிங்கு டிண்டி குஜேகு தஜேகு
தாகு தணகு தா தணகு ஜெணகு தா
தா கத ஜெம்தரி தக ததிங்கிணதொம்

2) தஜெம் ஜெம் தஜெம் தஜெம்
தஜெம் தகிட தரிடக தரிதா
தாதாதி தித்தி தஜெம் ததாத தஜெம் ததெய்
தஜெம் தகிட தரிடகதரிதா
தஜெம் தகிட தரிடகதரிதா தஜெம் தகிட தெய்
தாதா தீதீ தகதகதிகிதக தகததி ங்கிணதொம்

எத்துணை எத்துணையோ ரசபாவங்களையும் கலை நுணுக்கங்களையும் தாள விநியாசக் கோட்பாடுகளையும், இவற்றிற்கெல்லாம் மேலாம் இறையுணர்வையும் உண்டாக்கக் கூடிய பரத வகையிலே—நூற்றெட்டுத் தாளப்பிரிவிலே,கவுத்துவங்களுக்கும், முந்தையோர் முக்கிய இடமளித்துச் சிறப்பாகப் பேணி வளர்த்திருக்கிறார்கள் என்றால், அது கவுத்துவத்தில் உள்ள கணிசமான தாளக் கோர்வையும் சொல்லடைவும், ஜதி விநியாசங்களும், கவித்வமும் கலந்ததாகும் எனலாம்!



## முத்தம் தருக

காலத் தொடுகற் பனை கடந்த
கருவூ லத்துப் பழம் பாடற்
கலைமாச் செல்வர் தேடி வைத்த
கடவுள் மணியே! உயிரால

வாலத்து உணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க்கு ஒளிபூத்து அருள்பழுத்த
மலர்க்கற் பகமே! எழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே! உயிர்த் துணையாம்
தோன்றாத் துணைக்கு ஓர் துணை ஆகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத

மூலத் தலத்து முளைத்த முழு
முதலே முத்தம் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே

— குமரகுருபரர்
*மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்*

# பாண்டிய நாட்டின் பாடும் கல் தூண்கள்

சாத்தன்குளம் அ. இராகவன்

“பாண்டிய நாடு தமிழ் வளர்த்த பழம் பெரும் நாடு” என்று நமது புலவர்கள் கூறுவர். ஆனுல் நாம் கூறுகிறேம், இயல், இசை, நடகம் என்னும் முத்தமிழையும் வளர்த்த நாடு என்று. இங்கே முத்தமிழ் வளர்க்க மூன்று சங்கங்கள் இருந்தன என்றும் கூறுகின்றேம். சிவபெருமான் முதன்முதலாகப் பாண்டிய நாட்டிலே தான் தனது படைப்புத் தொழிலைக் காட்டும் முனிதாண்டவத்தை ஆடி, ஆடவல்லான் என்ற பெயரைப் பெற்ருன். இங்கேதான் ஒப்புவமை இல்லாத குழல் தூண்களும் கல் நாதசுரமும் இசைப் படிமங்களும் இசைத் தூண்களும் உள்ளன. கருங்கல்லால் ஆன இசைக் கருவிகள் கால கதியினுலும் தட்ப வெட்ப மாற்றத்தினுலும் தோன்றும் அழிவுகளை எல்லாம் எதிர்த்து நின்று இசைப் புலவர்கள் வரையறுக்க இசை நுட்பங்களை இன்றும் நமக்கு எடுத்துக் காட்டும் நந்தா விளக்காய் ஒளிர்கின்றன.

இந்தியாவில் எப்பகுதியிலும் இத்துணை அற்புதமான பாடும் கற்களைப் பார்க்க முடியவில்லை. எங்காவது ஒன்றிரண்டு தூண்கள் தென்பட்டாலும் அவைகள் எதுவும் பாண்டி நாட்டுப் பாடும் கற்களுக்கு, ஒலி நிறைவிலோ எழில் அமைதியிலோ ஒப்புமை கூறக் கூடியதாக இல்லை. கைவண்ணம் வாய்ந்த கற்றுணர்ந்த தமிழ் நாட்டுச் சிற்பிகள் எதிரொலி கிளர்த்தும் கருங்கல் வகைகளைத் தேடிக் கண்டுபிடித்து, அவைகளை நன்கு பரிசோதித்து, அதனின்றே இசைப் படிமங்களையும் இசைத் தூண்களையும் உருவாக்கியுள்ளார்கள். இந்த இனிய ஒலியைக் கிளர்த்தும் கற்களினின்று ஒரு மெல்லிய துண்டை, எடுத்து அதைப் பூதக் கண்ணுடியால் பரிசோதித்துப் பார்த்த பொழுது அதில் சில அபூர்வமான குறிகள் காணப்படுகின்றன. இதன் மூலம் எத்தகைய கற்கள் இசைத் தூண்களை உருவாக்குவதற்கு உபயோகப் படுத்தப்பட்டிருக்கவேண்டுமென்று அறிய முடிந்தது. தட்டினுல் பல்வேறு சுர ஒலிகளை எழுப்பும் தூண்களையோ படிமங்களையோ அமைக்கச் சாதாரணமான கற்களை உபயோகப்படுத்தவில்லை என்றும் அதற்கு உரிய கற்கள் வேறு உள என்றும் இதனுல் அறியப்படுகின்றன.

இசைத் தூண்கள், பலவித அழகு தரும் பற்பல வடிவங்களில் பல வரிகளையும் பல உருட்டுக் கம்பிகளையும் உடைய தாய்ப் பெரிய அளவில் காணப்பட்டாலும் இவை ஒரே கல்லில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவை இணையில்லாத எடுத்துக்காட்டாக இலங்குவது, நமது பாண்டிய நாட்டிலுள்ள மதுரை, திருநெல்வேலி, ஆழ்வார் திரு நகரி, கிருஷ்ணுபுரம், செண்பக ராமநல்லூர், தென்காசி, திருக்குற்ருலம், சுசீந்திரம், முதலிய தலங்களேயாகும். இஃதன்றி, திருவானைக்காவல், தாடிக்கொம்பு, தாராசுரம், திருவனந்தபுரம், திருப்

பதி, தட்பத்திரி, லேபாக்கி, ஹம்பி, விசய நகர் பெங்களூர் ராமராசன் பேட்டை முதலிய இடங்களிலும் இசைத்தூண்களும் இசைப்படிமங்களுல் இருக்கின்றன. அவைகள் பாண்டிய நாட்டின் பாடும் தூண்களுக்கு ஒப்பாகா.

இசைத் தூண்கள் எல்லாம் உயர்ந்த இன்னிசையை ஒன்றுபோல ஒலிக்கும் தன்மையுடையன என்று சொல்வதற்கில்லை. ஒருசில தூண்களின் ஒலி மந்தமானதாக இருக்கின்றன. ஒரு சில தூண்கள் மூன்று அல்லது நான்கு சுரங்கள் மட்டிலும் ஒலிக்கக் கூடியனவாக உள்ளன. இத்தூண்கள் தான் சிறந்த ஒலி எழுப்பும் தன்மையுடையனவாக இருக்கின்றன.

இந்தக் கல்லிசைத் தூண்களின் நிறம் கருப்பாகவோ, வெள்ளையாகவோ சாம்பல் நிறமாகவோ இருக்கின்றன. இவை அனைத்தும் வடிவில் சதுரமாகவும், புரிகள் உள்ளதாகவும், வட்டமானதாகவும், அறுகோணம், எண்கோணம் போன்றனவாகவும் காணப்படுகின்றன. பொதுவாகத் தூண்கள் மூன்றடிக்குமேல், ஆறு அடி வரை உள்ளனவாய் இருக்கின்றன.

இசைத் தூணிற்குக் கல் தேர்ந்தெடுக்கும் சிற்பி மிகக் கவனமாக, நுணுகி ஆராய்ந்து ஏற்ற கல்லை உளியால் தட்டியும், கொட்டியும் பார்த்து கல்லின் தரம் ஒலியின் தன்மை முதலியவைகளை ஆராய்ந்து, சிற்ப நூல் விதிப்படி தேவையற்ற பகுதிகளை உளியால் செதுக்கி எறிந்து விட்டு அழகு பொலியும் பல்வேறு சுர ஒலிகள் எழத்தக்கதாய்த் தூணை உருவாக்குகிறான். கரடு முரடான கற்களையும் சிற்பி தன் கைத்திறனுல் மெருகு தீட்டிய உலோகப் படிமம் போல, தொட்டுப் பார்த்தால் பளிங்குபோல் மழமழவென்றிருக்கும் படி, செய்துவிடுகிறான்; இது வியப்பே.

இசைத் தூண்களைத் தட்டினால் ஓசை எழும். ஆனால் சில இசைத் தூண்களில் எழும் நாத ஒலி, எதிரே இருக்கும் இசைத் தூண்களையும் தாக்கி அவைகளை அதிர வைக்கின்றன. அதிரும் அத்தூண்களை விரல்களால் தொட்டுப் பார்த்தால் தூண்களின் ஒலி அசைவை நாம் உணர முடியும் ஆனால் தூணின் நடுப்பாகத்தில் இந்த ஒலி அசைவு எழுவதில்லை. அது தூணின் அமைப்பு முழுவதையும் தாங்கிக் கொள்வதற்கும், உறுதியைக் கொடுப்பதற்கும் உறுதுணையாய் மட்டும் உதவுகிறது. அது இசைச் சுரங்களை எழுப்ப முடியாதவாறு கனமானதாகச் செய்யப்பட்டிருக்கிறது. சில இசைத் தூண்களில் எப்பகுதிகளை (அடிமுதல் நுனிவரை) த் தட்டினாலும் வெவ்வேறு சுரங்களைத் தருகின்றன. இந்த இசைத் தூண்கள் ஒலிகளை, தூண்களின் விளிம்புகளில் அல்லது சுற்று வட்டத்தில் நெடுகப் பகிர்ந்து கொடுக்கிறது. ஆழ்வார் திருநகரி, சுசீந்திரம் கோயில்களில் உள்பக்கம் சுற்று வரிசையில் இசைத் தூண்களின் இரண்டாவது வரிசையும் உள்ளன.

இசைத் தூண்களைச் செய்யத் தொடங்கும் முன் சிற்பி, தூண்களின் நீளம் அகலம் ஆகியவைகளை அளந்து, அப்பால் இசையை எழுப்புவதற்கு ஏற்ற உருவத்தைத் தீர்மானித்துக் கொள்வான். பின், கல்லைச் செதுக்க ஆரம்பிப்பான். அவன் அக்கல்லினின்றும் சரியான சுர ஒலியை எழுப்பும் நிலை வரும்வரை, சிற்ப விதியைத் தழுவி அக்கல்லைச் சிறிது சிறிதாகப் பேர்த்து, தூணை உருவாக்குவான்.

தூண் ஒழுங்கற்ற நிலையில் இருக்கும் பொழுதே நல்ல சுரஒலி எழுந்து விட்டால், மேற் கொண்டும் உளியை உபயோகித்து, ஒலியின் ஓசையைக் குறைத்துவிடாமல் அப்படியே தூணை வைத்து விடுவதும் உண்டு. இசைத் தூண்களின் நடுவிட்டம் எல்லாத் தூண்களிலும் ஒரே அளவுடைய னவாகவே இருக்கின்றன. தட்பவெட்ப நிலைகள் தாக்க வொண்ணுதவாறு இவை நன்கு ஆய்ந்து அமைக்கப்பட்டிருக் கின்றன. இவைகளுக்கு எவ்விதமான பழுது பார்த்தலும் தேவைப்படுவதில்லை. இவைகள் எக்காலத்தும் தொடர்ந்து ஒரே அளவில் இனிய ஒலிகளை எழுப்பிக் கொண்டே இருக்கின்றன. எனவே வீணை, யாழ், தம்புரு, மிருதங்கம் போன்ற இசைக் கருவிகளைப் போல் அடிக்கடி தந்திகளை முறுக்கவோ கட்டைகளைப் போல் அடிக் கடி தந்திகளை முறுக்கவோ, கட்டைகளை இறுக்கவோ, பட்டைகளைச் சுருக்கவோ, மாவு போன்ற பசைகளைக்கூட்டவோ, குறுக்கவோ வேண்டிய அவசியம் எழு வதேஇல்லை.

## செண்பகராம நல்லூர்த் தூண்குழல்

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த நாங்குனேரி வட்டத்தில் செண்பக ராமநல்லூர் என்று ஒரு சிற்றூர் இருக் கிறது. இங்கு ஒரு சிறிய பெருமாள் கோயில் உண்டு. இதன் சிற்பச் சிறப்பு மிகவும் அருமையானது. போற்றுதற் குரியது. இக்கோயிலில் உள்ள கருங்கல் தூணில் குடைந்துள்ள ஒரு இசைக் குழல் அதிசயமான ஒரு சீரியசிற்பப்படைப்பாகச் சிறந்து இலங்குகிறது. இத்தூண் குழல் கோயில் திருவறையின் தென்மேற்கு மூலையில் இருக்கிறது. இத்தூணில் குடைந்திருக்கும் துவாரம், அடி பெருத் தும், நுனி சிறுத்தும், நடுப்பாகத்தில் குவிந்த வண்ணமாகக் காணப்படுகிறது. இதனால் இக்குழலை நின்று கொண்டு எளிதில் ஊதமுடிகிறது.

ஆழ்வார் திருநகரியில் உள்ள தூணில் குடையப்பட்டிருக்கும் குழல்-துவாரம் அடியில் இருப்பதால் எவரும் அதை நின்று கொண்டு ஊத முடியாது. தரையில் படுத்துக் கொண்டுதான் ஊத முடியும். அதோடு அக்குழலின் உட் பாகத்தை உற்றுப் பார்க்கவும் முடியாது. ஆனால் செண்பகராமநல்லூர்க் குழலின் உட்பாகத்தை மின் விளக்கின் ஒளியைப் பாய்ச்சி நன்ருகப் பார்க்கமுடிகிறது. இத் தூண் குழல் துவாரம் கீழிருந்து மேல் நோக்கும் வண்ணம் சற்றுச் சாய்வாகக் குடையப் பட்டிருக்கிறது. குழலின் உட் பக்கம் மென்மையாகவும் பளபளப்பாகவும் சுத்தமாகவும் இருக்கிறது. ஒரு பக்கத்தில் இந்த வட்டவடிவமான துவாரத்தின் குறுக்களவு முக்கால் அங்குலமும் மற் ரெரு பக்கத்தில் ஒரு அங்குலக் குறுக்கள வும் இருக்கிறது.

குழலின் இரு நுனிகளும் வட்டவடிவ மாக இருக்கின்றன. இத்தூணில் ஒரு பக்கம் ஊதினுல் சங்கொலியும், மற்ரெரு பக்கம் ஊதினுல் எக்காள ஒலியும் பொங்கி எழுகிறது. இது இந்தியாவிலேயே அரிய அற்புதமான ஒரு உற்பவமாகும். இத் தூண் குழலின் நீளம் ஓரடியாகும். தூணில் இக்குழல் கீழ் மேலாக அமைக்கப் பட்டிருக்கிறது. இக்குழலின் உட்பகுதி யில் சங்கின் உள்ளே அடுக்கடுக்காய் இருக்கும் புரிகள்போல் இரு மடிப்புகள் காணப்படுகின்றன. இந்த மடிப்புகள், குழலின் ஒரு பக்கம் நின்று ஊதும் பொழுது பலவிதமான சுரவொலிகளை ஒலிப்

பதற்கு உகந்த வண்ணம் உருவாக்கப்பட்டிருக்கிறது என்று கருதப்படுகிறது. ஒத்துணர்வு ஓசையுடைய இரு நுனிகளிலிருந்தும் ஊதும் பொழுது பலவிதமான சுரங்கள் பிறக்கின்றன. இரு நுனியிலும் இருவர் நின்றுகொண்டு மாறிமாறி ஊதினுல் அதன் விளைவு மிகப்பிரமாதமானதாக இருக்கிறது. இந்த அற்புதமான தூண்கள் ஆழ்வார் திருநகரி, செண்பகராமநல்லூர் ஆகிய இரு ஊர்களைத் தவிர, இந்தியாவில் வேறு எங்கும் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. இவ்வரிய சிற்பக் கருவூலங்களைப் படைத்த பழம் பெரும் பாண்டிய நாட்டுச் சிற்பிகளின் பெருமை இன்றுமட்டுமல்ல பல்லாயிரம் ஆண்டுகள் வரை, பாரதநாடு மட்டுமல்ல, பார்முழுதும் ஏற்றிப் போற்றுதற்குரியது.

## ஆழ்வார் திருநகரி இசைத்தூண் :

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி ஒரு உயர்ந்த வைணவத் தலமாகும். இங்குள்ள ஆதி பிரான் கோயில் பிரசித்திபெற்ற ஒரு திருக்கோயிலாகும். இங்குள்ள வசந்த மண்டபத்தில் இரண்டு இசைத்தூண்கள் உள. இவ்விசைத்தூண்களை ஒரு சிறு மூங்கிற் குச்சியைக்கொண்டோ, அல்லது சிறிய கல்துண்டைக்கொண்டோ தட்டினுல் இன்னெலிகள் எழுகின்றன. இசை வல்லுநர்கள் இதனைத் தட்டிப்பார்த்து ஏழு சுரங்கள் பிறக்கின்றன என்று கண்டுள்ளார்கள். இதில் எழும் சுரஒலிகள், மணி ஒலிபோல் கணீர் என்று ஒலிக்கிறது. இத் தூண்களில் எழும் சுரங்களைக் கொண்டு தமிழ்மறையைப் பாடமுடியும் என்று முடிவு கட்டப்பட்டுள்ளது.

மேலும் இங்குள்ள தூண்களில் இரு துவாரங்கள் இடப்பட்டுள்ளது. இருபக்கங்களிலும் இருவர் நின்றுகொண்டு மாறி மாறி ஊதினுல் செண்பகராமநல்லூர் குழல் தூணைப்போல் ஒருபக்கம் சங்கொலியும் மற்றெருபக்கம் எக்காள ஒலியும் எழுகிறது. எனவே இத்தூண்கள் இசைத்தூண்கள் வரிசையில் மட்டுமல்ல, குழல் தூண்கள் வரிசையிலும் சேர்ப்பதற்கு உரியதாக அமைக்கப்பட்டுள்ளது. இங்கே கல்லால் ஆன ஒரு நாதசுரமும் இருக்கிறது. இது இன்றும் ஊதப்பட்டு வருகிறது. தமது நாட்டிலுள்ள மூன்று நான்கு கல் நாதசுரத்தில் இதுதான் சிறப்புடையது.

## திருநெல்வேலி இசைத் தூண்கள் :

திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலின் மண்டபத்தின் அமைப்பு அற்புதமானது. இந்த மாபெரும் மண்டபத்தில்தான் மாநிலம் போற்றும் பாண்டி நாட்டின் பண்ணிசைக்கும் தூண்கள் கெம்பீரமாக உயர்ந்து எழிலுடன் நிற்கின்றன. இங்கே கொல்லம் 721-ம் ஆண்டில் "ஜயதுங்க நாட்டை வென்று மண்கொண்ட பூதல வீர சங்கிலி வீரமார்த்தாண்டவர்மன்" திருப்பணியாக அறுபத்துநான்கு கால்கள் கொண்டதாய் முன்பக்கம் இரு இசைத்தூண்கள் நிறுத்தப்பட்டுள்ளன.

இத்தூண்கள் மண்டபத்தையும் இக்கோயிலையும் அணி செய்பவையாய் இலங்குகின்றன. இந்த இசைத்தூண்கள் ஒவ்வொன்றும் ஒரே பெருங்கல்லால் செய்யப்பட்டதாகும். நடுவில் பெரிதாக ஒருதூணும் அதைச்சுற்றிலும் உருவிலும், திருவிலும் உயரத்திலும் வித்தியாசமான 48 சின்னஞ்சிறு தூண்களான உருட்டுக் கம்பிகளும் இணைக்கப்பட்டாற்போன்று செதுக்கப்பட்டுள்ளது. மண்டபத்தின் முன்பக்கம் இவ்விதமான பண்ணிசைக்கும்

இரு தூண்கள் பாரிய மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. இந்த அற்புதமான அழகிய இசைத்தூண்களில் காணப்படும் ஒவ்வொரு சிறிய உருட்டிலும் ஒரு சிறிய குச்சியைக்கொண்டு தட்டினால் ஒவ்வொரு சுரம் எழுமாறு இத் தூண்களை அமைத்திருப்பது வியப்பையும் மகிழ்ச்சியையும் எழுப்புகிறது. இம் மண்டபத்தை அமைத்தவன் கி. பி. 7-ம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் செங்கோலோச்சிய கூன்பாண்டியன் என்று இவ்வூர்த்தல புராணம் கூறுகிறது.

இம் மணிமண்டபத்தை அலங்கரிக்கும் இரு இசைத் தூண்களும் ஆழ்வார் திருநகரி இசைத்தூண்களைவிட அழகாகவும் கெம்பீரமாகவும் காணப்படுகின்றன. இதேபோன்று இரு இசைத் தூண்கள் அம்பாள் சந்நதியிலும் உள்ளன, இவைகள் நான்கும் சிறந்த இசைத்தூண்களாய் அற்புத நாதத்தை அள்ளிச் சொரிகின்றன. தூணில் உள்ள சிறு உருட்டுக் கம்பிகளில் வெவ்வேறு சுரம் எழுவதற்கு நமது சிற்பிகள் இங்கு கையாண்டிருக்கும் முறை எவரும் காண முடியாத ஒரு அலாதியான அரியமுறையாகும். உருட்டுக் கம்பிகள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறிய அணில் ஏறிப் பாய்வதுபோல் செதுக்கப்பட்டிருக்கிறது. ஒரு தூணில் இருக்கும் அணிலை அடுத்த தூணில் இருக்கும் அணில் எட்டிப் பிடிக்க முயல்வதுபோல் இருக்கும். இது சுரங்களின் தொடர்பைக் காட்டச் சிற்பிகள் கையாண்டிருக்கும் அரும் பெரும் குழூஉக் குறியாகும். என்னே! இந்தப் பாண்டிய நாட்டுச் சிற்பிகள் கண்ட கல்லைக் கனிவிக்கும் கவினுறும் கைவண்ணம்!

இத்தூண்கள் ஏனைய தூண்களைப் போன்று மேற்கூரையை மட்டும் தாங்கி நிற்கும் தூணாக நிற்கவில்லை. ஏழு சுரங்களை எழுப்பும் பண்ணிசைக்கும் பாட்டுத் தூண்களாக மட்டும் இலங்கவில்லை. எழில் மிக்க சிற்பச் செல்வங்களையுடைய சீரிய தூண்களாகவும் மிளிர்கின்றன. இது நல்ல அகலமும் உயரமும் உள்ளதாய் அமைக்கப் பட்டுள்ளன. சுற்றிலும் இசையொலிகளை எழுப்பும் உருட்டுக் கம்பிகள் தூண்களை அணிபெறச் செய்கின்றன.

தூண்களின் உச்சியில் காணப்படும் பதுமபந்தம், கலசம், தாடி, குடம், இதழ் முனை, பலகை, கண்டம் போதிகை அதில் உள்ள மதனை, பூமுனை, நாணுதல் போன்ற உறுப்புகளும் உச்சி அலங்காரங்களும் பல்வேறு பூக்களும் யாழிகளும் பிறவும் சிற்பச் சிறப்பை மேலும் உயர்த்துகின்றன. இவ்விசைத் தூண்கள் கோயிலின் கவினுறு கலைத் தோற்றத்தைப் பூர்த்தி செய்யும் அணியில் தமது பங்கை, குறைவற நிறைவேற்றும் குன்று விளக்காய் ஜொலிக்கின்றன.

**சுசீந்திரம் இசைத்தூண்கள் :**

சுசீந்திரம் பாண்டிய நாட்டின் ஒரு பகுதி; இங்குள்ள தாணுமாலயன் கோயிலிலும் இசைத் தூண்கள் உள்ளன. இக்கோயிலின் முன்னுள்ள பெரிய மண்டபத்தை உருவாக்கியவர்கள் தேரூர் முத்துச்சாமி பிள்ளை வகையினர் ஆவார்கள். இம்மண்டபம் கி. பி. 1548-ல் கட்டி முடிக்கப்பட்டதாக இக்கோயில் சாசனங்கள் கூறுகின்றன. இங்கு வடக்கு பிரகாரத்தில் காலபைரவர் சந்நதிக்கு எதிரே இசைத் தூண்கள் நான்கு காணப்படுகின்றன. வடக்குப் பக்கத்து தூண்கள் ஒவ்வொன்றிலும் 24 சிறு உருட்டுக் கம்பிகள் உள்ளன. தென் பக்கத்துத் தூண்கள் ஒவ்வொன்றிலும் 35 உருட்டுக் கம்பிகள் உள்ளன. இந்த

உருட்டுக் கம்பிகள் அடியில் சதுரமாகவும் மேலே எட்டுப் பட்டைகள் உள்ளனவாயும் புரிகள் உள்ளனவாயும் இருக்கின்றன.

இந்தத் தூண்கள் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் மிகக் கெம்பீரமாகக் காணப்படுகின்றன. இக்கோயிலில் உள்ள எட்டுச் சுவடிகளில் இம்மண்டபமும் இசைத் தூண்களும் கி.பி. 1798 ம் ஆண்டில் கட்டப்பட்டதாகக் காணப்படுகிறது. இந்த இசைத் தூண்கள் சுத்தமான சுர ஒலிகளைத் தருகின்றன. இதில் எழும் சுர ஒலிகளைச் செவிமடுத்த இசைப் புலவர்கள் இத்தூண்களில் பிறக்கும் நாதம் சுத்தமாகவும் இனிமையாகவும் இருக்கின்றன என்று இயம்புகிறார்கள். நமது சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத்துறை தலைமைப் பேராசிரியர் டாக்டர் திரு. கே. கே. பிள்ளை அவர்கள் "சுசீந்திரம் கோயில்" என்ற ஆங்கில நூலில் "இசையின் இனிமையிலும் சிற்ப நுட்பங்களிலும் இந்த இசைத் தூண்களுக்கு நிகரான தூண்கள் வேறு எங்கும் பார்ப்பது அரிது" என்று புகழ்மாலை சூட்டியுள்ளார்கள். நான் அறிந்தமட்டில் இது திருநெல்வேலி இசைத் தூண்களுக்கு ஒப்பானது. பாண்டிய நாட்டின் இசைக் கருவூலங்களில் இணையற்ற மணிகள் பதித்த அணிகளாக இந்த இசைத்தூண்களும் மதிக்கத் தக்கனவாகும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**மதுரை இசைத் தூண்கள் :**

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் மொட்டைக் கோபுரத்திற்கு அருகிலே இசைப் புலவர்கள் அனைவராலும் புகழப்படும் ஐந்து அரிய இசைத்தூண்கள் மிகக் கம்பீரமாக நிற்கின்றன. இங்கே இவைபோன்ற பல இசைத் தூண்கள் இருந்திருக்கவேண்டும் அவைகள் நமது கவனக் குறைவால் பழுதுபட்டுப் போயிருக்கலாம் அல்லது படை எடுத்து வந்த கலைக் கண்ணற்ற மிலேச்ச மன்னர்களால் நிர்மூலம் செய்யப்பட்டிருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

இன்று இங்கு. காட்சியளிக்கும் இசைத்தூண்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெரிய கல்லினின்றே செதுக்கப்பட்டிருக்கிறது. இத்தூணின் நடுப் பாகம் பருத்து இருக்கிறது. சுற்றிலும் சிறு தூண்கள் போல் 22 உருட்டுக் கம்பிகள் இணைந்துள்ளன. ஒரு தூண் முழுதும் ஒரே கல்லில் ஆக்கப்பட்டிருக்கிறது என்பது பலருக்கும் பேராச்சரியம் விளைவிக்கிறது. இதன் நடுவே ஒரு பெரிய தூண் நிற்பது போலவும் அதைச் சுற்றி பல சிறிய தூண்கள் இணைந்து நிற்பது போலவும் செதுக்கப்பட்டுள்ளது. சிறிய தூண்கள் மூன்று அங்குல கனத்தில் வட்டம், கோணம், சதுரம், வளைவு, எட்டுப் பட்டை முதலிய பற்பல வடிவங்களில் காணப்படுகின்றன. நடுவிலுள்ள பெரிய தூணின் அடிப்பாகம் சுமார் 5 அடி சதுரமும் 9 அடி உயரமும் இருக்கலாம்.

இதில் எழும் சுரத்தின் கிளைச் சுரங்கள் பக்கத்தில் நிற்கும் இசைத்தூண்களிலிருந்தும் தாமாகவே ஒலிக்கிறது. இத்தூண்களில் துளைக் கருவிகளிலிருந்து தோன்றும் நாத ஒலியைப் போல் சுரங்களைத் தரக்கூடிய தந்திரமான வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இத்தூணினுள்ளே சுருள் சுருளான காலி இடம் உள்ளன. இத்தூண்களில் மிகச்சுத்தமான எழுவகைச் சுரங்களும் அமுதம்போல் பிறக்கின்றன. இதை மேனாட்டு இசை விற்பன்னர்கள் பியோனு கம்பங்கள் என்று

போற்றுகின்றூர்கள். வட நாட்டு இசை வல்லுநர்கள் ஜகம் ஏற்றும் ஜலதரங்கஸ் தம்பங்கள் (அலை எறி நீரியம்) என்று கூறுகிருர்கள். தமிழ் நாட்டு இசைமேதைகள் கல்லில் செய்யப் பெற்ற வில், யாழ் என்று புகழ்மாலை சூட்டுகின்ருர்கள்.

தமிழ் நாட்டுத் தெய்வக் கலைஞனை சிற்பியின் அற்புதக் கைவண்ணத்தால் தூண்களிலே இன்றி சிற்பவடிவங்களிலும் இன்னிசை எழுப்பப்பட்டன. மதுரைக் கோயிலில் உள்ள காதல் தெய்வமான இரதிதேவியின் சிலையில் விரல், கை முதலிய உறுப்புக்களைத் தட்டிஞல் ச, ரி, க என்ற மூன்று சுரங்கள் எழுகின்றன. இதேபோன்று திருவானைக்காவில் ஆடவல்லானின் செம்புப் படிமத்தில் கூடச் சில சுரங்கள் அரும்புகின்றன.

ஒன்றன்மேல் மற்றென்று தாக்கிஞல் தாக்கப்பட்ட பரமாணுக்களுக்குள் அசைவு உண்டாகிறது; அந்த அசைவால் அதைச்சூழ்ந்துள்ள காற்று அசைக்கப்படுகிறது. அசைக்கப்பெற்ற காற்றிஞல் ஒலி அலைகள் நாலா பக்கங்ளிலும் பரவி நமது செவியிலே நுழைகிறது. நமக்கு ஒலி உணர்ச்சி உண்டாகிறது. காற்றுடன்கூடிய ஒலியின் அசைவே ஒலியுணர்ச்சிக்குக் காரணம். அந்த ஒலி இசையாவது எப்போது? இசையுடன் கூடிய ஒலி தான் சங்கீதம். ஒலி அசைவின் சமமான அளவே (மாத்திரை) இசைக்குக்காரணம். அதாவது காற்றசைவுகளின் இரண்டின் இடையில் உள்ள காலவரை ஒரே அளவுள்ளதாய் இருக்குமாஞல் இசை உண்டாகும். ஒலியின் மாத்திரை ஒரே அளவில் இல்லாதபோது இசைஉண்டாகாது. அபஸ்வரம்தான் கல்தூணைத் தட்டும்போது தாறுமாருன ஒலித்திரள் அன்றி, அளவமைந்த இன்னிசை எழுவது வியப்புத்தானே?

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டுப் பத்திரிக்கைகள் வெளியிட்ட மலர்களில் இதைப்பற்றி சில அறிஞர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளார்கள். அப்பால் நமது தமிழ் நாட்டு இசை வல்லுநர்கள், குறிப்பாக நமது மதிப்பிற்குரிய இசை மேதை பி. சாம்பமூர்த்தி அவர்கள் இசைத் தூண்கள் அனைத்தையும் நேரில் போய்ப்பார்த்துத் தனது கட்டுரைகளிலும் நூலிலும் விளக்கி இதற்கு ஒரு மகோன்னதமான நிலையை அளித்துள்ளார்கள். இக்கற்களில் ஏழு சுரங்களும் எழுவதைக் கண்டும் கேட்டும் இக்கலை உயிர்க்கலை என்று உறுதிப்படுத்தியுள்ளார்கள். ○



# தேவாரம் – பண்முறை

க. வெள்ளைவாரணன்

'தேவாரம் — பண்முறை' என்பது, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் இப் பெருமக்கள் மூவருள் முறையே ஒவ்வொருவரும் அருளிச்செய்த திருப்பதிகங்களில் அமைந்த பண்களை முறைப்படுத்தி ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய திருப்பதிகங்களைக் கட்டளை விகற்பங்களுக்குப் பொருந்த வரிசைப்படத் தொகுத்து இவ்வாறே மூவர் திருப்பதிகங்களையும் ஏழு திருமுறைகளாக வகுத்தெழுதிய பழைய முறையாகும். இனி, தலமுறையென்பது, தேவாரப் பாடல்பெற்ற தலங்களைக் கோயில் திருவேட்களம் முதலாகத் திருப்பதிக்கோவையில் உமாபதி சிவாசாரியார் குறித்துப் போற்றிய முறையையொட்டித் தேவாரப் பாடல்பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப் பெருங்கோயில் முதலாக வரிசைப்படுத்தி அவ்வத் தலங்களுக்குரிய தேவாரப் பதிகங்களை சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்ற வரிசையில் முன் குறித்த ஏழுதிருமுறைப்பாகுபாட்டிற்கு ஏற்ப முறைப்படச் சேர்த்து அமைத்த முறையாகும்.

இவ்விருவகை முறைகளுள் தேவாரம் —பண்முறை அமைப்பே பழைய ஏட்டுச் சுவடிகளிலும் இசைமுறையாகப் பாராயணம் செய்யுமிடத்தும் தொன்று தொட்டு வழங்குவதாகும். மூவர் தேவாரப் பதிகங்களை ஏழுதிருமுறைகளாகப் பகுத்து வழங்கும் திருமுறைப் பகுப்புக்கு அடிப்படையாயமைந்தது இப் பண்முறையமைப்பே என்பதும் தேவாரப்பண்களை நிலைக்களமாகக்கொண்டே திருநாரையூர் நம்பியாண்டார்நம்பிகள் மூவர் தேவாரப் பதிகங்களையும் முன்னிருந்ததுபோலவே ஏழுதிருமுறைகளாக முறைப்படுத்தினார் என்பதும் திருமுறைகண்டபுராணத்தால் இனிதுபுலனாகும். பண்முறையமைப்பாகிய இதனை அடிப்படையாகக்கொண்டு ஆராய்ந்தால்தான் இத்திருப்பதிகங்களை ஏழுதிருமுறைகளாகப் பகுத்து வழங்கிய நம்முன்னோரது பகுப்புமுறை நன்கு விளங்கும்.

தேவாரத்திருப்பதிகங்களைத் தலமுறையில் அமைத்துப் பயிலும் வழக்கம் உமாபதி சிவாசாரியார்காலத்திற்குப்பின் தோன்றியதெனக் கருதவேண்டியுள்ளது. மூர்த்தி, தவம், தீர்த்தம் என்பவற்றை முறையே கண்டு நினைந்து வழிபடும் விருப்புடைய சிவநேசச் செல்வர்கள், தாம் வழிபட எண்ணிய ஒவ்வொரு தலத்திற்கும் அமைந்த தேவாரத் திருப்பதிகங்கள் அனைத்தையும் நாள்தோறும் தொடர்ந்து பாராயணஞ்செய்வதற்கு ஏற்றவண்ணம் அவ்வத்தலத்திற்குரிய பதிகங்கள் அனைத்தையும் ஒருங்குதிரட்டி வரிசைப்படுத்தப்பெற்றதே தேவாரம்—தலமுறைப் பகுப்பாகும். இப்பகுப்பு, உமாபதிசிவாசாரியார் இயற்றிய 'கோயில் திருவேட்களம்' எனத் தொடங்கும் திருப்பதிக்கோவையினைப் பின்பற்றியமைத்ததாகும். மேற்குறித்த பண்முறை, தலமுறை ஆகிய இருவகை முறைகளுள் தேவார ஆசிரியர்கள் காலந்தொட்டு இடையீடின்றி வழங்கிவருவதும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என்னும் பகுப்பிற்கு நிலைக்களமாக அமைந்ததும் தேவாரம் பண்முறையேயாகும்.

மூவாண்டிலேயே சிவஞானம் கைவரப்பெற்ற ஆளுடையபிள்ளையார் அம்மையப்பரை விடைமேற்கண்டு தம் தந்தையார்க்குக் காட்டும் நிலையில் முதன் முதல் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகம் 'தோடுடைய செவியன்' என்னும் முதற்குறிப்புடையதாகும். மறைகளுக்கெல்லாம் முதலாகிய 'ஓம்' என்னும் மந்திரத்தின் முதலாகிய ஓகாரத்தினைத் தமிழ் என்பதன் முதலெழுத்தாகிய தகர மெய்யுடன் இணைத்துத் தொடங்கிய சிறப்பு இத் திருப்பதிகத்திற்குண்மையால் 'எல்லையிலாமறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை மல்லல் நெடுந்தமிழ்' எனப்போற்றப்பெற்று முதற்றிருமுறையில் முதல் திருப்பதிகமாக அமைக்கப் பெற்றது. இத்திருப்பதிகத்திற்குரியபண் 'நைவளம்' என்பதாகும். இதனை இக் காலத்தார் நட்டபாடை என வழங்குவர். ஆளுடைய பிள்ளையாரால் நட்டபாடைப் பண்ணிற் பாடப்பெற்ற பதிகங்கள் யாவும் பண் இயைபுபற்றித் 'தோடுடைய செவியன்' என்னும் இத்திருப்பதிகத்தையடுத்து முறைப்படுத்தப்பெற்றன. ஆளுடைய பிள்ளையார்க்குக் காலத்தால் முற்பட்ட காரைக்காலம்மையார் அருளிய மூத்ததிருப்பதிகங்கள் இரண்டினுள் 'கொங்கை திரங்கி' என்னும் முதற் குறிப்புடைய முதற்பதிகம் நைவளம் என்னும் நட்டபாடைப்பண்ணில் அமைந்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். முதற்றிருமுறையில் நட்டபாடைப் பதிகங்களையடுத்துத் தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி, என்ற பண்களுக்குரிய பதிகங்களும் யாழ்மூரித்திருப்பதிகமும் முறையே வரிசைப்படுத்தப்பெற்றுள்ளன.

இரண்டாந் திருமுறையில் இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி என்னும் ஆறு பண்களில் அடங்கிய பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்றன. முதற்றிருமுறையின் முதற்றிருப்பதிகம் காரைக்காலம்மையார் அருளிய மூத்ததிருப் பதிகங்களிரண்டில் முதற் பதிகத்துக்குரிய நட்ட பாடைப் பண்ணில் அமைந்திருத்தல் போலவே இரண்டாந் திருமுறையிலுள்ள முதற் பதிகம் அம்மையார் பாடிய 'எட்டியிலவம்' என்ற இரண்டாந் திருப்பதிகத்திற் குரிய இந்தளப் பண்ணில் அமைந்திருத்தல் அம்மையார் அருளிய திருப்பதிக இசைக்கும் ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிக இசை முறைக்கும் உள்ள தொடர்பை இனிது புலப் படுத்துவதாகும்.

மூன்றுந்திருமுறையில் காந்தார பஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம் பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக்குறிஞ்சி என்னும் பண்களுக்குரிய பதிகங்கள் முறைப் படுத்தப்பெற்றன. திருஞான சம்பந்தர் திருநல்லூர்ப் பெருமணத்தில் தம்திருமணங் காணவந்தோர் அனைவரையும் உடனழைத்துக் கொண்டு திருப்பெருமணத் திருக் கோயிலில் தோன்றிய ஈறில் பெருஞ் சோதியினுள்ளே புகும்பொழுது பாடியருளிய திருப்பதிகம் 'கல்லூர்ப் பெருமணம் வேண்டா' என்ற முதற் குறிப்புடைய பனுவலாதலின் அதனை மூன்றுந் திருமுறையின் முடிவுத்திருப்பதிக மாகவும் அப்பதிகத்திற்குரிய அந்தாளிக்குறிஞ்சி என்ற பண்ணை அத்திருமுறையின் இறுதிப் பண்ணாகவும் முன்னுள்ள சான்றோர் முறைப் படுத்தி அமைத்தனர்.

சமகாலத்தில் வாழ்ந்த திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் ஆகிய இருவருள் நாவுக்கரசர் முதிர்ந்த வயதினராயினும் சிவபெருமானது திருவருளை முதலிற் பெற்று முதன் முதலாகச் திருப்பதிகம் பாடியவரும் இறைவன் திருவடியில் முதன் முதல் அடைந்தவரும் திருஞானசம்பந்தரே யாதலால் அவர் அருளிய திருப்பதிகங்கள் நாவுக்கரசர் பதிகங்களுக்கு முன்னுகமுதன் மூன்று திருமுறைகளாக அமைக்கப்பெற்றன. திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் பண்ணமைந்த பதிகங்கள் அனைத்தும் நான்காந் திருமுறையென ஒன்ருகவும், திருக்குறுந்தொகைப் பதிகங்கள் அனைத்தும் ஐந்தாந்திருமுறையென ஒன்ருகவும், திருத்தாண்டகப் பதிகங்கள் அனைத்தும் ஆருந்திருமுறையென ஒன்ருகவும் இவ்வாறு மூன்று திருமுறைகளாக வகுக்கப்பெற்றன.

சம்பந்தர், அப்பர் ஆகிய இவ்விரு பெருமக்களுக்கும் பின்வந்த நம்பியாரூரர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்கள் யாவும் ஏழாந்திருமுறையென ஒரு திருமுறையாகத்தொகுக்கப்பெற்றன. இத்திருமுறையில் இந்தளம், தக்கராகம், நட்டராகம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், பழம்பஞ்சுரம், தக்கேசி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம், காந்தாரபஞ்சமம், நட்டபாடை, புறநீர்மை, சீகாமரம், குறிஞ்சி, செந்துருத்தி, கவுசிகம், பஞ்சமம் எனப் பதினேழு பண்களுக்குரிய திருப்பதிகங்கள் முறையே தொகுக்கப் பெற்றுள்ளன.

இசைப்பாடல்கள் இருவகைப்படுவன: புலவர்பெருமக்கள் பாடும்பொழுதே இசை நலம் அமையப் பாடப்பெற்றன ஒருவகை; புலவர்களால் முதற்கண் சுத்தாங்கமாகப் பாடப்பெற்றுப் பின்னர் இசைவல்லாரால் இசையமைக்கப்பெற்றன மற்றொருவகை. தேவார ஆசிரியர்கள் மூவரும் அருளிய திருப்பதிகங்கள் அப்பெருமக்கள் திருவாயிலிருந்து வெளிப்படும் பொழுதே பண்ணுர் இன்தமிழாய் வெளிப் பட்ட இன்னிசைப் பாடல்களாகும். இத்திருப்பதிகங்களைப் ‘பண்சுமந்தபாடல்’ எனப்போற்றுதல் மிகவும் பொருத்தமுடையதாகும்.

பண்டை இசைத்தமிழ்நூலார் நூற்று மூன்று பண்கள் எனப்பகுத்துரைத்த பண்களுள்ளே தேவாரத் திருப்பதிகங்களில் அமைந்தவை இருபத்து மூன்று. அவை யாவன:- (13) செவ்வழி, (17) தக்கராகம், (21) நேர்திறம்—புறநீர்மை, (25) பஞ்சமம், (33) காந்தாரம், (37) நட்டபாடை, (38) அந்தாளிக்குறிஞ்சி, (46) பழம்பஞ்சுரம், (47)மேகராகக்குறிஞ்சி, (49) கொல்லிக்கௌவாணம், (54) பழந்தக்கராகம், (61) குறிஞ்சி, (62)நட்டராகம், (64) வியாழக்குறிஞ்சி,(65) செந்திறம்-செந்துருத்தி (69) தக்கேசி, (70) கொல்லி, (73) இந்தளம், (76) காந்தாரபஞ்சமம், (80) கௌசிகம், (81) பியந்தை, (82) சீகா, மரம், (98) சாதாரி என்பனவாம்.

மேலே குறித்த பண்கள் யாவும் தேவாரத் திருப்பதிகங்களில் தேவார ஆசிரியர்களாலேயே இசையமைத்துப் பாடப்பெற்றதனிச் சிறப்புடையனவாகும். மேலும், தேவாரத் திருப்பாடல்களில், (1) பாலையாழ், (6) செந்து, (9) மருதம், (13) முல்லையாழ்–செவ்வழி (25)பஞ்சமம், (33) காந்தாரம்,(45) பஞ்சுரம்,(53) மருள், (61) குறிஞ்சி, (70) கொல்லி, (82) காமரம் என்பனவும், நேரிசை, நந்திசை, பிறழ் என்பனவும் பண்ணின் பெயர்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன. இவற்றுள் பிற் கூறியமூன்றும் நூற்றுமூன்று பண்களைக்

குறித்த பெயர் வரிசையிற் காணப்பட வில்லை. ஏனையவை நூற்று மூன்று என் னும் பகுப்பில் அடங்கியனவே. இக்குறிப் புக்களைக் கூர்ந்து நோக்குங்கால் நூற்று மூன்று என்னும் வரிசையிற் குறிக்கப் பெற்றபண்கள் தேவார ஆசிரியர்கள் காலத்திற்கு முற்பட்ட தொன்மை யுடையன என்பது நன்கு புலனும்.

தேவாரப் பதிகங்களுக்குப் பண் வகுத்த காலத்து இசை மரபும் சாரங்க தேவர் இயற்றிய சங்கீதரத்திஞகரத்திற் கூறப்பட்ட தேவாரப் பண்களின் இசை முறையும் இடைக்காலத்து இசை மரபு எனப்படும். இவ்விசை மரபு கி. பி.-16 ஆம் நூற்ருண்டு வரை தமிழ் நாட்டில் மாருதிருந்தது. பின்பு தஞ்சை யில் மகாராட்டிய ஆட்சியில் ஏற்பட்ட பிற நாட்டு இசைக் கலப்பினுலும் பிறமொழி யிசைப் பாடல்களையே பெரிதும் பாடும் பழக்கம் இசை வாணர்பால் நிலைபெற்றமை யாலும் இசைத் தமிழ்ப் பனுவல்களாகிய தேவாரப் பதிகங்களை அவற்றுக்கேயுரிய பண்முறையிற்பாடும் பழக்கம் குன்றியது. அதனுல் பழைய தமிழ்ப் பண்ணுருவங்கள் சிதைந்து மறையும் நிலையை எய்தின. எனவே பிற்காலத்தில் தேவாரப் பதிகங் களை அவற்றுக் குரிய பண்முறையுணர்ந்து பாடுவோர் அருகினர். எனினும் திருக் கோயில்களிலும் திருமடங்களிலும் பணி புரிந்த ஓதுவார்கள் சிலர் இன்னஇன்ன பண்ணமைந்த பதிகங்களை இன்ன இன்ன இராகங்களிற் பாடுதல் தக்கது எனத் தமக்குள் ஒரு வரையறை செய்து கொண் டார்கள் எனக் கருத வேண்டியுளது.

தேவாரத்திற் பயின்ற பண்களைப் பகற்பண், இராப்பண், பொதுப்பண் என மூவகையாகப்பகுத்து அவற்றுக் குரிய இராகங்களையும் அவற்றைப் பாடுதற்குரிய நேரங்களையும் குறித்த தேவாரப் பண் முறைக் குறிப்பொன்று திருவாவடுதுறை யாதீனத்துப் பழைய சுவடியிற் காணப் படுவதாக ஆசிரியர் பொன்னேதுவாரவர் கள் பின்வருமாறு வெளியிட்டுள்ளார்கள்:—

பகற் பண்கள் பத்து. இவை ஒவ் வொன்றுக்கும் முறையேமும் மூன்று நாழி கையாக மேலேற்றிக் காலவரையறை கொள்க.

பகல்

| கால வரையறை நாழிகை | பண் | இராகம் |
|---|---|---|
| 0— 3 | புறநீர்மை | ஸ்ரீ கண்டி |
| 3— 6 | காந்தாரம், பியந்தை | இச் சிச்சி |
| 6— 9 | கௌசிகம் | பயிரவி |
| 9—12 | இந்தளம், திருக்குறுந் தொகை | நௌித பஞ்சமி |
| 12—15 | தக்கேசி | காம்போதி |
| 15—18 | நட்டராகம், சாதாரி | பந்துவராளி |
| 18—21 | நட்ட பாடை | நாட்டைக் குறிஞ்சி |
| 21—24 | பழம் பஞ்சுரம் | சங்கராபரணம் |
| 24—27 | காந்தார பஞ்சமம் | கேதார கௌளை |
| 27—30 | பஞ்சமம் | ஆகிரி |

இராப்பண்கள் எட்டும் ஒவ்வொன்றிற்கும் மூன்றே முக்கால் நாழிகையாக மேலேற்றிக் காலவரையறை கொள்க.

## இரவு

| கால வரையறை நாழிகை | பண் | இராகம் |
|---|---|---|
| $30—33\frac{3}{4}$ | தக்க ராகம் | கன்னட காம்போதி |
| $33\frac{3}{4}—37\frac{1}{2}$ | பழந்தக்க ராகம் | சுத்தசாவேரி |
| $37\frac{1}{2}—41\frac{1}{4}$ | சீகாமரம் | நாதநாமக்கிரியை |
| $41\frac{1}{4}—45$ | கொல்லி, கொல்லிக் கௌவாணம், நேரிசை, திருவிருத்தம் | சிந்து கன்னடா |
| $45—48\frac{3}{4}$ | வியாழக்குறிஞ்சி | சௌராஷ்டிரம் |
| $48\frac{3}{4}—52\frac{1}{2}$ | மேகராகக்குறிஞ்சி | நீலாம்பரி |
| $52\frac{1}{2}—56\frac{1}{4}$ | குறிஞ்சி | மலகரி |
| $56\frac{1}{4}—60$ | அந்தாளிக்குறிஞ்சி | சைலதேசாட்சி |

### பொதுப் பண்கள்

செவ்வழி — எதுகுலகாம்போதி
செந்துருத்தி — மத்தியமாவதி
திருத்தாண்டகம் — பியாகடை

இம்மூன்றும் பகல் இரவு ஆகிய எக்காலமும் பொதுவாகப் பாடுதற்குரியனவாகையாற் பொதுப் பண்களாயின.

திருவாவடுதுறை யாதீன ஏட்டுச் சுவடியில் உளதென மேலே காட்டிய பண்ணடைவில் கி.பி. 17 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த வேங்கடமகி இயற்றிய சதுர்தண்டிப் பிரகாசிகையில் காணப்படுவனவும் பிற்காலத்தில் வழக்கொழிந்தனவுமாகிய சில இராகங்கள் குறிக்கப்பெற்று உள்ளன. இதிற் குறித்த 'இச்சிச்சி' என்பது ஹெஜ்ஜுஜ்ஜி என்ற இராகத்தையும் 'நெளிதபஞ்சமி' என்பது லலிதபஞ்சமத்தையும் குறிப்பன. இச்சுவடியில் 'கொல்லம் 917 ஆண்டு துன்முகி ஆண்டு மாசி மீ 4உ எழுதி முடிந்தது' என எழுதப்பெற்றிருத்தலால் இப்பண்ணடைவு ஏறக்குறைய மூந்நூருண்டுகள் தொன்மையுடையதெனக் கொள்ளலாம்.

இனி, மேலேகுறித்த முறையிலன்றிச் சிலபண்களை வெவ்வேறு இராகங்களிற் பாடும் மரபு ஒன்றும் தேவார ஓதுவார்களிடையே நிலவிவருகிறது. புறநீர்மையைப் பூபாளத்திலும், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், கொல்லி, கொல்லிக்கௌவாணம் என்ற பண்களை நவரோசியிலும், இந்தளம் திருக்குறுந்தொகை என்ற பதிகங்களை நாத நாமக் கிரியையிலும், நட்டபாடையை நாட்டையிலும், தக்க ராகத்தைக் காம்போதியிலும், குறிஞ்சியை அரிகாம்போதி, எதுகுலகாம்போதியிலும் அந்தாளிக் குறிஞ்சியைச் சாமா ராகத்திலும் திருத்தாண்டகத்தை அரிகாம்போதியிலும்பாடும் வழக்கம் ஓதுவார்களிடையே பெரும்பான்மையாக

நிலைபெற்றிருத்தல தேவாரப் பதிகங்கள் மற்றொரு மரபிலும் பாடப்பெற்று வரும் பழக்கத்தைப்புலப்படுத்துவதாகும்.

இன்னபண்ணுக்கு இன்ன ராகம் எனக் குறித்தமுறையில் நவரோசு என்னும் ஒரே இராகம் கொல்லி, கொல்லிக் கௌவாணம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம் என்ற நால் வேறுபாடுகளுக்கும் உரியதாக அமைக்கப் பெற்றிருத்தலையும், பகற்பண்களுக்குரியன வாகக் குறித்த ராகங்கள் சில மீட்டும் இராப்பண்களுக்கு உரியனவாகக் குறிக்கப் பெற்றிருத்தலையும் நோக்குமிடத்து தேவாரப் பண்களுக்கு இராகம் வகுத்தகாலத்தில் நால்வேறுபண்களுக்கும் உரிய சிறப்பியல்பினையுணர்ந்து பாடும் இசைமரபு அருகி மறைந்தமை புலனும். எனவே மேற் குறித்த பண்களுக்கு அமைந்த இராக அட்டவணையை அடிப்படையாகக்கொண்டு இன்ன பண்ணின் உருவம் இன்னராகத்தை ஒத்தது என முடிவுசெய்வதைவிட இன்ன இன்ன பண்ணமைந்த பதிகங்களை இன்னஇன்ன இராகங்களிற் பாடுதல் பொருத்தமுடையதாகும் எனப்பின்னுள்ளோர் வகுத்தமைத்த இசைமுறை எனவே கருதுதல் ஏற்புடையதாகும்.

தேவாரப்பண்களின் பழைய இசை உருவங்கள் சில சாரங்கதேவர் இயற்றிய வடமொழியிசை நூலாகிய சங்கீதரத் திணுகரத்திற் குறிக்கப்பெற்றுள்ளன. சிலப்பதிகாரம் முதலிய பழந் தமிழ் நூல்களிற் காணப்படும் பழைய இசையமைதியையும் இடைக்காலத்தில்தோன்றிய சங்கீதரத் திணுகரம் முதலிய வடமொழி நூல்களில் தென்னுட்டின் இசை யுருவங்களாகக் குறிக்கப்பெறும் இசையமைப்பினையும் இக்காலத்திலும் தேவாரம் ஓதுபவர்களால் தொடர்ந்து பயிலப்பெறும் இசை முறையினையும் ஒப்பிட்டு ஆராய்ந்து தேவாரத்திரு பதிகங்களின் தெய்வத்தமிழிசையைப் போற்றி வளர்த்தல் தமிழ் நாட்டு இயலிசைப் புலவர்களின் தலை சிறந்த கடமையாகும்.

# திருக்கோயில்

ஸ்தபதி. வை. கணபதி, B. A.

வானுயர்ந்த கோபுரங்களும், நீண்ட மதிற்சுவர்களும், அகண்டபிராகாரங்களும், நீர் நிறைந்த தடாகங்களும், வியத்தகு விமானங்களும், அணிதிகழ் மண்டபங்களும் சிந்தனை யுந்துஞ்சிற்பங்களும், பக்தியை வளர்க்கும் படிமங்களும் சிறந்த ஓர் ஆலயத்தின் உறுப்புக்களாகும். இவ்வங்கங்களைக் கொண்ட ஓர் ஆலயமானது சாதாரணக் கண்கொண்டு பார்ப்போருக்கு சிறியனவும், பெரியனவுமான கட்டிடங்களின் கூட்டமாகவும், ஒன்றோடொன்று தொடர்பற்றதாகவும் தோற்ற மளிப்பது இயற்கையே. ஆனால் உண்மை அஃதன்று.

நம் தென்னக ஆலயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காவியப் படைப்பாகும். ஒரு சிறந்த காவிய நிர்மாண இலக்கணத்தைத்தழுவியே ஆலய நிர்மாண இலக்கணமும் இயற்றப் பெற்றிருக்கிறது. ஆலயங்களைக் ''கலைப்படைப்புக்கள்! சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தவை!'' என்று அறிஞர் பலர் கூறுவது இவ்வடிப் படையிலேதான் என்பதை யூகித்தறியலாம்.

சிறந்த ஒரு காவியத்திற்கு நல்லதொரு கருத்து ஜீவனாக விளங்கும்; அக்கருத்து ஒருகற்பனையாக வடிவம் பெறும்; நவரசங்கள் இடம் பெறும்; ஜீவனாக விளங்கும் கருத்துக்கு அழைத்துச் செல்லும் சிறுசிறு நிகழ்ச்சிகளும் அமையும்; பலப்பல பாத்திரங்கள் நிற்கும்; இவற்றையெல்லாம் ஒரு சேரப் பார்க்கும் போது ஏகம் என்ற உணர்ச்சி தோன்றும்.

ஆலயம் என்ற அமைப்பினை நமது பண்டைச் சிற்பிகள் பல சிறந்த தத்துவக் கருத்திற்கேற்றவாறு உருவாக்கியுள்ளார்கள். ஆகம நூல்களும் சிற்ப நூல்களும் பலப்பலக் கருத்துக்களை வழங்கியுள்ளன, புதுப்புதுக் கருத்துக்களும் அவற்றையொட்டி உருவாகி யிருக்கின்றன.

நமது கோவில் அமைப்பை பிரபஞ்சத்தின் மாதிரி உருவம் (universe in Miniature) என்று ஒப்பிட்டுக் கூறுவதுண்டு. பஞ்ச பிராகாரங்களைப் பஞ்ச பூதங்களென்றும் அதற்குள் நுண்ணிய பொருளாக இறைவன் உள்ளான் என்றும் பெரியோர் கூறுவர். ''விசுவகர்மீயம்'' என்ற பண்டைச் சிற்பநூல் ஒன்றில் பஞ்ச பிராகாரங்களுக்குநடுவே அமைக்கப்படும் விமானத்தைப்பற்றி அழகிய கருத்தொன்று காணப்படுகிறது. கருவறை என்று சொல்லப்படும் விமானத்தை பெண் வடிவம் என்றும், அதற்குள்ளிருக்கும் மூர்த்தியை உதரத்தில் உள்ள கெர்ப்பம் என்றும் வருணிக்கிறது. உதரத்தில் கெர்ப்பமாகமூர்த்தி அமைக்கப் பெற்றிருப்பதாலேயே இக்கட்டிடத்தைக் கெர்ப்பக் கிருஹம் என்றும் கருவறை என்றும் அழைக்கின்றோம் இக்கருத்தினைவலியுறுத்தும் பொருட்டே மூல மூர்த்தி வீற்றிருந்தருளும் கட்டிடத்தைக் குக்குடாண்ட (கோழிமுட்டை) வடிவமாகவும் அமைக்கலாம் என்று சிற்பநூல்கள் கூறுகின்றன. இத்தகைய குக்குடாண்ட வடிவத்தில் ஒரு கோவில் காஞ்சீபுரத்தில் நிர்மாணிக்கப் பட்டிருக்கிறது. இக்கோவில் காஞ்சிரகாம்

பரேசுவரர் கோவிலின் தெற்கு வீதியில் "ஜ்வர ஹரேஸ்வரம்" என்ற பெயரில் அமைக்கப்பெற்றிருக்கிறது. பொதுவாகப் பழம் பெரும் கோவில்களில் மூலஸ்தான விமானத்தையும் ஏனைய கட்டிடங்களையும் கோபுரங்களையும் நோக்கினுல் மூலஸ்தான விமானம் சிறிதாகவும், ஏகதலத்தை உடையதாகவும், தாழ்ந்தும் அமைக்கப் பட்டிருக்கும். பிராகாரங்களும் கோபுரங் களும் மதில்களும் அடுக்கடுக்காய் பரந் தும் விரிந்தும் உயர்ந்தும் காணப்படும். இவை விரிந்து பரந்து வியாபித்துள்ள பிர பஞ்சத்தையும் அதனுள் சூக்ஷமமாக இறைவன் உள்ளான் என்பதையும் காட்டு கின்றன.

ஆனுல் தஞ்சைப் பெருவுடையார் கோவில் கெர்ப்பக்கிருஹ விமானத்தை நோக்கினுல் நேர்மாறுன அமைப்புத் தோன்றும். கருவறை விமானம் வானளா வியும், கோபுரங்கள் தாழ்ந்தும் காணப் படும் இஃது பிரபஞ்சம் பெரிதென்றும் அதனிலும் பெரியோன் இறைவன் என்ப தையும் பிரதிபலிக்கிறது.

மேலும் சிற்பநூல்களில் கருவறை விமானத்தை 'ஸ்தூலலிங்கம்' என்றும், கருவறைக்குள்ளிருக்கும் நிஷ்கள வடி வத்தை 'சூக்ஷ்ம லிங்கம்' என்றும் கூறப்படு கிறது. விஸ்வகர்மீயம் என்ற சிற்ப நூலில் விமானத்தை சிவசரீரம் என்றும் என்றும் சிவரூபம் என்றும் நின்ற திருக் கோலத்தில் இருப்பதென்றும் கற்பிக்கப் பட்டிருக்கிறது. அந்நூலில் இதுபற்றி நுணுக்க வருணனையும் காணப்படுகிறது. பொதுவாக ஒரு கருவறை விமானத்தில் அழகிய வடிவமும் வேலைப்பாடுகள் நிரம் பியதுமான அங்கங்கள், அடுக்குகள் பல வுண்டு. அவற்றைக் கீழிருந்து முறையே உபானம், ஜெகதி, குமுதகம், கந்தரம், பட்டிகை, வேதிகை, ஸ்தம்பம், உத்திரம், கபோதகம், பிரஸ்தரம், ஹஸ்திவேதிகை, கிரீவம், மஞ்சம், மஹாநாசி, பார்ஸ்வநாசி, சந்திரமண்டலம், பலிகை, பத்மம், மஹா பத்மம் ஸ்தூபி ஆகிய 20 உறுப்புக்களா கும். இவற்றைச் சிவரூபத்தின் பாதம், கெண்டைக்கால், முழங்கால், தொடை மேட்ரம் (அரை) நாபி, உதரம், ஸ்தனம், புஜம், புஷ்டிதம், கழுத்துரேகை, கழுத்து, உதடு, மூக்கு, காது, கண், நெற்றி, தலை, சிகை முதலிய உறுப்புக்களாகப் பாவிக் கின்றது.

சிவபிரானின் நின்றகோல உருவப் படத்தையும் விமானப்படம் ஒன்றையும் வரைந்து ஒப்புநோக்கினுல் கட்டிடத் தையே உருவமாக எங்ஙனம் பண்டைச் சிற்பிகள் அமைத்துள்ளார்கள் என்பதைக் கண்டு மகிழ முடியும்.

மானுட உடல் உறுப்புக்களை அங்கம், மஹாங்கம், உபாங்கம், பிரத்யங்கம் என்று நான்காகப் பிரித்துக் கூறுவது போல இறைவனின் திருவுருவமாகக் கற் பிக்கப்பட்ட விமானத்தில் அதிஷ்டானம் (Basement) என்ற உறுப்பை மஹாங்கம் என்றும், ஸ்தம்பம் அல்லது சுவர்ப் பகுதியை (Superstructure) அங்கம் என்றும், பிரஸ்தரத்தை (Entablature) உபாங்கம் என்றும் சிகரத்தை (Dome or Roof) பிரத்யங்கம் என்றும் ஒரு சிற்ப நூல் கூறுகின்றது. ஓர் ஆலயத்தில் பிரதான மூர்த்தியின் இருப்பிடத்தை, கெர்ப்பக்கிருஹம் என்றும் அதன் முன் அவ்வங்கத்தோடு பிணைக்கப்பட்டதாக அமைந்த மண்டபத்தை அர்த்த மண்டபம்

என்றும் இவற்றுடன் வேறுபல மண்டபங்களும் பிராகாரங்களும் அமைக்கப்பட்டிருக்கும். இவற்றுள் கெர்ப்பக் கிருஹத்தை மஹாங்கம் என்றும் அர்த்த மண்டபத்தை அங்கம் என்றும் மண்டபங்களை உபாங்கம் என்றும் பிராகாரங்களை பிரத்யங்கம் என்றும் ஒப்பிட்டு இறைவனின் சயனக் கோலமாக ஆலய உறுப்புக்களைச் சித்தரிக்கிறது வேறொரு சிற்பநூல். இக்கருத்தை ஆகம நூல்கள் மிகவெளிப் படையாகக் கூறுகின்றன. கெர்ப்பக் கிருஹத்தை சிரசாகவும் அந்தராளப் பகுதியை (கருவறைக்கும் அர்த்த மண்டபத்திற்கும் இடையிலுள்ள சிறு இணைப்பு)முகமாகவும் சுகநாசியை கழுத்தாகவும் அர்த்த மண்டபத்தை புஜங்களாகவும் மஹாமண்டபத்தை வயிருகவும் பிராகாரங்களைக் கால்களாகவும் கோபுரத்தைப் பாதமாகவும் கற்பித்து ஏகம் என்ற உணர்ச்சியை ஊட்டுகின்றன.

இறைவன் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் வீற்றிருக்கிருன் என்ற கருத்தை உணர்ந்து உய்யும் ஆற்றல் எல்லா மனிதர்களுக்கும் அமைவது இயலாது. எனவே அடியார்களின் சரீரமாக ஆலய அமைப்பு கற்பனை செய்யப்பட்டு வெளிப்படையாக காட்டப் பெற்றுள்ளதாக பெரியோர் கூறுவர். இத்தகைய ஆலயங்கள் இரண்டு வகைத்தானவையென்று ஆகமங்கள் கூறும். "ஒன்று ஹிருதய கமலப் பிரஸ்தாரம்" மற்றொன்று "சரீரப் பிரஸ்தாரம்". பெரும்பான்மையான ஆலயங்கள் சரீரப் பிரஸ்தார வகையைச் சேர்ந்தவை; ஹிருதய கமலப் பிரஸ்தாரமாக அமைக்கப்பட்டிருப்பது சிதம்பரம் ஒன்றே. சரீரத்திலுள்ள ஆறு ஆதாரங்களான மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகியவற்றை முறையே கெர்ப்பக் கிருஹம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம், ஸ்நபன மண்டபம், அலங்கார மண்டபம், சபா மண்டபம் ஆகிய வடிவமாக யோகிகள் கூறுவர். ஆயிரக்கால் மண்டபத்தை ஆயிரம் இதழ்கள் கொண்ட கமலமாகவும் (மூளையின் இருப்பிடம்), புஷ்கரணியை அமிர்த வாபியாகவும், பிராகாரங்களை பஞ்ச கோசங்களாகவும் கூறுவர்.

இறைவன் அருவ மேனியன் என்ற கருத்தை லிங்கத்தின் மூலமாயும், இவ்வருவ மேனியன் அடியார்கள் பொருட்டு உருவம் தாங்கி சோமாஸ்கந்தராக விளங்குகிருர் என்பதை கருவறை உட்சுவரில் அல்லது கருவறை விமானத்தில் சிற்ப வடிவமாகக் காட்டியும் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய முப்பெரும் செயல்களை அவனே ஆற்றுகிருன் என்ற கருத்தை கருவறைக் கோஷ்டங்களில் அமைக்கப்படும். பிரம்மா, விஷ்ணு தக்ஷிணுமூர்த்தி உருவங்கள் மூலமாகவும் பிராகாரங்களில் அமைக்கப்பட்டு எட்டு, பதினாறு, முப்பத்திரண்டு, பரிவாரங்கள் மூலம் பரம்பொருளின் ஆற்றல்களைத் தனித்தனியே பிரகாசப்படுத்தியும் அவையெல்லாம் மூலமூர்த்தியை ஆஸ்ரயித்த வண்ணம் அமைத்து ஒன்ருேடொன்று தொடர்பு உடையனவாக அமைக்கப் பெற்றுள்ளன.

ஆலய நிர்மாண இலக்கணத்தையும், காவியப் படைப்புக்குத் தேவையான ஏக உணர்ச்சியையும் ஆய்ந்து பார்க்குமிடத்து பெரு வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன. பலப்பல கட்டிடங்கள், உறுப்

புக்கள் ஆலய அமைப்புக்குள் இடம் பெற்றிருப்பினும் அவையனைத்தும் மூலஸ்தானக் கட்டிடத்தின் அளவை அடிப் படையாகக் கொண்டே அமைக்கப்படு கின்றன. கருவறையில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் லிங்கத்தின் அகலத்தை ஒரு அளவை (unit) யாகக் கொண்டு அதைப் போல் மும்மடங்கினதாக ஆவுடையார் அகலம் அமைக்கப்படும். ஆவுடையார் அகலத்தைப்போல் மும்மடங்கினதான கரு வறை உட்கூடு அமைக்கப்படும். கரு வறை உட்கூட்டைப்போல் மும்மடங்கின தாக கருவறை சுவர்ப்புற அகலம் கொள்ளப்படும். பிறகு இந்த அகலப் பிர மாணத்தை ஒரு அளவையாகக் (unit) கொண்டு விமான உயரம், அந்தராளம், முகமண்டபம், மஹாமண்டபம், பரிவாரக் கோவில்கள், பிராகாரங்கள், துவஜஸ்தம் பம், குளங்கள், கோபுரங்கள் ஆகிய எல்லா அங்கங்களின் அளவுகள் நிர்ணயிக்கப் படும். மேலும் மூலஸ்தான மூர்த்தியின் பிரமாணத்தைக் கொண்டே பிறமூர்த்தி களின் அளவுகள் நிர்ணயிக்கப் பெறும். இத்தகைய அளவுமுறை அழகிய தோற்றத்திற்காகவும் தத்துவக்கருத்துக்கு ஒப்ப அமைவதற்காகவும் எல்லா உறுப்புக் களையும் மூலஸ்தானத்திலே இணைப்பதற் காகவும் ஏகம் என்ற உணர்ச்சியை உரு வாக்குவதற்கும் ஏற்பட்டவை யென்றும் புலனுகும்.

காவியங்களாய்த் திகழும் நம் தென்ன கத்துக் கோயில்களில் படைப்புத்திறத் திலே தலைசிறந்த கோயில் மதுரை ஸ்ரீமீனுட்சியம்மன் கோயில். சிற்ப நூல் களிலே காணப்படும் அரிய விஷயங்களை ஒரே இடத்தில் கண்கூடாகப் பார்த்துத் தெளிவு பெறவேண்டுமென விரும்பினுல் மதுரை ஸ்ரீமீனுட்சியம்மன் திருக் கோயிலுக்குச் செல்ல வேண்டும் என்பது தொன்று தொட்டு சிற்ப உலகத்திலே நிலவி வரும் கருத்தாகும். சிற்ப உலகில் சிற்பியர்களால் ஏதாவதொரு அலங்கார அமைப்பு தற்செயலாகவோ, முயற் சித்தோ கண்டு பிடிக்கப்படுமானுல் அவ் வமைப்பு ஏற்கனவே மீனுட்சியம்மன் கோவிலில் அமைக்கப் பெற்றிருக்கும் என்று பழுத்த சிற்பிகள் சொல்வர். எனவே ஒரு பூரணமான சிற்ப நூலின் இலக்கணங்களுக்கு இலக்கியமாகவும் பழ மைக்குப் பழமையாகவும் புதுமைக்குப் புதுமையாகவும் விளங்குவது இப்பெருங் கோயில். இருப்பிடத்தாலும் பரப்பாலும் உன்னதத்தாலும் அலங்கார வேலைப்பாடு களாலும் சிறந்த சிற்பங்களாலும் வண்ண ஓவியங்களாலும் நிர்மாணச் சிறப்பாலும் தெய்வ சாந்நித்யத்தாலும் பெருமை யுடைய இத்திருக்கோயில் நன்கு புதுப் பிக்கப் பெற்று புதுமைப் பொலிவுடன் இன்று காட்சி தருகின்றது.

ஸ்ரீமீனுட்சியம்மன் திருக்கோயிலில் பல்லாண்டுகளாகப் பழுதடைந்து பொலி விழந்து கிடந்த சிற்ப வடிவங்களுக்கும் சிற்பக் கூடங்களுக்கும் ஜீரணோத் தாரணம் செம்மையாக நிகழ்ந்துள்ளது. அதுபோல் காலத்தால் பழுதடைந்து ஆதரவு குன்றி மறைந்துவந்த சிற்பக் கலைக்கே நமது பெருமைக்குரிய அர சாங்கம் ஜீரணோத்தாரணம் செய்து வரு கின்றது. சிற்பக்கலைப் பயிற்சிக்கென்றே மாமல்லபுரத்திலும், ஸ்வாமி மலையிலும் இரண்டு சிற்பக்கலைப் பயிற்சிக்கூடங்களை நிறுவி அவை மூலம் பண்டைய சிற்ப மரபிற்கிணங்க தொழிற் பயிற்சியையும்

நூல் பயிற்சியையும் ஓவியப் பயிற்சியையும் ஆலய, சிற்ப, தத்துவ போதனையையும் நமது இளைஞர்கட்கு அளிப்பது சிற்ப வரலாற்றிலேயே காணப்படாத சிறந்த செயலாகும். அரசாங்கம் அளிக்கும் இவ்வாதரவின் மூலம் நமது பண்டைச் சிற்பக்கலை மரபுகள் பாதுகாக்கப் பெறுவதோடு சிற்பியர் வாழ்க்கையும் வளம் பெறும் என்று நம்புவோமாக!



## அரனே பரனே

உடலே உயிரே உணர்வே—நடமருவு
தெய்வச் சுடரே சிவானந்த போகமே
சைவச் சலதி தரும்கமுதே—மெய்வார்
மருவார் குழலாள் மகிழ்வே மதுரைத்
திருவால வாயுறையும் தேவே—அருள்தா
எனகரிய தொண்டர் இருமருங்தும் சூழ்ந்து
மனம்உருகி மெய்யுருகி வாழ்த்த—கனமருவு
தும்புருவும் நாரதனும் சுத்தஇசை பாடக்
கொம்பனைய மாதார் குளிப்பம்இட—நம்பன்
புனித இமயமலைப் பொற்றொடியும் தானும்
இனிதின் இருந்தருளும் எல்லை

# சிற்ப வடிவங்கள்

கு. ராமசாமித்தபதியார்

சிற்பக்கலை என்னும் தெய்வீகக் கலையானது தலைசிறந்த கலைகளில் தனிப்பட்ட பெருமையுடையது. பலவிதமான கலைகளும் பிணைந்து ஒருங்கே சேர்ந்த முழு உயிரோவியமாகத் திகழ்வது இக் கலை.

தங்களது தவப் பெருமையினால் எதையும் படைக்கவல்ல மா முனிவர்கள் மக்கள் நலமுடன் வாழக்கருதி மக்களுக்கு இன்றியமையாத நகரம், கிராமம், தேவாலயம், வீடு, தேவ மூர்த்திகள், மூர்த்தி பேதங்கள், லக்ஷணங்கள் முதலியனவற்றை அமைக்கும் முறைகளையும் விதிகளையும் சிற்பநூல் வடிவத்திலே அருளினார்கள். உலகத்தை ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகித்தல் முதலிய ஐந்தொழிலினால் ஆட்டிவைத்து, நம்முள் நாமாக இருந்து நம்மையும் ஆட்டிவைக்கும் உயிரொளியாகிய எல்லாம் வல்ல இறைவனை நாம் கண்ணால் காண இயலவில்லை. அவ்விதம் காணமுடியாதுபோனாலும், அறிவின் ஆற்றலாலும் உணர்வின் தன்மையினாலும் உலகின் தலைவன் என்று மட்டுமே உணர முடிகிறது. உயிரொளியாகவும், அறிவுச் சுடராகவும், அரூபமாகவும், எல்லாவிடங்களிலும் வியாபித்தும் உலகையும் பஞ்ச பூதங்களையும் செயல்படுத்தும் எல்லாம் வல்ல இறைவனை கணக்கிட்டு நாம் அவ்வளவு இலகுவில் அறிவது மிகவும் சிரமம்தான்.

எனவே எவ்வழியிலேனும் எல்லாம் வல்ல இறைவனை இலகுவில் உணர்ந்து அவன்பால் பக்தி செலுத்தி மக்கள் நன்மையடைய வேண்டும் என்ற நோக்கத்துடனேயே தெய்வ வடிவங்கள் படைக்கப்பட்டன.

முனிவர்களால் அருளப்பட்ட வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், சிற்ப சாஸ்திரம் முதலிய நூல்களை ஆதாரமாகக்கொண்டு ஐந்தொழிலையும் புரியும் ஆற்றல் படைத்தவனும், அரூபமானவனுமான எல்லாம் வல்ல இறைவனை ஒப்பிலா அழகுடனும் கண்ட மாத்திரத்திலேயே பார்ப்பவர் உள்ளத்தில் பரவசத்தையும் பக்தி சிரத்தையும் எழுப்பக்கூடிய வகையிலும் வெவ்வேறு வகையான சிற்ப வடிவங்களாக அமைத்து வணங்குகிறார்கள். இம்மாதிரி சிற்ப வடிவங்கள் பல விதங்களில் வெவ்வேறு உருவ அமைப்பு அளவு முறைகளை (தாலபேதங்கள்) அடிப்படையாகக்கொண்டு உயர்ந்த அழகுடன் திறமையான சிற்பிகளால் உருவாக்கப்பட்டன. உதாரணமாக சிவன், விஷ்ணு, பிரம்மா இம் மும்மூர்த்திகளின் திருவுருவங்கள் உத்தம தசதாலம் என்னும் உருவ அமைப்பு அளவு முறையை ஆதாரமாகக் கொண்டும், மேற்கண்ட மும்மூர்த்திகளின் தேவிகள் மத்திம தசதாலம் என்ற உருவ அமைப்பு அளவு முறையை ஆதாரமாகக் கொண்டும் உருவாக்கப் பட்டன. உத்தம தசதாலம், மத்திம தசதாலம் முதலியன போன்ற பல உருவ அமைப்பு அளவு முறைகளை (தாலாபேதங்கள்) ஆதாரமாகக்கொண்டு வெவ்வேறு தெய்வ வடிவங்கள், பரிவாரங்கள், துவாரபாலகர்கள், பூதகணங்கள், அஷ்டதிக் பாலகர்கள் போன்ற சிற்ப வடிவங்கள் அமைக்கப் பட்டன.

இச்சிற்ப வடிவங்கள் மண், கல், மரம், சுதை, உலோகம் முதலியவைகளி ஞல் உருவாக்கப்பட்டன. மேலும் சிற்ப வடிவங்களின் அமைப்பு மூன்று விதங் களாகக் கூறப்பட்டன. அதாவது பூர்ண சித்திரம், அர்த்த சித்திரம், சித்திரா பாஸம் என்பனவாகும். முன், பின் புறங் கள் மற்றும் முழுமையான உருவத்தைக் காணக்கூடிய வகையில் அமைக்கப்பட்ட சிற்பம் பூர்ண சித்திரம் என்றும், முன்பக் கம்(அல்லது பின்பக்கம்) மட்டும் தெரியக் கூடிய வகையில் அமைக்கப்பட்ட சிற்பம் (சுவர், தூண்முதலியவைகளின் செதுக்கப் பட்ட சிற்பங்கள்) அர்த்த சித்ரம் என் றும், வர்ணங்களால் எழுதப்பட்ட சித்திரங் கள் சித்ராபாசம் என்றும் வழங்கப்படு கின்றன.

அகஸ்தியரால் கூறப்பட்ட சகளாதி காரம் என்னும் சிற்ப சாஸ்திரத்திலே இறைவனை ஸகளம், நிஷ்களம், மிஸ்ரம் என்ற மூன்று வடிவங்களில் வணங்கலாம் என்றும் கூறப்பட்டுள்ளது. அதாவது (ஸகளம்) கை, கால், முகம் முதலியன உள்ள முழு உருவமான வடிவத்தை வணங்குதல் (2) (நிஷ்களம்) லிங்கா காரமான ஸ்தூலத்தை வணங்குதல் (3) ( மிஸ்ரம் ) லிங்கம் போன்றதிலே முகம் செதுக்கப்பட்டதை வணங்குதல். இப்படி கூறப்பட்ட வடிவங்களில் ஒன்றை, தாமிரம், வெள்ளி, தங்கம் போன்ற ஏதாவது ஒரு உலோகத்தால் அல்லது சிலையினுல் சிற்ப சாஸ்திரமுறைப் படி உருவாக்கி ஒருமனதுடன் வணங்கி வருவதால் மனிதர்களுக்கு பூமியில் மனைவி, மக்கள், சிநேகிதர்கள், உறவினர் கள், ஐஸ்வர்யங்கள் முதலியன ஏற்பட்டு அவர்கள் விரும்பிய விஷயங்களை எல்லாம் அனுபவித்து பிறகு சாலோக்கியாதி சுகங் களையும் அனுபவிக்கும் நிலை ஏற்படுப கிறது என்பது சிற்ப சாஸ்திரங்கள் கூறும் கருத்தாகும். இக்கருத்துக்களை உணர்ந்த பெரியோர்கள் பரார்த்தமாகவும், ஆத்மார்த்தமாகவும் அதாவது கோவில் களிலும், பஜனை மடங்களிலும், இல்லங்களி லும் தெய்வ வடிவங்களைச் செய்துவைத்து வணங்கிஞர்கள். இவ்விதமான தெய்வவழி பாடு வணங்குபவர்களுக்கு நிம்மதி, தெளிவு, சுகம், பரந்த மனம் கலை உணர்வு முதலியனவற்றை உண்டாக்குகிறது.

சிற்ப வடிவங்களைப்பற்றிய அநேக விஷயங்கள் காஸ்யப சிற்ப சாஸ்திரம், சகளாதிகாரம், சிற்பரத்னம், மான சாரம், மயமதம், பிரம்ஹிய சித்திரகர்ம சாஸ் திரம், சரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரம் விஸ்வ கர்மீயம் போன்ற சிற்ப நூல் களில் பல்வேறு வகைகளில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. மேலே விளக்கப் பட்ட எத்தனையோ தத்துவங்களையும், விதிமுறைகளையும் ஆதாரமாகக்கொண்டு வெவ்வேறு காலங்களில் அரசாண்ட மன்னர்கள் அவரவர் காலத்தில் பலப்பல ஆலயங்களையும், சிறந்த சிற்ப வடிவங் களையும் திறமையான சிற்பிகளின் உதவி யினுல் உருவாக்கிஞர்கள். இவ்விதமாக அமைக்கப்பட்ட சிற்ப வடிவங்களில் பல்லவ அரசர்கள் காலத்தில் காஞ்சீபுரம், மாபலிபுரம் முதலிய ஊர்களிலும், சோழ அரசர்கள் காலத்தில் சிதம்பரம், கும்ப கோணம், தாராசுரம், கங்கை கொண்ட சோழபுரம், தஞ்சாவூர், திருபுபவனம், திருவையாறு முதலிய ஊர்களிலும், பாண்டிய அரசாட்சிகாலத்தில் மதுரை யிலும் அமைக்கப்பட்டுள்ள சிற்ப வடி வங்கள் மிகச் சிறப்புடையனவாகும். இச் சிற்ப வடிவங்கள் அன்றும், இன்றும், என்றும் தனதொழில் குன்ருத நிரந்தர

நிலையில் மேலை நாட்டவர்களனைவரும் கண்டு வியக்கும் முறையிலும், நம் முன்னோர்களின் அறிவு, ஆற்றல் இவை களுக்குச் சான்றாகவும் விளங்குவதைக் கண்கூடாகக் காண்கின்றோம். சிற்ப சாஸ்திர முறைப்படியும், கருத்தையெல்லாம் கவர்ந்து ஈர்க்கும் தெய்வப் பொலிவும், வனப்பும் உடையனவாகவும், ஆடை அணிகலன்கள் சிறப்பான முறையில் அமையப்பெற்றும் பேசும் தெய்வங்களைப் போன்று இச் சிற்ப வடிவங்கள் நமக்குக் காட்சியளிப்பதைப் பார்க்கும்போது, இந் நகரங்கள் எல்லாம் அக்காலத்தில் கலைத் தேசமாகவே திகழ்ந்தது என்றாலும், தெய்வீகமான இந்த சிற்ப வடிவங்களை உருவாக்கிய திறமையே உருவான சிற்பிகள் தெய்வத்திற்குச் சமமாகவே போற்றப்பட்டிருப்பார்கள்' என்றாலும் மிகையாகாது.

திறமையும், பெருமையும் பெற்ற அக்காலச் சிற்பிகளின் பரம்பரையினரே தாங்கள் என்பதை இக்காலச் சிற்பிகள் உணர்ந்து, நமது நாட்டின் கலைப் பெருமைக்குக் குறைவு ஏற்படாத வகையில், சாஸ்திர முறையிலிருந்து சற்றும் வழுவாததும் சிறந்த அமைப்புடையது மான தெய்வீக வடிவங்களை தெய்வீக பக்தியுடன் உருவாக்குவதே இக்காலச் சிற்பிகளின் தலையாய கடமையாகும். இதை நன்குணர்ந்துள்ள தமிழ்நாடு அரசினர் பரம்பரை சிற்பிகள் நிறைந்த சுவாமிமலையிலும், மகாபலிபுரத்திலும் சிற்பப்பயிற்சி நிலையங்களை ஏற்படுத்தி, சிற்பிகளின் பிள்ளைகளுக்கு உபகாரச் சம்பளம் அளித்து, அவர்களுக்கு சாஸ்திர அடிப்படையில் பழைமை மாறாத சிற்பக் கலையை நன்கு பயிற்றுவிக்கவும், அதன் வாயிலாக சிறந்த சிற்ப வடிவங்களை உருவாக்கும் திறமையுள்ள அநேக சிற்பிகளை உருவாக்கவும் ஏற்பாடு செய்துள்ளார்கள். மங்கிவரும் இக்கலைக்கு புத்துயிர் அளிக்கும் இந்த ஏற்பாடு உண்மையிலேயே இக்கலைக்கும், கலைப் பிரியர்களுக்கும், சிற்பிகளுக்கும் இக்காலத்தில் கிடைத்த ஒரு வரப்பிரசாதமாகும்.

இவ்வரிய சந்தர்ப்பத்தை சிற்பிகள் அனைவரும் பயின்படுத்திக்கொண்டு நமது நாட்டின் சிற்பக் கலைப் பெருமையை பாதுகாக்க முயலுவார்கள் என்றும், உலகில் அநேக இடங்களிலுள்ள கலை ஆர்வம் கொண்ட மக்களின் ஆசைகளையும், நமது நாட்டிலுள்ள தெய்வ பக்தர்களின் ஆசைகளையும் பக்தர்களின் பூர்த்தி செய்யக்கூடிய வகையில் பழங்கால சிற்ப வடிவங்களுக்கு எவ்வகையிலும் குறைவு இல்லாத உயர்ந்த தரமுள்ள சிற்ப வடிவங்களை அதிக அளவில் உற்பத்தி செய்வாகள் என்றும் நம்புவோமாக.

எல்லாவற்றிற்கும் மேலாக இந்நேரத்தில் குறிப்பிடப்படவேண்டிய முக்கியமான விஷயம் ஒன்று உண்டென்றால், அது, தீர்த்தம், மூர்த்தி ஸ்தலம், முதலிய மூன்று சிறப்பையும் ஒருங்கே அமையப் பெற்றதும், மிகப் புராதனமானதும் சிவ ஸ்தலங்களிலேயே மிகப் பெரியதும், சிறப்பு வாய்ந்ததுமான ஸ்ரீ மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் ஆலயத் திருப்பணியாகும். மிகச் சிறந்த பல வித சிற்ப வடிவங்களை அதிக அளவில் பெற்றுள்ள இக் கோயில், திருப்பணி செய்யப் படுவதினால் இக்காலத்தில் இக் கலைக்கு புத்துயிர் அளிக்கப் பட்டுள்ளது என்றே துணிவுடன் கூறலாம். பழமைச் சிறப்பு மாறாமல் இச்சிற்பங்களுக்கு புத்துயிர் அளிக்கப் பட்டிருக்கும் சிறப்பையும்,

க்கையாண்டுள்ள முறைகளையும் காணும் போதும் அதற்காக சம்மந்தப்பட்டவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளையும், அடைந்த கஷ்டங்களையும் கேட்கும் போதும், நம்மையும் அறியாமல் மெய் சிலிர்ப்பும் பூரிப்பும் உண்டாவதை உணர்கிறோம்.

திறமை குன்றாத சிற்பிகளும், ஆர்வம் குன்றாத கலைப் பிரியர்களும் இக்காலத்தில் அதிகம் உள்ளார்கள் என்பதை இக் கோயில் திருப்பணி உலகிற்கு உணர்த்துகிறது. எனவே தெய்வீகமான சிற்பக் கலை என்றென்றும் வளர்ந்து வாழும் என்பதில் ஐயமில்லை.



## திருவிழா முடிவிலே

தண்டமிழும் வாசகமும் சங்கத் தமிழ்அமுதம்
மண்டும் திருவிசையும் மந்திரமும்—தொண்டர்
அருள்விரித்த சேக்கிழார் ஆன்றதமிழ்ப் பாடல்
திருவிருத்தச் செய்யும் சிறப்பும்—இருமருங்கும்
பொங்க, மகளிர் புரியநடம், பல்தீபம்
கங்குல் பொழுதைக் கடிதகற்ற—எங்களிடத்து
அல்லல் பவம்தொலைக்கும் அங்கையற்கண் அம்மையுறை
செல்வத் திருக்கோயில் சேர்ந்தருளி—

# மனிதனும் தெய்வமும்

கவிராஜபண்டிதர் ஜெகவீரபாண்டியனுர்

குழந்தையும் தெய்வமும் கொண்டுணத்த இடம் என்பது பழமொழி. இந்த முதுமொழியுள் மதி நலம் கனிந்த அதிசய உண்மைகள் பல மருமமாய் மருவியிருக்கின்றன. மானச தத்துவங்கள் எத்தகையோரையும் உய்த்துணரச் செய்து உணர் வொளிகளை அருளி வருகின்றன.

குழந்தை, மனிதன், தெய்வம்—இந்த மூன்றும் ஓர் இனம். பரம்பரையான உறவுரிமைகளுடையன. குழந்தை வளர்ந்து கிளர்ந்தால் மனிதன். மனிதன் உணர்ந்து தெளிந்தால் தெய்வம்.

தெய்வத்தை நேரே காணமுடியாது. மனிதனை எங்கும் காணலாம். குழந்தையைச் சில இடங்களில் பார்க்கலாம். கள்ளம் கபடங்கள் இல்லாத பிள்ளையுள்ளம் பெறுபவன் பெரிய பாக்கியவான். உள்ளத்தின் அளவே யாவும் யாண்டும் உருவாகி வருகின்றன. மானச மருமங்கள் அறிய அரியனவாய் மருவி நிற்கின்றன.

## மனித மரபு

உலக உயிர்களுள் மனித இனம் தனி நிலையில் உயர்ந்து தலைமையாய் நிலவுகிறது. இந்த உயர்வுக்கு உரிய மூல காரணங்கள் பல. அவற்றுள் அறிவு முதன்மையாய் உள்ளது. மனிதன் எண்ணி யுணர்கிறுன். எதையும் துருவி ஆராய்கிறுன். சென்றதைச் சிந்திக்கிறுன். வருவதை யூகிக்கிறுன். நிகழ்வதை நேரே கவனிக்கிறுன். சார்ந்த சார்புகளையெல்லாம் ஓர்ந்து தெளிந்து உறுதி காணுகிறுன். உரைகள் ஆடுகிறுன். தான் கருதியதைப் பிறர்க்கு உணர்த்துகிறுன். பிறருடைய கருத்துக்களைக் குறிப்பாய்க் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறுன். காட்சியளவோடு நில்லாமல் காணுத எதையும் தேர்ந்து தெளிய விழைகிறுன்.

பூமண்டலங்களை நாடியறிய ஓடியலைகிறுன். வான வீதிகளையும் கிரக மண்டலங்களையும் சூரிய சந்திரர்களையும் விண்மீன்களையும் அளவு கண்டு உளவு கூறுகிறுன். இன்னும் எவ்வளவோ அதிசயங்களை மதிநலம் தெளிய விளக்குகிறுன்.

இவ்வளவு அறிவும் இவ்வளவு செறிவும் இவ்வளவு பெருமையும் இந்த மனிதனுக்கு எந்த வகையில் வந்தன? இவ்வரவு நிலையைச் சிந்தித்து உணர வேண்டாமா? சிந்தனையில்லாத வாழ்வு நிந்தனையாய்த் தாழுமே! அறியாமை அவித்தை அஞ்ஞானம் என்பன வெறி மருள்களாய் வெய்ய இருள்களாய் விரவி நிற்கின்றன. அறிவொளி பரவிய அளவு உரிய உண்மைகள் தெரிய வருகின்றன. வரவே பரமனுக்கும் மனிதனுக்கும் இயல்பாயமைந்துள்ள உறவுரிமைகளை உணர்கிறுன். உய்தியுறுகிறுன்.

## உண்மையுணர்வு

எல்லையில்லாத பேரறிவுடைய பெரிய ஒரு பரம்பொருளிடமிருந்தே சீவன் பிரிந்து வந்திருக்கிறுன். தனிமுதல் தலைமையான அந்த முழு முதற் பொருள் எங்கும் நிறைந்தது, என்றும் உள்ளது; எல்லாம் அறிவது. யாண்டும் உண்மையறிவு ஆனந்தமாய் நீண்டு பரந்துள்ள அந்தப்

பரஞ்சோதியின் சிறிய ஒரு ஒளித்துளியே உயிர் எனப் பேர் பெற்று மனித உடலில் மருவியுள்ளது. புனிதமான அது மனிதனுடைய பழக்க வழக்கங்களின்படியே படிந்து உழலுகிறது. தன் உள்ளத்தில் அழுக்கேருமல் காத்து வரும் அன்பாலே மனிதன் விழுப்பமுடையனுய் விளங்கி வருகிருன். அழுக்கு அடைந்தால் அவன் இழுக்கடைந்து இழிகிருன்.

மாசுபடிந்த ஆடியில் முகம் தெளிவாய்த் தோன்ருது.
மாசுபடியாத அதில் முகம் தேசு மிகுந்து திகழும்.
மாசுபடியாத மனத்தே தான் ஈசன் ஒளி இனிது விளங்கும்.

தன் மனத்தே மாசு படுத்தாதவன் ஈசன் அருள் ஒளியை இனிதே எய்தி மிளிர் கிருன். மாசு படுத்தினவன் நீசனுய்த் தாழ்ந்து நிலைகுலைந்து போகின்ருன்.

இன்பம் வேண்டும் என்றே மனிதன் யாண்டும் விரும்புகிருன். துன்பத்தை எவ்வழியும் அஞ்சி அயர்கிருன். தான் விரும்புகிற இன்பத்தை அடைய முடியாமல் மனிதன் அலமந்து அலைகிருன். கருதியது கைகூடாமல் ஒழிந்து போகிற மருமத்தை அவன் அறிந்து கொள்ளவில்லை. மாய மயக்கங்கள் தீய இயக்கங்களாய்ச் செறிந்து நிற்கின்றன. அந்நிலைகளில் புலையாட்டங்கள் பொங்கி எழுகின்றன.

தன்னை எல்லாரும் புகழவேண்டும். உயர்ந்தவன் என்று சொல்லவேண்டும். வியந்துபுகழ்ந்து யாண்டும் யாரும் தன்னை விழைந்து பேசவேண்டும் என்றே எவனும் நசையாய் நயந்து நிற்கின்ருன்.

கொடிய உலோபியாயிருந்தாலும் தன்னை வள்ளல் என்று பிறர் புகழ்ந்து கூறவேண்டும் என்றே பேராசைப் படுகிருன். இழிந்த பேடியும்சிறந்த வீரன் என உயர்ந்த பேரைக் கேட்க விரும்புகிருன்.

புலை நிலைகளில் இழிந்து உழல்கின்ற பொல்லாத புல்லனும் தன்னை நல்லவன் என்று எல்லாரும் சொல்ல வேண்டுமென்றே ஒல்லும் வாயெல்லாம் ஊக்கி முயல்கின்ருன்.

இழிவு ஈனம் கயமை கீழ்மை முதலிய நீச நிலைகளில் இழிந்து உழந்து திரிந்தாலும் உயர்ந்தவன் என்னும் சிறந்த பேரையே அடைய விரும்புகிருன். இதற்குக் காரணம் என்ன? கருதியுணர்ந்தால் உறுதியுண்மைகள் ஓரளவு தெரியவரும்.

இன்பமயமான உயர்ந்த பரம் பொருளிடமிருந்தே மனிதன் உதயமாகி வந்துள்ளமையால் அவனது இதயம் இன்பத்தையும் உயர்வையும் இயல்பாகவே விரும்புகிறது. மானச தத்துவங்கள் அதிசய மருமங்களாய் மருவியிருக்கின்றன. மனிதன் எதையும் அடைய உரியவன். எல்லாவற்றையும் பெறவல்லவன். ஆதி அந்தம் இல்லாத அந்த ஆதிமூலப் பொருளின் ஞாதியாய் இருக்கின்றமையால் இவனை அவன் எவ்வழியும் ஆவலோடு உவந்து விழைந்து நிற்கிருன்.

பெற்ற தாயும் உற்ற தந்தையும் தம் பிள்ளையை உள்ளி உள்ளம் உருகுவது போல் அகில அண்டகோடிகளுக்கும் அம்மையப்பனுயுள்ள இறைவன் தனது சேயான மனிதனைத் தன்பால் அன்பாய் வருவதையே கருதி எவ்வழியும் உரிமையோடு உவந்து வருகிருன்.

ஆண்டவன் அவ்வாறு ஆர்வம் கூர்ந்து நின்ருலும் இவன் யாதும் எண்ணு

மல் ஏதும் கருதாமல் ஈனமான இழிமருள் களிலேயே அழுந்திக் கழி செருக்குடன் உழல்கின்றுன்.

தனக்கு இயல்பாக வாய்த்துள்ள நல்ல அறிவை உயர்வான நிலையில் ஒளி பெறச் செய்யாமல் மழுங்கி இழிவாக்கி மடிந்து மாய்ந்து போகிறுன். இருளான மருள்வழியில் செருக்கும் சிறுமையும் செறிந்து வளர்ந்து கிளர்ந்து நீண்டுள்ளன. தீய பழக்கங்களால் எவனும் தீயனுய் விடு கிறுன். அவ்வழிகளை அருவருத்து விலகி நல்வழியில் ஒழுகுபவனே விழுமியனுய் விளங்கி வருகிறுன்.

ஒரு மனிதனுடைய அறிவுக்கு உரிய பெரிய பயன்யாது? தன் உயிர் துயர் உருது உயர் நிலையை அடையச் செய்வதே உயர்ந்த மனித உணர்வுக்கு உண்மை யான பயனும்.

எதை அறிந்தால் எல்லாம் அறிந்த தாமோ அதை அறிவதே நல்ல அறிவாம். உன்னை அறி! உனது உண்மை நிலையை ஓர்ந்து உணர்! என்பதே மேன்மையான ஆன்மபோதமாய் மேவியுளது.

தன்னை அறிவது தாயறிவு
பின்னை அறிவது பேயறிவு

பிள்ளையைப் பேணி வளர்த்து எவ் வழியும் செவ்வையா, தாய் பெரு மகிமை களைச் செய்தருளுவாள். அதுபோல் உள் முகமாய்த் தன்னை நோக்கிய மெய்யறிவு பொய்யிருளை நீக்கிப் புனிதமிகச் செய் தருளும். அவ்வாறு அகத்தே தன்னைப் பாராமல் வெளியே களிமிகுந்து ஓடியலை யும் அறிவு பழிபடிந்து ஆன்மாவைப் பாழ்படுத்திவிடும்.

தன்னை அறிய நேர்ந்தவன் இன்னல் தீர்ந்து இன்பம் மிகப் பெறுகிறுன். அங் ஙனம் நேராதவன் பொறிவெறியனுய் இழிந்து புலையேறுகிறுன். அரிய பிறவியை அடைந்தும் உரிய பயனை அடையாமல் ஒழிவது கொடிய மடமையாம்.

மனிதன் இயல்பாகவே இனியவன். நல்ல அறிவு உடையவன். பெரிய இடத் துப் பிள்ளை, பரமான்மாவின் நேருறவான சீவான்மாவைத் தேகத்தில் மேவியுள்ள வன். இருந்தும் தன்னைக் கருதியுணரா மல் உறுதி நலன்களை இழந்து உழந்து திரிய நேர்ந்தான்.

உயிரும் உடலும் கூடி உலாவிவரும் உருவத்தையே மனிதன் என உலகம் ஓதி வருகிறது. வையம் வழங்கி வருவதில் மெய்யுணர்வு உள்ளே விளங்கி நிற்கிறது.

**உயிர்**

அறிவுள்ளது; அழிவில்லது; இன்ப நிலையது.

**உடல்**

அறிவற்ற சடம்; அழிவுற்ற பிணம்; துன்ப நிலையம்; இவ்வாறு எவ்வழியும் மாறுபட்ட இந்த இரண்டும்கூடி ஒன்றுய் மருவியுரிமையுடன் நடித்து வருகிறது. முன்பு செய்த வினைப்பயன்களை நுகர்ந்து கழிக்கவே உயிர்க்கு இந்த உடம்பு உறவா யமைந்தது. கரும போகங்கள் கழிந்து போனுல் உடனே இந்தக் கூட்டுறவு ஒழிந்துபோம். வினைப்போகமே ஒரு தேகம்; வினை ஒழிந்தால் தினைப்போத ளவும் நில்லாது. நீர்மேல் குமிழிபோல் நிலையின்றி விரைந்து அழிகின்ற இவ் வுடல் உள்ளபோதே உயிர்க்கு நல்ல உய் தியை நாடிக் கொள்பவர் உயர்ந்த மகான் களாய்ச் சிறந்து விளங்குகின்றுர்.

உயிர்ப்பை உடையது, உய்யஉரியது உயிர்என வந்தது. காரணக் குறிப்புக்கள் யாவும் கருதியுணரவுரியன. கருதாதவர் எவரும் விருதாவாய் விளிந்து ஒழிகின்றார்.

உயிர் துயர் உறாமல் உயர்ந்து உய்தி பெறுபவனே தெய்வ நீர்மையனாய்ச் சிறந்து திகழ்கிறான். தனது நிலைமை தலைமைகளை ஓர்ந்து உணர்ந்துகொள்வதே உயர்ந்த பிறவிக்கு உரிய சிறந்த பயன். மனிதன் பிறக்கின்றான்; இருக்கின்றான்; வளர்கின்றான்; வாழ்கின்றான்; முடிவில் மறைந்து போகின்றான். இறந்து ஒழிவதும், பிறந்து எழுவதும், ஓயாமல் தொடர்ந்து நடந்து படர்ந்து வருகின்றன.

இறந்தபின் நாம் எங்கே போகின்றோம்?
பிறந்து ஏன் இங்கே வந்தோம்?
ஈண்டு என்ன செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்?

ஆடு மாடு முதலிய இழிந்த பிராணிகளாய்க் கழிந்து ஒழியாமல் உயர்ந்த இந்த மனிதப் பிறவியை அடைந்து வந்திருக்கிறோம். அரிய இப்பிறவி எப்படிக் கிடைத்தது? எடுத்த பிறவிக்குப் பயன் என்ன? உலக மையல்களில் உழந்து உடலை வளர்த்து வருகிறோம்; உயிர்க்கு என்ன உறுதி செய்தோம்? இதுவரை வாழ்ந்தோம்! என்னதாம் பெற்றோம்? சாகும்போதுகூட வருவது யாது? கோடி கோடியாத் தேடிவைத்தவரும் கையில் கொண்டுபோவது ஒன்றும் இல்லையே! நாளும் நாளும் யாண்டும் இந்தப் பாழ் நிலையை யாவரிடமும் நேரே கண்டு வருகிறோமே! கண்டும் கருதியுணராமல், ஊனமாயிழிந்து ஈனமாய் ஒழிவது ஞான சூனியமாய் யாண்டும் வானுற வளர்ந்துள்ளதே! நிலைமையைத் தெளிந்து தலைமையை அடைவதே தத்துவஞானம்.

---

# வாழ்க என,

# வாழ்த்துவோம்!

மொ. அ. துரை அரங்கசுவாமி, M. A. Pld.

ஆண்டவன் ஒருவன் உண்டு. அவன் இல்லாத இடமே இல்லை. எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவன் அவன். அவ்வாறிருந்தும், நம் ஊனக்கண்ணுல் காண மாட்டாதபடி அருவாகவே இருக்கிருன். ஆனுல் அவனை ஊனக்கண்ணுல் காணவே முடியாதா? அருவாய் உள்ள ஆண்டவன் எல்லா ஆற்றலும் உடையவன் என்பதை மறத்தல் ஆகாது. அவ்வாற்றலுடைமையால் அவன் உருவாகவும் வரலாமன்ருே! தன்னை உருவாக அவனைக் காணவிரும்புவார், அவனைத் தம் ஊனக்கண்ணுல் கண்டு களிக்கலாம். 'காட்டிலுல் யாரொருவர் காணுதாரே; காண்பார் யார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே', என்பது பொய்யா மொழியன்ருே!

ஆண்டவனை உருவாகக் காண்பதற்குத் தேவையானது அன்பொன்றே. அன்புசெய்து பழகியவர் கூட்டத்தில் சேர்ந்து அன்புசெய்து பழகுவார்க்கு ஆண்டவனை உருவத்தில் காண்பது மிக மிக எளிதாகும். நிறைந்த அன்புடையார்க்கு அவர் வேண்டும் வடிவத்தில் ஆண்டவன் காட்சியளித்து விடுவான். அவனே அவர்க்கு மெய்யுணர்வு நல்குவான்; அதனை முன்னிட்டு இனிப்பிறவா நிலையாகிய வீடும் அளிப்பான். இங்ஙனம் வீடுபெறும் நெறியே அன்புநெறியாகும். கற்ருேரும் கல்லாதோரும் எளிதில் பற்றிப் பயனடைதற்கு உரிய நெறி அன்பு நெறியேயாகும். தென்னுடு எனப்படும் தமிழகத்தில் தோன்று தொட்டு இந்நெறியே தமிழர் அனைவராலும் கடைப்பிடிக்கப் பட்டு வருவதாயிற்று என்பது தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், தேவார திருவாசக நாலாயிரப் பிரபந்தங்கள் முதலியவற்ருல் தெளிவாக விளங்கும்.

ஆண்டவனை உருவமாகக் காண விரும்பும் அன்பர் தாமாகத் தம் உள்ளத்தில் ஓர் அழகிய உருவத்தை வரைந்து கொள்ளும் ஆற்றல் உடையாராதல் வேண்டும். அவ்வாற்றலும் சிலருக்கே வாய்ப்பதாகும். அத்தகையோர் தம் நிறைந்த அன்பால் அவன் அருளாலே அவன் காட்சிபெற்றுத் தாம்பெற்ற காட்சியைப் பிறரும் காணவேண்டும் என்ற அருளுள்ளத்தோடு கல்லிலும் செம்பிலும் பிறவற்றிலும் தாம்கண்ட காட்சியுருவங்களை அமைத்துக் கோயில்களைக் கட்ட ஏற்பாடுசெய்து போயினர். தமிழ்நாட்டுக் கோயில்கள் சரித்திரகாலத்திற்கும் பழமையான சிறப்புடையவை. அக்கோயில்களில் சென்று ஆண்டுள்ள உருவத்தை ஒளியுடைய உயிரோவியமாக உள்ளத்தில் பதித்து அவ்வுருவமாக வந்து ஆண்டவன் காட்சி நல்கவேண்டும் என்று அன்புடனும் அளவிலாத அக்கறையுடனும் வேண்டித் தாம் வேண்டியவாறு ஆண்டவனைக் கண்டு வீடுபெற்ற அன்பர்கள் எண்ணற்றவர்கள். அவர்கள் கண்ட காட்சிகளும் எண்ணற்றவையாகும். அக்காட்சியுருவங்

களெல்லாம் கோயில்களிலும், கோபுரங்களிலும் சிற்பமாகவும், கோயில் சுவர்களில் ஓவியங்களாகவும் அமைக்கப்பட்டன. வடிவழகும், ஆடையணி முதலியவற்றின் அழகும் காட்சியிற் கண்டவாறே அமைய, வண்ணப் பூச்சுக்களும் கோயிற் சிற்பங்களிலும் ஓவியங்களிலும் பயன்படுத்தப் பட்டன. இவ்வயும் தொன்றுதொட்ட வழக்குடையவையே யாகும்.

காட்சிகள் பலவாயினும் அவையனைத்தும் ஒரே ஆண்டவனுடையவையே யாகும். சிவனென்றும், உமையென்றும், பிள்ளையாரென்றும், முருகனென்றும், திருமால் என்றும் திருமகள் என்றும், நான்முகன் என்றும் கலைமகள் என்றும் இக்காலத்தில் வழங்கும் வழக்கிற்கமைந்த காட்சிகள் எல்லாம் ஒரேஆண்டவனுடைய காட்சிகளேயாகும். எனவே அவற்றில் வேறுபாடு கருதுதல் அறிவுடைமை யாகாது. பண்டைத் தமிழகத்தில் வேறுபாடு கருதாது வழிபாடாற்றிய உண்மையைத் தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. ஆனுல் பிற்காலத்தில் எப்படியோ வேறுபாட்டுணர்வு தோன்றி நிலைத்து நிற்பதாயிற்று. அதனுல் சைவம், வைணவம், காணுபத்யம், கௌமாரம், சாக்தம், சௌரம் எனச்சமயங்களும் வேறுபட்டு நிலைப்பனவாயின. அவ்வாருயினும், உண்மையறிவுடையார் வேற்றுமை பாராட்டுவதில்லை. உமை திருமாலின் தங்கையெனவும், உமையின் கணவன் சிவனென்றும், சிவனின் தங்கை கலைமகளெனவும் கலைமகளின் கணவன் நான்முகன் என்றும், நான்முகனின் தந்தை திருமால் எனவும், திருமாலின் மருமகன் முருகனெனவும் உறவுகாட்டி அவ்வறிவுடையோர் அவரை யெல்லாம் ஒரு குடும்பத்தினராகக் கொள்ளும் வகையைக் காட்டி ஒன்றுபடுத்திஞர்கள். அவ்வாறு காட்டியவிடத்தும், பழக்கத்திற்கு அடிமையாய் விட்டவர் வேறுபாட்டுணர்வைக் களைதலாற்ருது மாறுபட்டே நிற்பர். யாங்ஙனமாயினும், அன்புடனும் அளவிலாத அக்கறையுடனும் ஏதாவது ஒரு உருவத்தை உள்ளத்தில் அமைத்துக் கொண்டு வழிபடுவார்க்குப் பிறப்பறுக்கும் பெற்றி ஏற்படுவது உறுதியாகும்.

சுவைகள் பலவாகும். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சுவையில்தான் ஈடுபாடு மிகுதியும் உண்டாகும். காணப்படும் இறைக்காட்சிகள் பலவற்றுள்ளும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு காட்சியில் தான் ஈடுபாடு மிகுதியும் உண்டாகும். எனவே கோயில்களிலும், கோபுரங்களிலும் உள்ள சிற்பங்களையும், ஓவியங்களையும் நோக்கும்போது ஏதாவதொன்றில் உள்ளம் பிணிப்புண்டுநிற்கும். அதையே உள்ளத்தில் வைத்துப் போற்றினுல் உண்மைக் கடவுட்காட்சிபெற்று உய்தியடையலாம். எனவே கோயில்களும், கோபுரங்களும் அவற்றில் உள்ள சிற்பங்களும் ஓவியங்களும் என்றென்றும் நிறைந்த வனப்புடையனவாகத் திகழ்தல் இன்றியமையாததாகும்.

மதுரை மாநகரில் அங்கயற்கண்ணியுடன் எழுந்தருளியுள்ள ஆலவாய்ப்பெருமானுக்கு அமைந்துள்ள கோயில், பழம் பெருமையும் சிறப்பும் வாய்ந்ததாகும். கி. மு. ஆரும் நூற்ருண்டில் திகழ்ந்தவனை குலசேகரபாண்டியன் காலத்திலிருந்தே இம்மதுரைக்கோயில் திகழ்ந்து வந்துள்ளது என்பர். காலமாற்றத்தாலும் இயற்கையின் கோளாருலும் இக்கோயிலும் இடமாற்றம் பெற்றிருக்கலாம் என்ருலும் தொன்றுதொட்ட தொடர்ச்சியுடை

யது ஈது என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. சுடுமண்ணாலும், சுதையாலும் பண்டைக்காலத்தில் கோயில்கள் அமைந் திருந்தன. அத்தகையவை நீண்டகாலம் நிலைத்திருத்தல் இயலாதன்றே! பல்லவர் காலத்திலிருந்தே கற்கோயில்கள் எழுவன வாயின. எனவே பழங்கோயில்கள் இருந்த இடத்தில் புதுக்கோயில்கள் தோன்றுதல் இன்றியமையாதன வாயின. இம்முறை யில், மதுரை அங்கயற்கண்ணியுடனுறை ஆலவாய்ப் பெருமான் கோயிலும் காலந் தோறும் புதுமையும், வளர்ச்சியும், சிறப் பும் பெற்றுத் திகழ்வதாயிற்று. என்றும் புத்தழகுடன் திகழ்வதற்கமைந்த இக் கோயிலும் கோபுரங்களும் பதினேழாம் நூற்றுண்டில் நாயக்கமன்னர்கள் பணி யால் மிக்க வளர்ச்சியும் எழிலும்பெற்று ஓங்கிநின்றது. அவர்கள் ஒடுங்கிய பின் னர்த் தொடர்ந்து பணிசெய்யப் பெருது சிற்பங்களும் ஓவியங்களும் எழில் குன்று வனவாயின.

தென்ஞட்டுக் கோயில்களுள் மதுரை அங்கயற்கண்ணி கோயில் ஈடெடுப் பற்றது எனலாம். எல்லாச் சமயத்தாரை யும் உளங் கொள்வதற்கமைந்த பல்வேறு வகைப்பட்ட சிற்பங்களையும் இக்கோயிற் கோபுரங்கள் தம்மகத்தே கொண்டவை; கோயிற் சுவர்களெல்லாம் ஓவியங்கள் நிறைந்தவை. பல கல் தொலைவிலிருந்து நோக்கினும் கண்கொளாக் காட்சியளிக் கும் கோபுரங்கள் ஆண்டவனுடைய திரு விளையாடல்களை நினைப்பூட்டும் ஆற்றல் வாய்ந்தவை. ஆண்டவனே சங்கப் புலவர் களுள் ஒருவனுகக் கோலங்கொண்டு தமிழ் வளர்த்த பெருமை மதுரைக்கே உண்டு. சங்கம் இருந்ததென்ற பெருமை மதுரைக்கே உண்டு. "தென்ஞடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி", என்று மணிவாசகப் பெருந்தகையாரால் பாராட்டப் பெற்ற சிறப்பு மதுரைச் சொக்கநாதப் பெருமானுக்கு அமைந்த பெருஞ் சிறப் பாகும். மதுரையில் நடந்த நிகழ்ச்சியே தமிழ்க் காப்பியங்களுள் முதற் காப்பிய மான பெருமையுடைய சிலப்பதிகாரத்தின் உட்பொருளாகும் என்பதை எவரும் அறி வர். உலக மறையான திருக்குறள் சங்கப் பலகையில் ஈடெடுப்பற்ற சிறப்புடைய தென வரையறுக்கப்பட்டதும் இம் மதுரை யிலேயே யாகும். ஆண்டவன் பல்வேறு திருவிளையாடல்களை நிகழ்த்திய சிறப்பும் மதுரையையே சாரும். பல்வேறிடங்களி லிருந்த தமிழ்ப் புலவர்களெல்லாம் ஒன்று கூடித் தமிழாராய்ந்து சங்கம் வளர்த்த பெருமை மதுரைக்கே உரிய தனிச் சிறப் பாகும். இராசசேகர பாண்டியனுக்காகக் கூத்தப் பெருமான் தன் இயற்கைக் கூத் திலிருந்து விலகிக் கால்மாறியாடினன் என்ருல் இறைவன் எளியனுய் வந்து ஆட் கொள்ளுந் தன்மை குறித்து எவரும் மதுரையை யன்றிப் பிறிதொன்றை நோக்க எங்ஙனம் உளங்கொள்வர்! சுருங் கக் கூறினுல் மதுரை அங்கயற்கண்ணி ஆலவாய்ப் பெருமான் கோயிலைத் தமிழ கத்தின் உயிர் என்று கூறிவிடலாம்.

இத்தகைய சிறப்பெலாம் அமைந்த மதுரை ஆலவாய்ப் பெருமான் கோயிற் கோபுரச்சிற்பங்களும் ஓவியங்களும் அழகு குன்றியிருத்தலைக் கண்டு எவரே உளம் புழுங்காமல் இருக்க இயையும்? உளம் புழுங்காமல் ஈடுபட்டாலன்றே பயனுண் டாம்! அத்தகைய பணியில் ஈடுபட முன் வந்தார் ஒருவர். அவரை நெடிது இனிது வாழ்கவென அனைவருந் வாழ்த்தக் கடமைப்படுவர்.

"அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டால் இன்ப நிலைதானே வந்தெய்தும் பராபரமே" என்று பாடினார் தாயுமானவர். அவருடைய கூற்றையே மந்திரமாகக் கொண்டு வாழும் பேறு பெற்றவர் **சர். பி. டி. ராசன்** என்ற பெருந்தகையார். பண்டைப் பேரழகுடன் ஆலவாய்ப் பெருமான் கோயில் திகழவேண்டும் என்று அவர் முடிவு செய்தார்; குழு அமைத்தார்; எல்லோருக்கும் அறிக்கை விடுத்தார். தமிழகக் கோயில்களுக் கெல்லாம் உயிர் நாடியாக இலங்கும் கோயிற் பணிக்கு எல்லாக் கோயில்களிலிருந்தும் பொருள் வந்து குவிந்தது. ஏழைகளும் பணக்காரர் களும் தத்தமக்கு இயைந்தவாறு பொருள் உதவினர். மிகமிகச் சுருங்கிய காலவெல் லையில் கோயிற் பணி நிறைவேறியது. வண்ணப் பூச்சுடன் பண்டைப் பெருமை யும் அழகும் வாய்ந்து கோபுரச் சிற்பங் களும் சுவரோவியங்களும் கோயிலின் உட்புற வெளிப்புறங்களும் கண்கொளாக் காட்சியாக இலங்குகின்றன. 28--6-63 ஆகிய இன்று குடமுழுக்கும் நிகழ் கின்றது. வேடிக்கை பார்ப்பதற்கென் றுவது ஆண்டவன் உண்டென்ற கொள்கை இல்லாதவரும் இன்று கோயிற் கோபுரங்களைக் காணவருவர். பெண்ணரசி யாத் திகழ்ந்த அங்கயற்கண்ணியம்மை இன்று குடமுழுக்கின் சிறப்பால் வீறு பெற்று அவர்களையும் தன் உண்மையை உணர அருள் வழங்குவாள். இனி நாத்தி கம் வேரோடு அழியும். ஆத்திகம் அரிய ணையில் இருந்து அரசாளும். தமிழகம் மீண்டும் தனிச் சிறப்புப் பெறும். உலகமே ஒற்றுமைப்படும். பகையும் பிணியும் பசி யும் அடியோடு அழியும். எனவே இவ் வெல்லாம் அமைத்தற்குப் பணியாற்றிய கோயிற் பணிக் குழுவையும் அதன் தலைவர் **சர். பி. டி. ராசன்** அவர்களையும் வாழ்க என வாழ்த்துவோமாக! பண்டைப் பெருமையும் சிறப்பும் அழகும் பெற அரு ளுளங்கொண்ட அங்கயற்கண்ணி ஆல வாய்ப் பெருமான் வாழ்கவென வாழ்த்துவோமாக!

# குடும்ப வழிபாடு

டாக்டர் மு. வரதராசன், M.A., Ph.D.

குடும்ப வாழ்க்கையே கடவுள் நெறிக்கு மாறானது என்ற கொள்கை உடையவர் பலர் உண்டு. அவ்வாறு அறிவுறுத்தும் சமயங்களும் சில உண்டு. கடவுள் படைத்த உலகில் பறவைகளிடத்திலும் விலங்குகளிடத்திலும் அன்பான குடும்ப வாழ்க்கை இயற்கையாக அமைந்திருத்தலை அவர்கள் எண்ணியுணர்தல் இல்லை. உலக வாழ்க்கையின் அடிப்படையே தாய்மையாக அமைந்திருத்தலையும் அவர்கள் உணர்வதில்லை. அதனால், பெண்ணே பாவப் பிறவி என்றும், பெண்ணோடு வாழ்தல் பாவச்செயல் என்றும், குடும்ப வாழ்க்கை முத்திக்கு முட்டுக்கட்டை என்றும் தவறாகக்கருதும் கருத்து உள்ளது.

ஆனால், சைவம், வைணவம், கிறித்துவம் முதலான சமயத்தார் பெரும்பாலோர் இல்வாழ்க்கையைப் போற்றிவருதலும், குடும்பமாக இருந்து வாழ்வதை இல்லறம் என்று ஒரு நல்வழியாக மதித்து வருதலும், தம் தம் கோயில்களுக்குக் குடும்பம் குடும்பமாகச் சென்று வழிபட்டு வருதலும் காண்கிறோம். அந்தக் காட்சி மகிழத்தக்க காட்சியாகவும் விளங்குகிறது. இத்தகைய அழகான காட்சிகளை—புலன்களுக்கும் உள்ளத்திற்கும் விருந்தாகும் காட்சிகளை—புலவர்கள் பாடத் தவறுவதில்லை. அவற்றைச் சொல்லோவியமாக்கித் தாம் பெற்ற இன்பம் வழிவழியாகப் பலரும் பெற்றுமகிழுமாறு அளித்துச் செல்லுதலே அவர்களுக்குத் தொழில். அத்தகைய புலவர் பெருமக்களுள் மாங்குடி மருதனார் ஒருவர். அவர் இருபது நூற்றாண்டுகளுக்கு முன்பு தாம்கண்ட மதுரை மாநகர்க் காட்சிகள் சிலவற்றை ஒரு பாட்டில் அமைத்துத் தந்துள்ளார். மதுரைக் காஞ்சி என்னும் அந்தப் பழந்தமிழ்ப் பாட்டே, சங்க இலக்கியத்தில் மிக நீண்ட நெடும் பாட்டு; 782 அடிகளால் ஆகியது. அப்பாட்டில் பாண்டியமரபினர் புகழையும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புகழையும் பற்றிப் பாடியதோடு, பாண்டிய நாட்டைப் பற்றியும் தலைநகராகிய மதுரையைப் பற்றியும் பல அடிகளால் பாடியுள்ளார். மதுரை நகர்க் கடைத் தெருக்களும் அரண்மனை முதலியனவும் நகரமாந்தர் வாழ்க்கையும் கோயில்கள் முதலியனவும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் எவ்வாறு இருந்தன என்று அறிய விரும்புவார்க்கு அந்தப் பாட்டு நல்ல கருவூலமாக விளங்குகிறது.

வரலாறு வேறு; இலக்கியம் வேறு; இது உண்மைதான். புலவர்கள் இயற்றிய இலக்கியத்தில் உள்ளன எல்லாம் வரலாற்றுப் பகுதிகளே என ஏற்றுக்கொள்ளல் இயலாது. இலக்கியத்தில் உயர்வுநவிற்சி உண்டு. ஆனால் புலவர்கள் எல்லாவற்றையும் அளவுகடந்து உயர்த்துக் கூறுவதில்லை. சங்க இலக்கியப் புலவர்களோ, உயர்வு நவிற்சியை வரையறை செய்து அளவுபடுத்தி ஆண்டிருந்தனர். வியப்புணர்ச்சி மிகுதியால் பாடும் இடங்கள் தவிர, மற்ற இடங்களில் பெரும்பாலும் உள்ளதை உள்ளவாறு கூறுதலே சங்கப் பாடல்களின் இயல்பு. மதுரைக் காஞ்சியில் இங்குக்காணும் காட்சியும் அவ்வாறு

உள்ளது உள்ளவாறு கூறுதலாக— தன்மை நவிற்சியாக — அமைந்ததே ஆகும். ஆகவே, இத்தகைய காட்சிகள் பழைய தமிழகத்தில் புலவர்கள் கண்ட உண்மைக் காட்சிகள் என்று கொள்ளத் தக்கனவே அல்லாமல், கற்பனை என்று தள்ளுதற்குரியன அல்ல,

மதுரை நகரில் இருபது நூற்றாண்டுகளுக்கு முன் அந்திப்பொழுதில் கோயிலருகே மாங்குடி மருதனார் கண்டகாட்சி இது:- சிவபெருமான் முதலான தேவர்கள் வீற்றிருக்கும் கோயில்களில் அந்தி விழா நடைபெறுவதற்காக இசைமுழங்குகிறது (தூரியம் கறங்குகிறது). அந்திப் பூசையை நினைவூட்டும் இசை அது. அழகான சிறுவர்கள் உறுதியான ஒளிபொருந்திய பெரிய அணிகலன்களை அணிந்து வருகிறார்கள். அவர்களைப் பாதுகாத்தபடியே சேர்த்து அணைத்தவாறு தாய்மார் வருகிறார்கள். அந்தத் தாய்மார்களின் கைகளில் இளங்குழந்தைகளைக் காண்கிறோம். அவர்கள் அந்தக் குழந்தைகளை ஏந்திவருதல், மலரும் நிலையில் உள்ள செந்தாமரை அரும்புகளைக் கைகளில் பிடித்துவருதல் போல் தோன்றுகிறது. கணவன்மாரோடு அவர்கள் ஒருங்கே வருகிறார்கள். அழகிய அந்தப்பெண்கள் மலர்களும் நறும்புகையும் கொண்டுவந்து தெய்வத்தைத் தொழுது வழிபடுகிறார்கள்.

மழுவாள் நெடியோன் தலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவின் தூரியம் கறங்கத்
திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்துபுறங் காக்கும் கடவுட் பள்ளியும்...
(மதுரைக் காஞ்சி 455—467)

[நெடியோன்–சிவபெருமான். நாட்டம்–கண். பெரியோர்–பெருமை உடைய தேவர். மாற்றரு–மாற்றமுடியாத. கொடுமார்–கொடுப்பதற்கு. தூரியம்–வாத்தியம். மதாணி–பெரிய அணிகலன் வகை. ஓம்பினர் – ஓம்பி – பாதுகாத்து. முயங்கி–தழுவி. போது–மலரும் நிலையில் உள்ள அரும்பு. ஓராங்கு–ஒருசேர. காமர்–விருப்பம். கவினிய–அழகுபெற்ற.]

ஈராயிரம் ஆண்டுகள் கழித்தபிறகும் அதே மதுரை மாநகரில் அந்திவேளையில் கோயிலில் இந்தக் காட்சியை இன்றும் காண்கிறோம். இடையறவு படாத நாகரிகம் இந்த நாட்டில் இருந்துவருதலால், இவ்வாறு தலைமுறை தலைமுறையாக இத்தகைய குடும்ப வழிபாட்டைக் காணமுடிகிறது. மாங்குடி மருதனார் தீட்டியுள்ள சொல்லோவியம், இன்றைய மதுரைக் கோயிலில் காணும் குடும்பவழிபாட்டுக் காட்சியாகவே உள்ளது.

# கூடலும் குன்றும்

நா. இராமையா பிள்ளை, M. A.

தொல்காப்பியம் சொல்லதிகாரச் சேனுவரையர் உரையைப் படித்துக் கொண்டிருந்த போது "இனத்தென அறிந்த சினை முதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்" என்ற சூத்திரத்தின் அடியில் "பன்னிருகையும் பாற்பட இயற்றி" என்ற தொடர் வந்த போது, அது என்னை நிறுத்திச் சிந்திக்கத் தூண்டியது. "பன்னிருகையும் பாற்பட இயற்றி" என்ற தொடர் திருமுருகாற்றுப் படையில் வரும் ஒரு தொடராகும். முருகனைப் பற்றி எங்கு எங்கு, என்னென்ன செய்திகள் காணப்படினும் அவற்றைக் கூர்ந்து நோக்கி ஆய்ந்து போற்றி ஏற்றுக் கொள்ளுதல் இயல்பு. அதனுல் அதனைப் பற்றிய சிந்தனையோடு இருக்கும் காலத்தே அம்முருகப் பெருமானின் திருத்தாயாம் அன்னை மீனுட்சி அம்மையின் கோயில் குடமுழுக்கு விழாச் சிறப்பு மலர் வெளியீடு பற்றிய செய்தியும் ஒரு கட்டுரை தரவேண்டுமென்ற அழைப்பும் கிடைக்கப் பெற்றேன்.

அன்னையின் அருள் மகனும் முருகப் பெருமானின் சிந்தனை இருக்கும்போது வந்த அழைப்பிற்கு அம்முருகப் பெருமானைப் பற்றி எழுதி அனுப்புதலே சாலச் சிறந்த ஒரு பணியாகுமென்று ஒரு கருத்து எழுந்தது. அதன்படியே முருகப் பெருமானின் பெருமை கூறும் திருமுருகாற்றுப் படையிலிருந்து இக்கட்டுரை எழுத விழைந்தேன்.

தமிழ் நாட்டிலே இந்து மதத்தினர் என்று சொல்லப்படுவோர் நீலமணி மிடற்று ஒருவனுகிய ஒப்பற்ற சிவபெருமானை வணங்குவர். அவர்களை, "சைவர்" என்று அழைப்பார்கள். அல்லது ஈரடியால் உலகளந்து ஓரடியால் மாவலி தலையளந்த குறளடி கொண்டோனுகிய திருமாலை மணி வண்ணன் என்று சொல்லி மலர்க்கரங் குவித்துச் சிரந்தாழ்த்தி வணங்குவர். அப்படி வணங்குவோரை, "வைணவர்" என்று கூறுவார்கள். இவ்விரு தெய்வங்களையும் விடுத்து வணங்கும் தெய்வம் மற்றொன்று உண்டென்றுல் அத்தெய்வம் முருகனே தவிர வேறில்லை. ஏனென்றுல், முருகன் மனதைக் கவர்கின்றவன்; முருகு என்ற சொல் இளமை, அழகு, கடவுள் தன்மை, மணம் முதலான பொருள்களில் வழங்கும் என்று தமிழறிஞர்கள் ஆய்ந்து முடிவுகட்டி இருக்கின்றனர். தீராத வினைகளையும் நோய்களையும் தீர்ப்பவன் முருகன். முருகன் எல்லோருடைய மனத்தையும் மகிழ்வுறுத்தி இம்மைச் சுகங்களை அளித்து எல்லா மதத்தினரும் வணங்கும் சீரிய தெய்வமாகத் திகழ்கிறுன் என்பது உறுதி. தந்தைக்கு உபதேசித்த குருவாய், அத்தந்தைக்கு அன்புப் புதல்வனுய், எல்லா மக்களுக்கும் அருள் தெய்வமாய் விளங்கும் தமிழ்க் கடவுள் முருகன்.

இம்முருகப் பெருமான் மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில் தாய் தந்தையராகிய மீனுட்சி அம்மை சொக்கலிங்கப் பெருமான் ஆகிய இருவருக்கும் அண்மையில் அமர்ந்து மக்களுக்கு அருள்புரிந்து வருகின்றுன்.

மதுரை, கூடல் என்று கூறப்படுகிறது. அம்மதுரை வாயிலிலே நெடுங்

கொடி நின்று ஆடுகிறது. அது வானத்தைச் சென்று தொடுவது போலக் காட்சி அளிக்கிறது. போருக்கு "சவால்" விடுவது போல அது கட்டப்பட்டிருக்கிறது. அதன் அருகே வரிந்து புனைந்த பந்தும் பாவையும் தொங்குகின்றன. அவ்வாயில் பகைவரை அச்சுறுத்திய வாயில் அல்லது பகைவர் அஞ்சும்படியாக அமர்ந்திருக்கும் வாயில். அக்காரணத்தால் போர் அருமையாகப் போன வாயில் அது. அவ்வாறுய வாயிலைக் கொண்டது மதுரை. இம் மதுரையில் திருமகள் வீற்றிருக்கும் குற்ற மற்ற கடைவீதிகள் உண்டு. அவற்றோடு மாடங்கள் மிக்க மற்றைய தெருக்களும் உண்டு. இம்மதுரைக்கு மேற்குத் திசையில் திருப்பரங்குன்றம் உண்டு. இம் மதுரையைப் பற்றித் திருமுருகாற்றுப் படையில் காண்க.

"செருப்பு கன்று எடுத்தசேணுயர் நெடுங் கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற்றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற்குடவயின்"

இவண், "பொருநர்த் தேய்த்த" என்ற தொடருக்குப் போர் செய்வாரை அழித்த வாயில் என்று பொருள் கொள்ளுகின்றனர். பகைவரைப் பாண்டியன் தன் மதுரை வாயிலின் கண் அழித்தானென்று பொருள் கொண்டால் அடுத்துவரும் "போரருவாயில்" என்ற தொடருக்குப் பொருள் இல்லாமல் போகும். ஆகவே, "பொருநர்த் தேய்த்தவாயில்", "போரருவாயில்" என்று கொண்டு கூட்டுதல் வேண்டும். அவ்வாறுகொண்டு கூட்டி, பகைவர் அஞ்சி ஓடும்படி பெருமிதத்தோடு நின்று காட்சி அளிக்கும் வாயில் என்று பொருள் கொள்ளுதல் நேரிதாகும்.

இனி, திருப்பரங்குன்றம் கரிய சேற்றையுடைய அகன்ற நெல் வயல்களால் சூழப்பட்டது. அவ்வயல்களில் விரிந்து மலர்ந்த முள் தண்டுகளையுடைய தாமரை மலரில் அழகிய வண்டுக் கூட்டம் இராப் பொழுதில் துயில் கொள்ளும். விடியற்காலத்தே அவை எழுந்து தேன் மணக்கும் நெய்தற் பூவை ஊதும். அதன் பிறகு மாலைப் பொழுதிலே கண்ணைப் போன்ற சுனைப் பூக்களிலே சென்று ஆரவாரிக்கும். இவ்வகையான வளப்ப மிக்க அத் திருப்பரங்குன்றிலே முருகன் உறைந்திருக்கின்றான். இதனையும் முருகாற்றுப்படையில் காண்க.

இருஞ்சேற்று அகல்வயல் விரிந்து வாய் அவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன்.

இவண், எற்பட என்ற தொடருக்கு, ஞாயிறு தோன்றிய காலத்தே எனப் பொருள் கண்டனர் நச்சினார்க்கினியர். வண்டுக் கூட்டம் இரவில் தாமரையில் தூங்கி, வைகறையில் எழுந்து, நெய்தல் பூஊதி, மாலையில் சுனை மலரில் ஒலித்தது என்பது பொருந்தும் பொருளாம். எற்பாடு என்பது மாலைக்காலம் என்று பொருள் படும். எல் என்பது ஞாயிறு. பாடு என்பது படுதல். ஞாயிறு மேற்றிசையில் படும் நேரம் மாலைக்காலம். எனவேதான் இங்கே "எற்பட" என்ற தொடருக்கு மாலைக்காலம் எனப் பொருள் கொள்ளப் பட்டது. எற்பாடு என்னும் தொடர் பற்றி நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் தமது தொல்காப்பிய அகத்திணையியல் உரை நூலில் ஆய்ந்திருக்கிறார்கள். அந் நூல் 17-28 பக்கம் காண்க.

கூடல்நகர் வீற்றிருக்கும் அன்னை மீனாட்சி அம்மையையும் அப்பன் சொக்க லிங்கப் பெருமானையும் அடிபணிந்து அருள் பெறுவோம். அவர்களுக்கு அருகே திருப்பரங்குன்றில் எழுந்தருளி யிருக்கும் முருகனின் "தாமரை புரையும் காமர் சேவடி" வணங்கித் திருவருள் பெற்று உய்வோமாக.



## ஆன்மஞானத்தின் உறைவிடம் நமது நாடுதான்

ஞானம் பிறநாடுகளிலே பரவுதற்குமுன் அதற்கு உறைவிடமாய் இருந்தது இத்தேசமே; இங்கன்றோ இமயமலை எப்பொழுதும் பனியால் மூடப்பட்டதாகி, விண்ணுலகத்து இரகசியங்களை அறியப் புகுவதுபோல் படிப்படியாய் உயர்ந்து ஆகாயத்தை அளாவுகின்றது. இங்கன்றோ ஞானிகளிற் சிறந்தவர் வாழ்ந்தனர். மனிதன் எத்தகையவன், பிரபஞ்சம் எத்தகையது, என்ற விசாரங்கள் முதன் முதல் நிகழ்ந்தது இங்கு அல்லவா? ஆன்மா அழிவற்றது, நியந்தாவாகிய கடவுள் ஒருவர் உளர், ஜகத்திலும் ஜீவனிலும் நிறைந்த கடவுள் அவரே என்ற முடிவுகள் இங்குத்தானே முதன்முதலிற் செய்யப்பட்டன. மதமும் தத்துவ ஆராய்ச்சியும் எட்டக் கூடிய தூரம் வரை எட்டினதும் இங்குத் தானே. இங்கிருந்தன்றோ தத்துவஞானம் கடலினின்றும் எழும் அலைகளைப் போல் அந்நிய நாடுகளுக்குப் பரவிற்று. இனிமேலும் இங்கிருந்து தான் அந்த ஞானம் தற்காலத்திலே மெலிந்து கிடக்கும் தேசங்களுக்குச் சென்று, அத்தேசத்தவர்க்கு வலிமை ஊட்டவேண்டும்.

—சுவாமி விவேகானந்தர்.

# திருமாலின் வடிவழகு

பேராசிரியர் R. ராமனுசாச்சாரி

வைணவ சமயத்தில் திருமகள் மணாளனான திருமாலே பரம்பொருள். உண்மை, நன்மை, அழகு–Truth, goodness, beauty என்பவை ஒருங்கே திகழப்பெற்றது பரதத்வம். காட்சி, அநுமானம் முதலிய பிரமாணத்தால் இறைவனை அறிதல் இயலாது. ஆகம அளவை என்று கூறப்படும் மறைகளாலேயே பரம் பொருள் அறிவிக்கப்படுகிறது. "வேதவேத்யே பரே பும்ஸி" அதாவது வேதங்களைக்கொண்டு அறிதற்குரிய பரம புருஷன் என்பர் சான்றோர் தன்னைத் தவிர மற்றவரிடமில்லாத நிலையான செல்வம், வீரியம், அழகு, கருணை, கொடை பொலிவு முதலிய அளவிடற்கரிய குணங்களுக்குக் கடலாகப் பரமனை மறைகள் உணர்த்துகின்றன. மேலும் பரம்பொருளிடம் இழி குணங்கள் ஒரு சிறிதும் இல்லை என்பதையும் வேதங்களாலேயே அறிகின்றோம்.

கை, கால் முதலிய உறுப்புக்களையும் அழகு முதலிய பண்புகளையும் சடப்பொருள்களுக்குரியவாகத் துணிந்துள்ளமையான், இறைவனுக்கு அவற்றை ஒப்புக்கொள்ளுதல் தகாது. இறைவனை உணர்த்துமளவில் மறைகளைப் பிரமாணமாகக் கொள்ளலாம். ஏனைய குணங்களை மறுத்தல் வேண்டுமென்பர் ஒரு சாரார். இறைவனைத் தெரிவிக்கும் வகையில் மட்டும் வேதத்துக்குப் பிராமாண்யம், (சான்று) அவன்பால் குணங்களைப் போதிக்கும் வகையில் அப்ராமாண்யம் (சான்றின்மை) என்பது அளவை முறைக்கு முரண்பட்டதொன்றாகும். ஆகலின் பரமனுக்கு அனந்த கல்யாண குணங்களும், இழிகுணமின்மையும் இன்றியமையாச் சிறப்புடையவாகும்.

மயக்கம், (ஒருபொருளை வேறுபொருளாகக் காண்டல்) ஏமாற்றும் கருத்து, கவனக் குறைவு முதலிய குற்றமின்றி, உள்ளதை உள்ளவாறு அறிவிப்போர் முனிவர் ஆகலின் அவர்களால் இயற்றப்பட்ட ஸ்மிருதி, இதிகாசம், புராணங்கள் முதலியன வேதோப்பிரம் மணம் (வேதங்கள் கூறியவற்றைப் பல சான்றுகள் முதலியவற்றுடன் வற்புறுத்துதல்) செய்பவை என்பதாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அவைகளும் இறைவனது வடிவழகைச் சிறப்புற எடுத்து விளக்குகின்றன. "பும்ஸாம் மோஹன ரூபாய" ஆடவர்களை மயக்கி ஈர்க்கும் அழகுடையவன்—என்ற முறையில் இறைவனைத் தலைவனாகவும் அவனுடைய திருக்கல்யாண குணங்கள், பேரெழில் முதலியவற்றில் ஈடுபட்டமை காரணமாக ஆழ்வார், நாயன்மார் எனப்பாராட்டப்பெறும் அடியார்களின் பாசுரங்களிலிருந்து அவர்கள் தம்மைத் தலைவியாகவும் பாவித்து மனமுருகப் பெற்றமைதெள்ளிதின் விளங்குவதன்றே! மேனாட்டு அறிஞர்களுள் முற்காலத்தவரான பிளேட்டோ (Plato) முதலியவரும் பிற்காலத்தவரான ஒயிட்ஹெட் (Whitehead) முதலிய தத்துவ நிபுணரும் பரதத்துவத்தின் அழகை முக்கியமென வற்புறுத்திக் கூறுதல் மிகவும் பாராட்டற்குரியதாகும்.

இறைவனை வழிபட்டுப் போற்றுவதற்கு முதல் நிலையாக உருவம், அழகு முதலியவற்றை வ்யாவஹாரிகமெனப்படும் வழக்கு நிலையில் கற்பித்துக்கொண்டார்களே அன்றி, உண்மை நிலையில் அவை இல்லை என்ற கூற்றும் முற்கூறியவாறு வேதத்தைச் சான்றாக ஒப்புக்கொள்ளும் ஆஸ்திகர்களின் முடிபுக்கு முரண்பட்டதென ஏற்கற்பாலதன்றாகும்.

சரித்திர நூல்களாற் கண்டறியும் பொருட்டுணிவு, அதுபற்றிய சுவை இவற்றைவிடக் காப்பியப் பயிற்சியாற் பெறும் சுவை சிறந்ததெனக் கிரேக்க பேரறிஞர் அரிஸ்டாடில் (Aristotle) முதலியோர் கூறுகின்றனர். எனவே காப்பியங்களால் பெறப்படும் சுவை பொருட்படுத்தற்குரியதன்று எனலும் பொருந்தாது. பரதத்துவத்தின் அறிவு, அதன் அழகு முதலியவற்றில் ஈடுபாட்டாலுண்டாம் சுவை ஆகியவை எக்காலத்தும் நிலைத்துள்ளவையாம். பரப்பிருமத்தையறிந்து சார்ந்தால் இன்பம், அவ்வறிவும், அதன் அழகு முதலியவற்றின் இன்பமும் இன்றேல் துன்பமும் எக்காலத்தும் மறுக்க இயலாதவாறு நிலைத்தவை. ''ரஸோவைஸ:'' என்று இறைவனைச் சுவை வடிவமாக உபநிடதங்கள் போற்றுகின்றன.

ஆன்மா, இறைவன் முதலிய தத்துவங்களை ஒப்புக்கொள்ளாத சார்வாகன், தன்னை ஒரு இயந்திரமாகக் காண்கிறான். தன்னைப்போலவே உலகனைத்தையுமே இயந்திர இயக்கம்போல் இயங்கப்பெறும் பொருள்களாகத் துணிகின்றான். தன் அனுபவத்தைக்கொண்டே ஏனையவற்றின் தன்மையைத் துணிதல் பக்கத்துணையாகுமேயன்றி, மறைகளாற் பலபடியாகக் கூறப்படும் உண்மையை மறுக்குமளவுக்கு வன்மையுடையதன்று என்ற பொருத்தமான விளக்கத்தால் சார்வாகனுடைய கொள்கையை மறுத்தல் வேண்டும். எனவே மறைகளும் உபநிடதங்களும் மிக மிக வலிய பிரமாணங்களாதலால், அவற்றாற் பெறப்பட்டவை (அறியப்பெற்றவை) யாவும், மற்ற அளவை முதலியவற்றால் மறுக்கற்பாலவையல்ல என்பது தேற்றம்.

இறைவனிடம் உயர்வும் எளிமையான பண்புகள் ஒருங்கே அமையப்பெற்றுள்ளன என்பதை இராமானுஜர் வற்புறுத்துகின்றனர். பலவித இன்னல்களிடையே உழன்று வருந்தும் நம் மனோரின் துன்பங்களை நீக்கி இன்பத்தை பயப்பதற்குரிய ஆற்றல் பரத்வம் என்ற சிறந்த பண்பின் பயனாக அமைந்ததொன்றாகும். மிக உயர்ந்த நிலையில் பொலிவுடன் விளங்கும் மேரு மலையினின்றும் சிறிதளவும் நாம் பயனை எய்துவதற்கியலவில்லை. அதுபோன்று இறைவனுக்கு பரத்வம் மட்டுமிருக்குமாயின், மிக தாழ்ந்த நிலையிலிருக்கும் நம்போலியர் அணுகிப் பயன்பெறுவதற்குரிய வாய்ப்பின்றேல், அப்பரத்வத்தினால் எப்பயனுமில்லை. எனவே அப்பரத்வ நிலையுடன் எளிமை என்ற மிகச் சிறந்த குணமும் சேர்ந்து திகழ்வதால்தான் அனைவரும் கிட்டிப் பயன்பெற்றுய்ய வழி இருக்கிறது. புல், பூண்டு, ஓட்டுச்சில்லி போன்ற பொருள்களில் எளிமை நிரம்பியிருக்கிறது. ஆயினும் நம் உயர்ந்த நோக்கங்களை நிறைவேற்றுதற்குரிய தகுதி ஆற்றல் முதலிய பண்புகள் அவற்றில் இல்லை. எனவே பரத்வம், எளிமை என்ற இரு பண்புகளும் ஒரே இடத்தில் பொருந்தி இருத்தல் வேண்டற்பாலதாம். இறைவன்

பாலமைந்த பேரழகுடைமையால் இவ்விரு பண்புகளும் பொன்மலர் நாற்றமெய்திளுற் போன்ற தனிச் சிறப்பைப் பெற்றுத் திகழு மேயல்லாது, இப்பேரழகுடைமை இழிவைப் பயப்பதாகாது. வடிவழகு என்பது சூழ்நிலையினும் வேறுபட்டது எனக் கூறுவதற்குரியதன்று. தன்னைத்தானே திகழுறச் செய்வது என்ற ஸ்வயம்பிரகாசம் எனப்போற்றப்பெறுவதாகும். இவ்வழகு நேரிடையாக இன்பத்தைப் பயந்து அடியார்களை மகிழ்விக்கின்றது. சாதாரண நிலையிலுள்ளவர்களும் நாளடைவில் மனம் பரிபக்குவமான நிலையில் இவ்வநுபவத்தைப் பெறுவர். மேலும் நேரிடையான அநுபவத்தோடு மட்டும் முற்றுப் பெறுது, பின்னரும் மன நிலையில் ஓர் உயர்ச்சியையும் தருகின்றது. காப்பியங்களைப் பயிலும் போது இவ்விருவகை நிலையையும் நன்கு தெளிகின்றேம்.

இராமாநுஜர் இறைவனை 'சுபாச்ரயன்' என்று போற்றுகின்றுர். சுபனுகவும், ஆச்ரயனுகவுமிருப்பவன் என்று,தெளிவு படுத்துகின்றுர்கள். சுபனுந் தன்மையாவது:- தன்னேரில்லாத்தனித்தலைமை பூண்டிருத்தல். அடியார்கள் திறத்தே காணும் தேவைகளனைத்தையும் நிறைவேற்றி வைப்பதற்கு இப்பண்பு இன்றியமையாத தொன்றுகும். இப்பண்பு அமைந்திருந்தாலும், அண்டியிருப்பவர்களின் கண் மனம் முதலிய பொறிகளைத் தன்பாலீர்த்து மகிழ்வித்து அவர்கள் இன்பம் துய்க்குமாறு ஈடு படுத்தும் பாண்பாகிற ஆச்ரயனுயிருத்தல் என்னும் தன்மையும் சேர்ந்து இருப்பின் பால் தேனுடன் கலந்தாற் போன்ற பெருமையை எய்துவதாம். இறைவனைக் கூறுங்கால், தொன்மை வாய்ந்த இதிகாச புராணங்களிலோ ஆழ்வார் நாயன்மார் திருப்பாசுரங்களிலோ, காவ்ய நாடகங்களிலோ, அவனுடைய வடிவழகு முதலிடம் பெறுமலிருப்பதில்லை. 'நின் பொன்மேனி கண்டேன்' "தோள் கண்டார் தோளே கண்டார்" "ஆடவர் பெண்மைமய அவாவும் தோளினுய்" என்பன போன்ற பல ஆன்றேர் வாக்குகளால் இறைவன் திருமேனியழகு மற்ற எவரிடமும் காணப்பெறுத நிரதிசயம் என்று போற்றுதற்குரிய தனிப்பெருமை வாய்ந்தது.

தாகூர், ஸாதனம் (Sadhana) என்ற நூலில், ஏனைய சமயாசாரியர் கூறுவது போலவே "ஸம்ஸாரிகளான மக்கள் மனதை வயப்படுத்துதற்குக் கருவியாக உள்ளது இறைவன் வடிவழகு" என்ற கருத்தை வலியுறுத்திப் பரக்கக் கூறியுள்ளார். அழகு தற்காலிகமான காரணமாக அமைத்துக் கொள்ளப்பெற்று, பிறகு நீக்கப்படுகின்றது என்ற கொள்கை தக்கதன்று. ஒருபொழுதும் நீக்கம் (Cancel) பெறுதற்குரிய பண்பன்று என்பதையும் நன்கு விளக்கியுள்ளார்.

இந்த வசீகரண சக்தியில் சிக்குண்டமையால் தான், இராமாவதாரத்தின் இறுதியில் இராமன் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும்போது அநுமன் இந்நிலவுலகிலேயே இருந்துகொண்டு இராமபிரானின் திருக்கல்யாண குணங்களைப் பல்லாற்றுனும் போற்றி அநுபவிக்கும் பெரும் பேறு ஸ்ரீவைகுண்டத்தில் கிட்டாது என்ற கருத்துக்கொண்டு சிரஞ்சீவியாகப் பூமண்டலத்திலே வாழும்பேற்றினை இராமன்திருவருளாற் பெற்றுன். பல்வேறு துறைகளில் பலபல நோக்கங்கொண்ட பலபடியான மக்களனைவரையும் ஒருங்கே தன்பால் ஈடுபடுத்துவதற்காக இறைவன் மேற்கொள்ளும் பேரெழிலுடைமை இந்நில மக்களுக்காகவே ஏற்கப்பட்டி

ருத்தலால் இப்புவியிலல்லாது, வேறு சிந்தனையின்றி நிரந்தரமாக பகவதநுபவம் செய்யும் முக்தர்கள் வாழும் மேலுலகில் கிட்டுதற்கரிதன்றோ! ஆகவேதான் திருக்கோயில்களில் அர்ச்சா ரூபமாக எழுந்தருளியிருக்கும் இறைவன் திருமேனியைப் பல திருக்கோலங்களுடன் திருவிழா முதலியவற்றை வியாஜமாகக்கொண்டு எழுந்தருளச் செய்து மக்களை நன்னெறிப் படுத்துதல் தொன்மை வாய்ந்த சிறப்பாக இருக்கிறது. ஆகையால் திருவிழா முதலிய நல்வாய்ப்புக்களை நழுவ விடாது இறைவன் வடிவழகைக் கண்டின்புற்று உய்வோமாக!



## நமது ஆன்மீக அஸ்திவாரம் பழுதுபடவில்லை

வெளிநாட்டவர் இந்தியாவின் மீது பன்முறை படை எடுத்து, வந்து, சுழல் காற்றைப் போல் அதைச் சூறையாடிய போதிலும்,

பல நூற்றுண்டுகளாய், நாம் செய்த பராமுகமும் இதர தேசத்தவர் இழைத்த அவமானமும் நமது மாண்பையும் மகிமையையும் மங்கலடையச் செய்த போதிலும்,

அதைத் தாங்கியிருந்த அனேக உன்னத தம்பங்களும் அழகிய மண்டபங்களும், வேலைப் பாட்டில் இணை அற்ற மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் பல ஆண்டுகளாய் நாட்டை அழித்த பெருவெள்ளப் பெருக்கிலே அடித்துக் கொண்டு போய்விடப்பட்ட போதிலும்,

அதன் மையமானது சிறிதும் பழுதற்றதாய் விளங்குகிறது. ஈசுவர மகிமையையும் சீவகாருணியத்தையும் பிரதி பாதிக்கும் சித்தாந்தமாகிய அற்புத ஞாபகத்தம்பம் கட்டப் பெற்ற ஆன்மீக அடிவாரமானது அசைவின்றியும் என்றும் போல் வலிமை பொருந்தியும் நிற்கின்றது.

—சுவாமி விவேகானந்தர்.

# சௌந்தரியலகரி — தோத்திர ரத்னம்

K. பாலசுப்பிரமணிய ஐயர்

ஸ்ரீசங்கர பகவத்பாதர் ஒரு பெரிய தத்துவ ஞானி. நிர் குணப்ரம்மம் தான் மூன்று காலத்திலும் உண்மையானது, உலகுக்கே அடிப்படை தத்துவமானது என்று பல ஆராய்ச்சிகளினாலும், வேதங்களின் மேற்கோள்களிலிருந்தும் நிலைநாட்டியவர். ஆனால் அவரே அழகும், குணமும் பொருந்திய கடவுள் பக்தியில் தலைசிறந்தவர். பாரத தேசத்தில் பல உருவங்களில் ஆங்காங்கு காணும் தெய்வங்களிடத்தே ஈடுபட்டுப் பல புண்ணிய க்ஷேத்திரங்களில் காணும் மூர்த்திகளைப் பக்தியுடன் அழகாகத் தோத்திரம் செய்துள்ளார். முக்கியமாக நம் தேசத்தில் தெய்வ வழிபாட்டு முறையை ஆறு சமயங்களாகப் பிரித்திருக்கிறார்கள். இந்த ஆறு சமயங்களுக்கும் ஆறு தெய்வங்களைப் பக்தர்கள்தொன்றுதொட்டு வழிபட்டு வருகிறார்கள். அவைகள்—பரமசிவன், நாராயணன், விநாயகர், அன்னை பராசக்தி, முருகக் கடவுள், சூர்யபகவான் என்பனவாம். ஸ்ரீசங்கர பகவத்பாதர் இவ்வாறு மூர்த்திகளுக்கும் வழிபாட்டிற்கான தோத்திரங்களைச் செய்துள்ளார். பராசக்தியின் வழிபாடு பெரிய தத்துவங்கள் அடங்கிய சமயமாகத் தனிச் சிறப்புடன் வழக்கில் இருக்கின்றது. கடவுளைத் தாயாக ஈடுபட்டு வழிபடுவதே இதன் முக்கிய தத்துவம். இராமலிங்க சுவாமிகள் இந்த உண்மையைப் பாடியுள்ளார்.

"தாயாகித் தந்தையாகித் தாங்குகின்ற
தெய்வம்"

கடவுளைத் தந்தையாகப் பாவிப்பது ஒரு முறை. அதைவிட, பக்தர்களின் மனதைக் கவரச் செய்வது தாய் என்ற முறை. தாய் உள்ளம் கனிந்த உள்ளம். ஆகையினால் மக்களின் குறைகளைப் பொருத்து அருள் புரியும் தெய்வமாகும். இம்முறையில் ஸ்ரீஆதிசங்கராசார்ய சுவாமிகள் பல தோத்திரங்களைச் செய்திருக்கிறார்கள். அவைகள் எல்லாவற்றிலும், முக்கியமாகவும் சிறந்ததாகவும் விளங்குவது "சௌந்தரியலகரி" என்ற நூறு சுலோகங்களைக் கொண்ட தோத்திர ரத்தினமாகும். அதன் பெருமையை, அதைப் பற்றி உள்ள வரலாறு நன்றாக உணர்த்துகிறது.

பார்வதீ தேவியுடன் பாதி உடலாக விளங்கும் சிவபிரானின் பூரண அருளால் ஸ்ரீசங்கர பகவத் பாதருக்கு இந்த நூறு சுலோகங்கள் கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது. இதில் முதல் 41 சுலோகங்களைக் கொண்ட பாகம் "ஆனந்தலகரீ" என்றும், மற்ற 59 சுலோகங்களைக் கொண்ட பாகத்திற்கு "சௌந்தரியலகரீ" என்றும் பெயர் வழங்கக் காண்கிறது. சௌந்தரியலகரீ என்பதற்கு 'அழகு அலைகள்' எனப்பொருள். தோத்திரம் செய்யும் போது, நிரம்பிய அழகு, அலைகளைப்போலக் காண்கிறது. இந்த உண்மையே அந்தச் சொல்லின் பொருளாக விளங்குகிறது.

அழகு என்பதே ஓர் உயர்ந்த தத்துவம். உலக தத்துவங்களை மூன்றாகப்

பிரித்து, உண்மை, நலம், அழகு—Truth; Goodness. Buity—என்று கிரேக்க தத்வ ஆராய்ச்சியாளர்கள் விளக்கி இருக்கிறார்கள். உண்மை நலம், அழகு—அதனாலேயே உலகத்தை ஈன்ற தாய், அழகு வடிவு உள்ளவளாகவே மனக் கண்ணால் பார்த்து, அந்த அழகை நேர்த்தியாக வர்ணிப்பது தான் இந்த சௌந்தரிய லகரியின் முக்கிய கருத்து. சாக்த சமயத்தில் உள்ள பல உண்மைகளும் இந்தத் தோத்திரத்தில் கையாளப்பட்டுள்ளன சாக்த ஆசாரம், சமயாசாரம் கௌலம் அல்லது வாமா சாரம் என இருவகை யாகும்.

கௌல மார்க்கத்தில் அவைதிகமான சில பழக்கங்கள் இருப்பதால் இதை ஸ்ரீசங்கர பகவத்பாதர் ஒப்புக் கொள்ள வில்லை. ஆகவே சமயாசாரத்தை வைத்துக் கொண்டே அம்பிகையின் புகழைப் பாடுகிறார். இந்த தேவீ உபாசனையில் மந்த்ரயோகம் என்றும், குண்டலிநீயோகம் என்றும் சொல்லப்படும் இரண்டு உண்டு. தேவீமந்த்ரங்களுடைய ரகஸ்யங்களையும், ஆங்காங்கு இந்ததி தோத்திரங்கள் குறிப்பிடுகின்றன. மனிதனுடைய சரீரத்திற்குள் ஆறு சக்ரங்கள் இருக்கின்றன. அந்த ஆறு சக்ரங்களின் (சரீரத்தின்) அடி பாகத்தில் மூலாதாரம்; அங்கு தேவீ குண்டலிநீ ஸ்வரூபியாக இருக்கிறாள். அந்த குண்டலிநியை எழுப்பி ஸகஸ்ரார சக்ரத்திற்குச் செல்லும்படியான யோக முறையை பல பெரியோர்கள் பின்பற்றி இருக்கிறார்கள் இந்த ரகஸ்யங்கள் எல்லாவற்றையுமே இந்நூலில் நாம் காணலாம்.

சிரசிலிருந்து பாதம்வரை தேவியினுடைய உருவத்தின் அழகையும், கவிச் சுவை நிரம்பிய வழியில் இந்தத் தோத்திரங்களில் வருணித்துள்ளார். இந்த கிரந்தத்தை உயர்ந்த காவியமாகவும் மக்கள் அநுபவிக்கலாம். தேவீ உபாஸனாதத்துவங்களை சாஸ்திரப்படி உபதேசிக்கும் நூலாகவும் கருதி இதை வாசித்துப் பயனையடையலாம். ஒவ்வொரு தோத்திரமும் மந்த்ரரூபமாக நினைத்து, பாராயணம் செய்து மக்கள் உய்யவும் மார்க்கமாக அமைந்துள்ளது.

யந்த்ர ஸ்தாபனம் செய்து அதில் பூஜை செய்யும் முறையும் தேவீ உபாஸனத்தின் முக்கிய வழியாகும். அந்த தத்துவமும் இதில் விளக்கப்பட்டிருக்கிறது. இவை எல்லாவற்றையும் விவரமாக விளக்க இச்சிறு கட்டுரையில் இயலாது. இந்தத் தோத்திரத்தைப் பாராயணம் செய்பவர்கள் ஸ்ரீசங்கரபகவத்பாதர் அவர்களுடைய சர்வகலா வல்லமையையும், நன்றாக அநுபவிக்கலாம். சங்கீத சாஸ்திரத்திலும் அவருக்குள்ள புலமையை அறிய இதில் காணும் கீழ்க் கண்ட சுலோகம் சான்றாகும்.

"கலேரே காஸ்திஸ்ரோ கதிகமக கீதைக நிபுணே
விவாஹ வியாநத்த ப்ரகுண குண ஸங்க்யா ப்ரதிபுவ :—
விராஜந்தே நாநாவித மதுர ராகாகரபுவாம்
த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதிநியம ஸீமாந இவதே"

[ ஸௌ. 69 ]

சங்கீத சாஸ்திரத்தை நன்கு அறிந்தவர் தான் இதனைச் சொல்ல முடியும் என்பதை இதிலிருந்து தீர்மானிக்க முடிகிறது. பாரத தேசத்தில் சங்கீதத்தைத் தேவீ உபாஸனைக்கு அர்பணித்திருக்கிறார்கள். ராகங்களில் ஈடுபட்டு லயிப்பதே ஓர் உபாஸனை

முறையாக வைத்து, நாத பிரம்ம உபாஸனை செய்து பெரியோர்கள் வழி காட்டி இருக்கிறார்கள். அந்த நாத உபாஸனைக்கும் சௌந்தரிய லகரீ பயனாகிறது என்பதில் ஐயமில்லை. இவ்வாறு எல்லாத் துறைகளிலும் சிறந்த ஓர் தோத்திர ரத்தினத்தைக் காண்பதரிது எனச் சொல்வது மிகையாகாது.

திரள் திரளாக ஸ்ரீமீனாக்ஷிதேவியின் ஆலய கும்பாபிஷேகத்தைக் காணவரும் மக்கள் இந்த தோத்திரத்தை அறிந்து அதை ஸ்ரீமீனாக்ஷிதேவிக்கு அர்பணித்தால் என்றைக்கும நிலையான புண்ணியத்தைத் தேடிக் கொண்டவர்கள் ஆவார்கள். இதை நன்றாகப் படித்து உய்ய மக்களை வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

---

## இந்தியாவே!

ஓ இந்தியாவே! சீதை, சாவித்திரி முதலிய கற்பிற் சிறந்த உத்தமிகளை மறவாதே! உனது பரதேவதை யோகிகளிலும் உயர்ந்த யோகியாகிய உமாபதி சங்கரன் என்பதை மறவாதே! உனது திருமணமும் உனது செல்வமும், உனது வாழ்வும் உனது இந்திரிய போகத்துக்கு அல்ல என்பதையும் மறவாதே.

உனது ஜன சமூகம் மகா மாயையின் சாயை மாத்திரமே. தாழ்ந்த சாதியானும் அறிவிலியும், ஏழையும் உன் ரத்தத்திற் சேர்ந்தவனே.

நான் இந்தியன், ஒவ்வொரு இந்தியனும் என் சகோதரனே என்று சொல்.

கந்தைத் துணி உடுத்தி, உரத்த குரல் எடுத்து, ‘இந்தியர்களே என் சகோதரர்கள், இந்தியர்களே என் உயிர், இந்தியாவின் தேவிகளே எனக்குப் பரதெய்வம், இந்தியாவின் ஜன சமூகமே நான் பிறந்து வளர்ந்த தொட்டில், என் யௌவனத்தின் நந்தவனம், என் மூப்பின் புண்ணிய தபோவனம்’ என்று பெருமையுடன் கூறு.

பகவானே! ஜெகன்மாதாவே! எனக்கு ஆண்மை அருள்வாய் என் பேடித் தனத்தை நீக்கி, பலவீனத்தைப் போக்கி என்னை ஆண்மகன் ஆக்கு’ என்று அல்லும் பகலும் பிரார்த்தனை செய்.

—சுவாமி விவேகானந்தர்

# தல புராணங்கள்

கி. வா. ஜகந்நாதன்

புராணம் என்பது பழமை என்ற பொருள் உடையது. திருவாசகத்தில் முதலில் உள்ளது சிவபுராணம் என்னும் பகுதி. அதற்கு 'சிவனது அநாதி முறையான பழமை' என்ற பொருளைச் சில பதிப்பு களில் பார்க்கலாம். ஆனால் வடமொழி யாளர், பழமைக்குப் பழமையாகவும் புது மையாகவும் இருப்பது புராணம் என்று சொல்வார்கள். புராணங்களிலுள்ள வர லாறுகள் காலத்திலே பழமை உடையன வாகி, இப்போதும் நமக்குப் பயன் தருவன வாக இருக்கின்றன என்ற கருத்தில் அப் படிச் சொன்னார்கள். புராணங்களில் இரண்டு வகை உண்டு. மகாபுராணங்கள், உப புராணங்கள் என்பன அவை. மகா புராணங்கள் பதினெட்டு. புராணத்தில் ஐந்து இலக்கணங்கள் நிரம்பியிருக்க வேண்டும். சர்க்கம், பிரதிசர்க்கம், வம்சம், மன்வந்தரம், வம்சானுசரிதம் என்பன அவை. சர்க்கம் என்பது கடவுள் பல தத்துவங்களை உண்டாக்கி பிர பஞ்சத்தை இயங்கச் செய்வதைச் சொல்வது. பிரதி சர்க்கம் என்பது பிரம்ம, விஷ்ணு, ருத்திரர் உற்பத்தியைச் சொல்வது. வமிசம் என்பது அசுரர் களுடைய வமிசத்தைச் சொல்வது. மன்வந்தரம் என்பது மனுக்களின் வரலாற்றைச் சொல்வது. வம்சானுசரிதம் என்பது அவர்களுக்குப் பின் வந்த வமி சத்தை விரித்து உரைப்பது. இப்படியுள்ள ஐந்து இலக்கணங்களும் குறைவறப் பெற்றனவே பதினெண் புராணங்களும். பதினெட்டுப் புராணங்களின் பெயர்களைப் பற்றிப் பல்வேறு பட்ட கருத்துண்டு. மகாரத்தில் இரண்டு, பகாரத்தில் இரண்டு, ப்ரகாரத்தில் மூன்று, வகாரத்தில் நான்கு, அகாரத்தில் ஒன்று, நாவில் ஒன்று, பகாரத்தில் ஒன்று, லிங் என்பது ஒன்று, ககரத்தில் ஒன்று. கூஎன் பது ஒன்று. ஸ்கா என்று தொடங்குவது ஒன்று. இவை முறையே மச்சபுராணம், மார்க்கண்டேய புராணம், பவிஷ்ய புராணம், பாகவத புராணம், பிரம்ம புராணம், பிரம்மாண்ட புராணம், பிரம்ம கைவர்த்த புராணம், வாமன புராணம், வராக புராணம், வாமன புராணம், வாயு புராணம், விஷ்ணு புராணம், அக்கினி புராணம், நாரத புராணம், பத்ம புராணம், லிங்க புராணம், கருட புராணம், கூர்ம புராணம் ஸ்காந்த புராணம் என்பவை.

உப புராணங்களானவை. சனத்குமார புராணம், நாரசிம்ம புராணம், நாரதீய புராணம், சிவபுராணம், துர்வாச புராணம், கபில புராணம், மானவ புராணம், அவ சனச புராணம், வாருண புரர்ணம், காளி காக்கிய புராணம், சாம்பவ புராணம், நந்தி கேசுவர புராணம், சௌவர புராணம், பரா சரீய புராணம், ஆதித்திய புராணம், மாகேசுவர புராணம், பாகவத புராணம், வாசிஷ்ட புராணம். இப்படி தேவீ பாக வதம் கூறுகிறது. இவற்றையன்றி வேறு வகையாகச் சொல்வதும் உண்டு. பதி னெட்டுப் புராணங்களில் சிவபுராணமே மிகுதி என்று கூறுவார் ஒரு சாரார். இந்த மகாபுராணங்களும், உப புராணங்களும் அல்லாமல் அந்த அந்தத் தலங்களைப் பற்றிய வரலாறுகளைச் சொல்லும் தல புராணங்கள் கணக்கு வழக்கு இல்லாமல்

உள்ளன. வட மொழியில் தல புராணங்களுக்கு இலக்கிய மதிப்பு இல்லை. ஆனால் தமிழிலோ அப்படி இல்லை. பல பெரும் புலவர்கள் காப்பியத்திற்குரிய இலக்கணங்களை எல்லாம் அமைத்துப் பல தல புராணங்களைப் பாடியிருக்கிறார்கள்.

புராணம் என்ற பெயர் வரலாறுகளுக்கு வருவதோடன்றி, பழங்காலத்தில் சில இலக்கண நூல்களுக்குக்கூட வழங்கியது என்று தோன்றுகிறது. யாப்பருங்கல விருத்தியுரையில் மாபுராணம், பூத புராணம், என்ற இரண்டு நூல்கள் மேற்கோளாக வருகின்றன. மாபுராணத்திலிருந்து சூத்திரங்களை மேற்கோள் காட்டியிருக்கிறார் உரையாசிரியர். அவற்றால் இவ்விரண்டும் பழைய இலக்கண நூல்கள் என்று தெரிய வருகின்றது. சைன சமய சம்பந்தமான புராணங்களும் உண்டு.

தமிழ் நாட்டில் தலங்களுக்குக் குறைவே இல்லை. ஆகையால் தல புராணங்களுக்கும் பஞ்சம் இல்லை. மிகச் சிறந்த தலங்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட புராணங்கள் உண்டு. காப்பியத்தின் இலக்கணங்கள் அமையப் புராணங்களைப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள். திருகூடராசப்ப கவிராயர், கவி வீரராகவ முதலியார், சிவப்பிரகாச சுவாமிகள், பரஞ்சோதி முனிவர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை முதலியோர் தல புராணங்கள் பாடியிருக்கிறார்கள். பொதுவாகத் தல புராணங்களில் முதலில் தல வரலாற்றுச் சுருக்கமாகிய பதிகம் இருக்கும். பிற்பாடு நாட்டுப் படலம், நகரப் படலம் அமையும். அவற்றுக்கு அப்பால் மூர்த்தி, தீர்த்த, தல விசேடங்கள் இருக்கும். அவற்றின் பின் தலங்களின் வரலாறுகள் வரும். மதுரைக்குப் பல புராணங்கள் வடமொழியிலும், தமிழிலும் உண்டு. மதுரைச் சிவபெருமானுடைய திருவிளையாடலைச் சொல்லும் புராணம் திருவிளையாடற் புராணம் என்னும் பெயருடையது. செல்வி நகர்ப் பெரும் பற்றப் புலியூர் நம்பி என்பவர் முன்பு ஒரு திருவிளையாடல் புராணம் பாடினார். இதை மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயர் அவர்கள் அழகாக அச்சிட்டு இருக்கிறார்கள். பெருக வழங்கும் புராணம் பரஞ்சோதி முனிவருடைய திருவிளையாடல் புராணமாகும். இவற்றையன்றி வீமநாத பண்டிதர் இயற்றிய கடம்பவன புராணம், அநதாரி என்னும் புலவர் இயற்றிய சுந்தர பாண்டியம் என்னும் நூல் இவையும் மதுரையின் பெருமையைச் சொல்வனவே. இவற்றில் பெரும் பற்றப் புலியூர் நம்பி எழுதிய திருவிளையாடல் புராணத்திற்கு உத்தர மகா புராணம் என்னும் வடநூலின் ஒரு பகுதியாகிய சாரசமுச்சயம் என்பதே முதல் நூல் என்று தெரிய வருகிறது. நீபாரண்ய மாகாத்மியம் அல்லது கடம்பவன புராணம் என்னும் வடநூலிலிருந்து மொழி பெயர்த்து இயற்றியது கடம்பவன புராணம். சுந்தர பாண்டியம் என்னும் வடநூலின் மொழி பெயர்ப்பே சுந்தர பாண்டியம் என்னும் நூல். பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணம் ஹாலாஸ்ய மகாத்மியம் என்னும் வட நூலின் மொழி பெயர்ப்பு. இவற்றுள் மிகச் சிறப்பாக தமிழ் நாட்டில் வழங்கி வருவது பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணம். கந்தபுராணம், பெரிய புராணம், திருவிளையாடல் புராணம் என்னும் மூன்றையும் இறைவனுடைய நெற்றிக் கண்ணைப் போலச் சொல்வது ஒரு வழக்கம் திருவிளையாடல் புராணம் ஒரு தலத்தின் புராணமாக இருந்தாலும்

தன்னுடைய தகுதியினால் அந்தச் சிறப்பு பெற்றது. சிவபெருமானுடைய கோயில் மதுரையில் மிகப் பழங்காலம் முதற் கொண்டே இருந்து வந்ததை மதுரைக் காஞ்சி காட்டும். ஏழு நாட்கள் ஒரு விழா நடந்தது என்றும், இறுதி நாளில் தீர்த்த வாரி நிகழ்ந்தது என்றும் அந்நூல் சொல்கிறது.

புராணங்களில் எந்த மூர்த்தியைப் பற்றிய கதைகள் வருகின்றனவோ அந்த மூர்த்திகளின் பிரதாபங்கள் மிகுதியாக இருக்கும். மற்ற மூர்த்திகள் அந்த மூர்த்தியை வந்து வழிபடுவதாகக் கதைகள் அமையும். சிவபுராணங்களாக இருந்தால் திருநீற்றின் சிறப்பு, உருத்திராட்சத்தின் மகிமை, வில்வத்தின் சிறப்பு, சிவாலய மேம்பாடு, பஞ்சாட்சரத்தின் பெருமை முதலிய சிவசம்பந்தமான செய்திகள் மிகுதியாக இருக்கும். சிலவிடங்களில் சாத்திரக் கருத்துக்களை நன்றாக அமைத்துக் காட்டியிருப்பார்கள். திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுடைய புராணங்கள் மிக்க புகழ் பெற்றவை. ‘அவர் புராணம் பாடும் புலவர்’ என்று சிறப்பிக்கப் பெற்றவர். அவர் பாடிய புராணங்களில் நாட்டுப் படலம், நகரப் படலம் மிகச் சிறப்பாக அமைந்திருக்கும். சைவ சாத்திர உண்மைகளும் அங்கங்கே விரவி இருக்கும். நாட்டுப் படலத்தில் ஐந்து திணைகளை வருணிக்கும்போது, அவ்வத் திணைகளில் உள்ள தலங்கள் இவை என்று எடுத்துச் சொல்லியிருப்பார். இது சேக்கிழாருடைய முறையைப் பின்பற்றியது.

தமிழ்நாட்டில் இலக்கண இலக்கியத்தைப் பயின்ற புலவர்கள் புராணங்களையும் பயின்றார்கள். திருவிளையாடல் புராணம், திருக்குற்றாலத்தல புராணம், காஞ்சிப் புராணம், திருத்தணிகைப் புராணம், திருவானைக்காப் புராணம் முதலிய புராணங்களை நன்கு தெரிந்தவர்களையே தமிழ்நாட்டில் சிறந்த புலவர்கள் என்று கொண்டாடினார்கள். சங்க நூல்களுக்குப் பிறகு இடைக்காலத்தில் வழங்கிய புராணங்களுக்கு இருந்த மதிப்பு அளவற்றது. புராணத்தைப் பாடும் புலவனுக்கும் பெருமை, அதற்கு உரை எழுதுகிறவனுக்கும் பெருமை, அதனைப் படித்துத்தெரிந்து கொள்கிறவனுக்கும் பெருமை இருந்து வந்தது.

தல புராணங்களிலுள்ள செய்திகள் யாவும் உண்மை வரலாறுகளா என்ற கேள்வியைச் சிலர் எழுப்பலாம்.

“பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்”

என்பது வள்ளுவர் வாக்கு. பொய்யான கற்பனை வரலாறுகளாக இருந்தாலும் அவற்றில் நாம் உணர வேண்டிய சிறந்த கருத்துக்கள் இருக்குமானால் அவற்றையும் மெய் நூல்களாகவே கொள்ள வேண்டும்.

அந்தவகையில் பக்தியை மிகுதியாக ஊட்டுவதற்கும் தல புராணங்கள் பயன்படும். மற்றொரு சிறந்த பயனும் உண்டு. உலகம் முழுவதும் இறைவனுக்குரிய கோயில். அவன் இல்லாதஇடம் ஒன்றும் இல்லை. எங்கும் அவன் நிரம்பியிருப்பதை நாம் காண முடியாது. சிவஞானம் பெற்றவர்கள், பார்க்கும் இடம் எங்கும் பரிபூரண ஆனந்தமாகிய இறைவனைக் காண்பார்கள். நாமோ அவ்வாறு காணமுடியாது. ஆனாலும் அவனை மறவாமல் இருக்க நாம் காணும் பிரபஞ்சத்தை அவனை நினைப்ப

தற்குரிய அடையாளப் பொருள்கள் நிரம்பியதாகப் பார்க்கும் வகையில், நமக்குப் பயிற்சி தந்திருக்கிருர்கள். உலகத்தைச் சிவமாகப் பார்க்க முடியாவிட்டாலும் உலகப் பொருள்களில் எல்லாம் சிவனைப் பற்றிய எண்ணத்தை ஊட்டும் வரலாறுகளைச் சொல்லியிருக்கிருர்கள். அந்த வகையில் மரமும், மலரும், ஆறும், குளமும் தலங்களும் கடவுளை நினைப்பூட்டுவனவாக அமைந்திருக்கின்றன.

தமிழ்நாட்டு ஊர்களில் பெரும்பாலானவற்றைப் பார்த்தால் இறைவனுடைய சம்பந்தமுடைய பெயர்களை உடையனவாகத் தெரியவரும். ஊர்களில் பல மக்கள் குடியிருந்தாலும் அங்கே உள்ள திருக்கோயிலில் உள்ள மூர்த்தியின் பெயரினுல் அந்த ஊருக்குப் பெயர் அமைந்திருப்பதை உணரலாம்.

நாம் காணும் பொருளில் எல்லாம் இறைவனுடைய ஞாபகத்தை உண்டாக்கும் தொடர்பு இருக்கவேண்டும். நாயைக் கண்டால் இறைவனை நினைக்க வழி இருக்கவேண்டும். வண்டைக் கண்டாலும், கழுதையைக் கண்டாலும், பாம்பைக் கண்டாலும், இறைவனுடைய நினைவு வருவதற்கு ஒரு வழிஉண்டு. தல புராணங்களை நன்கு உணர்ந்தவர்கள் அந்தவழியை உணர்வார்கள். இந்தத்தலம் பாம்பு பூசித்தது, இந்தத்தலம் கழுதை பூசித்தது, இந்தத் தலம் வண்டு பூசித்தது என்று வரும் தல புராணக் கதைகளை உணர்ந்தவர்கள், பாம்பைக் காணும் போதெல்லாம் பாம்பு பூசித்த தலம் அவர்கள் நினைவுக்கு வரும். வண்டைக் கண்டால் அது பூசித்த தலத்தின் நினைவுவரும். அந்த நினைவோடு சேர்ந்து இறைவனுடைய பல எண்ணங்கள் மனத்தில் தோன்றும். ஆகவே, தல புராணங்களில் நாம் காணும் பிராணிகளை இறைவனோடு தொடர்பு உடையனவாக எண்ணச் செய்து, நமக்கு இறைவனுடைய நினைப்பை ஊட்டும் அடையாளப் பொருள்களாக்க உதவுகின்றன. இப்படி சிவ பக்தியை வளர்க்கத் தல புராணங்கள் நமக்குப் பயன்படுவது ஒரு கருத்து.

வரலாற்று முறையிலும் தல புராணங்களுக்கு ஒரு சிறப்பு உண்டு. தமிழை நன்ருக வளர்த்த புலவர் பெருமக்கள் தங்கள் புலமையைக் காட்டிப் புராணங்களை இயற்றினுர்கள். ஆகவே கடவுளைப் பற்றிய உணர்ச்சி இல்லாதவர்கள் தமிழின் சுவையைத் தேர்ந்துகொள்வதற்குப் புராணங்களைப் படிக்கலாம். விவிலிய நூலின் நடைக்காகப் பிறர் அதைப் படிப்பதைப் பார்க்கிருேம். அப்படியே மில்டன் எழுதிய சொர்க்க நீக்கத்தைச் சமய நூல் என்று பாராமல் காப்பியம் என்று பார்த்து இன்புறுகிருர்கள். அவ்வாறே புராணங்களை அநுபவிக்கலாம்.

பற்பல காலமாகச் சில கதைகள் வழங்கி வருவது உண்டு. உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலும் கர்ண பரம்பரையாக வரும் பழம் கதைகள் உண்டு. நாடோடிக் கதைகள் அப்படி வருவனவே. அவற்றைக் கொண்டு அந்நாட்டு மக்களின் பண்பாடு முதலியவற்றை உணர்ந்து கொள்ளலாம். அந்த வகையில் தல புராணங்களில் வருகிற கதையை ஆராய்ச்சி செய்தால் இந்த நாட்டு மக்களின் உள்ளப் பாங்கையும், பழக்க வழக்கங்களையும் தெரிந்துகொள்ளலாம்.

ஓர் உதாரணத்தை இங்கே பார்க்கலாம். திருவிளையாடல் புராணத்தில் விருத்தகுமார பாலரான படலம் ஒன்று

வருகிறது. கௌரி என்னும் பெண் ஒரு வைணவனை மணந்து கொள்கிருள். அவள் சைவக் குடும்பத்தில் பிறந்தவள். சிவ பெருமானைப் பூசை பண்ணுகிருள். அவள் சிவனைப் பூசிக்கிருள் என்பதற்காகப் புக்க கத்தார் பல இடையூறு செய்கிருர்கள். அவள் இறைவனுடைய திவ்ய தரிசனத் தைப் பெறுகிருள். இந்தக் கதை சைவத் திற்கும், வைணவத்திற்கும் உள்ள முரண் பாட்டைக் காட்டுவதாக முதலில் தோன் றும். ஆனுல் ஆழ்ந்து சிந்தித்தால், பழங் காலத்துச் சமுதாயத்தில் இருந்த ஒற் றுமை நன்கு விளங்கும். இப்படி நான் சொல்வது நேர் விரோதமாகத் தோற்ற லாம். ஆனுல் சற்று விளக்கிஞல் இந்த உண்மை புலனுகும். திருமணம் செய்வது என்பது அக்காலத்தில் இந்தக்காலத்தைப் போலத் திடீரென்று நினைத்துச் செய்வது அன்று. நன்ருகக் குலம் கோத்திரம் விசா ரித்து, பழகின இடத்தில் பெண்ணைக் கொள்ளவோ, பெண்ணுக்குப் பிள்ளையைக் கொடுக்கவோ செய்வார்கள். கௌரியையும் அப்படித்தான் அந்த வைணவக் குடும்பத் தில் கொடுத்தார்கள். மாப்பிள்ளை வைண வர் என்று தெரிந்தும் சைவக்குடும்பத்தி னர் தம் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்திருக்கிருர்கள். இதஞல் அக்கால மக்ள் சைவ வைணவ பேதமின்றி இணைந்து வாழ்ந்து வந்தார்கள் என்பதும், சமயபேதம் திருமணத் தொடர்புக்குத் தடையாக இருக்கவில்லை என்பதும் தெரி கின்றன அல்லவா? வைணவர்கள் சிவ பூசை செய்த கௌரியைத் துன்புறுத்தி ஞர்கள் என்பது சமயம் காரணமாக அமைந்தது அன்று. அது அவர்களு டைய கொடிய இயல்பு காரணமாக அமைந்தது. அதற்கு ஒரு வியாஜம் சிவ பூசை. அவர்கள் திடீரென்று வைணவராக வில்லை. முன்பே வைணவராக இருந்தவர் களே. அது தெரிந்தே கௌரியைத் திரு மணம் செய்து கொடுத்திருக்க வேண்டும். அந்தக் காலத்தில் வேறுபாடு இல்லாமல் சைவர்களும் வைணவர்களும் திருமணம் புரிந்து கொண்டார்கள் என்பதை இந்த வரலாறு காட்டுகிறது. மற்றச் செய்திகள் கற்பனை என்று வைத்துக் கொண்டாலும், கதையில் அந்தக் காலத்துச் சமுதாய நிலையைக் காட்டும் கருத்து இருப்பதை அறியலாம். இப்படியே மற்றப் புராணங் களையும் பார்த்தால் பழங்காலத்துப் பல பழக்க வழக்கங்கள் புலனுகும். இவற் றைத் தெரிந்து கொள்ளவும் தலபுராணங் கள் கருவியாக இருக்கின்றன.

ஆகவே, தமிழ் மொழியின் வளத் தைத் தெரிந்து கொள்வதற்கும், தமிழ் நாட்டு மக்களின் பழக்க வழ்க்கங்களைத் தெரிந்து கொள்வதற்கும், தெய்வ பக்தியை வளர்த்துக் கொள்வதற்கும், புலவர்களுடைய கற்பனைத் திறத்தை தெரிந்து கொள்வதற்கும் தல புராணங்கள் நன்கு உதவுகின்றன. மதுரைக்குரிய புராணங்களிலும் இந்தப் பண்புகள் உண்டு என்பதை அவற்றை நன்ருக ஆராய்ந்து படித்தவர்கள் தெரிந்து கொள்ளலாம்.



# சொக்கநாத வெண்பா

பேராசிரியர் கா. குருசாமிதேசிகர்

ஆங்கயற்கண்ணியையும் ஆலவாய்ச் சொக்கனையுமே உண்மைத் தாய் தந்தையாக உணர்ந்து, செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் விலாசத்தில் திளைத் தவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர். முந்நூறு ஆண்டுகட்குமுன்பு பொற்றாமரைவாவியில் மூழ்கி, ஆலவாய் அழகனைத் தம் கைத்தாமரையில் கண்ணுக்கினிய பொருளாய்ப் பெற்றுப் போற்றிய பெருந்தகையார் இவர். சோழ நாட்டில் மிகப் பெரிய சமய நிலையமாகிய தருமையாதீனத்தை நிறுவியவர். இப்பெரியார், ஆலவாய் இறைவன் மீது உரைத்த அனுபவ மொழிகளே சொக்கநாத வெண்பா.

வறியவர் செல்வர் என்ற வேறுபாடு கருதாது இருவரையும் ஒரு நிலையில் காத்தல் மன்னவன் கடமை. அதுபோல உலகிற்கு மன்னவனாக விளங்கும் சொக்கேசன் அறிஞர்களை மட்டும் ஆட்கொண்டருளுதல் நீதியாகாது. அறிவற்றவனான தன்னையும் அவர்களோடு ஒப்ப ஆட்கொண்டருள வேண்டும் என்று இறைவனிடம் உரிமைகொண்டாடுகிறார் இந்நூலாசிரியர்.

**வித்தும் விளைவும்:**

விதையிட்டவர்களுக்கே விளைவும் உரியது. எந்த விதையை விதைத்து மக்கள் பயிர் செய்கிறார்களோ அவ்விதையின் விளைவும் விதைத்த அம்மக்களுக்கே உரிமை உடையது அல்லவா? அதுபோல துன்மார்க்க நெறியினை இப்பிறவியில் விதைத்தவர் பிறவித் துன்பம் என்ற அவ்வித்தின் பயனையும் அனுபவித்தற்கு உரியவர். சன்மார்க்க நெறி நிற்பார் அதன் விளைவாக வீடு பேற்றை அனுபவிப்பர் என்று கூறுகிறார்

**தாயன்பு:**

தாயன்பிற்கு ஈடானது உலகில் எதுவும் இல்லை. தாய் தன் குழந்தைகளுக்கு ஏற்படும் துன்பம் கண்டு சற்றும் தரியாள். உலக உயிர்களுக்குத் தாயாக விளங்கும் சொக்கேசன் குழந்தையாக இருக்கும் நான் படும் துன்பங்களைப் பார்த்துக் கொண்டு எவ்வாறு பொறுத்திருக்கிறான் என்று கேட்கும் பாடலில் குழந்தைத் தன்மையின் உரிமைக் குரல் கேட்கிறது.

**நீதியா இது?**

நோய் கண்டவர்கள் உதவிக்கு மருத்துவரை அழைத்தல் இயற்கை. இவருக்கு உண்டான நோயும் எளியதன்று. வருத்தம் தரும் இயல்பினது. மருத்துவரும் மிக நல்லவர். பன்றிக் குட்டிக்கும் பரிவுகாட்டும் பண்பினர். இத்தகைய இரக்கமனத்து மருத்துவர் இவர் மாட்டுப் பலகாலழைத்தும் பரிவுகாட்டினாரில்லையாம். நீதியா இது? என்று கேட்கிறார் ஆசிரியர். நியாயம் தானே!

நோயால் வருந்திஉனை நூறுதரம் கூப்பிட்டால்
நீ யார் எனஇருக்கை நீதியோ – தாயாய்
அலைகொடுத்த கேழல் அருங்குழவிக்கு அன்று
முலை கொடுத்தாய் நீ அலவோ முன்.

நோய் - பிறவித்துன்பம். கேழல் - பன்றி. குழவி – குட்டி. முலைகொடுத்தது – தாயாய் முலையைத் தருவானே என்றபடி, பன்றிக்குட்டிக்கு முலை யளித்த திருவிளையாடல்.

**ஆறுதலை இல்லை:**

அமைதி கிடைத்தற்கரிய அருமருந்து. எதிலும்பெற்றதைக் கொண்டு நிறைவு காணும் மனப்பாங்கு யாரிடமும் இல்லை. மன அமைதிக்கு மருந்து எது என்று தேடித்திரியும் அன்பர்களுக்குத் தேறுதல் கூறுபவன் ஒருவன் உள்ளான். அவனையன்றித் திக்காவார் ஒருவரும் இலர். அவன் திருவடிகளையே பற்றுக் கோடாகக் கொள்ளுங்கள். அதுவே அமைதிக்கு மருந்து என்று அறிவுரை கூறுகிறார் ஆசிரியர்.

ஆறுதலை இல்லை அடியேனுக்கு அன்பாகத்
தேறுதலைச் சொல்வார் சிலரில்லை -
வேறு எனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சிச்
சொக்கே நின்தாளே துணை.

**யார் குற்றம்?:**

உள்ளம், உரை, உடல், ஆகிய மூன்றாலும் இறைவனை பக்திசெய்யவேண்டும் என்பது சமய நூல் விதி. மனம் நினைய வாய் வாழ்த்த உடல் அவன் திருக்கோயில் வலம் வந்தும் இறைபணி செய்தும் வணங்க முக்கரணங்களாலும் அவனை பக்தி செய்ய வேண்டுந்தான். ஆனால் இம் மூன்று கரணங்களும் இதற்கு மாறான செயல்களையே செய்கின்றன. இது யார் குற்றம்? உலக இயக்கத்திற்குக் காரணமாக இருப்பவன் இறைவன் தானே. அவன் அருளின்றி உலக உயிர்களுக்கு இயக்கம் ஏது? உயிர்களின் நல்ல செயல்களுக்கும் தீய செயல்களுக்கும் அவன் தானே பொறுப்பாளி. மனம், வாக்கு, காயங்கள் அவனை எண்ணாமல் தீயனவற்றை எண்ணிச் செய்யுமாயின் அவைகளை அவ்வழிகளில் செலுத்துபவன் இறைவன்தானே! அவனையே கேட்கிறார்: என் திரிகரணங்களையும் தீய வழியில் செலுத்துவாயேயானால் அதுயார் குற்றம்? உன் குற்றம்தானே! அவற்றை நல் வழியில் செலுத்தி எப்போது எனக்கு முத்தியளிக்கப் போகிறாய்? என்று.

வாக்கில் உரை பொய்யே மனம்நினைப்பதும்
கவடே
ஆக்கைதினம் செய்வது அகிர்த்தியமே -
நோக்கில்
திரிவிதமும் இப்படி நீ செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநா தா.

கவடு - வஞ்சனை. அகிர்த்தியம் - பாவச் செயல். திரிவிதம் – மூன்றாலும்.

**எல்லாம் வல்ல சித்தர்:**

திருவிளையாடல் புராண வரலாறுகள் சிலவற்றையும் இந்நூலில் குறிப்பிட்டுப் பாடுகிறார் குருஞானசம்பந்தர். பஞ்சமா பாதகம் செய்தவனையும் ஆண்ட பரமனே! நாரை, பன்றி, கரிக்குருவி போன்றவற்றிற்கும் கருணை காட்டிய வள்ளலே! அடியேனுக்கு அருள்புரிதல் ஆகாதோ? என்று கேட்கிறார். எல்லாம் வல்ல சித்தராய் இறைவன் திருவிளையாடல்புரிந்த நிகழ்சிகளை அமைத்துப் பாடும் அழகு சுவைத்தற்குரியது. எல்லாம் வல்ல சித்தராய் வந்தபெருமானே! என்னுடைய பொல்லாதமனக் கருத்தைப் போக்குதல் எல்லாம் வல்ல உனக்கு அரியசெயலா? உயிர்களுக்குப் பாசம் அறுத்து முத்திகூட்ட மனத்துயரம் செய்தல் தானா மருந்து? சித்தனாகிய உனக்குமனத்துயரம் செய்யாமல் பாசம் ஒழிக்கும் மருந்து தெரியவில்லையா? நல்ல கேள்வி தானே!

**சிலவரங்கள்:**

ஆபாதகன் என்று நீக்காது என்னை அருளில் ஆண்டருள். வாக்கு மனம் எட்டாத வீட்டில் எனைக் காட்டு. பேசாஅநு

பூதி பிறக்க எனதுள்ளத்தில் ஆசாபசாசை அகற்றுவாய். இறந்தும் பிறந்தும் இளைத்தேன். மறந்தும் பிறவா வரம்தா, நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப் புத்தி மிகவும் போதித்து சித்தமயல் போக்கு. துன்று பரமானந்தச் சோதியில் இரண்டற்று நின்றுவிட என்னை நிறுத்து. உனக்குப் பணி செய்ய உன்றனை எந்நாளும் நினைக்க வரம் எனக்கு நீ தா. இன்பத் தொட்டிலிலே ஆட்டி வளர்.



## இந்தியா நாசம் உறுமா ?

இந்திய நாசம் உறுமா? அது நாசம் உறுங்கால் உலகத்தில் உள்ள அன்பு பக்தி ஞானம் வைராக்கியம் எல்லாமுமே நசித்துவிடும். நசிக்கவே, அவற்றின் இடத்தில் காமமும் போகமுமே தேவதைகளாகவும், செல்வமே குருவாகவும், வஞ்சனை சூது அக்கிரமம் இவைகளே புண்ணிய கர்மங்களாகவும், கடைசியாக மனிதனே இவைகளுக்குப் பலியாகவும் விபரீதப்படும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. ஆனால், இத்தகைய விபரீதம் என்றும் சம்பவியாது; ஆகவே இந்தியாயும் நாசம் அடையாது.

—சுவாமி விவேகானந்தர்.

# மதுரையின் மாண்பு

ஓ. வி. அழகேசன்

மதுரை என்றுலே நமது மனத் திரையில் பல காட்சிகள் தோன்றி நிழலாடுகின்றன. சரித்திரம் கருவாய்க்கப் பெருத முன்பிருந்தே மதுரையைப் பற்றிக் கேள்விப் படுகிறேம். சிவபெருமானும் முருகக் கடவுளும் ஏனைய தமிழ்ப் புலவர்களோடு மதுரையில் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தார்கள் என்றுல் தமிழின் தொன்மையை வியப்பதா மதுரையின் தொன்மையை வியப்பதா என்று தெரியவில்லை. காசி நகரம் வடமொழிக் கல்விக்கு இருப்பிடமாயிருந்து வந்தது போல மதுரை நகரம் தமிழ்க் கல்விக்கு இருப்பிடமாயிருந்து வந்தது. கடைச் சங்கத்தில் வீற்றிருந்ததாகச் சொல்லப்படும் நாற்பத்தொன்பது புலவர்களில் பலர் இயற்றியுள்ள நூல்கள் அல்லது பாடல்கள் நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றின் செப்பத்தையும், திட்பத்தையும், நுட்பத்தையும் உற்று நோக்குவோர் அவற்றுக்கு உலக இலக்கியங்களின் முதல் வரிசையில் இடம் உண்டு என்பதை ஒப்புக்கொள்வர். எல்லாம் மதுரை மண்ணில் விளைந்த தமிழ்ச் செல்வம்.

எம்முடைய அன்னையாராகிய உமாதேவியார் மலயத்துவச பாண்டியனுக்கு மகளாகப் பிறந்து சோமசுந்தரக் கடவுளை மணந்து மதுரையை அரசாண்டனர் என்றுல் மதுரையின் மாண்பை என்னென்பது! தெய்வத்தை மானுடமாகப் பெற்ற மனித குலத்தின் மாண்பைத்தான் என்னென்பது! தெய்வமாவது பாண்டியன் வயிற்றில் வந்து பிறக்கவாவது என்று சந்தேகப்படுகிறீர்களா? மதுரையில் ஆண்டுதோறும் நடைபெறும் மீனுட்சி கலியாணத்தில் மகிழ்ச்சி கொள்வதுபோல யாராவது தங்கள் சொந்த வீட்டுக் கலியாணத்தில்கூட மகிழ்ச்சி கொள்ளுகிறுர்களா என்று கேட்கிறேன். பிறகு இதில் சந்தேகத்துக்கு இடமேது!

மதுரை கருத்துப் போராட்டங்களுக்கு நிலைக்களன். அன்றும் சரி, இன்றும் சரி. இறைவன் இயற்றிய பாடலுக்கே குற்றம் சொன்ன நக்கீரனுர் மதுரைக் கணக்காயனுர் மகனுர் அல்லவா? இறைவனே அந்த பாடுபட்டார் என்றுல் சாமானிய புலவர்கள் அவரிடம் சென்று மீள முடியுமா? அது எப்படி ஆயினும் நக்கீரர் இயற்றியுள்ள "திருமுருகாற்றுப் படை"யைப் போன்றதொரு குற்றமே கூற முடியாத காவியத்தை எங்கேனும் காணமுடியுமோ? சொல்லும் பொருளும் இணைந்து கடவுண்மையில் குழைந்து கருத்தைக் கனிவிக்கும் அழகன்றே திருமுருகாற்றுப் படை!

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனுர் இயற்றிய பொது மறையாகிய திருக்குறளைக்கூட சங்கப் புலவர்கள் எளிதில் ஏற்றுக் கொண்டார்களில்லையே! சென்ற காலத்தில் அவர்கள் காட்டிய கண்டிப்புக்கும் இன்று பொது மக்கள் நல்லதோ கெட்டதோ எல்லா நூல்களையும் ஏற்றுக் கொள்ளும் தாராளத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்!

மதுரை மண்ணிலே நிகழாத சமயப் போர்கள் இல்லை. தமிழ் நாட்டை ஆட்

கொண்ட சமயங்கள் முதலில் மதுரையில் தங்கள் கொடியை நாட்டிய பிறகே மற்ற இடங்களுக்கும் பரவின. சமணத்தை வென்று சைவத்தை நிலைநாட்டுவதற்கு திருஞானசம்பந்தப் பெருமான் மதுரைக் கன்றோ வந்தார்! எந்த கருத்தும் தமிழ் நாட்டில் விலை போவதற்கு முன் மதுரையில் விலைபோகவேண்டும்.

இந்து சமயம் என்றால் சாது சமயம் என்று பலரும் எண்ணுகிறார்கள். அதாவது அடித்தால்கூடி அதற்கு அழத் தெரியாது. பிற சமயங்களுக்கு ஆட்களை அனுப்புமே ஒழிய அவற்றிலிருந்து ஆட்களை எடுத்துக் கொள்ளாது. திருஞானசம்பந்தர் காலத்தில் மதுரையில் நிகழ்ந்த வரலாறு இக்கூற்றைப் பொய்ப்பிக்கிறது. இந்து சமயம் மனித உள்ளங்களில் புரட்சியைத் தோற்றுவித்து மேற்சென்று பொருது வெற்றிகாண வல்லது என்பதற்குச் சான்று மதுரை.

நமது காலத்தில் மகாத்மா காந்தி அடிகள் தலைமையில் நடந்த தேசிய சுதந்திர சத்தியாக்கிரகப் போராட்டத்திலும் தமிழ் நாட்டிற்கே மதுரை கேந்திர ஸ்தானமாக விளங்கியதை யாவரும் அறிவர்.

தமிழ் நாட்டிற்கு மதுரை உயிர்நாடி என்றால், மதுரைக்கு உயிர்நாடி மீனாட்சி கோயில். மதுரை மீனாட்சியும் சொக்கரும் மதுரை மக்களோடு சேர்ந்து அவர்களுடைய இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொண்டு வாழ்கிறவர்களே ஒழிய எங்கேயோ கண்ணிற்கும் கருத்துக்கும் எட்டாது நிற்பவர்கள் அல்ல. வந்தி பிட்டுக்காக மண் சுமந்து பாண்டியன் பிரம்பால் அடிபட்ட ஆலவாய்ச் சொக்கரை மக்களில் வேறானவர் என்று சொல்ல முடியுமா?

மாணிக்க வாசகப் பெருமானாலேயே "மதுரைப் பெருநன் மாநகர்" என்று எல்லா அடைமொழிகளும் கொடுத்துச் சொல்லப் பெற்ற மதுரையின் மாண்பை என்னால் எடுத்துச் சொல்ல இயலுமோ!

மீனாட்சி அம்மனும் சோமசுந்தரக் கடவுளும் உறைகின்ற கோயில் திருப்பணி மக்கள் அனைவருடைய உள்ளங்களையும் திருத்தும் பணியாகும். மீனாட்சி கோயில் கோபுரங்களை சேக்கிழார் பெருமான், "மின்பொலி விசும்பை அளக்கும் நீள் கொடி சூழ் வியன் நெடும் கோபுரம்" என்றும் "நீடுயர் செல்வக் கோபுரம்" என்றும் பாடுகிறார். அக்கோபுரங்களைப் பழுது பார்த்து அழகுறுத்துவது மக்கள் வாழ்வைக் கீழ் நோக்கிச் செல்லாது மேல் நோக்கிச் செலுத்தும் கோதுதீர் முயற்சியாகும். ஆலயத்திலும், கோபுரத்திலும் தீட்டியுள்ள வண்ணப் புதுமை நாட்டிலுள்ள நல்லோர் நெஞ்சில் விளையும் எண்ணப் புதுமையின் பிரதிபலிப்பாகும். அங்கயற்கண்ணியோடமர்ந்த ஆலவாய் அண்ணல் நம்மீது பொழியும் திருவருளே கும்பாபிஷேகமாகும்.

இத் திருப்பணியை எடுத்து நடத்தும் தமிழ்வேள் திரு. பி. டி. ராஜன் அவர்களுக்கும் அவர்களுடனிருந்து அல்லும் பகலும் பணியாற்றும் அன்பர்களுக்கும், அவர்களுக்கு உறுதுணையாக நின்று அவ்வப்போது ஆவன செய்து வரும் அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்களுக்கும், இந் நன்முயற்சியை ஆசீர்வதித்தருளும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளுக்கும் நமது பணிவான

வணக்கமும் நன்றியும் உரியதாகும். இம் மேன்மக்களைத் தமிழ் நாடு என்றென்றும் போற்றிப் பாராட்டும் என்பதில் ஐயமில்லை.

நாளது சோபகிருது ஆண்டு ஆனித் திங்கள் 14-ம் நாள் வெள்ளிக்கிழமை யன்று *(28—6—1963)* நடைபெறும் மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலய கும்பாபிஷேக நிகழ்ச்சி நமது நாட்டின் ஆத்மீக அத்தியாயத்தில் பொன்னால் பொறிக்கவேண்டிய ஒன்றாகும். அதைக் கண்டு வணங்க ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் வருகை புரிவது நம் பாரத நாட்டு மக்கள் அனைவரும் அன்று மதுரையில் ஒன்று திரண்டு கும்பாபிஷேக வைபவத்தைக் கண்குளிரக் கண்டு இம்மை மறுமைப் பயன்களை எய்தி வாழ்வதாகும்.

"நீல மாமிடற் (று)
ஆல வாயிலான்
பால தாயினார்
ஞால மாள்வரே"

---

## தாய் நாடு

நமது புண்ணியம் வாய்ந்த தாய் நாடு சமய நெறிக்கும் தத்துவ ஞானத்துக்கும் தாயகம்; கடவுள் அனுபூதிச் செல்வர்களின் பிறப்பகம்; வைராக்கியத்துக்குக் குலவீடு; தொன்றுதொட்டு இற்றை நாள் வரை உத்தம உறுதிப் பொருள்கள் விளங்கித் தழைத்துவரும் நாடு இதுவே அன்றி, வேறு எதுவும் அன்று.

—சுவாமி விவேகானந்தர்.

# மாண்பு மிகுந்த மகால்

நா. லெட்சுமணப்பெருமாள், B. A.

கண்கள் வியந்து விரிந்து நோக்க, வாய் மலர்ந்து வியப்பின் மெய்ப்பாட்டைக் காட்ட, உள்ளம் இக்கலைக்கோயிலை உருவாக்கியவன் பெருமையைப் புகழ, தன்னையே மறந்து நிற்கும் நிலையிலே அயல் நின்ற வழிகாட்டி,

பர ராச சேகரன் பரராச பூஷணன்
பரராச ராச திலகன்

என்று கட்டியங் கூறி, திருமலை நாயக்கர் மஹால் என்னும் கலைக்கோயிலைத் தமிழகத்துக்குத் தந்த மன்னனை நமக்கு அறிமுகப்படுத்துகின்றான்.

நமது மனம் முன்னூற்று இருபத்து ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் கி பி. 1636ம் ஆண்டு சித்திரைத் திங்களிலே இந்த இடத்தில் எத்தனை மக்கள் களிப்புடன் இம்மஹாலின் கிரகப்பிரவேச வைபவத்தில் கலந்துகொண்டிருப்பார்கள் என்று எண்ணத் தொடங்குகிறது. அன்று அந்த மக்கள் கண்டு களிப்பெய்திய மஹால் கட்டிடத்தில் கால் பாகம்தான் இன்று நாம் காண்பது என்ற விபரத்தைக் கேட்டவுடன், நம்மை அறியாமலே, இந்த கால் பாகத்தையாவது நமக்குக் காப்பாற்றித் தந்த நேப்பியர் பிரபுவுக்கு நன்றி செலுத்த மனம் முன்வருகிறது. பாழடைந்து, மரம் செடி கொடிகள் வளர்ந்து, புதரடைந்து சிதைந்து கிடந்த அரண்மனையை 1886ம் ஆண்டு மூன்று லட்சத்து முப்பத்து ஓராயிரம் ரூபாய் செலவில் திருத்தியமைத்து, கலைச் செல்வத்தைக் காப்பாற்றிய சென்னை மாநில கவர்னர் நேப்பியர் பிரபு மதுரைக்கு நிலையான ஒரு சேவை செய்து விட்டார். இப்பொழுது நாம் பார்க்கும் கட்டிடம் பாழடைந்த பாகங்கள் நீக்கப்பட்டு முன்னுள் அரண்மனையின் நாலில் ஒரு பாகம்தான் என்பது தெரிந்ததும் நமது சிந்தனை அதன் முழு உருவத்தையும் அகக்கண்ணில் காண விழைகின்றது.

டெயிலர் என்ற பாதிரியார் தான் பதிப்பித்துள்ள கையெழுத்துப் பிரதிகளில் மஹாலைப்பற்றிய குறிப்பு ஒன்று இருக்கிறது. அக் குறிப்பில் கண்டபடி திருமலை நாயக்கருடைய அரண்மனையின் வடக்கே அல்லது கிழக்கே புகுந்து பார்த்தால், உயர்ந்த பத்துத் தூண்கள் கட்டப்பட்டு அதன் கிழக்கே ஆசார வாசலும், அதிலே பதினெட்டு இசைக் கருவிகள் வல்லுநர்களால் இசைக்கப்பட்டும், அவ்வாயிலுக்குக் கிழக்கே அரசனது பவனிக்கான தந்த பல்லக்குகளும் மேனு பல்லக்குகளும் வைக்கப்பட்டும் இருந்தன தெரிய வரும். ஆசார மண்டபத்துக்கு மேற்கே சிற்ப வேலைகள் அமைந்த அரங்க விலாசமும், அதற்கு மேற்கே சந்திர மேடையும் அமைந்து அதைச் சுற்றி, பளிங்குத் தொட்டிகளும் வைக்கப்பட்டிருந்தனவாம். குறு நில மன்னர்களைச் சிறையிட சிறைச்சாலை ஒன்றும் இருந்ததாம். அதன் அருகே ஆயுதச்சாலையும், அரங்க விலாசத்துக்கு மேற்கே அரச தந்திரிகள் தங்கும் அலங்கார மண்டபமும், அதற்குத் தென் மேற்கே பூசையறையும் இன்னும் பல அழகிய அறைகளும் சிங்காரத் தோப்பும் இருந்தனவாம். அரண்மனை உள்ளிடத்தில் மலர்ப் பூங்காவும் தெப்பக்குளமும்

இருந்தன. நடன சாலை ஒன்று அமைக்கப்பட்டுத் திருமலை மன்னன் தங்க ஆசனத்தமர்ந்து தீவட்டி வெளிச்சத்தில் நடனங்கண்டு மகிழ்வாராம். சொர்க்க விலாசம் என்னும் மண்டபம் அழகே உருவாக அரச அலுவல்களைக் கவனிக்க உபயோகப்பட்டு வந்ததாம். உன்னத உப்பரிகைகளையும், வானுற ஓங்கிய மாடங்களையும் சிகரங்களையும், கொண்ட அரண்மனையைச்சுற்றி அழகான மதில்கள் இருந்தனவாம். வெடி மருந்துக் கொட்டடி, புலி கரடி முதலிய கொடிய விலங்குகளோடு மல்லர்கள் போர்புரியும் சாலையும் இருந்தன. தென் கிழக்குப் பாகத்தில் இருந்த மலர் வனத்தில் திருமலை மன்னன் உலாவிப் பொழுது போக்குவாராம். இக் குறிப்புகளைத்தரும் கையெழுத்துப் பிரதி கூறும் இடங்களை இன்று அடையாளம் காண முடியவில்லை. சிற்பவளம் பொருந்திய பெரிய அரண்மனை ஒன்று இருந்தது என்பதையே அப் பிரதி பேசுகின்றது.

இக் குறிப்பில் காணப்படும் சிங்காரத் தோப்பு இன்றைய மஹாலுக்குத் தென் மேற்கே சிங்காரத் தோப்பு என்று அழைக்கப்பட்டுவரும் நகர்ப்பாகம் ஆகும். தெப்பக்குளம் என்பது இன்று மைனு தெப்பக் குளம் என்று அழைக்கப்படும் இடம் ஆகும். நைனு தெப்பக்குளம் என்பதே மருவி மைனு தெப்பக்குளம் என்று ஆயிற்று. திருமலை மன்னனது முழுப் பெயர் திருமலை சவுரி நாயினு அய்யுலு காரு என்பது. நாயினு என்பது நைனு வாகி பின்னால் மைனு வாகிவிட்டது, இந்த இடங்கள் இன்று இருக்கும் நிலையில் மஹாலின் சுற்றளவை அகக் கண் கொண்டு பார்த்தால் கிழக்கே வெளி வீதிக்கு கிழக்கேயும், தெற்கே தெற்கு மாரட்டு வீதி வரையும், வடக்கே பத்துத் தூணுக்கு வடக்கேயும், மேற்கே மஞ்சனக் காரத் தெரு வரையிலும் மஹாலும், அதைச் சூழ்ந்த மலர் வனங்கள் முதலியனவும் இருந்திருக்கலாம் என்று தெரிகிறது.

மஹாலின் கூடங்கள், மாடங்கள் வளைவுகள் தனிச் சிறப்போடு கீழ்நாட்டுக் கலையையும் மேலை நாட்டுக் கலையையும் தழுவிப் பார்ப்போர் உள்ளம் பரவசமடையும்படி சிறப்புற அமைக்கப்பட்டிருக்கின்றன பருமனான, நேரான, மகுடம் வைத்த அழகிய தூண்களுடன் கூடிய முகப்புகள், சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த வளைவுகள், நான்கு பேராலும் கை நீட்டி அணைத்து அளவிட முடியாத பருமனோடு அழகும் வாய்ந்த தூண்கள் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டிருப்பது-இவற்றை யெல்லாம் கண்டு களித்து உள்ளே செல்லுகிறோம். கம்பியோ, கட்டையோ இல்லாமல் சிறந்த சித்திர வேலைப்பாடுகள் அமைந்த விதானங்கள் தனி அழகுடன் நம்மைப் பரவசப்படுத்துகின்றன. இவைகளை அமைத்த சிற்பிகளின் திறனையும் சிற்பிகளை உற்சாகப் படுத்திய திருமலை மன்னருடைய சிறப்பையும் புலப்படுத்தும் எத்தனையோ கதைகளை வழிகாட்டியிடம் கேட்கலாம். மன்னன் சிற்பியின் திறமையைப் பாராட்டி சிறப்புச் செய்தான் என்பர். இது திருமலை மன்னனது கலையார்வத்தைக் காட்டுவதாக இருந்தாலும், தொழிலாளர்களிடம் எப்படி வேலைவாங்கவேண்டும் என்பதையும் கற்பிக்கிறது.

கட்டிடத்தின் வனப்பிலே நாம் வசமிழந்து நிற்கும்பொழுது, அதன் உறுதியையும் பாராட்டாமல் இருக்க முடியாது. இரும்புக் கம்பிகளோ, மரக் கட்டைகளோ

இல்லாமல் இவ்வளவு பெரிய கட்டிடம் உறுதியாகக் கட்டப்பட்டிருப்பது வியப் பூட்டுவதாகும். சாதாரண வெந்த சுண்ணும்பைத் தண்ணீர் விட்டு மணல் கலந்து குழைத்து அப்படியே கட்டிடம் கட்டும் இன்றைய மக்கள் கட்டிடத்தின் உறுதியைப்பற்றிச் சிந்திப்பதேயில்லை. நீற்றிய சுண்ணும்பை அரைப்பது என்பது இன்றைய வழக்கத்தில் மறைந்து வருகிறது திருமலை மன்னன் கட்டிடம் கட்டிய விதம் திருப்பணி மாலையில் அழகாகக் கூறப்பட்டிருக்கிறது.

"அரைத்த சுண்ணும்பை வெல்லச்சாறு விட்டு நன்
றுய்க் குழைத்துச் செங்கலும்
அடுக்காய்ப் பரப்பி கடுக்காயோடு ஆமலகம்
அரிய தான்றிக்காய் உழுந்து
ஒருக்கால் இருகால் இடித்து நன்னீரில்
ஊறிய கடுஞ்சாறும் விட்டு
ஊழிக் காலங்களினும் அசையாத
வச்சிரக்காரை"

அதாவது அரைத்த சுண்ணும்பை வெல்லச் சாறு விட்டு நன்ருய்க் குழைத்து, கடுக்காயுடன் நெல்லிக்காய் தான்றிக்காய் உழுந்து இவற்றை இருமுறை இடித்து, நல்ல தண்ணீரில் ஊறிய கடுஞ் சாறும் விட்டு, கட்டிடங்கள் கட்டினுன் என்னுமிச் செய்யுள் சுண்ணும்புச்சாறு உறுதியாக இருக்கும் வகையில் மன்னன் எடுத்துக் கொண்ட அக்கரையை நன்கு புலப்படுத்து கின்றது

கட்டிடத்தின் திண்மையை வியந்து நிற்கும் நிலையிலேயே நம்மை நமது வழி காட்டி விடுவாரா என்ன? ஒரு புதிர்போடு கிருர், "கள்வன் பெரியவனு? காப்பான் பெரியவனு?" என்று. இதற்கு நேரான விடை கூறமுடியாமல் திகைக்கிருேம்; அவர் நடந்த வரலாறு என்று ஒரு கதையைக் கூறுகிருர். திருமலைமன்னன், அரண்மனையின் கலை மென்மையையும் திண்மையையும் புகழ்ந்து கூறிய பொழுது, எவ்வளவு பலம் பொருந்திய கட்டிடமாய் இருந்தாலும், கடுமையான காவல் வைக்கப்பட்டிருந்தாலும் கள்வன் நினைத்தால் நுழையலாம் என்று சிலர் தங்கள் கருத்தை வெளியிட்டார்களாம். மன்னன் இதை ஒப்புக்கொள்ளவில்லை. மறுநாள் பொழுது விடிந்து, மன்னன் துயிலெழுந்தபொழுது தன் அறையின் மேல்பாகத்தில் கன்னம் போடப்பட்டிருப் பதைக் கண்டான். அன்று இரவில் தனது அறையில் வைக்கப்பட்டிருந்த சில பொருள்கள் களவாடப்பட்டிருப்பதையும் தெரிந்தான். மறுநாள் அரச அவையிலே களவாடிய பொருள்களை மன்னன் அடி களிலே வைத்து அடிபணிந்தான் ஒருவன். அவனே முதல் நாள் இரவு கன்னமிட்டுக் களவாடியவன் என்பது தெரியவந்தது. காப்போனைவிடக் கள்வன் திறமைமிக்க வன் என்பதைக் காட்டவே இந்தக் குற்றம் செய்ததாகக் கூறிய கள்வனை வியந்து அவனுக்குப் பல பரிசுகள் அளித் தாராம் மன்னர். கதை எப்படி?

'அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்ற வல்லார்' என்றதுபோல நாம் மெய்மறந்து வெளியில் வரும்போது சும்மா விடுவாரா நமது வழிகாட்டி? நீங்கள் தஞ்சை அரண்மனையைப் பார்த் திருப்பீர்களே? தஞ்சை மன்னன் மகள் திருமலை நாயக்கர் மருமகளாக வந்தாளாம். எல்லோரும் இந்த மஹாலைப் போற்று வதைக் கேட்ட அவள் மனம் பொறுதவ ளாய், "இந்தக் கட்டிடம் தஞ்சை அரண் மனைகளின் குளிப்பறைக்குக் கூட இணை யாகாது" என்று கூறினுளாம். இதில் வியப்பு ஒன்றும் இல்லை. பெண்கள் புகுந்த

இடத்தைவிடப் பிறந்த இடத்தைப் பெருமைப் படுத்திப் பேசுவது இன்று நேற்று வந்ததல்ல.

'அரசர் முடித்தலை அயர்ந்து உறங்காது' என்று ஆங்கிலப் புலவன் ஒருவன் கூறினான். எத்தனையோபோர்கள் திருமலை மன்னருக்கு. மைசூர் மன்னன் படையெடுப்பு, திருவாங்கூர்த் தொல்லை, ராமனாதபுரம் அரசுரிமைக் கலகம், இவ்வளவு தொல்லைகளுக்கும் இடையில் மீனாட்சியம்மன் கோயிலுக்குத் திருப்பணிகள் செய்து இம்மஹாலை நிறுவி நம் உள்ளத்திலும் நிலைபெற்று நிற்கிறாரே! இது மட்டுமா? ஆலவாய் அண்ணலை நாள்தோறும், பள்ளியறைக்குப் போகும் போது கடைசியாகவும் தன் கோவிலுக்குத் திரும்பும் போது முதன் முதலாகவும் சேவிக்கும் பேறுபெற்றுக் கூப்பிய கையுடனும், தன்னிரு மனைவியருடனும் ஆலயச்சுற்றிலே சேவித்துக் கொண்டல்லவா நிற்கின்றார்.



## கிள்ளைவிடு தூது

புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச் சொக்கர் கர்ப் பூரச்சொக்கர்
அழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்கர் அங்கயற்கண்
தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்கர் என்றுஎன்று சந்ததம் நீ
பழகிய சொற்குப் பயன்தேர்ந்து வாஇங்கென் பைங்கிளியே

—மதுரைக்கலம்பகம்

# மதுரைத் திருவிழாக்கள்

வித்துவான் நீ. சீ. சுந்தரராமன்

## விழாமலி மூதூர்

மாண்பு மிகப் பெற்றுயர் மதுரைமாநகர் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய முச் சிறப்பும் பெற்று விளங்குவதோடு, தமிழ் வளர்க்கும் விரிதமிழ்க் கூடலாகவும் பெருமைபெற்றுள்ளது. கலை வளர்க்கும் கருவூலமாகவும் விளங்குகின்றது. இத்த கைய மாநகரம் தன் நடுவில் விளங்கும் சுந்தரேசுவரர் திருக்கோயிலின் சிறப்பால் கோயில் மாநகரம் என்ற பெயரையும் பெற்றுள்ளது. கோயில் என்றாலே அங்கு விழாக்கள் தான். பழங்காலத்திலிருந்தே மதுரை நகரில் பல விழாக்கள் ஆண்டு முழுவதும் நடைபெற்றனவாக சங்க நூல் களிலிருந்து நாம் அறிகின்றோம். இன்றும் பல விழாக்கள் சிறப்புற நடைபெறுகின் றன. அதனால் மதுரை விழாமலி மூதூர் என்ற சிறப்பையும் பெற்றுள்ளது.

சிவாகமங்களில் விதித்தபடி ஒரு கோயிலில் நாள், வாரம், பட்சம், மாதம் ஆகியவைகளில் விழாக்களும், ஆண்டிற்கு ஒரு முறை பெருவிழாவும் (பிர்மோற்சவம்) கொண்டாடப் பெறுதல் வேண்டும். அவ்வ கையில் ஆண்டு முழுவதும் விழாக்கள் நிகழும் கோயிலாக விளங்குவது அன்னை மீனாட்சியின் கோயிலேயாகும். இக்கோயி லில் நிகழும் விழாக்கள் தனித்தன்மை வாய்ந்தவை, தத்துவச் சிறப்புடையவை. மக்களின் சமய வாழ்வு வளம்பெறுவதற் குரிய வழிகளில் கண்ணிற்கும், கருத்திற் கும் விருந்தளிக்கும் நிலைகளில் இவ்விழாக் கள் அமைக்கப்பட்டுள்ளன.

## ஆண்டு முழுவதும் விழாக்கள்

இக்கோயிலில் பன்னிரண்டு மாதங் களிலும் விழாக்கள் கொண்டாடப்பெறு கின்றன. இவ்விழாக்களில் சித்திரை, ஆடி ஆவணி, கார்த்திகை, தை, மாசி ஆகிய மாதங்களில் நடைபெறுபவை தீர்த்தம் கொடுக்கும் பெரு விழாக்கள் ஆகும். மற்றய ஆறு மாதங்களில் நிகழ்பவை காப்புக்கட்டி (ராட்சாபந்தனம்) நிகழ்ப வைகளாகும். சித்திரை மாதத்தில் நிகழும் விழாவில் மீனாட்சி திருமணம் நடை பெறுவது சிறப்பாகும். ஆடி மாதத்தில் மீனாட்சி அம்மைக்குத் தனி விழாக் கொண் டாடப்பெறுகிறது. ஆவணி மூல விழா வில் மணிவாசகர் பொருட்டு நரிபரியாக்கி மண் சுமந்த கோலம்கொள்கின்றார் சுந்த ரேசுவரர். கார்த்திகை மாதத்தில் சிவபெரு மான் ஆதியும் அந்தமுமில்லாத அரும் பெரும் சோதியாக அண்ணாமலையாக நின்ற பெருமையினை விளக்கும் வகையில் விழா அமைக்கப்பட்டுள்ளது. தை மாதத் தில் தெப்பத்திருவிழாவும், மாசி மாதத் திலே மண்டலோற்சவம் முப்பத்தொன்பது நாட்களும் கொண்டாடப்படுகின்றது.

முன் காலத்தில் மக்கள் திருமணங் கள் நான்கு நாட்கள் நடைபெற்றன. அவ் வகையில் மீனாட்சியம்மையின் திருமண நிகழ்ச்சிகளை நான்கு மாதங்களில் அமைத் துள்ளார்கள். திருமணம் சித்திரை மாதத் திலும், அதையொட்டி வசந்த விழா வைகாசி மாதத்திலும், ஊஞ்சல் திருவிழா (டோலோற்சவம்) ஆனி மாதத்திலும், முளைப்பாலிகைத் திருவிழா ஆடி மாதத்தி லும் நிகழ்கின்றன.

புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாக் கொண்டாடப் பெறுகின்றது. ஒன்பது நாட்களில் மீனுட்சியம்மை ஒன்பது திருக்கோலங்கள் பூண்டு அன்பர்கட்கு அருள் வழங்குகின்ருள். ஐப்பசி மாதத்தில் எல்லா மூர்த்திகளுக்கும் பூணூல் அணியும் பவித்திர உற்சவமும், அம்மையினுடைய கோலாட்டத் திருவிழாவும், முருகப் பெருமானுக்குரிய கந்தர் சஷ்டி விழாவும் நிகழ்கின்றன. மார்கழி மாதத்தில் தைலக் காப்புத் திருவிழாவும், பங்குனியில் கோடை வசந்த விழாவும் அமைந்துள்ளன.

**திருவிளையாடல்கள்**

மதுரைத் தலத்தில் கண்ணுதற் பெருமான் ஆடியருளிய அறுபத்து நான்கு விளையாட்டுகளுள் பலவற்றை ஆண்டு தோறும் மதுரைக் கோயிலில் நடைபெறும் விழாக்களில் நிகழ்த்திக்காட்டி வருவது இங்கு நிகழும் விழாக்களின் தனிச் சிறப்பாகும். ஆறு மாதங்களில் நிகழும் கொடியேற்றத் திருவிழாக்களில் ஆரும் திருநாளன்று சமணர்களை வாதில் வென்று சம்பந்தப் பெருமான் சைவ சமய ஸ்தாபிதம் செய்த திருவிளையாடல் நடைபெறுகின்றது. சித்திரைப்பெரு விழாவில் எட்டாம் திருநாளில் மீனுட்சியம்மைக்கு முடிசூட்டுவிழாவும், ஒன்பதாம் திருநாளில் திக்குவிஜயக் காட்சியும், பத்தாம் திருநாளில் மீனுட்சித் திருமண விழாவும் நிகழ்கின்றன. சித்திரா பௌர்ணமியன்று இந்திரன் தன்னுடைய பழியினை நீக்கியருளிய சோமசுந்தரப் பெருமானை வழிபடுகின்ற விழா நிகழ்கின்றது.

ஆவணிமூல விழாவில் முறையே கரிக்குருவிக்கு உபதேசித்து, நாரைக்கு முத்தியளித்தது, மாணிக்கம் விற்றது, தருமிக்குப் பொற்கிழி அழித்தது, உலவாக்கோட்டை அருளியது, வாள் வீரனின் அங்கம் வெட்டியது, வளையல் விற்றது, நரியைப் பரியாக்கியது, பிட்டுக்கு மண் சுமந்தது, விறகு விற்றது. ஆகிய திருவிளையாடல்கள் விளக்கப்பெறுகின்றன. தை மாதத்தில் முதல் நாள் (சங்கராந்தியன்று) கல்லானைக்குக் கரும்பருத்திய திருவிளையாடலை விழாவாகக் கொண்டாகிடுருர்கள். தைத் தெப்பத் திருவிழாவின் பன்னிரண்டாம் நாளாகிய பூசத்தன்று யானையெய்திய திருவிளையாடல் விளக்கப்பெறுகிறது.

ஆவணி மூல விழாவில் ஏழாம் திருநாளன்று சுந்தரேசுவரருக்கு முடிசூட்டு விழா நடைபெறுகின்றது. அன்று காலையில் இம்மையே நன்மை தருவார் கோயிலில் சுந்தரேசுவரர் தன்னைத்தானே வழிபாடு (சிவ வழிபாடு) செய்து கொள்கிருர். இவ்விழா மக்களனைவரும் சிவ பூஜை செய்து அதனுல் நல்லின்பம் பெறவேண்டுமென்பதைக் குறிக்கிறது.

பெரிய புராணத்தில் பேசப்பெறும் சுந்தர மூர்த்தி நாயனுர் வாழ்வில் திருமுருகன் பூண்டியில் நிகழ்ந்த வேடர் பறியினைச் சித்திரைத் திருவிழாவில் ஐந்தாம் திருநாளில் அமைத்துள்ளார்கள். இவ்வாறு சிவபெருமானின் திருவிளையாடல்களையும் அடியவரின் அற்புதச் செயல்களையும் திருவிழாக்களில் அமைத்து அருள்வழி காட்டியுள்ளார்கள் நம் முன்னோர்.

**விழாக்களும் வாகனங்களும்**

விழாக்களிலே இறைவனும் இறைவியும் உலா வருகின்றபோது அவ்வுலாக்களைச் சிறப்பிப்பன அவர்கள் அமர்ந்து வருகின்ற வாகனங்களேயாகும். அவ்வகையில் மதுரைத் திருக் கோயிலில்

அமைந்துள்ள வாகனங்கள் மிக அழகு டையன. அற்புதமான வேலைப்பாடுடை யன. சிவபெருமானுக்குரிய சிறப்பான வாகனமாகிய ரிஷபம் இங்கு மிக அழகிய முறையில் அமைந்ததோடன்றி ரிஷப வாகனக் காட்சி வேறு எந்தத் தலத்தி லும் அமையாத முறையில் ஆண்டிற்கு பதினெட்டு முறைகள் நடைபெறுகின் றது ரிஷப வாகனத்திற்கு அடுத்தபடி யாகக் குதிரை வாகனக் காட்சி சிறப்புடை யதாக அமைந்துள்ளது. ஆவணி மூலத் தன்று நரியைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துத் தன் அடியார் குற்றங்கள் நீக்குமாறு கொற்றக் குதிரையின் மீது உலா வருகின்றான். அன்று அங்கையற் கண் அம்மையும், முருகப் பெருமானும், மணிவாசகரும் குதிரை வாகனக் காட் சியை அளிக்கின்றனர். இன்னும் கைலாச வாகனம், காமதேனு, கற்பக விருட்சம், அன்னம், சிம்மம், கிளி, யாளி, நந்தி தேவர், பூதம், யானை முதலிய வாகனங் கள் மதுரைத் திருவிழாக்களின் மாண் பிற்கு உதவுகின்றன. மதுரைக் கோயிலி லுள்ள எல்லா வாகனங்களும் தங்கம், வெள்ளி ஆகியவைகளால் அமைந்த சிறப் புடையவை. திருமண நாளில் மீனாட்சி அம்மை பவனி வரும் பல்லக்கு அனந்த ராயர் பல்லக்கு என்று அழைக்கப்பெற்று முழுதும் தந்தவேலைப்பாடு கொண்டதாக விளங்குகின்றது.

ஆனித் திருமஞ்சனத்தன்றும், மார் கழித் திருவாதிரை அன்றும் கால்மாறியா டிய நடராஜர் புறப்பாடாகி வரும் கஜசம் ஹார வாகனம் மிக அழகிய வேலைப்பாடு கொண்டது. சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த இரண்டு வைரத் தேர்களும் உள் ளன.

### விழா நிகழும் வீதிகள்

மதுரையின் பெருமை இங்கு அமைந் துள்ள கோயிலின் சிறப்பாலும், அதனைச் சுற்றிலும் அமைந்துள்ள வீதிகளின் ஒழுங் காலுமே என்பதை யாவரும் அறிவர். அத்தகைய வீதிகளில் இறைவனின் திரு விழாக்கள் நடைபெறுகின்றன.

கோயிலின் பிரகாரமா யமைந்துள்ள ஆடி வீதிகளில் ஆடி, ஐப்பசி, கார்த் திகை, ஆகிய மாதங்களிலும், சித்திரை வீதிகளில் வைகாசி, மார்கழி, தை, மாசி, பங்குனி, ஆகிய மாதங்களிலும், ஆவணி மூல வீதிகளில் ஆவணி மாதத்திலும், சித்திரை மாதத்தில் மாசி வீதிகளிலும் இறைவனுடைய திருவுலாக் காட்சி கள் நிகழ்கின்றன. வெளி வீதிகளி லும், மாரட்டு வீதிகளிலும் மார்கழி மாதத் தில் அஷ்டமி பிரதட்சண விழா நடைபெ றுகின்றது. இவ்வாறு மதுரையின் எல்லா வீதிகளிலும் இறைவனுடைய திருவுலாக் காட்சிகள் நிகழுமாறு விழாக்கள் அமைக் கப்பட்டுள்ளன. எங்கேனும் யாதாகிப்பிறந் திடினும் அங்கே சென்று அருள் புரியும் இறைவன் மதுரையின் எல்லாப் பகுதிக ளிலும் வாழும் மக்களுக்கு விழாக் காட்சி களை நல்குமாறு விழாக் கொள்கின்றான். நையாத மனங்களை நைவிக்கின்ற வகை களில் இறைவனுடைய உலாக் காட்சிகள் மதுரைத் திருவிழாக்களில் அமைக்கப் பெற்றுள்ளன.

### பிற விழாக்கள்

மீனாட்சி சுந்தரேசுவரர்க்கு மட்டு மன்றி மற்றைய பரிவார மூர்த்திகளுக் கும் இம்மதுரையில் தனித்தனியே விழாக் கள் கொண்டாடப் பெறுகின்றன. சந்திர சேகரர், விநாயகர், முருகன், சண்டேசுவரர்

நந்திதேவர் ஆகிய மூர்த்திகளுக்கு மாசி மண்டலத் திருவிழாவில் விழாக்களை அமைத்திருக்கிறார்கள். பட்சந்தோறும் (பதினைந்து நாட்களுக்கொருமுறை) சந்திர சேகரரும், கார்த்திகை தோறும் முருகப் பெருமானும் திருவுலா வருகின்றனர். வார உற்சவமாக வெள்ளிக் கிழமைதோறும் சுவர்ணமூர்த்திகளாகிய (பொன்னுலாகிய) மீனாட்சி சுந்தரேசுவரர் ஊஞ்சல் விழாக் கொண்டாடுகின்றனர் நித்திய உற்சவ மாக நாள்தோறும் சுவாமி புறப்பாடு கோயிலின் உள்ளே நடைபெறுகின்றது. பிரதோஷ விழாவும் குறிப்பிடத் தக்கது. ஆனித் திருமஞ்சனத்தன்றும், மார்கழி திருவாதிரை அன்றும் ஐந்து நடராஜர்கள் புறப்பாடாகி வருவது மிகச் சிறப்பாகும்.

இனி அடியவர்களுக்கு நிகழும் விழாக்களைக் காண்போம். திருஞான சம்பந்தப் பெருமானுக்கு வைகாசியில் மூன்று நாட்கள் விழா நடைபெறுகின்றது. வைகாசி மூலத்தன்று சம்பந்தர் அறுபத்து மூன்று நாயன்மார்களுடன் காலையில் சிவி கையிலும், இரவில் வெள்ளிக்கோரதத்தி லும் பவனி வருகிறார். அப்பர் சுவாமி கள் சித்திரை சதயத்திலும், சுந்தர ரும் சேரமான் பெருமாள் நாயனாரும் ஆடிச்சுவாதியிலும் ஆவணி மூல வீதிக ளில் உலா வருகின்றனர். மாணிக்கவாச கருக்கு ஆனிமகத்தன்றும், மார்கழியில் திருவெம்பாவை நாட்களிலும் விழா நிகழ் கின்றது. இனித் தல அடியார்களான மங் கையர்க்கரசியார், நின்ற சீர்நெடுமாறர், குலச்சிறையார், மூர்த்தி நாயனார், வந்தி யம்மையார் ஆகியவர்களின் திரு நட்சித் திரங்களன்று அவர்களுக்குச் சிறப்பு விழாக்கள் கொண்டாடப் பெறுகின்றன. சண்டேசுவர நாயனாருடைய திருநட்சத்தி ரத்தன்று அவருடைய ரிஷப வாகனக் காட்சியும் நிகழ்கின்றது. இனி வேறு எந்தத் தலத்திலும் நடைபெறாத முறை யில் இங்கு அறுபத்துமூன்று நாயன்மா ரது நட்சத்திரங்கள் அன்று அவர்களு டைய திருவுருவப் புறப்பாடு ஆடி வீதி களில் சென்ற மூன்று ஆண்டுகளாக நடை பெற்று வருகின்றது. இவ்விழாவினை அமைத்துச் சிறப்புற நடத்திவரும் மதுரை வகையறு தேவஸ்தானத்தாரின் பணி பாராட்டற்குரியது.

சிறுத்தொண்டரிடம் பிள்ளைக் கறி கேட்பதற்காகப் பைரவ வேடத்துடன் சென்றார் என்பது வரலாறு. அதனைப் பைரவ நாடகமென அழைத்து சித்திரை பரணியிலும், ஐப்பசி பரணியிலும் ஆண் டிற்கு இரு முறை கொண்டாடப்படுகிறது.

எல்லைக் காவல் தெய்வங்களான மாரி யம்மனுக்கும், செல்லத்தம்மனுக்கும் முறையே சித்திரையிலும், தையிலும் திரு விழாக்கள் நடைபெறுகின்றன. இவ்வாறு மதுரைத் திருக்கோயிலில் எல்லாத்தெய் வங்களுக்கும், அடியவர்களுக்கும் சிறப் புற விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

### தேரோட்டமும் தீர்த்த விழாவும்

சித்திரை மாதத்தில் நான்கு மாசி வீதிகளில் வைரத் தேரோட்டங்களும் நிகழ்கின்றது. ஆடி மாதத்தில் மீனாட்சி யம்மைக்குச் சித்திரை வீதிகளிலும், ஆவணிமாதத்தில் ஆவணி மூல வீதிகளி லும், மாசி மாதத்தில் சித்திரை வீதிகளி லும் சட்டத் தேர்களில் விழா நடைபெறு கின்றது. கார்த்திகை தை மாதங்களில் முறையே ஆடி வீதிகளிலும், சித்திரை வீதிகளிலும் எடுப்புத் தேர்களில் விழா நிகழ்கின்றது.

சித்திரை பௌர்ணமியில் பொற்றாமரை தீர்த்தத்திலும், ஆடி மாதத்தில் கேட்டை நட்சத்திரத்தில் பொற்றாமரையிலும், ஆவணி அவிட்ட நட்சத்திரத்தில் வைகையிலும், கார்த்திகைத் திருவாதிரை நட்சத்திரத்தில் பொற்றாமரையிலும், தைத் திருவாதிரையில் பொற்றாமரையிலும், பூசத்தில் வண்டியூர் தெப்பக் குளத்திலும், மாசி மகத்தில் வைகையிலும் தீர்த்தவாரி விழாக்கள் நடைபெறுகின்றன.

திருமலை நாயக்கர் தம்முடைய பிறந்த நாளான தைப் பூசத்தன்று இறைவனுக்குத் தெப்பத் திருவிழாவை அமைத்தார். அது இராஜ உற்சவம் என்று அழைக்கப் பெறுகிறது.

### பிறதல மூர்த்திகளுக்கு மதுரையில் விழாக்கள்

மீனாட்சி சுந்தரேசுவரர்க்கு மதுரையில் விழாக்கள் நடைபெறுவதன்றி, மதுரையில் விளங்கும் கூடலழகர் கோயில், இம்மையில் நன்மை தருவார் கோயில், மதன கோபால சுவாமி கோயில், தல்லா குளம் வேங்கடாசலபதி கோயில், தெற்கு மாசி வீதி கிருஷ்ணன் கோயில், வீரராகவப்பெருமாள் கோயில் ஆகியவைகளிலும் ஆண்டுதோறும் விழாக்கள் நடைபெறுகின்றன. இதனினும் மேலாக மதுரையைச் சுற்றியுள்ள தலங்களில் விளங்கும் தெய்வங்களும் மதுரைக்கு ஆண்டுதோறும் எழுந்தருளி விழாக்கொள்ளும் சிறப்பு மதுரைக்கே உரியது. ஆண்டுதோறும் சித்திரா பௌர்ணமியன்று அழகர் கோயிலிலிருந்து சுந்தரராஜப் பெருமாள் மதுரைக்கெழுந்தருளி வைகையாற்றில் இறங்கி தசாவதாரக் காட்சிகளை நல்குவது மதுரையில் நடைபெறும் பெரிய திருவிழாக்களில் ஒன்று. இதனைக் காண பல இலட்சம் மக்கள் மதுரைக்கு வருவது தமிழ் நாடறிந்த ஒன்று. திருப்பரங்குன்றை முதற்படை வீடாகக் கொண்டு விளங்கும் முருகன் ஆண்டுதோறும் சித்திரை விழாவிலும், ஆவணி விழாவிலும் மதுரைக்கு எழுந்தருளி இரு முறை மயில் வாகனக் காட்சியினை அளிக்கின்றார். திருப்பரங்குன்றம் பவளவாய்க்கனிப் பெருமாள் மீனாட்சி திருமணத்திற்கு எழுந்தருள்கின்றார். ஆவணி மூல விழாவிற்குத் திருவாதவூரிலிருந்து மணி வாசகர் எழுந்தருளி மதுரையில் விழாக் கொள்கின்றார்.

### மதுரை விழாக்களின் சிறப்பு

மற்றய தலங்களில் நடைபெறும் விழாக்களுக்கும் மதுரையில் நடைபெறும் விழாக்களுக்கும் மிக வேறுபாடு உண்டு. பட்டமார்கள் வேடங்களைப் பூண்டு ஒவ்வொரு விழாவிலும் நடித்துக் காட்டுகின்றனர். அதன் மூலம் மக்கள் காட்சியின்பம் பெறுவதோடன்றி சமயக் கருத்துக்களை எளிதில் விளங்கிக் கொள்ளவும் முடிகின்றது. சமய அறிவைப் பரப்பும் வகையில் மதுரைத் திருவிழாக்கள் பாமரரஞ்சகமாக அமைக்கப்பெற்றுள்ளன. அதனால்தான் இவ்விழாக்கள் தமிழ் நாட்டு மக்களிடம் தனிச் சிறப்புப் பெற்றுள்ளன.

"மண்ணினிற் பிறந்தார் பெரும் பயன் மதி சூடும் அண்ணலார் ........ நல் விழாப் பொலிவு கண்டார்தல்" என்ற ஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கிற்கிணங்க மதுரைத் திருவிழாக்களைக் கண்டு களித்துப் பயன் பெறுவோமாக.

---

# சீதளக் குறிப்பேடு

இ. பழனியப்பன்

இக்காலத்தில் வரலாறுகள் எழுதப்படுவது போன்ற பழக்கம் பொதுவாகப் பண்டையத் தமிழ் மக்களிடையே இருந்ததில்லை என்றே கூறலாம். கல்வெட்டுக்களில் சில குறிப்புகள் ஓரளவு காணப்படினும் அதனை எழுதியவர்கள் வரலாற்று நோக்குடன் எழுதியதாகத் தெரியவில்லை. ஒருவர் செய்த அறக்கட்டளையைக் குறிப்பிடும்பொழுது, அவர் புகழையும் கூறுவனவாகவே பெரும்பாலான கல்வெட்டுகள் அமைந்துள்ளன. அதனால் அவைகள் மெய்க்கீர்த்திகள் என்று வழங்கப்படுகின்றன. புகழ்ச்சிகள் பலசமயங்களில் மிகைப் படுத்திக் கூறப்படுவது இயல்பேயாகும். ஒருவரைப் புகழும்பொழுது அவர் குறைகளைக் கூறுவது பண்டைய தமிழர் பண்பல்ல. ஆகவே கல்வெட்டுக்களின் மூலம் பண்டைய வரலாற்றை நாம் ஓரளவே தெரிந்து கொள்ளலாம். அது போன்றே தமிழ் இலக்கியங்களிலும் ஓரளவே வரலாற்றைக் காணலாம். தொடர்ச்சியாக அரசியல் வரலாற்றையோ அல்லது புகழ்பெற்றோர் வாழ்க்கை வரலாற்றையோ குறிப்பிடும் பண்டைய நூல்கள் கிடையாது. விசயநகர நாயக்கர்கள் மதுரையில் ஆட்சிபுரிந்த காலத்தில் தனிப்பட்ட சிலர் இம்முயற்சியில் ஈடுபட்டுச் சில குறிப்புகளை எழுதிவைத்தனர். வெளிநாட்டிலிருந்து இங்குவந்த கிறித்துவப்பாதிரிமார்கள் எழுதிய கடிதங்களில் இந்நாட்டு நடப்பைப் பற்றியும் அரசியலைப் பற்றியும் குறிப்பிட்டிருந்தனர். நல்லூழின் பயனாய் அவைகள் பாதுகாக்கப் பெற்று இன்று வரலாற்று ஆசிரியர்களின் ஆராய்ச்சிகளுக்குப் பெருந் துணையாய் இருந்து வருகின்றன.

சீதளக் குறிப்பேடு அல்லது சீதளப் புத்தகம் என்பது ஒரு வரலாற்றுக் குறிப்பேயாகும். இதைச் சீதாளம் சீதலம், சீதாலம் எனப் பலவகையாய்க் குறிப்பிடுகின்றனர். திருக்கோயிலை மையமாக வைத்து எழுதப்பெற்ற வரலாற்றுக் குறிப்பானதால் இது திருத்தலம் அல்லது சீதலம் என்னும் பெயரைப் பெற்றிருக்கலாம். திருக்கோயிலின் அடிப்படையான வரலாறுகளைக்கூறுவதால் சீதளம் என்று வழங்கப் பெற்றிருக்கலாம்.

அக்காலத்தில் அன்றாடக் கோயில் கணக்குகளை எழுதும் "சுத்தறைக் கட்டளை" என்னும் பதவியை வகித்தோரே சீதளக் குறிப்பேட்டையும் எழுதவேண்டும். அக்கணக்கர்கள் எழுதிய குறிப்புகள் நல்ல தமிழில் எழுதப்படாது அக்காலப் பேச்சுத் தமிழில் எழுதப்பெற்றுள்ளன. கோயில் வரலாறு நாட்டின் அரசியல் வரலாற்றைச் சார்ந்ததாகவே இருந்துவந்தன. அதனால் கோயிற் குறிப்பேடாகிய சீதளப் புத்தகத்தில் பல அரசியல் குறிப்புகளையும் ஆங்காங்கே காணலாம். மேலும் கோயிற்பணியிலீடுபட்டோர் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட பொறுப்புகள், திருநாட்கள் எவ்வெப்பொழுது எப்படி நடைபெறும் என்பதின் விளக்கம், கோயிலில் நடைபெறும் விசேட நிகழ்ச்சிகள் முதலியன சீதளப் புத்தகத்தில் குறிக்கப் பெற்றிருக்கும்.

மதுரை மீனாட்சி சுந்தரர் திருக்கோயிலின் சீதளப் புத்தகம் சுமார் முன்னூறு ஆண்டுகளுக்குமுன் எழுதப்பெற்று கணக்கறையில் பாதுகாப்பாக இருந்து வந்தது. காலப்போக்கில் அச்சீதள ஏடுகளில் பல செல்லரிக்கப் பெற்று மறைந்துவிட்டன. சுமார் நூறாண்டுகளுக்கு முன் திருஞான சம்பந்தர் மடாலயத் தலைவரின் மேற்பார்வையில் மதுரைக் கோயிலின் ஆட்சி நடைபெற்ற பொழுது, எஞ்சிய ஏடுகளுக்குப் படிவம் எடுக்கப்பெற்றன. அப்படிவமே இன்று கோயிலில் இருக்கின்றன. மூல ஏடுகள் முழுவதும் அழிந்து விட்டன என்றே கருதவேண்டும்.

சீதளப் புத்தகத்தில் பல அரிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. எடுத்துக்காட்டாகப்பல ஆண்டுகளுக்கு முன், மீனாட்சி அம்மையின் முடி சூட்டு விழா மதுரைக் கோயிலில் எவ்வாறு நடைபெற்றது என்பதை அப்புத்தகத்தில் உள்ளவாறே கீழே குறிப்பிடுகின்றேன் :-

(அடைப்புக் குறிகளுக்குள்ளேயுள்ளன விளக்கச் சொற்களாகும்.)

" திருமலை அய்யன் சவுரி அய்யன் அவர்கள் (திருமலை நாயக்கர்) நாளையில் ஸ்தலம் பிரபலமாகி உச்சவங்களும் உண்டு பண்ணிவிச்சதின்பேரில் சித்திரை மீ எட்டாம் திருநாள் காலமே ஸ்தானீகாள்யிருவகை பட்டமாரும் (குலசேகரப் பாண்டியப் பட்டர் விக்கிரம பாண்டிப் பட்டர்) சமட்சுமத்தில் (அரச சமூகத்தில்) அறியப் பண்ணிவிக்கிறது (அறிவிப்பர்). உடனே துரையவர்கள் (திருமலைநாயக்கர்) ஸ்நானபானம் பண்ணி ஆசாரமாய் உபவாசமாயிருந்து தீபம் வைத்தவுடனே சுவாமிக்கி அலங்காரமாகி, அம்மன்கோவில் ஆறுகால் பீடம் அலங்காரம் பண்ணி, அந்தமண்டபத்தில் ரெத்தின சிம்மாசனத்தில் எழுந்தருளப் பண்ணிவிச்சு, அனேக தீவட்டியள் ஆடல் பாடலுடனே மேளவாத்தியங்களும் சோபிதமாய் எழுந்தருளி, அபிசேகத்துக்கு சுவர்ண கும்பத்தில் திருமஞ்சனம் ஆரிச்சு, நம்பியாகிய சதாசிவப்பட்டர் விதிவத்தாய் (விதிப்படி) மந்தரகர்மங்கள் நடப்பிவிப்பார்கள். ஸ்தானீகாள் ஏழு பேரும் கருவூலம் ஆபரணப்பெட்டி திறந்து, பட்டாபிஷேக கிரீடமும் செங்கோலும் கெட்டி முதலி வகை......தேவ முதலி, பெரியதேவமுதலிக்கு ஒருவர் மகர முத்திரையும், ஒருவருக்கு மரகதக் கொடியும், விழுப்பாதராயனுக்குப் பொன் எழுத்தாணியும், பாண்டிநாட்டு முதலியாருக்கு ரிஷப முத்திரையும், கேசவ தீட்சதரய்யனுக்கு நாகர முத்திரையும் யிவ்வளவும் திருவாபரண தட்டுள் எடுப்பிச்சுக் கொண்டு, ஸ்தானீகாள் சங்கீதமேளத்துடன் வருகிறது. வந்தவுடன் அம்மன் சமட்சமத்தில் (முன்னிலையில்) வைத்து நம்பியார் பூசைபண்ணி உடனே பட்டாபிஷேகமும் நடந்துயிருவகை பட்டமாரும் கிரீடமும் செங்கோலும் சாத்திவிச்சு நெய்வேதனமும் ஆகியிருக்கும். உடனே கட்டியக் காரறை சமயம் வரலாமென்று ஏவின சுவாமியிடத்தில் அறியப்பண்ணிவிச்ச மாத்திரத்தில், பட்டத்து யானையின் பேரில், அவுதா அம்பாரி தங்கத்தினால் அலங்காரம் பண்ணியிருக்கிற ஆனையின் பேரில் ஏறிக்கொண்டு, எழுபத்திரண்டு பாளையபட்டு துரைகளும் (ஜெமீன்தார்களும்) அவரவர் விருதுகளுடனே சனங்களுடனே ஆயுதபாணியளாய் பதினெட்டு வகை மேளவாத்தியங்களுடனே அனேக தீவட்டி......வத்தியுடனே, வானவித்தையள் நாடகசாலைப் பெண் கேளிக்கையு

டனே, துரையவர்கள் (திருமலே நாயக்கர்) செங்கோலே வாங்கக் கோவிலுக்கு வருகிற வைபவம் எழுதிமுடியாது. உடனே கோவில் வாசலில் வந்து ஆனேயைவிட்டு யிறங்கி சகல சம்பாவத்துடனே ஆறுகால் பீடம் வந்து சேருவார்கள். உடனே அம்மனுக்கு சோடச உபசார தீபாருதனே நடக்கும். தெரிசனமானவுடனே யிருவகைப்பட்டமாரும், விபூதி முதலான பிரசாதங்கள் குடுத்து சுவாமிக்கி சாத்தியிருக்கிற நிலே மாலேயும் ரெட்டை மாலேயும் எடுத்து துரைக்கு சமர்ப்பிவிச்சு சாதிரா பரிவட்டம் ரெட்டை பரிவட்டமும் கட்டி செங்கோலும் எடுத்துக் கையில் கொடுப்பார்கள். பின்னுடனே ஸ்தானிகாள் ஏழு பேருக்கும் சன்னிதானத்தில் விபூதி பிரசாதம் சந்தனம் கொடுத்து அவரவர் முத்திரையனே எடுத்து யிருவகைப்பட்டமாரும் அவரவரிடத்தில் குடுப்பார்கள். அவரவர் வாங்கிக் கொண்டு துரையுடனே சன்னதி வாசலுக்கு வந்து உடனே, துரை யானே மேல் கொண்டு பட்டணப் பிரவேசம் வருவார்கள், ஸ்தானிகாள் பட்டமார் ரெண்டு பேருக்கும் பல்லக்கும் மத்த அஞ்சு நிருவாகியளுக்கும் குதிரை சுருட்டியும் ஏறிக் கொண்டு பட்டணப் பிரவேசம் துரையுடன் கூடவே வருவார்கள், கோவில் அம்மனேயும், சுவாமி கோவில் ஆறுகால் பீடத்தில் எழுந்தருளி யிருகிற யிளேய நயினுரையும் (உற்சவர்) வீதிக்கு எழுந்தருளப் பண்ணி, சேத்தியில் எழுந்தருளி அபிஷேகம் நெய்வேதனம் தீபாராதனேகள், பல்லக்கு சொக்கர்(பள்ளியறைச் சொக்கர்) எழுந்தருளி கோவில் பீக முத்திரையாகும் (அடைக்கப்படும்) சகல சம்பாவத்துடனே ஒய்லாய் (அழகாய்) பட்டணப் பிரவேசம் வந்து அரமனேயில் ஆஸ்தான மண்டபம் போய்ச் சேருவார்கள். ஆஸ்தான மண்டபம் அநேகவிதமாய்ச் சிங்காரித்து நடுவே சிங்காசனம் போட்டிருக்கும். அதிலே செங்கோலே எழுந்தருளப் பண்ணி தாமும் சமீபத்தில் கிட்டயிருப்பார்கள். ஸ்தானிகாளுக்கு சமீபத்திருக்கச் சொல்லி உத்திரவாகும். செங்கோலுக்கு நெய்வேதனம் தீபாருதனே நடக்கும். பிரதானி தளவாய் முதலான பாளேயக்காரத் துரை மக்கள் சீமையார் சகலத்தினரும் துரைக்கு காணிக்கை குடுத்து கண்டு கொள்வார்கள். அது நடந்ததின் பேரில் முன்னமே சதாசிவப் பட்டர் மாளுவ சக்ரவர்த்தியன் இரண்டு பேருக்கும் சாதிராவும் கடயமும் வெகுமதி யாகும். மத்த அஞ்சு நிருவாகியளுக்கும் சால்வையும் கடுக்கனுவது கண்டாபரணமாவது வெகுமதி செய்வார்கள். மத்த பரிசனங்களுக் கெல்லாம் அவரவருக்கு குண்டான சட்டத்தின்படி வெகுமதி நடக்கும். ஸ்தலத்தார் பரிசனங்களே சுவாமி காரியம் பாருங்க என்பதாய் கோவிலுக்குப் போய்வரச் சொல்லி உத்திரவாகும். அப்பால் அரமனேயைச் சார்ந்த பிரபுக்கள் பாளேயக்காரர் வித்துவான்கள் எல்லாருக்கும் வெகுமதி நடப்பிவிச்சு, சர்வத்திராளும் விடுதிக்குப் போகச் சொல்லி உத்திரவு செய்து போட்டு துரை அந்தப்புரத்திற்குள் எழுந்தருளுவார். செங்கோல் ஆஸ்தான மண்டபத்தில் சிங்காசனத்திலிருக்கும். இதர்க்குள்ளாக அருணேதயமாகும். மறுநாள் காலமே புண்ய பூசைபண்ணி செங்கோல் கோவில் வாசல் வந்து சேரும். இந்தப்படிக்கு சித்திரை நாளில் நாச்சியாருக்குப் பட்டாபிசேகம் நடக்கும்.

இதுவே சட்டமாய் விசயறெங்கப் பிரபு நாள் வரைக்கும் (விசயரெங்க சொக்கநாதர் 1706-32) நடந்தது.

துரைக்குப் பிள்ளையில்லாமல் பட்டம் ஸ்ரீமீனுட்சி அம்மாள் ராசரீகம் பண்ணு கையில், பெண் பிள்ளை துரைத்தன மான தால், சீமை வேங்கிடப்பெருமாள் நாயக்கர் பெரிய வேங்கிடப்பெருமாள் நாயக்கர் இரண்டுபேரும் மேற்படியார் சகோதர மானதால் பிரபுக்கள் ரெண்டுபட்டு நாம் செங்கோல் வாங்குவோ மென்றும் நீர் வாங்குர தென்றும் பிரமாதமாய் சமடசம் வரைக்கும் கறைஏறி ஒருவரும் வாங்கத் தேவையில்லை என்று அரமனை புரோகிதர் பேரைய்யப்பட்டரை வாங்கச் சொல்லி அனுப்பிவிச்சார்கள். அப்படிக்கி ஒரு வருஷம் வாங்கினுர். மறுவருஷம் பேரைய்யப்பட்டர் தெய்வீகமானுர். மகா மண்டலாதி பதியாகிய ராசாக்கள் வாங்கிஞல் தலைபொறுக்குமே யல்லாது மத்தப்பேர் வாங்கப்படா தென்று சமஸ்தானத்திலிருக்கிற பேரெல்லாம் நிதானிச்சு யோசித்து அப்பால் சகாப்தம் ௬௬ளுடு௬ (கி. பி. 1734) க்கு மேல் செல்லா நின்ற பிங்கள ஞு சித்திரைமீ˚ சதாசிவப் பட்டர் கையில் தந்து ஆலயத்துக் குள்ளாகவே கால் நடையாய் மேளதாளத்துடன் சுவாமியை வலம் வந்து உடனே செங்கோலை சுவாமிக்கு சாத்திப்போட்டு அப்பால் சுவாமி அம்மனையும் வீதிக்கு அனேக பரிவட்ட வகையளுடனே எழுந்தருளப் பண்ணிவிக்கச் சொல்லி கோட்டை கட்டளை அதிகாரி வேங்கிடகிருஷ்ண மறவுத்தருக்கு (நாயக்கருக்கு) உத்தரம் வந்து அப்படியே நடந்தது.''

அன்று முதல் அதுபோன்றே முடி சூட்டுவிழா இன்றும் நடந்து வருகின்றது. ஆனல் செங்கோலைப் பட்டமார் ஏந்தி வலம் வருவதற்குப் பதிலாக இப்பொழுது சில ஆண்டுகளாகத் தர்மகர்த்தாக் குழுவின் தலைவர் செங்கோலைப் பெற்று வருகின்ருர். இதுபோன்ற பல அரிய செய்திகள் அடங்கிய புத்தகமே சீதளக் குறிப்பேடாகும்.

# மதுரைக் கோயில்களின் கல்வெட்டுச் செய்திகள் *

வை. சுந்தரேச வாண்டையார்

## கல்வெட்டுக்கள் இருக்கும் இடங்கள்

மதுரை மாநகரில் சுந்தரேஸ்வரர் திருக்கோயிலில் தெற்குப்புறச் சுவர், அக் கோபுரத்துத் தூண் ஒன்று, இரண்டாம் கோபுரத்தின் கிழக்குப்புறச் சுவர், மேற்குக் கோபுரத்தின் வடபுறச் சுவர், கிழக்குக் கோபுரத்தில் இரண்டாவது மாடிப் பகுதியில் உள்ள ஐந்து தூண்கள், கம்பத்தடி மண்டபத்தில் உள்ள சில தூண்கள், புது மண்டபத்துக்கு அருகில் உள்ள கோபுரம், இராச கோபுரத்துத் தெருவில் உள்ள எழுகடல் தீர்த்தத்துக்கு அருகில் நிறுத்தி வைக்கப் பெற்றுள்ள ஒரு கல், மூன்றும் பிராகாரத்தில் மீனுட்சி அம்மையார் கோயிலின் கிழக்குப்புறச் சுவர், ஆகிய இடங்களிலும்; கூடல் அழகர் கோயிலில் கர்ப்ப இல்லின் (Central Shrine) வடக்கு, மேற்கு, தெற்குப் புறச் சுவர்கள், அக் கோயில் மண்டபத்தின் தெற்குப்புறச் சுவர், இவைகளிலும், மதன கோபால சாமி கோயிலில் உள்ள பல துண்டுக் கற்களிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளன்றி, மதுரை ஜில்லா கலெக்டர் பங்களாவில் நிறுத்தி வைக்கப்பெற்றுள்ள ஒரு தூணிலும் கல் வெட்டு இருக்கின்றது.

## கல் வெட்டுக்களில் குறிக்கப் பெற்றுள்ள அரசர்கள்

சுந்தரேஸ்வரர் கோயிலில் பழங் காலத்துப் பாண்டிய மன்னர்களுடைய கல்வெட்டுக்கள் இல்லை. **பிற்காலத்துப் பாண்டிய மன்னர்களில்** சடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவர் (கி.பி. 1190—1217), ஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணுடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர் (கி.பி. 1216—1235) கோசடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவர் காலங்களிலும்; **மதுரை நாயக்க மன்னர்களில்** விசுவநாதநாயக்க கிருஷ்ணப்ப நாயக்கர் மகனுர் வீரப்ப நாயக்கர் (கி.பி. 1572—95), திருமலை

---

* See the annual reports on South Indian Epigraphy for the years.

1890—Nos. 46—48, 50

| | |
|---|---|
| 1905— ,, 58—62 | 1915— ,, 5—7 |
| 1907— ,, 502—511 | 1918— ,, 340 |
| 1908— ,, 35—36 | 1936— ,, 203 |
| 1911— ,, 557—560 | 1938— ,, 161 |

South Indian Inscriptions Vol. IV Nos. 369—371, 373.
A Topographical list of the Inscriptions of the Madras Presidency. By Rangacharya, M. A. L. T., Vol. II and Mr. Swell's List of Antiquities Vol. II.

நாயக்கருக்கு முன்பு ஆண்ட வீரப்ப நாயக்கர் ( கி.பி. 1609—1627 ), முத்து வீரப்ப நாயக்கர் ( கி.பி. 1680—89 ) விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ( கி.பி. 1705—31 ) இவர்கள் காலங்களிலும் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

### இறைவரின் திருப்பெயர்

பாண்டிய மன்னருடைய கல்வெட்டுக்களில் இறைவர், திருவாலவாயுடைய நாயனூர் என்றும், மதுரை நாயக்கர் கல்வெட்டில் சொக்கநாத சுவாமி என்றும் கூறப்பெற்றுள்ளார்.

### இறைவியாரின் திருப்பெயர்

மதுரை நாயக்கருடைய கல்வெட்டில் இறைவியார் மீனுட்சி அம்மை என்று வழங்கப்பெற்றுள்ளார்.

### மண்டபங்கள்

கம்பத்தடி மண்டபம் :— இம்மண்டபம் விசுவநாத நாயக்க கிருஷ்ணப்ப நாயக்கர் மகனுர் வீரப்ப நாயக்கரால் சகம் 1505-இல் அதாவது கி. பி. 1583-இல் கட்டப்பெற்றதாகும். இதை இம் மண்டபத்தில் தூண் ஒன்றில் உள்ள கல்வெட்டால் அறியலாம். ( A.R.E. 35 of 1908 ) என்வே இம் மண்டபம் கட்டப்பெற்று இற்றைக்கு 380 ஆண்டுகள் ஆகின்றன. இம் மண்டபத்தைப்பற்றி வீரப்ப நாயக்கரது செப்பேட்டுச் சாசனம் (copper plate grant) ஒன்றிலும் குறிக்கப் பெற்றுள்ளது. ( Annual report for 1905—06 Part II Para 60 ). இம் மண்டபத்துத் தூண்களில் இத்தலத்துப் புராண வரலாறுகளைப்பற்றிய சித்திரங்கள் அழகாகச் செதுக்கப் பட்டுள்ளன.

### நரலோக சூரியன் மண்டபம்

இப்பெயருடைய மண்டபம் என்று இக்கோயிலில் இருப்பதைத் திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது. (A.R.E. 40f 1905) அதில் மகேஸ்வரர்களுக்கு (சிவனடியார்களுக்கு) அன்னம் அளிக்கப்பெற்று வந்தது. அதன் பொருட்டு பாகனூர்க் கூற்றத்தில் நிலம் விடப்பெற்றிருந்தது.

### புதுமண்டபம்

இதில் மதுரை நாயக்க மன்னர்களுடையவும் அவர்கள் தேவியர்களுடையவும் உருவச் சிலைகள் இருக்கின்றன.

### சப்தசாகர தீர்த்தம்

(எழுகடல் தீர்த்தம்) இது ராய கோபுரத் தெருவில் ஸ்ரீ சொக்கநாதசுவாமி முன்னுக இருக்கிறது. விஜய நகர அரசராகிய கிருஷ்ண தேவராயருடைய நன்கொடையாக சாளுவநரச நாயக்க நாராயணன் என்பவரால் சகம் 1438 அதாவது கி. பி. 1516 இல் வெட்டப்பெற்றது.

### திருமடம்

சத்தியஞான தரிசனிகளாகிய ஞானக்கூத்தருடைய திருமடம் ஒன்று சகம் 1469இல் அதாவது கி. பி. 1547 இல் இருந்ததை முதற் கோபுரத்தின் தெற்குப் புறச் சுவர்கல் வெட்டு அறிவிக்கின்றது.

### அளிக்கப்பெற்ற நிவந்தங்கள்

திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டார், திருவாலவாய் உடைய நாயனூர்க்குத் திருமஞ்சனத்துக்குக் கற்பூரம், கஸ்தூரி, குங்குமம், சந்தனம், பனிநீர் உட்பட வேண்டும் படிவிஞ்சனத்

துக்கு, வேண்டும் முதலுக்கு மூத்தூர் கூற்றக் கூற்றத்து, கப்பலூரான உல களந்த சோழநல்லூர் கரிய மாணிக்க ஆழ்வான் திருவுடைய நாயகரான வீர பாண்டியக் காலிங்கராயர் காணியான, அண்ட நாட்டு புரவரி நல்லூரான சேத்து வாய்த்த நல்லூர், நான் கெல்லைக் குட் பட்ட நன்செய் புன்செய் வாழை கொழுந் துள்ளிட்ட வான்பயிரும், மாவடை, குள வடை, தறியிறை, செக்கிறை, தட்டொலி, தட்டிறை, தட்டாரப் பாட்டம், உப்பட அனைத்து ஆயங்களும், கடமையும், கொற்றிலக்கை, கடைக்கூட்டிலக்கை, பஞ்சு பீலி, சந்திவிக்கரப்பேறு, வாசல் விநியோகம் உட்பட அனைத்து உபாதி களும், வரியிலும் கழித்து, ஆண் டொன்றுக்கு வாடாக்கடமையாக நாற்பது பொன் இறுக்குமாறு ஏற்பாடு செய் திருந்தார். கோசடைய பன்மரான திரி புவனசக்கரவர்த்தி வீரபாண்டிய தே வரின் 21ஆம் இராச்சிய ஆண்டில், திரு வாலவாய் உடைய நாயனர் கோயில் பங்காளர், தேவகன்மி, ஸ்ரீமாகேஸ்வரக் கண் காணி செய்வார்கள் ஆகிய இவர்கள் திருவாலவாய் உடையாரின் தேவதானம் திருநாமத்துகாணி மாடக்குளக் கீழ் முடித் தலை கொண்ட பாண்டியச் சதுர்வேதிமங் கலத்தின் கீழ்ப்பிடாகை மாத்தூர், நெடுங் காலம் வரம் பிழிந்து பருமாக்காடாய் கிடந்தமையால், அதை வாது செய்த வாரணமுடைய நாயனர் கோயில் கைச் கோளரில் மாதேவர் அழகிய சொக் கனரான சுந்தரபாண்டிய சோழகோனர்க் குக் காராண்மை காணியாக அநுபவித்துக் கொள்வதாக கற்பூரவிலைக்கு நிச்சயித்து புதுக்குளிகை பொன் 250 பெற்று அதைக் கோயில் கருவூலத்தில் ஒடுக்கிக் கொண் டனர், மேலும் இவ்வூர்க்கு வரும் கடமை, அந்தராயம், பொன்வரி, வினியோகம் வெட்டிப் பாட்டம், பஞ்சு பீலி, சந்தி விக்கிரகப்பேறு, ஓலையெழுத்து, விநி யோகம், தறியிறை, செக்கிறை, தட் டொலி, தட்டாரப் பாட்டம், இடைவரி ஏரிமீன் பாட்டம், இலாஞ்சினைப் பேறு, காணிக்கை, கார்த்திகைப் பச்சை, ஆனைச் சாலைபந்தி, குதிரைப்பந்தி உள்ளிட்ட எப் பேர்ப்பட்ட இறைகளையும் கொண்டு காட்டைவெட்டி, நிலமாக்கி, ஒரு மாவுக்கு நெல் நாற்கலமும், இதன் எதிராம் ஆண்டு மாவுக்கு நெல் ஆறுகலமும், இதன் எதிரா மாண்டு மாவுக்கு நெல் எண்கலமும், இதன் எதிராமாண்டு மாவுக்கு பன்னி ரண்டு கலமும், இதன் எதிராமாண்டு முதல் நில வரிசையால் மாவுக்கு நெல் பதினைந்து கலமும் ஆண்டு தோறும் பயிர்பார்த்து பயிர்நின்ற நிலத்துக்கு இவ்வரிசைப்படி, இறுக்கவும் ஏற்பாடு செய்திருந்தனர் இங்ஙனம் விலைப்பிர மாணம் பண்ணிக் கொடுத்த மாத்தூர்க்கு எல்லை :—

கீழெல்லை துவரமான் குளத்து நீர் நக்கலுக்கு மேற்கும், தென்னெல்லை நாக மலைக்கு வடக்கும், மேலெல்லை முடித்தலை கொண்ட பாண்டிய சதுர்வேதி மங்கலத்து தென்வடலான கீழைகண்ணுறு சீவல லவப் பிலாற்றுக்குக் கிழக்கும், வடஎல்லை வட எல்லை வைகையாற்றுக்குத் தெற்கும் ஆக இப்பெரு நான்கு எல்லைக்குட்பட்ட தாகும்.

இவைகளன்றித் திருவிளக்குப் புற மாகவும் நிலங்கள் விடப்பட்டிருந்தன.

### மதுரைக் கூடல் அழகர்கோயில் கல்வெட்டுக்கள்

இக்கோயிலில் மண்டபத்தின் தென் புறச் சுவர் கல்வெட்டு, இக் கோயிலின்

கர்ப்ப இல் (central shrine) அர்த்த மண்டபம் இவைகளைக் கட்டுவதற்குக் கருங்கற்கள் கந்தாடை அண்ணன் பொருட்டு, கந்தாடை கோணமானால் கொடுக்கப்பெற்றுள்ளன என்றும், கோயில் கட்டி முடிவு பெற்றது, எல்லப்ப நாயக்கர் அரசியல் அலுவலாளராக இருந்த காலம் என்பதையும் குறிப்பிடு கின்றது. மேலும் இக்கல்வெட்டு இராம ராச விட்டல தேவமகா ராயரையும், அவ ருடைய உதவியாளர் வசவண்ண நாயக்கர் மகனார் திம்மப்ப நாயக்கரைப் பற்றியும் தெரிவிக்கின்றது.

கர்ப்பஇல்லின் வடக்கு மேற்கு, தெற்குப்புறச் சுவர்கள் கல்வெட்டு விசுவநாத நாயக்கர் திம்மப்ப நாயக்கரால் ஒரு வீடும், பொருளும் அளிக்கப்பெற் றதைக் கூறுகின்றது. மற்றொரு கல் வெட்டு விசய நகர மன்னன் வீரப்பிரதாப சதாசிவ மகாராயரால் சகம் 1473 அதாவது கி.பி.1551 இல் கூடல் அழகிய பெருமா ளுக்குத் திருவமுது, திருவிழா இவை களின் பொருட்டு மூன்று ஊர்கள் விடப் பட்டிருந்ததைக் கூறுகின்றது.

### மதனகோபாலசுவாமி கோயில் கல்வெட்டுக்கள்

இக்கோயிலில் பல துண்டுக் கற்களில் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை களில் மூன்று துண்டுகள் வட்டெழுத்துக் களில் செதுக்கப்பெற்றுள்ளன. அவ் வட்டெழுத்துத் துண்டுக் கல்வெட்டு ஒன்றில் அரசர் பெயர் காணப்பெறவில்லை. ஆண்டு மாத்திரம் 38 என்று குறிக்கப் பெற்றுள்ளது. அதில் திருத்துருத்தி மகாதேவரைப் பற்றியும், அண்ட நாட்டுப் பெருமுரைப் பற்றியும் குறிக்கப்பெற் றுள்ளன. இரண்டாம் துண்டில் கோச்சா என்பவரின் பெயர் காணப்பெறுகின்றது. மூன்றுவது கல்வெட்டுத் துண்டு வடமதுரை கொற்றவாயிற் சேரி (Kunra-njundari) குன்றுஞ்சந்தரி என்பவர் அண்டநாட்டுத்தேவதானம் திருத்துருத்தி கோயிலுக்கு, ஒரு விளக்கு அளித்த செய்தி குறிக்கப்பெற்றுள்ளது. பின் எட்டு துண்டு களில் பாண்டியன் மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தியின் 12 ஆம் ஆண்டு காணப் பெறுகின்றது. அவைகளில் பராக்கிரம பாண்டிய தேவரைப் பற்றியும், பாரத் துவாஜ கோத்திரத்து சைவாச்சாரியர் சிவ கோச்சாரி மகாதேவரைப் பற்றியும் குறிப்புக்கள் இருக்கின்றன.

13 ஆம் கல்வெட்டு பாண்டியன் திரிபுவனச் சக்கரவர்த்தி வல்லப தேவ னின் இரண்டாம் ஆண்டில் பொறிக்கப் பெற்றது. அது அவனுடைய தேவி யாரின் பெயர் உலகமுடையாள் என்பதைத் தெரிவிக்கின்றது,

14 ஆம் துண்டுக் கல்வெட்டு நடுவில் திரிசூலமும் அதன் இருபக்கங்களில் கயல் மீன்களும் செதுக்கப்பட்டதாகும். அது ஏழுலகமுடையாள் என்னும் அரசியால் பூந்தோட்டம் அளித்ததைக் குறிப்ப தாகும். மற்றுமுள்ள பதின்மூன்று கல் வெட்டுத் துண்டுகள் மகாமண்டலேஸ் வரன் ராமராஜ திருமலைராயர் மகாராஜா வைப் பற்றியதாகும். அது சகம் 1468இல் தோன்றியது. பெருமாள் கோயிலுக்கு அருகில் நிறுத்தப்பெற்றுள்ள கல்லில் செதுக்கப்பட்ட கல்வெட்டு :—

இது விஜயநகரவேந்தன் வீரவேங்கட ராயரின் (1586—1616) காலத்தது. இது மதுரை மதனகோபாலசாமி கோயிலைப்

பற்றியும், பாஷ்யக்காரர் ஸ்ரீஇராமானுசாச் சாரியரைப் பற்றியும் குறிப்பிடுகின்றது. இந்த வீரவேங்கட மகாராயர் கோடி கன்யாதானம் தாதாசாரியாரின் மாணவரும், வீரவைணவரும் ஆவர்.

## மதுரையைப்பற்றிய செப்பேடுகள்

### தளவாய் அக்கிரகாரம் செப்பேடுகள்

மதுரைத் தளவாய் அக்கிரகாரத்தில் அனந்தாச்சாரியார் என்பவரிடமிருந்து பெற்ற காரணத்தால் இவை தளவாய் அக்கிரகாரம் செப்பேடுகள் எனப்பெயர் பெற்றன. 1. இவைகள் கி. பி. 1559 முதல் கி. பி. 1563 வரை ஆண்ட விசுவநாத நாயக்கர் பேரனும், கி. பி. 1563 முதல் கி. பி. 1573 வரை ஆண்ட கிருஷ்ணப்பநாயக்கருடைய மகனுமாகிய வீரப்பநாயக்கரின் வேண்டுகோளின்படி பெனுகொண்டா முதலாம் வேங்கடபதியால், கங்கவாரப்பட்டி அல்லது வீரபூப சமுத்திரம் என்னும் ஊரை, பல அந்தணர்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பெற்றதைக் குறிப்பனவாகும். (Epi. Indica, Vol. XII P. P. 159-187)

இச்செப்பேடுகளைப் பதிப்பித்தவர் திரு. T. A. கோபிநாதராயர் M. A. அவர்கள் ஆவர். இச் செப்பேடுகள் முதலாம் வேங்கடபதியின் குரு தாதாச்சாரியாரைப் பற்றியும் குறிப்பிடுகிறது. இச் செப்பேடுகளின் பதிப்பில் கோபிநாதராயர் வீரப்ப நாயக்கர் மதுரைக் கோயிலுக்குச் செய்தவைகளைப் பற்றி மதுரைத் திருப்பணி மாலையிலிருந்தும் காட்டியுள்ளனர் (வீரப்ப நாயக்கரின் காலம் 1572—95)

### வரதுங்கராம பாண்டியரின் தளவாய் அக்கிரகாரம் செப்பேடுகள்

இவை வரதுங்கராம பாண்டியன் சகம் 1504 அதாவது கி. பி. 1582 இல் மருகனேரி என்னும் ஊரை மருத்துவர் சொக்கப்ப பண்டிதர் மகன் சந்திர சேகரனுக்கு அளித்ததைக் குறிப்பிடுகின்றன. (Trav. Arch Series Vol. I P.P. 117–25) இம்மன்னனின் (வரதுங்கராம பாண்டியன்) சகம் 1510 அதாவது கி. பி. 1588 இல் ஏற்பட்ட செப்பேடு, உதயம் பட்டர் மகன் கோவிந்தப் பட்டருக்கு, சிலாரிப்பட்டி என்னும் ஊரை இம்மன்னன் கொடுத்ததைக் குறிக்கின்றது. (Trav. Arch-Series vol I P P 126—133)

### சேதுபதிகளின் செப்பேடுகள்

கலியுகம் 4780, சகம் 1769 அதாவது கி. பி 1769இல் தேவை நகரம் ஹிரண்யகர்ப்ப ரகுநாத சேதுபதி காத்தார், விசுவேசர் அகிலாண்ட நாயகி கோயில்களுக்கு நிலம் அளித்ததைக் குறிப்பதாகும். இவை மதுரை ஜில்லா கோர்டில் உள்ளன. (See Mr. Sewell's list) சகம் 1658 அதாவது கி. பி 1763இல் ஏற்பட்ட செப்பேடு, குமார முத்துவிஜய ரகுநாத சேதுபதி காத்தார் மகனுர் முத்துக்குமாரவிஜய ரகுநாதசேதுபதி பிராமணர்க்கு நிலம் அளித்ததைத் தெரிவிப்பதாகும். (See Mr. Sewells list)

இவைபோன்ற செப்பேட்டுச் செய்திகள் பலவுள.

## பொதுச் செய்திகள்

மதுரை, சுந்தரேஸ்வரர் திருக்கோயிலில் உள்ள கோசடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவரின் 21ஆம் ஆண்டுக் கல்வெட்டில் மதுரை மாநகர், மதுரோதய வளநாட்டைச் சேர்ந்ததாகக் குறிக்கப்பெற்றுள்ளது. (S. 11 Vol. IV No. 370) திருநெல்

வேலி, நெல்வேலி உடையார் கோயிலில் உள்ள "கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு எட்டு, நாள் தொளா யிரத்தெண்பத் தெட்டினுல்மதுரோதயவள நாட்டு மாடக்குளக் கீழ்மதுரைக் கோயில் பள்ளியறையில் கூடத்து, பள்ளிப்பீடம் மழவராயனிலே எழுந்தருளியிருந்து...... திருவாய்மொழிந்தருளினபடி"(S. 11. Vol V. No. 448) என்னும் கல்வெட்டுப் பகுதி யால் மதுரையில் பாண்டிய மன்னர் களுக்கு அரண்மனை இருந்த செய்தி, கல் வெட்டால் அறியக்கிடக்கின்றது. மதுரை நாயக்கமன்னர்களுடைய வம்சாவளியை (Genealogy) கூனியூர்ச்செப்பேடுகளால் (Kuniyur plates) (Epi, Indica, Vol. III Page 239) அறியலாம். விசுவநாதநாயக் கரே மதுரையில் நாயக்கர் ஆட்சியை ஏற்படுத்தியவர் ஆவர். அவர் திருவாங் கூர் மன்னராகிய திருவடியையும், வாண ராயரையும் வென்று அவர்களுடைய இராச்சியங்களைச் சேர்த்துக்கொண்டார். பாண்டியன் வரதுங்கன், சீவல்லபன் இவர்களின் சமகாலத்தில் இருந்தவர் வீரப்பநாயக்கர் ஆவர். இவர் மதுரைக் கோயிலில் அழகிய மண்டபம் ஒன்றைக் கட்டியதோடு, ஸ்ரீ மீனுட்சியம்மை யார்க்குக் கற்கள் பதித்த தங்கக் கவசம் ஒன்றையும் அளித்துள்ளார்.

சாமநத்தம், சிக்காலே, புன்கன்குளம், செங்குளம் என்னும் நான்கு ஊர்களும் ஸ்ரீசொக்கநாத சுவாமியின் திருப்பாதம் தாங்குவார் 64 பேர்களுக்குச் சர்வமான்ய மாக விடப்பட்டிருந்தன. விஜயரங்க சொக்கநாத நாயக்கர் காலத்தில் அரண்மனை உத்தியோகஸ்தர்கள் இவ்வூர் களுக்குச் சில வரிகளை வசூலித்தார்கள். வரிச்சுமை தாங்க முடியாத அந்த அறு பத்துநான்கு பேர்களும் தற்கொலை செய்து கொள்வதாக முடிவு செய்துள்ளார்கள். அவர்களில் ஒருவர் மதுரைக் கோபுரத்தில் ஏறிக் கீழேவிழுந்து இறந்தார். இதனுல் மக்கள் திரண்டு கோயிலின் நான்கு வாசல்களிலும் நின்று கோயிலைக் காத் தனர். கோட்டையில் இருந்த மணியம், சம்பிராப்தி, காவல்காரன்(The day watch man) இவர்கள் ஒன்று சேர்ந்து மக்களை அழைத்து நான்கு கிராமங்களுக்கும் விதிக்கப்பெற்ற வரிகளை நீக்கிவிட்ட தோடு, அந்நான்கு ஊர்களும் முன்போல் திருப்பாதம் தாங்குவார்களுக்குச் சர்வ மான்யமாக இருக்கும்படிச் செய்தனர். (A.R.E. 6 & of 1915) இக்கல்வெட்டு சுந் தரேஸ்வரர் கோயிலின் முதற் கோபுரத்துத் தூண் ஒன்றில் இருக்கிறது. இந்த விசய ரெங்க சொக்கநாத நாயக்கர் கி. பி. 1705 முதல் கி. பி. 1731 வரை ஆண்டவர். இவர் முத்துவீரப்ப நாயக்கர் மகனுவர். இச் சம்பவத்தை உணர்த்தும் கல்வெட்டு சகம் 1633. கரஆண்டு பங்குனி மாதத்தில் அதா வது கி. பி. 1712 இல் நிகழ்ந்ததாகும். இக்கல்வெட்டில் சேனுதிபதி குமார தள வாய் கஸ்தூரிரெங்கய்யனும், பிரதானி வேங்கடகிருஷ்ணய்யனும் குறிக்கப் பெற்றுள்ளனர்.

சுந்தரேஸ்வரர் கோயிலில் " ஸ்ரீ கோ மாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி கள் சோணுடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜயாபி ஷேகமும் பண்ணியருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு பதினைந் தாவது தனு நாயிற்று அபரபக்ஷத்து திர யோதசியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற விசாகத்துநாள் " எனத் தொடங்கும் கல்வெட்டின் காலம் கி. பி. 1230, டிசம்பர் 3ஆம் தேதி ஆகும் என்று பேராசிரியர்

கீல்கார்ன் (Professor F.Kielhorn Ph.D. D.Litt., LL.D.,C.I.E) இந்தியா தேசத்துக் கல்வெட்டுத் தொகுதி, 12, பக்கம் 276 (Epi-Indica Vol.VIII P.276) இல், பாண்டியர் காலம் என்ற தலைப்பில் குறித்துள்ளனர். கிருஷ்ணராயர் அவர்கள் காரியத்துக்குக் கர்த்தரான விசுவநாத நாயக்கர் கிருஷ்ணப்ப நாயக்கர் வீரப்ப நாயக்கன் அவர்கள் இராச்சிய பரிபாலனம் பண்ணியருளா நின்ற சாலிவாகன சகாப்தம் 1495 அதாவது கி. பி. 1573 இல், மதுரைவள நாட்டில் வைகை நதிக்கு வடக்காகிய கோரிபாளையம் துலுக்கர் பள்ளி வாசல் கோரிக்கு, சொரிகுடி, சொக்கிகுளம் இல்லிகுளம், கன்னுமே, பல சிறுதூறு, திருப்பாலை இந்த ஆறு கிராமங்களையும் முன் **கூன்பாண்டிய ராசர்** பதினுன்கு ஆயிரம் தங்கத்துக்கு, கோரிப்பாளையம் நிலம் அடி ஒரு தங்கத்துக்கு விலைப்பிரமானம் நிச்சயம்பண்ணிக் கொடுத்து வில்லும் எழுதி எல்கையும் கல்லும் போட்டுக் கொடுத்து நடந்துவந்ததை வீரப்ப நாயக்கர் விசாரிக்கும்பொழுது பாண்டியர், கோரிக்கு விலைப்பிரமாணம் பண்ணிக் கொடுத்த அத்தாட்சி நிலைவரம் ஆனது என்பதை அறிந்தபடியால், வீரப்ப நாயக்கரும் அபிமானித்து கோரிக்கு விட்டுக் கொடுத்துள்ளார் என்பதை மதுரைக்கு அருகில் உளள கோரிபாளையம் மசூதித்தூண் கல்வெட்டு ஒன்று அறிவிக்கின்றது. (ARE 77 of 1905) மேலும் இக்கல்வெட்டு இராமராசவிட்டல தேவ மகாராயரையும் அவருடைய உதவியாளர் வசவண்ண நாயக்கர் மகனுர் திம்மப்ப நாயக்கரைப் பற்றியும் குறிப்பிடுகின்றது.

முன்பு இக்கட்டுரையில் குறிக்கப் பெற்றுள்ள **கந்தாடை அண்ணன்** என்பவர் முதலியாண்டான் என்பாரின் சந்ததியாரும் இராமானுசருடைய மாமனுமாவர் (The uncle) இந்தக் குடும்பத்தார் தான், முதல் முதலாக ஆசாரிய பரம்பரையின் பழைமையை (The Acharyic tradition) விட்டு வரவர முனியினுடைய சித்தாந்தத்தைத் தழுவியவர் ஆவர். இந்த அண்ணன் மணவாள மாமுனிவருடைய சிஷ்யரின் மகன் அல்லது பேரன் ஆவர்.

மதுரையில் பெருமாள் கோயிலின் முன்பு நிறுத்திவைக்கப் பெற்றுள்ள ஒரு கல்லிலும் கல்வெட்டு இருக்கின்றது. அது விஜய நகர அரசனுகிய, முதலாம் வீர வேங்கட மகாராயர் (1586–1616) காலத்தது ஆகும். அது மதனகோபாலசாமி கோயிலைப் பற்றியும், பாஷ்யக்காரர் ஸ்ரீ இராமானுசாச்சாரியரைப் பற்றியும் குறிப்பிடுகிறது. இந்த வீரவேங்கட மகாராயர் கோடி கன்யாதானம் தாதாசாரியரின் மாணவர் ஆவர். இந்தத் தாதா சாரியார் வீரவைணவர்.

# பாண்டியன் மடமகள்

தி. நா. சுப்பிரமணியன்

மதுரைக் கோயிலிலே மீனாட்சி அம்மனுக்குத்தான் முதல் இடம், மரியாதையெல்லாம். பூஜை முதலியனவும் முதலில் அவளுக்குத் தான் நடக்கும். அதற்குப் பிறகே சிவபெருமானாகிய சுந்தரேசருக்கு. அவ்விதம் செய்வதற்குக் காரணம் சொல்லுவார்கள். அவள் பிறந்தகத்துச் செல்வியாம். அது மட்டுமா? பாண்டிய ராஜ்ய வம்சத்தில் பிறந்த அவள், தந்தைக்குப் பின் அரசியாக முடிசூட்டப்பெற்று ராஜ்ய பாரம் வகித்து நடத்தியிருக்கிறாள். அது அவளுடைய தலை நகரம். அவளை மணந்த சிவபெருமான் மாமனார் வீடு புகுந்த மருமகன் தானே.

மாமனார் வீட்டோடு ஐக்கியமான மாப்பிள்ளையைப்பற்றி ரசமாகச் சொல்லுவார்கள். தெய்வங்களும் அதற்கு விலக்கல்ல. சிவன், விஷ்ணு ஆகிய இருவருமே அப்படித்தான். பாற்கடலிலே பிறந்தவள் திருமகள். அவளை மணந்த விஷ்ணுவும் பாற்கடலுக்கே போய்விட்டார். நிரந்தரமாய் அங்கே பள்ளிகொண்டிருக்கிறாராம். அதே போல மலை அரசனுக்கு மகளாகப் பிறந்தவள் பார்வதி. அந்தப் பெயரே மலையைக் குறிக்கும் பருவதம் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது. அவளை மணந்தசிவபெருமானும்மலைவாசத்துக்குப் போய்விட்டார். அதனாலே அவருக்குக் கிரீசன் என்ற பெயரும் உண்டாம். இந்த வரிசையிலே இன்னும் ஒருவரையும் சேர்க்கலாம். அவர் குமரக் கடவுள். குற மகளான வள்ளியை மணந்த அவரும் குற மக்கள் வாழும் மலைப் பிரதேசத்துக்கு போய்விட்டார். முருகனுடைய ஆறு படை வீடுகளுள் 'குன்றுதோருடலும்' ஒன்று என்பது இதனை எடுத்துக் காட்டும். இதிலே ஒரு வேடிக்கை. தந்தை, மகன் ஆகிய இருவருமே மலையைத் தங்கள் வாசஸ்தலமாகக் கொண்டனர். அவ்விருவருள் அந்த உரிமை யாருடையது என்பது பற்றிப் பக்தர்களிடையே மயக்கம் தோன்றியது போலும். அதற்கு ஒரு வழி கண்டுபிடித்தார்கள். சிவபெருமானை முதிய அல்லது பழையமலை நாடன்.(விருத்த கிரீசன்) முருகக் கடவுளை இளமை மலை நாடன் (குமார கிரீசன்) என்றும் குறிக்கலாயினர். அத்தகைய சங்கேதம் தீவாந்திரப் பிரதேசத்திலே காம்போஜம் போன்ற நாடுகளில் கிடைத்த கல்வெட்டுகளிலே தெளிவாகக் காணப்படுகின்றது. விருத்த கிரீசன், குமாரகிரீசன் என்ற பெயர்களை இன்றைக்கும் தமிழ் நாட்டிலே தரித்துவருவதைக் காணலாம்.

மீனாட்சி அம்மன் பாண்டிய வம்சத்திலே பிறந்த கதையைத் திருவிளையாடல் புராணம் கூறுகிறது. மலையத்துவஜன் என்ற பாண்டியன் முன்னாளிலே அரசு புரிந்து வந்தான். அவனுக்குப் பிள்ளை இல்லை. பிள்ளை வரம்வேண்டிச் சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்தான். எம்பெருமான் அவனுக்கு ஒரு பெண்ணை அளித்தார். பிறக்கும் போதே அந்தக் குழந்தைக்கு மூன்று கொங்கைகள் இருந்தனவாம். அதைக்கண்டு மலையத்துவஜன் கவலைப்பட்டான். "அவள் தனக்குக்கணவனாக வரப்போகிறவனைக் கண்டவுடனே மூன்றுவது கொங்கை மறைந்துவிடும்" என்று

சிவபெருமான் அனுக்கிரகம் செய்தாராம். அரசனும் குழந்தைக்குத் தடாதகை என்று பெயரிட்டு வளர்த்துவந்தான். அரச பதவி ஏற்பதற்கு அறிந்திருக்க வேண்டிய துறைகள் பலவற்றிலும் முறையே அவள் பயிற்சி பெற்ருள்; காலக்கிரமத்தில் தந்தைக்குப்பின் சிங்காசனம் ஏறி, ராஜ்யபாரம் வகிக்க ஆரம்பித்தாள். ஒருசமயம் அவள் பெரும் படையோடு திக்குவிஜய யாத்திரை கிளம்பிஞள். வழியிலே பல அரசர்களையும் வெற்றிகொண்டு கைலாச மலைவரையில் சென்ருள். அங்கே சிவபெருமானைக் கண்டதும் அவளுடைய மூன்ருவது கொங்கை மறைந்ததாம். சிவபெருமானும் அவளை மதுரைக்கு அழைத்துவந்து திருமணம் புரிந்துகொண்டாராம். சுந்தரர் என்ற பெயரைத் தாங்கி நீண்டகாலம் அவளோடு கூட அரசு புரிந்து வந்தார்; அவர்களுக்கு உக்கிர பாண்டியன் என்ற பிள்ளை ஒருவன் பிறந்தான். உரிய காலத்தில் அவனுக்கு முடிசூட்டி, அரசை அவனுக்கு அளித்துவிட்டு அவர்கள் மதுரைத் திருக் கோயிலுக்குள் புகுந்து மறைந்து விட்டார்களாம்.

இதிலிருந்து தடாதகைப் பிராட்டியாரையும் தேவியின் அம்சமாக நம் முன்ஞேர்கள் கருதிஞர்கள் என்பது விளங்கும். தடாதகை என்ற சொல்லைத் தடு-ஆ-தகை என்று விரித்து தடுக்கமுடியாத தகைமை வாய்ந்தவள் அவள் என்பதை உணர்த்துவதாகவே கொள்வர். அதைத் தடாதகா என்ற ஸம்ஸ்கிருதச் சொல்லாகக்கொண்டு, தேவியின் அவதாரமான அவள் மானிட வயிற்றிலே பிறக்காமல் குழந்தை உருவில் பொற்ருமரைக் குளத்தில் தோன்றியவள் என்பதை உணர்த்துவதாகவும் வேறு சிலர் கூறுவர். எவ்விதமாயினும் அந்தப் பெயரைக் காட்டிலும், 'மீன்விழியாள்' என்பதைத் தெரிவிக்கும் மீஞட்சி, கயற்கண்ணி, அங்கயற்கண்ணி என்பன போன்ற பெயர்களாலேயே அவள் பிரசித்தம்.

மீஞட்சியைப் போலவே பாண்டிய வம்சத்தில் பிறந்து, உரிமையால் அரசை அடைந்து ஆட்சியை நடத்திய, பெண்களைப் பற்றிய வேறு சில கதைகளையும் நாம் கேள்விப்படுகிறேம். அல்லியின் வரலாறு அவற்றில் ஒன்று. தமிழ் நாட்டிலே அந்தக் கதை பிரசித்தமானது. புகழேந்திப் புலவர் இயற்றியதாகக் கருதப்படும் ஜனரஞ்சகமான கிராமிய காவியம் ஒன்றும் உண்டு.

பாண்டிய அரச குமாரியான அல்லி மதுரையிலே முடிசூட்டிக்கொண்டு ஆட்சி புரிந்து வந்தாள். ஆண்வாடையையே விரும்பாத அவள் அரசிலே அதிகாரிகள், போர்ப்படையினர் எல்லோரும் பெண்டிர்களே. அந்தநாளில் பாண்டவர்களுள் ஒருவஞன அர்ச்சுனன், தீர்த்த யாத்திரைக்காகத் தென்ஞடுவந்தபோதுமதுரைக்கும் சென்ருன்; அல்லியைப் பற்றியும் கேள்விப்பட்டான்; எப்படியாவது அவளை அடையவேண்டுமென்று விரும்பிஞன். அவனுக்கு உறு துணையான கிருஷ்ண பகவான் உதவிக்கு வந்தார். பாம்பின் உருவிலே இரவு நேரத்தில் அல்லியின் அந்தப்புரத்திலே அர்ச்சுனன் புகுந்து மந்திரத்தால் அவளை மயங்கச் செய்து, அந்த நிலையிலே அவளுடன் கூடி இன்புற்றுப் பொழுது விடிவதற்குள் வெளியேறி விடுவாஞம். இவ்விதம் சிறிது காலம் நடந்து வந்தது. அல்லி கருவுற்ருள். அதை அறிந்த அர்ச்சுனனும், கிருஷ்ணனும் வெளியேறித் தீர்த்த யாத்திரையை முடித்து ஊர் திரும்பினர்.

அல்லி தன் நிலையை அறிந்ததும் கொதித்தெழுந்தாள். அடாத இச்செயலுக்குக் காரணமானவனைத் தண்டிக்க விரும்பியது அவள் உள்ளம். அவன் யார் என்பதை முதலில் அறியவேண்டுமே, அதற்காக ஐம்பத்தாறு தேசத்து அரசர் களுக்கும் தூது அனுப்பி, குற்றவாளியைப் போருக்கு அழைத்தாள். செயல் புரிந்தவன் யார் என்று நிச்சயமானவுடன் அவளே படையை நடத்திப் போருக்கு வடக்கே சென்ருள். பாண்டவர்களால் அவளோடு நேருக்கு நேர் நின்று போரிட்டு வெற்றிகொள்ள முடியவில்லை. மறுபடியும் கிருஷ்ண பகவானே உதவிக்கு வர வேண்டியிருந்தது. நய வஞ்சகமாக அவளை ஒரு கூண்டுக்குள்ளே சிக்கச் செய்து சிறை பிடித்துவிட்டார்கள். அடி பட்ட சிங்கம்போல் நின்ற அவளுடைய கோபத்தைச் சமாதானம் செய்யத் துரௌபதி முதல் தேவியர் அனைவரும் அவளிடம் வந்து மன்ருடினர். அர்ச்சுனன் தேவியரான சுபத்திரை, உலூபி போன்றவர்களும், அவ்விதமே வந்து அவளை வேண்டினுர்கள். கடைசியாக அல்லியும் நிலையை உணர்ந்து அர்ச்சுனனை மணந்து அங்கே சிறிதுகாலம் தங்கிவிட்டு ஊர் திரும்பினுளாம். மதுரையிலே அவளுக்குப் புலந்திரன் என்ற மகன் பிறந்தானும்.

அல்லியைப் பற்றிய வேறு சில கதைகளும் உண்டு. அவைகளும் கிராமிய காவிய உருவத்திலேயே உள்ளன. பாண்டவருக்கும், கௌரவர்க்கும் ஏற்பட்ட போட்டியில் பாண்டவர்களை அவமானம் செய்வதற்குத் துரியோதனுதியர் எடுத்துக் கொண்ட முயற்சிகளில் பல சமயங்களில் அல்லி தலையிட்டுக் கௌரவர்களையே அதில்சிக்கி அவமானப்படும்படி செய்தது மட்டுமல்லாமல், அதிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளப் பாண்டவ உதவியை நாடும்படியாகவும் அவள் செய்தாளாம். ஏணியேற்றம் போன்ற காவியங்கள் இத்தகைய கதைகளையே உரைப்பனவாகும்.

இப்போது நமக்குக் கிடைத்துள்ள மகாபாரதத்திலே இந்தக் கதைகள் காணப்படவில்லை. இதேபோல, பாரதத்திலே காணப்படாமல் பஞ்ச பாண்டவர் வாழ்க்கையைப் பற்றிய வேறு கதைகள் சிலவும் நம் நாட்டிலே வழங்கிவருகின்றன. அவைகளைக் கவனித்தால் வியாச பகவான் எழுதியதைப் போலவே மகாபாரதக் கதையை வேறு சிலரும் எழுதி, அந்த நூல்கள் முன்னுளிலே பிரசித்தமாக இருந்தனவோ என்று எண்ணத் தோன்றுகிறது.

எவ்விதமாயினும் பாண்டிய அரச குமாரி ஒருத்தியைப் பாண்டவர்களுள் ஒருவனை அர்ச்சுனன் மணந்தான் என்ற செய்தி இப்போது வழக்கிலுள்ள மகா பாரதத்திலும் காணப்படுகிறது; ஆதி பர்வத்திலே அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்த காலத்தில் நிகழ்ந்ததாகவே அது காணப்படுகிறது.

'கலிங்கத்தைவிட்டுக் கிளம்பிய பிறகு அர்ச்சுனன் மகேந்திரகிரி, கோதாவரி முதலிய இடங்களுக்குச் சென்று அப்பால் காவிரி கடலுடன் கலக்கும் இடத்தை அடைந்தான். அங்கிருந்து கரையோரமாகவே தெற்கே சென்று மணலூர் என்னும் இடத்தை அடைந்தான். அவ்விடத்திலே சித்திரவாஹனன் என்பான் அரசு புரிந்து வந்தான். சித்திராங்கதை என்று அவனுக்கு அழகிய மகள் ஒருத்தி இருந்தாள். அர்ச்சுனன் அவளை மணக்க விரும்பி அவளுடைய தந்தையை அணுகினுன். பெண்ணைக் கேட்பவன் யார் என்ற விப

ஏத்தையறிந்த சித்திரவாஹனன் அதற்கு இணங்கினுன். ஆனுல் ஒரு நிபந்தனே. சித்திர வாஹனனுடைய மூதாதையர்களில் ஒருவனுன பிரபஞ்சனன் என்பான் பிள்ளே வரம் வேண்டிச் சிவபெருமானே நோக்கித்தவம்புரிந்தான். சிவபெருமானும் அதற்கு இணங்கி அந்த வம்சத்திலே தலேமுறைதலேமுறையாக ஒரே குழந்தை பிறக்கும் என்று அருளிச் செய்தாராம். அது போலவே சித்திரவாஹனன் காலம் வரையில் ஒவ்வொருவனுக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்து வந்திருக்கிறது. சித்திர வாஹனனுக்கோ ஒரு பெண் குழந்தை மட்டுமே பிறந்திருக்கிறது. அந்தக் குலம் அவள் மூலமே தழைத்தோங்கவேண்டும். அதனுல் அவளே மணந்துகொள்பவன் அவளுக்குப் பிறக்கும் முதல் ஆண்குழந்தையைப் 'புத்திரிகா புத்திரன்' என்ற தர்மப்படி தன் மாமனுருக்குப் புத்திரனுக அளித்துவிடவேண்டும்". அர்ச்சுனன் அந்த நிபந்தனேக்குச் சம்மதித்துச் சித்திராங்கதையை மணந்துகொண்டான். அவளிடம் அவனுக்குப் பப்ருவாகனன் என்ற மகன் பிறந்தானும். தான் ஏற்றுக்கொண்டபடியே அர்ச்சுனனும் அந்தமகனேச் சித்திர வாஹனனுக்கு அளித்துச் சென்றுனும்".

நாககன்னிகையான உலூபியை அர்ச்சுனன் மணந்துகொண்ட விபரத்தைத் தெரிவித்து, அடுத்தபடியாக இந்தச் சம்பவம் மகா பாரதத்திலே கொடுக்கப்பட்டுள்ளது. சித்திரவாஹனன் ஒரு பாண்டியன் என்று அங்கே தெளிவாகக் குறிக்கப்பெறவில்லே. எனினும் இதை எடுத்துக்காட்ட வேறு ஆதாரங்கள் பாரதத்திலேயே அங்கங்கே சிதறிக் கிடக்கின்றன.

காவிரிநதி கடலுடன் கலக்கும் இடத்திற்குத் தெற்காகவே மணலூர் இருந்ததென்று குறிக்கப்பட்டுள்ளது. மணலூரை விட்டபிறகு அர்ச்சுனன் நேரே தெற்கு சமுத்திரத்திற்குச் சென்று நீராடினுன் என்று காணப்பெறுகிறது. காவிரிப்பூம் பட்டினத்திற்கும், குமரிமுனேக்கும் இடையில் பாண்டியர் தலேநகரைத் தவிர பிரதான நகரம் வேறு ஏதும் இருந்ததை நாம் அறியோம்.

ஆதிபர்வத்திலேயே அம்சாவதரண பர்வத்தில் (அத்தியாயம் - 64) தீர்த்த யாத்திரையின்போது அர்ச்சுனன் நாக கன்னிகையையும், பாண்டியன் பெண்ணேயும் அடைந்தான் என்ற விவரம் கொடுக்கப்பட்டுள்ளது. தீர்த்த யாத்திரையைப் பற்றிக்கூறுமிடத்தில் அவன் பாண்டியன் பெண்ணே மணந்த செய்தி தனியாக வேறு எதுவும் இல்லே. ஆகவே அது சித்திராங்கதையைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும்.

பாண்டவர்கள் ராஜசூய யாகம் செய்வதற்கு முன்னதாகச் செய்த திக்கு விஜயத்தில் தென் திசையை நோக்கிச் சகதேவன் புறப்பட்டு வந்தானும். அப்போது அவன் பாண்டிய நாட்டு மணலூரை அடைந்து தன் தமையன் அருச்சுனனுடைய மகனுன பப்ருவாகனனேக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு வேண்டிய வெகுமதி செய்து திரும்பினுன் என்று சபாபர்வம் கூறுகிறது. அங்கே அர்ச்சுனனுடைய மாமன் பெயர் மலயத்துவஜன் என்று காணப்படுகிறது. மற்றொரு இடத்திலே அது சுவேதன் என்றும் வழங்கப்பட்டு உள்ளது.

இன்னும், தருமபுத்திரர் அசுவமேத யாகம் நடத்தியபோது அருச்சுனன் மகனும் பாண்டிய அரசனுமான பப்ருவாகனனே அதற்கு அழைத்திருந்தாராம்.

அதை ஏற்று இந்திரபிரஸ்தம் சென்ற அவன் பேரன்புடனும் மிக்க சிறப்புடனும் வரவேற்கப்பட்டான். யாகம் நடந்தபோது வந்த விருந்தினருக்கு உணவளிக்கும் பொறுப்பை அவனே ஏற்று, நடத்தி வைத்தானும். இந்தச்செய்தி அசுவமேத பர்வத்தில் காணப்படுகிறது.

தீர்த்தயாத்திரையின் போது மண லூர் அரசன் மகளான பாண்டிய ராஜ குமாரியை மணந்தான் என்ற செய்தி பாகவத புராணம் ( தசமஸ்கந்தம் 86-ம் அத்தியாயம் ) விஷ்ணுபுராணம், (நாலாம் அம்சம் 20-ம் அத்தியாயம்) பாரத சம்பு போன்ற நூல்களிலும் காணப்படுகிறது. அவற்றில் மணலூர் என்பது மணலூர் புரம் என்றும், மணற்புரம் என்றும் காணப்படுவதுண்டு.

இந்தக் கதை மகாபாரதத்தில் வட நாட்டுப் பாடத்திலே சாதாரணமாகக் காணப்படவில்லை என்றும் அப்படியே காணப்பட்டாலும் ஊரின் பெயர் மணி புரம் என்று வழங்கப்படுவதென்றும் கூறி இதை இடைச் செருகலாகக்கொண்டு ஆராய்ச்சியாளர்கள் சிலர் ஏற்றுக்கொள் ளாமல் தள்ளிவிடுவார்கள். அதைப்பற்றி நாம் இங்கே ஆராய வேண்டுவதில்லை. எவ்விதமாயினும் பாண்டிய வம்சத்தைப் பாரத புருஷர்களான பாண்டவர்களோடு பிணைத்துக் கூறும் கர்ண பரம்பரை வர லாறு மிகப் பழங்காலத்திலிருந்து நம் நாட்டில், முக்கியமாகத் தென்னாட்டில் வழங்கி வருவது நன்கு விளங்கும். அதன் எதிரொலியை இலக்கியத்திலும் சாசனங் களிலும் காணலாம்.

பாண்டிய மன்னர்களின் செப் பேட்டுச் சாசனங்களிலே அந்த வம்சத் தின் புராணப் பெருமை பலபடியாகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விவரிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். அவ்விதம் கிடைத்துள்ளவற்றிலே பராந்தக வீர நாராயணன் அளித்த தளவாய்புரம் செப் பேடுகள், (உக்கிரன் கோட்டைச் சாச னம் என்றும் சொல்லுவர்), அவன் மகன் இராஜசிம்ஹன் அளித்த சின்னமனூர்ச் செப்பேடுகள் ஆகிய இரண்டுமே அதிகப் படியான செய்திகளைக் கூறுவன. பாண்ட வர்கள் துரியோதனுதியரோடு நடத்திய பாரதப்போரில் பாண்டியர்களும் ஈடுபட்டு, கௌரவர்களை வென்று பாண்டவர்களுக்கு உதவினுர்களாம். இதைக் கூறுவதோடு சின்னமனூர்ச் சாஸனத்தின் தமிழ்ப்பகுதி யிலே, "விஜயனை வசுசாப நீக்கியும்" பாண்டியர்கள் புகழ் எய்தினர் என்பதும் காணப்படுகிறது. அதே சாஸனத்தின் வடமொழிப் பகுதியிலே, "ஜித விஜய:" என்று பாண்டியன் ஒருவன் அருச்சுனன் மீது வெற்றிகொண்ட செய்தி கூறப்பட் டுள்ளது. தளவாய்புர சாஸனத்திலே "வானரத்துவஜன் வசுசாபம் அகல் வித்தும்" என்று காணப் படுகிறது. இப்படி மூன்று விதமாக எழுதப்பட்டிருந் தாலும் அவை ஒரே செய்தியைக் குறிப்பன வாகும். அதுவும் மஹாபாரதத்திலே அசுவமேத பர்வத்தில் கொடுக்கப் பட்டுள்ளது.

அசுவமேத யாகத்துக்கு முன்னதாகத் திக்குவிஜயத்தின் பொருட்டு விடப்பட்ட குதிரை தென்னுடு வந்தபோது அதன் போக்கைத் தடைசெய்த பப்ருவாஹன னுக்கும் குதிரைக்குக் காவலாக வந்த அர்ச்சுனனுக்கும் நடந்த போரில் அர்ச் சுனன் அடிபட்டுவிழ அருச்சுனன் தேவிகளுள் ஒருத்தியான நாக கன்னிகை உலூபி ஓடோடியும் வந்து மூர்ச்சை

தெளிவித்து அர்ச்சுனனை உயிர்ப்பித்தா ளாம். அதனோடு அவ்விதம் நேர்ந்ததன் காரணத்தையும் விளக்கிச் சொன்னுளாம். பாரதப்போரில் பீஷ்மரை வஞ்சகமாகக் கொன்றதைக் கண்டு மனம் பொருத வசு ஒருவன் அர்ச்சுனனுக்குச் சாபம் இட்டா னும். அர்ச்சுனன் தன்மகனிடமே தோற்று வீழ்ந்ததும் அந்தச் சாபம் அகலுமென்று அதற்கு விமோசனமும் விதிக்கப்பட்டிருந் ததாம். அதன்படி அந்தச் சாபம் தீர்ந்த தென்று உலூபி சொன்னுளாம். பாண்டி யர்களுடைய செப்பேட்டுச் சாசனங்களில் குறிக்கப் பெற்றிருப்பது இந்நிகழ்ச்சியே ஆகும் என்பர். அவ்விதமாயின் செப் பேட்டுச் சாசனங்கள் பொறிக்கப்பட்ட காலத்தில் பாண்டியர்கள் தங்களைப் பப்ரு வாஹனன் மூலமாகப் பாண்டவவமிசத்தில் தோன்றியவர்களாகவே கருதி வந்தனர் என்பது விளங்கும்.

ஸம்ஸ்கிருத மொழிக்குப் பாணினிபக வான் எழுதிய வியாகரணத்தில் மக்கள் இனத்தின் பெயரடியாக அவர்களில் ஒருவன் பெயரோ அல்லது அவர்கள் வாழும் நாட்டின் பெயரோ எவ்விதம் பிறந்து அமையும் என்பதற்கு இலக் கணம் வகுக்கும் இடத்தில், IV-1-168 சூத்திரத்துக்குக் காத்யாயன முனிவர் வார்த்திகை என்ற பெயரில் எழுதிய விளக்கத்தில் 'பாண்டோர் ட்யன்' என்று பாண்ட்ய சப்தத்தை விளக்கியிருக்கிருர். அதன்படி, 'பாண்டு இனத்தாரில் ஒருவ னுடைய வழித் தோன்றலோ அல்லது அவர்கள் வாழும் நாட்டை ஆள்பவனே பாண்ட்யன்' எனப்பெறுவார். பாண்டு என்பவருடைய புத்திரர்களே பாண்டவர் ஐவரும். ஆகவே பப்ருவாஹனனும் அவனுடைய வழித்தோன்றலுமே பாண் டியர் ஆவர். அவனுடைய தாய் சித்தி ராங்கதையும் பாட்டன் சித்திரவாஹ னனும் பாண்டியர் ஆகமாட்டார். மஹா பாரதத்தில் மணலூர் அரசன் பாண்டிய னுகக் குறிக்கப்படாமைக்கு இவ்விதம் சமாதானம் கூறவும் முடியும். இந்தச் சந்தர்ப்பத்தில் வேறு ஒரு விவரத்தையும் நாம் நினைவு கூர வேண்டும். இலங்கைச் சரித்திரமான மஹாவமிசத்திலும் அதன் தொடர்ச்சியான சூள வமிசத்திலும் மதுரைப் பாண்டியர் ஒரே சீராகப் 'பண்டு' என்றே குறிக்கப்பட்டு வந்திருக்கின் றனர்.

(பழைமையைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லான் பண்டு என்பதன் அடியாகப் பிறந்ததே பாண்டியர் எனக் கொண்டு, தமிழ் நாட்டின் மிகப் பழங்குடியாகவோ அல்லது அத்தகைய பழங்குடிகளுள் தலை சிறந்த ஒன்ருகவோ பாண்டியர் குடியைக் கொள்ளவேண்டும் என்போரும் உண்டு.)

தொல்காப்பியம் பொருளதிகாரம் 54-ஆம் சூத்திர உரையில் நச்சினர்க்கி னியர் மேற்கோளாகக் காட்டிய பழம்பா டல் ஒன்றும் பாண்டியன் மகளை விஜயன் மணந்த செய்தியைக் கூறுகிறது. அந்தப்பாடல் வருமாறு.

"பூண்டாழ் மார்பிற் பொருப்பிற்கோமான்
பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம்
வேறு தொடங்கிய விசய னெஞ்சத்
தாரழ லாற்ற தைஇ யோகியிற்
பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிரை
முத்தினு முழங்கழற் செந்தீப்
பொத்துவது போலும் புலம்புமுந் துறத்தே"

புறநானூற்றுப் பாடல் ஒன்று (58) 'சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம் லத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கு இருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக்

காரிக் கண்ணனூர் பாடியது ஆகும். அதிலே அவர் பாண்டியனைப் 'பஞ்சவர் ஏறே' என்று குறித்திருக்கிறார். சிலப்பதி காரம் வழக்குரைகாதையிலே,

'செழிய, வாழி! தென்னவ, வாழி!
பழியொடு படராப் பஞ்சவ, வாழி!

என்று வருமிடத்தில் பஞ்சவன் என்ற பெயராலே பாண்டியன் குறிக்கப்பெற்றி ருக்கிறான். அதே நூலில் இளங்கோவடி கள் 'ஆய்ச்சியர் குரவை'யில், "பஞ்சவர்க் குத் தூது நடந்தானை" என்று கூறுமி டத்தில் 'பஞ்சவர்' என்ற சொல்லால் பஞ்ச பாண்டவர்களை உணர்த்தியிருக்கிறார்; பாண்டவர்களின் வழித்தோன்றலே பாண் டியர்கள் என்பது இதனால் நன்கு விளங் வதாகவே ஆசிரியர்கள் கொள்வர்.

சிலப்பதிகாரத்திலேயே அடைக்கலக் காதையில் பாண்டியன் பெருமையை உணர்த்தும் இடத்தில் ஆசிரியர் இளங் கோவடிகள்,

"கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையும்"

என்று கூறியிருக்கிறார். அதன்படி கௌரி யர் என்ற சொல்லும் பாண்டியர்களை உணர்த்துவதாகவே அமையும். புறநா னூற்றுப் பாடல் (3) இரும்பிடர்த்தலை யார் என்னும் புலவர் பாண்டியன் கருங்கை ஒல்வாட்பெரும் பெயர் வழுதியைத் "தவிரா வீகைக் கௌரியர் மருக!" என்று அழைக் கிறார். அதிலிருந்து கௌரியர் வழித் தோன்றல்களாகப் பாண்டியர் கருதப்பட்டு வந்தனர் என்பது பெறப்படும். கௌரியர் என்ற சொல்லையும் குருகுலத்தில் பிறந் தவர்களைக் குறிப்பதாகவே கொள்வர்.

ஆனால் பஞ்சவர், கௌரியர் என்ற சொற்களுக்கு வேறு விதமாகப் பொருள் கொள்ளவேண்டும். இராஜஸிம்ஹனுடைய சின்னமனூர்ச் செப்பேடுகளில் பாண்டியர் களின் பழம்பெருமை கூறப்படும் இடத் தில் பின் வரும் செய்திகளும் காணப்படு கின்றன.

"வெம்முனை வேல் ஒன்று விட்டும்
விரைவரவில் கடல் மீட்டும்
பூழியன் எனப் பெயர் எய்தியும்
போர்க்க குன்றுயிரம் வீசியும்
பாழியம் பாயலி னிமிர்த்தும்
பஞ்சவன் எனும் பெயர் நிறீஇயும்".

பாண்டிய வம்சத்திலே தோன்றிய மன்னன் ஒருவன் "கூரிய முனையையு டைய வேல் ஆயுதம் ஒன்றை வீசினான்; விரைந்து வந்த கடல் திரும்பப்போகச் செய்தான். பூழியன் என்ற பெயரை அடைந்தான்; மூடி நிரப்புவதற்காகப் பல (ஆயிரம்) மலைகளை வீசி எறிந்தான்; பாழி என்னுமிடத்தில் நீரில் மூழ்கிக் கிடந்த படுக்கையை (அதாவது அடித்தளத்தை) உயர்த்தி நிமிர்த்தினான்; பஞ்சவன் என்ற பெயரை நிலை நாட்டினான்" இவ்விதம் கூறுவதிலே பூழியன், பஞ்சவன் ஆகிய இருபெயர்களும் பாண்டியர்களுக்கு ஏற்பட்டதன் காரணம் காணப்படுகிறது. இரண்டுமே நீரில் மூழ்கிய நிலத்தை மீட் டதால் ஏற்பட்டனவாகும். பூழியன்என்பது கடலைப் பின்னால் ஓட்டி அந்தச் சேற்று நிலத்தை (பூழியை) வளம்படுத்தியதால் ஏற்பட்டது. மற்றதான பஞ்சவன் என் பதோ நீர் நிரம்பிக்கிடந்த பாழி என்னும் பெரும்பள்ளத்தைத் தூர்த்து வாசத்துக்கு ஏற்றதாகச் செய்ததால் நிலைபெற்றதாம். பாண்டியன் பாழி என்னும் பிரதேசத்தை நிமிர்த்தி வளப்படுத்திய விவரம் தளவாய்புரம் செப்பேடுகளிலே,

'பாயல் மீமிசை நிமிர்ந்து
பல்லுண்டி விருப்புற்றும்
காயல் வாயக் கடல் போலக்
குளம் பலவின் கரைஉயரியும்"

என்று காணப்படுகிறது. பாழி என்ற சொல்லுக்குக் குளம் என்ற பொருளும் உண்டு. திசைச் சொற்களைப்பற்றிக் கூறுமிடத்தில் 'பூழி நாட்டார் சிறு குளத்தைப் பாழி என்பர்' என்று இலக்கண உரையாசிரியர்கள் கூறிச் செல்வது இதனை எடுத்துக் காட்டும்.

பஞ்சவர் என்ற சொல்லை ஐவர் என்றும் பஞ்சவன் என்பதை ஐவருள் ஒருவன் அல்லது ஐந்தாமவன்என்றும் கொள்ள வேண்டும். 'பாண்டியர் ஐவர்' என்ற சாசன வழக்கை நாம் அறிவோம். அவர்கள் ஐந்து கிளையினராக வெவ்வேறு இடங்களில் ஆண்டுவந்திருக்கிறார்கள்.

உத்தர பாண்டியர் என்பாரைப்பற்றி வராஹமிஹிரர் தம்முடைய பிருஹத்ஸம்ஹிதையில் குறிப்பிட்டிருக்கிறார். பாண்டியர்களின் வடகிளையினரான அவர்கள் தமிழ் நாட்டுப் பாண்டியர்களினின்றும் வேறானவர்கள். மத்திய இந்தியாவில் அரசுபுரிந்த பாண்டுவம்சத்தவர்களாக அவர்களை ஆராய்ச்சியாளர்கள் கருதுவர். அவர்கள் அரசுபுரிந்த நிலம் கோசலம் அல்லது தக்ஷிணகோசலம் (இன்றை வழக்கில் மஹாகோசல்) ஆகும். அதுதான் தமிழில் குசலம் அல்லது கடுங்குசலம் என்று முன்னாளில் குறிக்கப்பட்டது. அதே போல் 'மான' (மானம் அல்லது மானர்) என்ற கிளையினரைப் பற்றியும் கேள்விப்படுகிறோம். மாறாபரணன் என்று பாண்டியர்களில் சிலர் தரித்திருந்த பெயரும் அதனடியாகப் பிறந்ததே. களப்பிரர்கள் ஆட்சியை ஒடுக்கி மதுரையிலே பாண்டியர்களின் ஆட்சியை மறுபடியும் நிறுவிய பாண்டியன் கடுங்கோன்சாஸனங்களிலே 'மானம் பேர்த்த கடுங்கோன், அல்லது மானம் பேர்த்து அருளிய கோன்' என்று வழங்கப்படுவன். அதிலிருந்து அவன் மானம் என்ற பெயரைத் தரித்திருந்தான் என்பது விளங்கும். மேலைக் கடற்கரை யோரமாகக் கர்நாடக தேசத்திலே அரசுபுரிந்த ஆளுபர் அல்லது ஆளுவர் என்ற அரச பரம்பரையினர் தங்களை 'மானாபரணன் குலத்தில் உதித்தவர்'களாகக் கூறுவர். அவர்கள் பாண்டியர் என்ற சிறப்புப் பெயரையும் தரித்திருந்தனர். மேலைச் சாளுக்கிய அரசனான விநயாதித்தியன் ஆட்சியில் கி. பி. 692-ம் ஆண்டில் அளிக்கப்பட்ட ஒரு செப்பேட்டுச் சாஸனம் ஆளுப வேந்தனான குணசாகரன் மகன் சித்திரவாஹன்* வழங்கிய தானத்தைத் தெரிவிப்பதாகும். தக்ஷிணத்திலே பேரரசு செலுத்திய இராஷ்டிர கூடர்களும் மான குலத்தை சேர்ந்தவர்களே. அவர்கள் தலைநகரமும் மானபுரம் அல்லது மான்ய கேடம் என்றே வழங்கப்பட்டு வந்தது. மருமக்கள் தாய முறையால் பாண்டியர்கள் பல சமயங்களில் கேரள ராஜ்யத்தையும் இலங்கை அரசையும் அடைந்து ஆண்டிருக்கிறார்கள். இன்னும் தீவாந்தரப் பிரதேசங்களிலும் இந்தோ சீனாவில் 'ஸ்ரீமார ராஜ குலத்தை'ச் சேர்ந்த பாண்டியர் அரசு புரிந்திருக்கிறார்கள். இவற்றைக் கவனித்தால் அவர்கள் ஐந்து கிளையினராகப் பிரிந்து வெவ்வேறு இடங்களில் ஆட்சி புரிந்தனர் என்பது போதரும். உண்மை

---

* அர்ச்சுனன் மணந்த பாண்டிய ராஜகுமாரி சித்திராங்கதையின் தந்தை சித்திரவாஹனன் என்பது மகாபாரதம். அந்தப் பெயர் பாண்டியர் கிளைகளில் வழக்கில் இருந்துவந்ததென்பது மேலே எடுத்துக்காட்டிய சாசனத்திலிருந்து தெரியவரும்.

யில் செழியன், மாறன், வழுதி என்பன போன்றவை பாண்டியர்களேயே குறிப்பன வாயினும் வெவ்வேறு பகுதிகளில் அரசு புரிந்த கிளையினரின் பட்டப் பெயர்களாக வழங்கினவோ என்று எண்ணத் தோன்று கிறது.

கௌரியர் என்ற சொல் குரு வம்சத் தில் பிறந்தவர்களைக் குறிப்பதாகக் கொள்ளுவர். அவ்விதமானுல் அது கௌரவர் அல்லது கௌரவ்யர் என்ற வடி வத்திலேயே இருக்க வேண்டும். கௌரி யர் என்ற சொல் வெண்மையானவர் என்றே பொருள்படும். தேவியின் நாமங் களுள் ஒன்ருன கௌரி என்பது ஹிமவான் மகளான அவள் வெண்மையானவள் என் பதையே உணர்த்தும். மஹாபாரதத்தின் ஒரு பாடத்திலே அருச்சுனனுக்குப் பெண் கொடுத்த பாண்டியன் பெயர் சுவேதன் (வெண்மையானவன்) என்று காணப் படுவதும் கவனிக்கத் தக்கது.

அதேபோல மற்ருெருபாடத்திலே அவர் பெயர் மலயத்துவஜன் என்று காணப்படு வதை நாம் மேலே கண்டோம். அந்தப் பெயர் திருவிளையாடற் புராணத்தின்படி மீனுட்சியின் தந்தையைக் குறிக்கும். நச்சினுர்க்கினியர் மேற்கோள் காட்டிய பழம் பாடலில் அருச்சுனன் மணந்தவள் "பொருப்பிற் கோமான் பாண்டியன் மட மகள்" என்று வர்ணிக்கப் பட்டிருக்கிருள். அதிலிருந்து அவளை மலயத்துவஜன் மகளாகவும் கொள்ளமுடியும். இவ்விதம் திருவிளையாடற் புராணம், மகாபாரதம் ஆகிய இரண்டிலும் உள்ள கதைகள் இடையே ஓரளவு ஒற்றுமையைக் காணலாம்.

சித்திராங்கதை வரலாற்றின் வேறு வடிவமான அல்லிஅரசாணியின் கதை தீவாந்தரப் பிரதேசத்திலும் காணப்படு கிறது. இந்தோ-சீனுவிலே இன்றைக்குக் கம்போடியா அல்லது காம்போஜம் என்று வழங்கப்படும் பிரதேசம் மிகப் பழங் காலத்திலே புனுன் (அல்லது புனல்நாடு) என்று சீன தேசத்தின் சரித்திர நூல் களில் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த நூல்களில் அந்த நாட்டின் பழைய வரலாறு பின்வருமாறும் கொடுக்கப்பட்டி ருக்கிறது. "ஆரம்பத்தில் புனுன் தேசத்தை லியு-எ என்ற பெண் அரசியாக ஆண்டு வந்தாள். மொபு என்ற தேசத்தில் ஹுன்-சென் என்ற ஒருவன் இருந்தான். அவன் ஒரு தெய்வத்தை மிகுந்த பக்தி யோடும் வைராக்கியத்தோடும் ஆராதித்து வந்தான். அவனுடைய திட பக்திக்குத் தெய்வமும் மகிழ்ந்தது. ஒருநாள் இரவு தூங்கும்போது அவன் கனுக் கண்டான். யாரோ ஒருவன் ஹுன்-சென் முன் தோன்றித் தெய்வீக வில் ஒன்றை அவனுக்கு அளித்து ஒரு தோணியில் ஏறிக் கடற் பிரயாணம் மேற்கொள்ளு மாறு பணித்தானும். மறுநாள் காலையில் ஹுன்-சென் கோவிலுக்குச் சென்றபோது அந்தத் தெய்வம் உறையும் மரத்தின் அடியில் ஒரு வில் இருக்கக் கண்டான். அவன் வில்லை எடுத்துக் கொண்டு கடற் பிரயாணத்தை மேற்கொண்டான். தெய்வ மும் காற்றை அடிப்படுத்தி, தோணியைப் புனுன் தேசத்துக்குச் செலுத்தியது. லியு-எ அந்தத் தோணியைக் கொள்ளை யடித்துக் கைப்பற்ற விரும்பினுள். ஹுன்-சென் தெய்வீக வில்லை நாணேற்றி அம்பை எய்தான். அந்த அம்பு லியு-எ ஏறியிருந்த தோணியைச் சல்லடைக் கண்ணுகத் துளைத்து விட்டது. அவள் பயந்து போய்த் தோல்வியை ஒப்புக் கொண்டாள். அவ்விதம் ஹுன்-சேன்

புனன் தேசத்து அரச பதவியை அடைந்தான்.''

இந்தச் செய்தியை முதன் முதலாக கங்-தை, சு-யிங் என்ற இரு சீனர்களும் தாங்கள் எழுதிய நூல்களிலே குறித்திருக்கிறார்களாம். அவர்கள் கி. பி 245-க்கும், 250-க்கும் இடையில் சீனச் சக்கரவர்த்தியிடமிருந்து புனன் தேசத்து ராஜ சபைக்குத் தூதுவர்களாக வந்தார்களாம். அங்கே தாங்கள் கண்டவற்றையும் கேட்டவற்றையும் ஊர் திரும்பியபிறகு நூல் வடிவத்தில் எழுதி வைத்தார்களாம். அவ்விரண்டும் இப்போது கிடைக்கவில்லை. பிற்கால ஆசிரியர்கள் எடுத்தாண்ட பகுதிகளே உள்ளன. மேலே காட்டியதும் அவற்றுள் ஒன்று.

அரசன் பெயர் ஹுன்-தின் அல்லது ஹுயி-தின் அல்லது ஹுன்-சென் எனவும், அரசியின் பெயர் எ-லியு எனவும் வேறு வடிவங்களிலும் எழுதப்படுவதும் உண்டு. அரசியின் பெயர் சீன மொழியிலே நீரில் முளைத்துச் செழிக்கும் ஒரு தாவரத்தின் இலையைக் குறிப்பதாகும். அதை ஆங்கிலத்திலே வில்லோ (Willow) என்பார்; தமிழிலே அதை நாம் அல்லி எனலாம்.

ஹுன்-சென் என்ற பெயரைக் கௌண்டின்யன் என்று ஆராய்ச்சியாளர் பூர்த்தி செய்திருக்கிறார்கள். உண்மையில் இந்தோ-சீனாவில் நம் நாட்டு நாகரிகம் பரவுவதற்கு இரண்டு கௌண்டின்யர்கள் காரணமாக இருந்தார்கள் என்பர். இரண்டாம் கௌண்டின்யர் கி. பி. 400-ஆம் ஆண்டு அளவில் அவ்விடம் சென்றவர்; அந்தச் சம்பவம் தமிழ் நாட்டுப் பல்லவ மன்னர்கள் இந்தோ-சீனப் பகுதியை வெற்றி கொண்ட விவரத்தை அறிவிப்பதேயாகும். முதல் கௌண்டின்யர் இந்தோ-சீனாவுக்குச் சென்றது நம் நாட்டு நாகரிகம் அங்கே புகுந்ததைக் குறிப்பதாகவே ஆசிரியர் கொள்வர். அவ்விதமாயின், அல்லி என்ற பெயரை மனத்திற் கொண்டால் ஹுன்-சென் என்பதை அருச்சுனன் என்பதன் சீன வடிவமாகவே கொள்ள வேண்டும்.

அதனை வலியுறுத்தப் பின் வருவதையும் காட்டலாம். ஹுன்-சென் அந்தப் பிரதேசத்தை வெற்றி கொண்டு தன்னுடைய அரசை நிறுவியது கி. பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர் கருதுவர். அவன் தன்னுடைய மகனுக்கு ஏழு நகரங்களை அளித்தானும். அதைத் தவிர அவர்களைப் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை. எனினும் அந்தப் பிரதேசத்தை ஆண்ட ஹுன் (கூன்பாண்டிய?) வம்சத்தினர் ஆட்சியை நிறுவினர் என்று கருதுவர். அவனுக்கு பின் வந்தவர்களில் ஹுன் பான்-ஹுவாங் நீண்டகாலம் அரசு புரிந்தானும்; தன்னுடைய பிள்ளைகளையும் பேரன்களையும் மாகாணங்களுக்கு அதிபர்களாக நியமித்தானும். அவன் இறந்த பிறகு அவனுடைய இரண்டாம் குமாரன் பான்-பான் என்பவன் அரசனாக முடிசூட்டிக் கொண்டான். எனினும் அரசுப் பொறுப்பு முழுவதையும் அவனுடைய குமாரனான மஹாசேனாதிபதி பான்-சே-மன் என்பவனிடம் ஒப்படைத்து விட்டு, சுகபோகங்களை அனுபவித்து வந்தான். மூன்றாண்டுகள் கழித்து அவன் இறந்ததும் நாட்டு மக்கள் ஒன்றுகூடிப் பான்-சே-மன் என்பவனை அரசனாகத் தேர்ந்து முடிசூட்டினார்களாம். இவை யாவும் சீன வரலாற்றிலிருந்தே தெரிய வருகின்றன.

பான்-சே-மன் என்பதைப் பஞ்சவன் என்னும் தமிழ்ப் பெயரின் சீன வடிவமாகக் கொள்ளலாம்.

பாண்டிய வம்சத்திலே ஆதிகாலத்தில் பெண்ணரசு நடத்திய விவரம் வேறு ஓர் ஆதாரத்தாலும் தெரிய வருகிறது. கிரேக்க தேசத்திலிருந்து மௌரிய ராஜ சபைக்கு வந்திருந்த தூதுவஞன மெகஸ்தனிஸ் பாண்டியர்களைப் பற்றிப் பின்வரும் செய்திகளைத் தன் காதில் விழுந்தபடி குறித்து வைத்திருக்கிருன்.

"பாண்டிய மக்களை மங்கையரே அரசு புரிந்து வருகிருர்கள். அவர்களுடைய முதல் அரசி (கிரேக்கர்களின் புராண புருஷஞன)ஹெர்குலிஸ் என்பானுடைய மகளாம். அந்த நாட்டிலே தான் நைஸா என்ற நகரமும் மேரோஸ் என்று பெயர் கொண்டு (ஜுபிடர்)தேவராஜனுக்கு புனிதமான மலையும் உள்ளன. அந்த மலையில் ஒரு குகையிலே தான் (கிரேக்கர்களின் மதுக் கடவுளான) பக்கஸ் வளர்ந்தார் என்று இந்தியர்களின் முன்ஞேர் கூறுவர். அவர் பெயரைக் கொண்டு அவர் தம் தந்தையின் தொடையிலிருந்து பிறந்தார் என்ற வரலாறும் தோன்றியது. சிந்து நதியின் முகத் துவாரத்திற்கு அப்பால் "கிரிசே" (பொன்தீவு) "ஆர்ஜயிரே" (வெள்ளித்தீவு) ஆகிய இரண்டும் உள்ளன. அவற்றின் கனிவளத்தைக் கண்டு அந்நாட்டு மண்ணே பொன்னும் வெள்ளியுமாக உள்ளதென்று ஆசிரியர்கள் கூறுவர்.

"ஹெராக்ளிஸ் (அதாவது ஹெர்குலிஸ்) இந்தியாவிலே ஒரு பெண் குழந்தைக்குத் தந்தையாஞன். அவளுக்குப் பாண்டிய என்ற பெயரை இட்டான். இந்தியாவின் தென் பகுதியில் கடற்கரை வரையில் விரிந்து கிடக்கும் நிலத்தை அவளுக்கு அளித்தான். அவளுடைய ஆட்சிக்கு உட்பட்ட மக்களை 365 கிராமங்களில் பிரித்துக் குடியேற்றிஞன். அரசியின் வாழ்க்கை செவ்வனே நடைபெறுவதற்காக ஒவ்வொரு கிராமத்தாரும் முறை வைத்து அரசிக்குத் தேவையான பொருள்களைக் காணிக்கையாக நாள்தோறும் செலுத்தி ராஜ பண்டாரத்திலே சேர்ப்பிக்க வேண்டும் என்றும் திட்டம் செய்தான். அன்றி முன் தினங்களில் முறைப்படி திறை செலுத்தாதவர்களை அவர்களே தண்டித்து, திறைப் பொருளைப் பெற்று சேர்ப்பிக்கவேண்டுமாம்".

மெகஸ்தனீஸ் தமிழ் நாட்டுக்கு வந்ததில்லை. வடக்கே தாம் கேட்டதையே எழுதிவைத்தார். அதிலிருந்து பாண்டிய ராஜகுமாரிக்குத் தெய்வீகப் பிறப்பு கற்பிக்கப்பட்டிருப்பதும் தெரியவரும்.

இவ்விதம் பண்டிய ராஜவம்சத்தைப் பற்றிக் காணப்பெறும். எல்லாக் கதைகளிலும் ஆதியில் ஒரு பெண்ணே அரசு புரிந்து வந்தாள் என்று காணப்படுகிறது. அன்றி அந்தப் பெண்ணுக்குத் தெய்வீக அம்சமும் கற்பிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கதைகளை இரண்டுப் பிரிவாகக்கொள்ளலாம். திருவிளையாடற்புராணத்தில் காண்ப்படுவது ஒன்று; மெகஸ்தனீஸ் குறித்திருக்கும் கர்ணபரம்பரைச் செய்தி அந்த வகையையே சாரும். மகாபாரதத்தில் காணப்படுவது மற்ருென்று; அல்லி அரசாணியைப்பற்றியது அந்த வகையேயாகும்.

ஊன்றி நோக்கிஞல் திருவிளையாடற் புராணக் கதைக்கும் மகாபாரதத்தின்

கதைக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படும். முக்கியமாக மலையத்துவஜன் என்ற பெயரைக் காணலாம். இன்னும், மலையத்துவஜன் மகளே பாண்டிய வம்சத்தின் முதல் அரசி எனவும் ஆகும். பஞ்சவர், கௌரியர் என்ற பாண்டியரின் சிறப்புப் பெயர்களுக்கு வேறுவிதமான பொருள் கொண்டதாலேயே பாண்டியர்களை, பஞ்ச பாண்டவர்களுடன் பிணைக்கும் கதை ஏற்பட்டதோ என்ற சந்தேகமும் தோன்றக் கூடும். அவ்விதமாகுல் திருவிளையாடற் புராணக் கதையே பிராதனமானது எனவும், மற்றவை அவற்றின் வேறு வடிவங்கள் எனவும் எண்ண நேரும்.

திருச்சிராப்பள்ளி ஜில்லா, திருமெய்யம் தாலுகா, தேனி மலையிலுள்ள ஒரு கல்வெட்டு பின்வருமாறு: "ஸ்வஸ்தி ஸ்ரீ மலையத்வஜந் தேனூர் மலை இல் தவம் செய்யக் கண்டு, இருக்குவேள் வந்திந்து, அவிப் புறஞ் செய்த பள்ளிச்சந்தம் நாலே கால், இவ்வறம் காத்தான் அடி நித்தம் சென்னி அள"—அதிலே குறிக்கப் பெற்ற மலையத்வஜன் யார் என்பது தெளிவாக இல்லை.

மலையத்துவஜன் என்பதை 'மலைக் கொடி மன்னன் என்று' கொள்ளலாம். தக்கயாகப்பரணியிலே இரண்டாம் இராஜராஜ சோழன் புகழைக்கூறுமிடத்தில் அம்மன்னன் வெற்றிகொண்ட வேற்றரசர்களைப் பெயர் சொல்லாமல் அவர்களுடைய கொடிகளைக்கொண்டே அடையாளம் காட்டுகிருர் ஆசிரியர் ஒட்டக்கூத்தர். அவ்விதம் குறிக்கப் பெற்றவர்களுள் மலையைக் கொடியாக உடைய மன்னனும் ஒருவன். அந்த நூலுக்கு உரை எழுதிய ஆசிரியர் அவன் பாண்டியனே என்று எழுதியிருக்கிருர்.

நாஞுதேசி அல்லது ஐந்நூற்றுவர் என்று குறிக்கப் பெறும் வணிகர் குழுவின் கன்னடப் பிரசஸ்தியிலிருந்து அந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள், வெள்ளை மலையைத் தங்கள் கொடியாகக் கொண்டிருந்தனர் என்பது தெரிகிறது. அந்தக் குழு ஆரம்பத்தில் சைலேந்திரர் என்பார் ஆதிக்கத்தில் இருந்ததென்பதும் அவர்களுக்கும் பாண்டியர்களுக்கும் ஏதோ உறவு இருந்ததென்பதும், பாண்டிய இராஜஸிம்ஹன், 'வீராங்கித சைலேந்திரன், என்ற விருதைப் பெற்றிருந்தான் என்பதும் கவனிக்கவேண்டியவை.

மலையத்துவஜன் என்ற சொல்லுக்கு சரியான பொருள் "மலையத்தை" அதாவது மலைய மலையை, கொடியின் சின்னமாகக் கொண்டவன்" என்றேயாகும். அதன்படி, அந்த மலை குறிப்பிட்ட ஒரு பர்வதம் ஆகும். மலையமலை அகத்திய முனிவரின் இருப்பிடம் என்று புராணங்கள் கூறும். அந்த முனிவர் பாண்டிய வம்சத்து மன்னர்களின் ஆசாரியர், புரோகிதர். அம்முனிவருக்கும் அரச குடும்பத்துக்கும் உள்ள உறவைப்பற்றி நாம் விவரிக்கவேண்டிய அவசியமில்லை. வேதங்களிலே அகத்திய முனிவர் மான்யர் என்ற பெயரால் குறிக்கப்படுவர். அந்தப் பெயர் பாண்டிய வம்சத்துக்கும் உரித்து என்பதை நாம் மேலே கண்டிருக்கிருேம்.

அகத்திய முனிவர் தென்ஞடு போந்ததைப் பற்றி ஒரு கதை சொல்லுவார்கள். பரமசிவனுக்கும், பார்வதிக்கும் வடக்கே இமய மலையில் திருமணம் நடந்தபோது உலகமே அவ்விடம் திரண்டுவிட்டதாம். அங்கே பூ பாரம் அதிகமாகியதால் அதனைச் சமன்செய்வ

தற்காக சிவபெருமான் அகத்தியரைத் தென்னாட்டுக்கு அனுப்பினாராம். எம்பெருமான் திருமணக் கோலத்தைப் பார்க்காமல் தென்னாடுபோந்தஅம்முனிவர் அந்தக் கோலத்தைக் கண்டுகளிப்பதற்காக சிவ பெருமான் வகைசெய்தாராம். அவ்விதம் அகத்தியர் கண்டு களித்த இடம் எது என்பது தெரியாது. தங்கள் ஊரிலேதான் நடந்தது என்று தமிழ் நாட்டின் சிவ ஸ்தலங்கள் சிலவற்றின் புராணங்கள் கூறும். அது எவ்விதமாயினும் அவருக்குப் பிரதான சிஷ்யனும் அரசனுமான பாண்டியன் தலைநகரை அந்த இடமாகக் கருதலாம்.

மதுரையில் கோயில் கொண்டிருக்கும் மீனாட்சியை பகவதியின் அம்சமாகவே நம் முன்னோர்கள் கருதி வந்திருக்கிறார்கள்.

'நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று
நித்தம் தவம்புரி குமரி'

என்று மகாகவி பாரதியார் வருணித்திருப்பது அவளுக்கு முற்றிலும் அவளுக்குப் பொருந்தும். அதே நிலைதான்,

'கடல்கெழு செல்வி கரை நின்றாங்கு'

என்ற அகநானூற்றுப் பாடல் (370) ஒன்றில் வர்ணிக்கப்பட்டிருப்பது. மீனாட்சியும் அப்படிப்பட்டவளே. திருவிளையாடற் புராணத்தில் காணும் ஒரு சம்பவம் அதனை எடுத்துக் காட்டும்.

மீனாட்சியும் சுந்தரரும் மதுரையிலே அரசு புரிந்த காலத்தில் ஒரு சமயம் தேவி மீனாட்சியின் தாயார் கடலாட விரும்பினாளாம். அதனால் சிவபெருமான் ஏழு கடலையும் மதுரைக்கே வரவழைத்து விட்டாராம். அதனோடு நீண்ட காலத்துக்கு முன் இறந்த தம் மாமனார் மலையத்துவஜ பாண்டியனையும் வானுலகத்திலிருந்து வரவழைத்தாராம். மாமனார், மாமியார், இருவரும் சேர்ந்து கடலாடி அதன் பயனைப் பெற்றார்களாம். மீனாட்சி இருக்குமிடம் கடற்கரை என்பதை உணர்த்தவே கடலை அவ்விடம் சிவபெருமான் வரவழைத்தார் என்று புராணம் கூறுவதாகக் கொள்ளலாம்.

இவ்விதம் காணும் பல விஷயங்களையும் ஒருங்கே சேர்த்து ஆராய்ந்து பார்த்தால், ஒரு விஷயம் தெளிவாக விளங்கும். தேவியே பெண்ணாகப் பிறந்து புனிதப் படுத்தியது பாண்டிய குலம். அவள் மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் மீனாட்சியே ஆவள்.



# திருவெம்பாவை – சாதாரி

கே. ஜீ. கிருஷ்ணன், எம். ஏ.

சங்கத்தமிழ் வளர்த்த கூடலில் ஆலவாய் அரனும் அங்கயற்கண்ணம்மையும் குடிகொண்டுள்ள கோயிலில் அதன் பெருமையைப் பறை சாற்றும் கல் வெட்டுகள் பல இருக்கின்றன. அவற்றிலொன்று மேற்கண்ட தலைப்பிற்கிடமான செய்தியை அழகாகக் கூறுகின்றது. அதனை இங்கே விரித்துக் கூறுவோம்.

கி.பி. 1236 ம்ஆண்டில் மதுரையில் செங்கோல் செலுத்தி வந்த 2-வது மாறவர்மனுனசுந்தர பாண்டியன் தன்னுடைய அரண்மனையில் பள்ளியறைக் கூடத்தில் மழவராயன் என்று பெயர் கொண்ட இருக்கையில் இருந்து அரசியல் அலுவல்களைக்கவனித்து வரும்பொழுது அரசனின் அந்தரங்க அமைச்சனுகிய ஐய்யன் மழவராயன் என்பவன் அரசனிடம் ஒரு செய்தியை விண்ணப்பித்துக்கொண்டான். மிழலைக் கூற்றத்தில் தச்சனூரைச் சார்ந்த வாணுதிராயன் என்ற சிறப்புப் பெயருடைய அருளாளன் சேவகத்தேவன் என்பவன் வெண்பைக்குடி நாட்டில் நம்பிதாய நல்லூர் என்ற தன்னுடைய காணியாக அமைந்த ஊரை மதுரை ஆலவாயுடையார் கோயிலுக்கு நிவந்தமாக அளித்தான். இவ்வூரின் வருவாய்கொண்டு மூன்று வழிபாட்டு நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தான்.

1) தன் பெயரால் வாணுதிராயன் சந்தி என்று ஆலவாயுடையார்க்குச் சிறப்பான வழிபாடு. 2) ஆண்டுதோறும் மார்கழித் திருநாளில் ஆலவாயுடையார் முன்னிலையில் திருவெம்பாவையை ஓதி வரும் பரதேசித் துறவிகளுக்கு உணவு அளிப்பது. 3) ஆலவாயுடையாரை அம்மன் கோயிலில் தெற்கு வாசலில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சாதாரிப் பண்ணை அவர் கேட்கும்படி பாட ஏற்பாடு செய்தது.

இம்மூன்றிற்கும் வாணுதிராயன் நம்பிதாய நல்லூரை தேவதானமாகக் கோயிலுக்கே அளித்து வரியும் இல்லாமல் செய்தால் வழிபாடுகளை முறையாக நடத்த இயலும் என்று மழவராயன் அரசர்பெருமானிடம் விண்ணப்பிக்க அரசனும் அவ்வாறே வரியினுல் வரும் வருவாயையும் சேர்த்துத் தேவதான இறையிலியாகக் கோயிலுக்கே அளித்தேன் என்று திருவாய் மொழிந்தருளினுன். ஆகவே வாணுதிராயன் கொடுத்த ஊரும் அரசன் அளித்த வரியின் வருவாயும் கோயிலுக்கே உரியதாயின. இந்நிகழ்ச்சியையே கல்வெட்டு அன்றைய கல்வெட்டு மொழியில் கூறுகின்றது. கல்வெட்டு அம்மன்கோயிலில் இரண்டாவது பிரகாரத்தில் மேலைத் திருவாசலின் அருகே பொறிக்கப்பட்டுள்ளது. அதன் மூலத்தைப் பார்ப்போம்:-

1 ஸ்வஸ்தி ஸ்ரீ பூமலர்த்திருவும் பொருசெய மடந்தையும்,
தாமரைக் குவிமுலை செயப்புயத் திருப்ப,
வேதநாவின் வெள்ளிதட்டாமரைக்,
காதன் மாது கவின்பெறத் திளைப்ப,
வெண்டிரை யுடுத்த மண்டிணி கிடக்கைத்,
திருநில மடந்தை யுரிமையிற் களிப்பச்,

2 சமையமு நீதியுந் தருமமுந் தழைப்ப,
இமையவர் விழாக்கொடி யிடந்தொறு மெடுப்பக்,

கருங்கலிக்கனல் கெடக் கடவுள் வேதியர்,
அருந் தொழில் வேள்விச் செங்கனல் வளர்ப்பச்,
சுருதியுந் தமிழுந் தொல் வளங்குலவப்,
பொருதிறலாழி பூதலஞ் சூழ்வர,
ஒரு கையிரு செவி மும்மத நாற்கோட்,
டயிராவத முதற் செயிதீர் கொற்றத்,
தொண்டிசையா-

3 னை பெருத்த மேறிக்,
கண்ட நாடெம தெனக் கயல்களிகூரக்,
கோசலந் துளுவங் குதிரங் குச்சரம்,
போசல மகதம் பொப்பளம் புண்டரம்,
கலிங்க மீழங் கடாரங் கவுடம்,
தெலிங்கஞ் சோனகம் சீன முதலா,
விதிமுறை திகழ வெவ்வேறு வகுத்த,
முது நிலக்கிழமையின் முடிபுனை வேந்தர்க்,
கொருதனி நாயகனெ-

4 ன்றுல கேத்தத்,
திருமுடி சூடிச் செங்கோலோச்சிக்
கொற்றத்தரளக் குளிர்குடை நீழற்,
கற்றைக் கவரி காவலர் வீச,
மிடைகதிர் நவமணி வீரசிங்காதனத்
துடன் முடிசூடி யுயர்குலத் திருவெனப்,
பங்கய மலர்க்கரங் குவித்துப் பார்த்திபர்,
மங்கையர் திரண்டு வணங்குஞ் சென்னிச்,
சுடரொளி மவுலிச் சூடாமணி மிசைச்,

5 சிவந்த இணைமலர்ச் சீரடிக்கமல மதுகரங் கமல மென்றனுகும்
உலக முழுதுடையாரோடும் வீற்றிருந் தருளிய ஸ்ரீகோமாற
பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய
தேவற்கு யாண்டு நாலாவது நாள் நூற் றொருபத்தைஞ் சினல்
மதுரோதைய வளநாட்டு மாடக்குளக் கீழ் மதுரைக்கு

6 கோயில் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப்பீடம் மழவராயனில்
எழுந்தருளி இருந்து உடையார் திருவால வாயுடையார்
கோயில் பதிபாத மூலப்பட்டுடைய பஞ்சாசாரிய
தேவர்கன்மிகள் செய்யத்திருவாய் மொழிந்தருளினபடி

உடையார் திருவால வாயுடையார்க்கு
மிழலைக் கூற்றத்து கீழ் கூற்று தச்சனூரு-

7 டையான் அருளாளன் சேவகத் தேவனை பாணதராயன் கண்ட
சந்திக்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டு நிவந்தங்களுக்கும்
ஆலவாயுடையாரை மார்கழித் திருநாள் திருவெம்பாவை
சேவிக்கும் பரதேசிக் கோவணவற்குப் போசன முள்ளிட்டு
வேண்டுமவையிற்றுக்கும் இக்கோயில் திருக்காமக்-

8 கோட்டத்துஆளுடைய நாச்சியார் கோயில் தெற்கில் வாணதை
ராயன் திருவாசலில் உடையார் எழுந்தருளிச் சாதாரிப்
பண் கேட்டருள வேண்டுவன வயிற்றுக்கும் இவ்வாணதராயன்
காணியான வெண்பைக்குடி நாட்டு நம்பிதாயநல்லூர்
நான்கெல்லை-

9 க்கு உட்பட்ட நீர்நிலமும் கருஞ்செய் புண் செயும் நத்தமும்
தோட்டமும் குளமும் குளப்பரிப்பு முள்பட நீர் நிலமும்
காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமுந்
தருவதான அச்சும் காரியவாராய்ச்சியும் வெட்டி
பாட்டமும் பஞ்சுபீலி சந்து விக்கிரகப் பேறும் எ-

10 ப்பேர்ப்பட்டனவும் உட்பட நாலாவது முதல் தேவதான இறையிலியாக
இடப்பெற வேணுமென்று ஐய்யன் மழவ ராயன் நமக்குச்
சொன்னமையில் இவ்வுடையாற்கு இவ்வாணதராயன்
சந்திக்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிபந்தங்களுக்கும்
இவ்வுடையாரை மார்கழித்

11 திருநாளில்த் திருவெம்பாவை சேவிக்கும் பரதேசிக் கோவணவற்குப்
போசனமுள்ளிட்டு வேண்டுவனவுக்கும் இக்கோயில்த்
திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார் கோயில்

தெற்கில் வாணுதராயன் திருவாசலில் உடையார் எழுந்தருளிச்

சாதாரிப்பண் கேட்டருள வேண்டுவனவு-

12 க்கும் இவ்வாணுதராயன் காணியான வெண்பைக்குடி நாட்டு

நம்பிதாயநல்லூர் நான்கெல்லைக் குட்பட்ட நீர்நிலமும்

கருஞ்செயும் புஞ்செயு நத்தமும் தோட்டமுங் குளமும்

குளப்பரிப்பும் உட்பட நிலம் காராண்மை மீயாட்சியும்

அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும்

13 காரிய வாராய்ச்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலிசந்து

விக்கிரகப் பேறும் மற்றும் எப்பேர்ப் பட்டனவும்

உட்பட இவ்வாண்டு முதல் தேவதான இறையிலியாக

இட்டமைக்கு இவ்வுடையாற்கு வாணுத ராயன் சந்திக்கு

திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களு—

14 க்கும் இவ்வுடையாரை மார்கழித் திருநாள் திருவெம்பாவை

சேவிக்கும் பரதேசிக் கோவணவற்குப் போசன முள்ளிட்டு

வேண்டுவனவயிற்றுக்கும் இக்கோயிற் திருக்காமக் கோட்டத்து

ஆளுடைய நாச்சியார் கோயிலில் தெற்கில் வாணுதராயன் திரு

வாசலில் உடையார் சாதாரிப்பண் கேட்டருள வேண்—

15 டுவனவுக்கும் இவ்வாணுதராயன் காணியான வெண்பைக்குடி

நாட்டு நம்பிதாயநல்லூர் நான்கெல்லை உட்பட நீர்நிலமும்

கருஞ்செய் புன்செயும் நத்தமும் தோட்டமும் குளமும்

குளப்பரிப்பும் உட்பட்ட நிலம் காராண்மை மீயாட்சி

அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய

வாராச்சியும் வெட்டிபாட்டமு-

16 ம் பஞ்சுபீலி சந்துவிக்கிரகப் பேறும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும்

உட்பட இவ்வாண்டு முதல் தேவதான இறையிலி யாகத்தந்தோ

மென்று திருவாய்மொழிந்த-

17 ந்தருளினார்-

இக்கல்வெட்டு ஸ்வஸ்திஸ்ரீ என்ற மங்களவாசகத்துடன் தொடங்குகின்றது. "பூமலர்த்திருவும்" என்று தொடங்கும் இம்மெய்க் கீர்த்தியும் அரசனின் பட்டப் பெயரான மாறவர்மன் என்ற சொல்லும் சுந்தர பாண்டியன் என்ற பெயரும் இக்கல்வெட்டுகுறிக்கும் அரசன் கி.பி. 1232ல் அரசு கட்டில் ஏறிய இரண்டாவது மாறவர்மன் சுந்தர பாண்டியன் என்பதை உணர்த்துகிறது. யாண்டு நாலு, நாள் நூற்றெருபத்தைந்து என்றதனுல் கி. பி. 1235ம் ஆண்டின் இறுதியிலிருந்து 1236ம் ஆண்டின் முற்பகுதியில் ஒரு நாளில் இக்கல்வெட்டின் செய்தி நிகழ்ந்ததாகும். இம்மெய்க் கீர்த்தி பாண்டியனின் ஆட்சியைப் பொதுவாகப் புகழ்கிறதேயன்றி வெறு சில அரசர்களின் மெய்க் கீர்த்தியைப் போல் அரசியல் நிகழ்ச்சி எதையும் குறிப்பிடவில்லை. அடுத்தபடியாக அரசனது அரண்மனை இருந்த இடம் மதுரை மாடக் குளக் கீழ் என்ற பகுதியில் இருப்பதாகக்குறிப்பிடுகின்றது. இது போலவே மற்றும் சில கல்வெட்டுகளில் அழகிய பாண்டியக் குளக் கீழ், சுந்தர பாண்டியப் பேரேரிக் கீழ் என்ற வழக்குகள் காணப்படுகின்றன. எனவே இன்றும் மதுரையை அடுத்திருக்கும் மாடக்குளம் அன்று மதுரோதையை வளநாட்டின் ஒரு உட்பகுதியின் தலைமை இடமாக இருந்தமை தெளியப்படும். அந்த அரண்மனையில் அரசன் மழவராயன்என்ற பள்ளிப் பீடத்தில் அமர்ந்திருந்தான். வேறு சில கல்வெட்டுகளில் காலிங்கராயன், அனபாயன், வாணுதராயன் என்று

அமைச்சன் பெயர் தாங்கிய பள்ளிப்பீடங்கள் அல்லது பள்ளிக் கட்டில்கள் குறிக்கப்படுகின்றன. அவற்றிலிருந்து அரசர் பெருமக்கள் அலுவலை நிகழ்த்துவதுண்டு. சமீபத்தில் உய்யக் கொண்டான் திருமலையில் கண்ட கல்வெட்டொன்று சோழன் ராஜேந்திரன் தன் மாளிகையில் உண்ணும் பொழுது தானம் வழங்கியதாகக் கூறுகின்றது. ஆலவாயுடையார் கோயில் ஊழியர்களை பதிபாதமூலப்பட்டுடைய பஞ்சாசாரியர் என்று மற்ற சிவன்கோயில் கல்வெட்டுகளைப்போலவே இக்கல்வெட்டும் குறிக்கின்றது. பதியாகிய பரமசிவனின் பாதமூலத்துக்கு அடிப்பட்ட ஆசாரியப் பெருமக்களை இந்த அழகான சொற்றொடர் நமக்கு உணர்த்துகின்றது.

ஊரை வழங்கிய அருளாளன் சேவகத்தேவனுக்கு வாணாதராயன் என்ற ஒரு பட்டப் பெயர் இருந்தது. தமிழ் நாட்டு அரசர்கள் அதிலும் குறிப்பாக பாண்டியர் கல்வெட்டுகளில் வாணன், காலிங்கன், மகதன், வில்லன், பல்லவன், மாளவன், சீனம், முதலிய பேரரசர் குடிப் பெயர்களைத் தங்களிடம் தொண்டு செய்து வந்த சில உயர்தர அதிகாரிகளுக்கு வாணாத ராயன், காலிங்கராயன், மகத ராயன், வில்லவராயன், பல்லவராயன், மாளவராயன், சீனத்தரையன் என்றெல்லாம் பெயரிட்டு வந்த வழக்கு கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இந்த அருளாளன் சேவகத்தேவன் வேறொரு மதுரைக் கோயில் கல்வெட்டில் தன்னை அரசனின் அம்மான் என்று கூறிக் கொள்ளுகின்றான். எனவே அரசன் தன் அம்மான் அளித்த ஊருக்கு வரியினால் வந்த வருவாயையும் கேயிலுக்கு அளித்தது சாலப் பொருத்த முடையதே. இச் சேவகத்தேவன் மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்றில் உள்ள தச்சனூரைச் சார்ந்தவன். இன்றும் இந்த ஊர் தஞ்சை மாவட்டத்தில் அறந்தாங்கி தாலுகாவின் தென் கிழக்குப் பகுதியில் அமைந்திருக்கிறது. பாண்டிய மன்னர்களிடம் தொண்டு செய்தவரில் பெரும்பாலோர் இப்பகுதியைச் சேர்ந்தவராகவே காணப்படுகின்றனர். ஞானசம்பந்தர் காலத்தில் ஆண்ட பாண்டியனின் அமைச்சராகிய குலச்சிறையார் இப்பகுதியில் அடங்கிய மணமேற்குடி என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்பது இங்கே நினைவு கூரத்தக்கது.

இவ்வாணாத ராயனைப் பற்றி கிடைக்கும் இன்னொரு அரிய செய்தியும் இன்று நிகழும் அரும் பெரும் திருப்பணிக்கு மிகவும் பொருத்தமாக இருப்பதால் அதையும் எடுத்துரைக்கின்றேன். இக்கல்வெட்டு வரைந்த இடத்திலேயே எழுதப்பெற்ற இன்னொரு கல்வெட்டில் "இவ்வாணாத ராயன் இக் கோயில் ஜீர்ணிக்கையால் ஜீர்ணோத்தாரணம் பண்ணினமையில் இக் கோயில் அழிவு சோரவும் (repairs) அதிரவீசியாடுவார் திருமண்டபமும் (நடராஜ மண்டபமும்) முதல் பிரகாரத்தில் திருவம்பலமும் திருநடை மாளிகையும் திருநிலையெழு கோபுரங்கள் உள்ளிட்ட திருப்பணிகளும் திருத்தேரும்" செய்வதற்கு அளிக்கப்பட்ட சோழ பாண்டிய நல்லூர் என்ற ஊருக்கு இதே அரசன் வரிவிலக்கு அளித்தான் என்று கூறப்பட்டிருக்கிறது.

இனி கல்வெட்டின் மிக முக்கியமான பகுதிக்கு வருவோம். முதலாவதாக வாணாதராயன் பெயரால் அமைந்த சந்தி. சந்தி என்பது இரவும் பகலும் அல்லது பகலும் இரவும் சேரும் காலத்திலோ அல்லது நண்பகலிலோ தெய்வங்களுக்கு நிகழ்த்தும் சிறப்பு வழிபாட்டைக் குறிக்

கும் கல்வெட்டு வழக்குச் சொல். வழிபாட்டுக்குத் தேவையான பொருள்களைத் திருப்படி மாற்று என்பதும் கல்வெட்டு வழக்கே. இரண்டாவதாக ஆலவாயுடையாருக்கு மார்கழித் திருநாட்காலத்தில் பரதேசித் துறவிகளை திருவெம்பாவை சேவிப்பதற்கு கட்டளைப்படித்தரம் அமைத்தது இன்றும் காமகோடி பீடத்தில் எழுந்தருளியுள்ள பரமாசார்யர்களின் ஊக்கத்தால் இன்று நிகழ்ந்து வரும் திருப்பாவை திருவெம்பாவை இயக்கத்தை நினைவூட்டுகின்றது. துறவிகளைக் கோவணவர் என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது. கோவணக்கள்வர் என்று தேவார வழக்கில் பரம சிவனுக்கு ஒரு பெயர் உண்டு. வைணவக் கோயில்களிலும் கோவணவர் என்ற வழக்குக் காணப்பட்டாலும் ஆலவாய்க் கோயிலில் சேவிக்க வந்தவர் கோவணக் கள்வனின் இனத்தைச் சேர்ந்த கோவணவர் என்பது இங்கே மிகவும் பொருத்தமாக இருக்கின்றது.

இறுதியில் மூன்ருவதாக அமைந்த நிவந்தம் பல வகையாலும் மிகுந்த சுவை தருவதாக இருக்கின்றது. அம்மன் கோயிலின் தெற்கில் வாணுதராயன் திருவாசலில் ஆலவாயுடையாரை எழுந்தருளச் செய்து சாதாரிப்பண்ணைக் கேட்கச் செய்ய வேண்டும் என்பதே அந்த ஏற்பாடு. முறையாக ஒவ்வொன்றையும் எடுத்துக் காண்போம். கல்வெட்டு அம்மன் கோயிலைத் திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார்கோயில் என்று குறிப்பிடுகின்றது. ஒரே இடத்திலிருந்து இறைவனையும் இறைவியையும் ஒரு சேரக்கண்டு சேவிக்கும் நிலையில் எழுந்த கோயில்களினின்றும் வேருக அம்மனுக்குத் தனியாகக் கோயில் எழுப்பும் வழக்கு ஏறக்குறைய பதினேராம் நூற்ருண்டிலிருந்து காணப்படுகிறது என்று சொல்லலாம். அதனேடு திருக்காமக் கோட்டம் என்று அதைக் குறிக்கும் வழக்கும் தோன்றிற்று. காமக் கோட்டம் என்ற சொல் காஞ்சியில் பழங்கால முதல் இன்றுவரை மையமாக இருந்துவரும் காமாக்ஷி அம்மன் கோயிலையும் அதனேடு தொடர்புடைய காமகோடி பீடத்தையும் நமக்கு நினைவூட்டுகின்றது.

இனி அந்தத் திருக்காமக் கோட்டத்தில் ஆளுடைய நாச்சியார் ஆகிய அங்கயற்கண்ணம்மையின் கோயிலில் தெற்கே அமைந்த வாணுதிராயன் திருவாசல் என்று அழைக்கப்பட்ட திருவாசலில் ஆலவாய் அரன் எழுந்தருளிக்கேட்ட சாதாரிப் பண்ணின் கதையைக் கேட்போம். மதுரையம்பதியில் முன்னாளில் வரகுண பாண்டியன் ஆண்டநாளில் ஒரு யாழ்பாடவல்ல இசை அறிஞன் வந்துசேர்ந்தான். இசைப் புலமையால் அரசனின் நன்மதிப்பையும் கவர்ந்தான். குடியிருக்கச் சிறந்த மாளிகையையும் மற்ற வளங்களையும் பெற்ருன். தனக்கு அரசன் அளித்த அரியமதிப்பை நினைத்து அகந்தையுங் கொண்டான். இதனைச் செவியுற்ற மன்னன் தன் அவைக்களத்துப் பாடகனுகிய பாணபத்திரனை அழைத்து ஏமநாதனேடு இசைப்போட்டிக்கு இசையவைத்தான். அரனின் அடியானுன அப்பாணபத்திரன் அந்த அரனின் அருளை மனதிற்கொண்டு அரசனின் திருவுள்ளக் கருத்திற்கு இணங்கினுன். எனினும் ஆலவாய்க் கடவுளைக் கண்டு விண்ணப்பித்து இல்லம் சேர்ந்தான். இறைவனே அன்றே ஒரு கிழவன் வேடந்தாங்கி விற்பதற்காக விறகுச் சுமையைச்சுமந்து கொண்டு ஒரு வீணையையும் தன் முதுகில் கட்டிக்கொண்டு வாங்க இயலாத ஒரு விலையைச் சொல்லிக்கொண்டே ஏமநாதனின் மாளிகைக்கு வந்துசேர்ந்தார். சுமையை

இறக்கி மாளிகையின் திண்ணையில் அமர்ந்து சுருதிகூட்டி இசையைச் சிறிதளவு எழுப்பினுர். சுருதி ஒலியைக்கேட்டு வெளியேவந்த ஏமநாதன் கிழவனை விசாரிக்கத் தொடங்கினுன். கிழவனும் பாணபத்திரன் இசை வகுப்புக்குத் தகுந்தவனில்லையென்று தம்மை ஒதுக்கிவிட்டதாகத் தெரிவித்துக் கொண்டான். ஏமநாதனின் வேண்டுகோளின்படி மீண்டும் ஒருமுறை முன்பாடிய அந்த சாதாரிப்பண்ணையே பாடி, படைப்பு முழுதும் உருகும்படியாகச் செய்தார். ஏமநாதனே மெய்ம்மறந்து கேட்டுப்பிறகு இசைக்குத் தகுந்தவனில்லையென்று தள்ளப்பட்ட கிழவனின் இசையிதுவானுல் பாண பத்திரனின் இசைப்புலமை எப்படியோ என்றஞ்சி உருவம் காட்டிமறைந்த அந்தக்கிழவனேடு தானும் மறைந்து ஒளிந்து ஓடினுன். பின்னர் பாணபத்திரன் நிகழ்ந்ததைக் கனவின் மூலம் அறிந்து அரசனுக்கு அறிவிக்கவே அரசனும் பாணபத்திரனைத் தன் அவைக்களத்திலிருந்து விடுவித்துக் கோயிலிலேயே பாடும்படி வேண்டிக்கொண்டான். சுருங்கிய இக்கதையின் முழுமையையும் திருவிளையாடற் புராணத்தில் விறகுவிற்ற படலத்திற் கண்டுகொள்க. சாதாரிப்பண்ணைத் திருவிளையாடற் புராணம் முல்லைப் பண் என்றும் குறிப்பிடுகின்றது. இது இன்றைய தேவகாந்தார ராகத்தை ஒத்தது என்று கருதப்படுகின்றது.

ஆகவே இசையினுல் இறுமாப்புக் கொண்ட ஏமநாதனுக்கு சாதாரிப்பண்ணின் மூலமாக இசையின் எல்லையைக் காட்டியருளிய இறைவனுக்கு அந்த சாதாரிப்பண்ணையே பிறர்பாடக் கேட்கும்படி செய்து அவ்விறைவனை மகிழ்விக்கச் செய்த ஏற்பாடு கல்வெட்டின் உட்கிடைக்கையாக இருந்து நம்மையும் மகிழ்விக்கின்றது. இக்கல்வெட்டின் வாயிலாக முன்னுளில் மதுரையில் நிகழ்ந்த திருப்பணிகள், திருவெம்பாவை சேவித்தல், இறைவனுக்குகந்த சாதாரிப்பண் இசைத்தல் முதலிய அரிய செய்திகளை அறிந்த வாசகர்கள் இறையடிமையை என்றும் போற்றுவார்களாக.



# பாண்டி நாட்டிலே

ஜே. எம். சோமசுந்தரம், பி. ஏ., பி. எல்.

ஆலவாய் அண்ணலின் அணிதிகழ் கோயில் தமிழகத்தின் சிகரமே என்னலாம். பாண்டிவள நாட்டின் தலையாய மதுரையில் காலவரையறையற்ற காலத்திலே தென்னவன் புகழிலேதோன்றி வளர்ந்தது, இக்கோயில். ஆதிக் கடம்பவனம் அதன் முதல் தோற்றம். அவ்வனத்தின் நடுவண் தாமே முளைத்தெழுந்த சொக்கலிங்கம் அதனில் வழிபடு கடவுள். அப்பெருமானைத் தேவர்கள் தாமே பூசித்துவந்தனர். அதனை ஒருநாள் இரவு தவத்திரு வணிகன் ஒருவன் காணும் பேறு பெற்றான். தான் கண்ட சிவப் பேற்றை அந்நாள் மணவூரிலிருந்தாண்ட பாண்டியன் குலசேகரனுக்குத் தெரிவித்தான். பாண்டியனும் தரிசித்து அக் கடம்பவனமே தன் தலைநகராக்க சிவப் பேற்றை வேண்ட, அவனும் தம் நாகத்தை அனுப்பி அந்நகரின் எல்லையைக் காண்பிக்க அவ்வெல்லைக்குட்பட்ட நகரே ஆலவாய் ஆயிற்று. கடம்பவனம் நாடாயிற்று. பின்னர் சிவனுறையும் கோயிலும் எழுந்தது. பொற்றாமரைக் குளமும் தோன்றியது. சிவன் எம்மிறை அக் கோயிலில் உறைவானாகத் தம் சடைமுடியிற் சூடிய பிறையினிடத்துரைக்க அமிர்தமாகிய மதுவைத் தெளித்துப் புதுமையாக்கிய காரணத்தால், இக்கடம்பவனம், மனம்மிக்க மதுரையு மாயிற்று. இதுபோன்ற பல அற்புதக்காரணங்களால், இத்தலம் நான் மாடக் கூடல், துவாத சாந்த தலம், கனியாபுரம், சமஷ்டிவிச்சாபுரம், பூலோக சிவலோகமு மாயிற்று. இதனைச் சுற்றிக் காணப்பெறும், பசுமலை, யானைமலை, ரிஷபாகிரி என்னும் சோலைமலை, சையமலை, மணமலை, பரங்குன்றமும்; நீர் நிலைகள் : பொற்றாமரை, எழுகடல், மாபாதகந்தீர்த்தகுளம், இக்கால வண்டியூர் குளமுங்கூட இவை சிவபெருமான் உயிர்களின் பொருட்டு இங்குச் செய்தருளிய அருட்டிரு விளையாடல்கள் பொருட்டு திருவருளின் எளிமையினை விளக்குவதாகின்றன.

**சங்கமிருந்தாரும் - இறையனாரும்**

மதுரைத் திருவாலவாயிலில் எழுந்தருளிய அண்ணல் சங்கத்தாரோடு கூடி, தமிழாராய்ந்த செய்தியும் இங்கே குறிப்பிட வேண்டியதாகும் ; தமிழ்ச் சங்கத்தை ஞானசம்பந்தர் 'கழகம்' எனவும் "மதுரைத் தொகை" எனவும் குறித்துள்ளார். இன்னும் சிவபெருமான் தன்னை வழிபட்ட தருமி என்னும் அந்தணனுக்கு "கொங்குதேர்" என்று தொடங்கும் செய்யுளைப் பாடிக்கொடுத்து, அவனுக்குப் 'பொற்கிழி' வாங்கி அளித்தார் என்பதும் வரலாறு. இதனை அப்பரடிகள்,

"நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன்"

எனக் குறித்துள்ளார். இவ்வாறு இறைவனே, பாண்டியர் காலத்திலே மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் தலைமைப் புலவராய் இருந்து தமிழ் ஆராய்ந்த செய்கையை அக்கால மணிவாசகரும் "திருக்கோவையாரில்"

"சிறைவான் புனற் றில்லைச்
சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த
ஒண் தீம் தமிழின் துறை"

என்ற தொடரில் குறிப்பிட்டமையும் நோக்கத் தக்கது.

இவ்வாறு தோன்றிய மதுரை அக்காலத்தில் ஒன்பது மைல் நீளமும் ஒன்பது மைல் அகலமுமுள்ளதாக, வடபால் வைகையும், தென்பால் பரங்குன்றத்தையும் எல்லையாகக் கொண்டு, காவல் காடு பாண்டியன் அகழ், கோட்டை முதலாகக் கொண்டு திருக்கோயில் நகரில் நடு நாயகமேயாக வளர்ந்தது. இவ்வாறு தோன்றிய மதுரையின் அமைப்பை, பரிபாடல் பாட்டொன்று விளக்குவது. "செந்தாமரை மலர் போன்றது அந்நகரம். தாமரையின் பொகுட்டுப்போல அமைந்தது திரு ஆலவாய், அதைச்சுற்றி அடுக்கடுக்காக உள்ள நகர வீதிகள் தாமரையின் அழகிய இதழ் போன்றன. அம்மாநகரின் மனையறம் புரிந்த மக்கள் தாமரைப்பூவின் மகரந்தம் போன்றனர்..." என மதுரையின அமைப்பையும், சிறப்பையும் போற்றுகிறது.

இச்சிறப்பைத் தாங்கிய மதுரையின் வளமும், திருக்கோயிலின் எழிலும், பாண்டியர்களின் புகழுக்கு இலக்காகி, பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கம்வரை விரிவாகி, வலியற்ற குலசேகர பாண்டியன் மதியற்ற செய்கையால் கி. பி. *1311* இல் துருக்கானிய மாலிக்காபூரின் கொடுமையினால் தரைமட்டமாக்கப்பெற்றது சரித்திரக் கூறுகும். இதற்குப் பின்னர் வந்த மதுரைத் துருக்கானியர் (Sultanate) *1371* இல், அழிக்கப்பட்டு மதுரையும், அதன் கோயில்களும் மறுபடியும் வளர்வதாயின. (பின் வரும்சரித்திரக் கூறுகளில் காண்க.)

ஆகவே, இப்போதுள்ள அருட்பெருங் கோயில், கம்பண உடையாராலும், பிற்கால பாண்டியர்களாலும், விசுவநாத நாயக்கர், திருமலைநாயக்கராலும், கொடை வளம் மிக்க பக்தர்களாலும் விரிவாக்கப்பட்டும் புனருத்தாரணம் செய்யப்பட்டும் வளம் பெற்றுள்ளது. இதன் பரப்பு 847 அடி நீளம் 792 அடி அகலம் கொண்டது. இதன் இரு கூறுன ஒன்று மீனாட்சியம்மையாரின் கோயிலும், இரண்டு சுந்தரேசுவரரது கோயிலும், ஒன்றுபட்ட மனம்போல் மாறுபடாத எழிலுடன் நாற்றிசையும் நான்கு திருவாயில் கொண்ட பெருங்கோபுரங்களுடன் இலங்குகின்றது. இப்பரப்புக்குள் காணப்பெறும் அணிதிகழ் சிற்பக்களஞ்சியங்களும், கோயில் சிறு கூறுகளும் எவ்வெப்போது தோன்றியவை என்பதை, **திருவாலவாயுடையார் திருப்பணி மாலையில்** கண்டுணர்க.

பண்டைப் பாண்டியரும், அவரது குடிகளும் தொன்மைச் சிவ சம்பந்தமுடையவர்கள். ஆலவாய் அண்ணலின் கோயிலுடன் தோன்றியவை—தென் திரு ஆலவாய், வடதிருவாலவாய் பழைய சொக்கநாதர் கோயில், திருநடுவூர் இம்மையே நன்மை தருவார், திருஆப்பனூர் கோயில் மேற்புறத்தில் உலகளந்த பெருமாள், கண்ணகியின் நினைவாகச் செல்லத்தம்மன் கோயில் பிறவுமாம். மற்றைய இன்றும் பாண்டி வள நாட்டில் பழம் பதிகள் பதினான்கென ஒரு வெண்பா கூறுகிறது:—

"கூடல் புனவாயில் குற்றாலம், ஆப்பனூர்
ஏடகநெல் வேலி யிராமேசம்—ஆடானை
தென் பரங்குன் றஞ்சுழியல்
தென்திருப்புத் தூர் கானை
வன் கொடுங் குன் றம்பூ வணம்."

இக்கோயில்களின் வளப்பமும் சிற்ப நுட்பங்களும் விரிக்கின் பெருகுமாயினும், ஈடும் எடுப்பு மற்ற சில பாண்டிய கோயில்

களேனும் இங்கு இடம்பெற வேண்டி சிலவற்றைக் காண்போம்.

சிவசம்பந்தமுடையவைகளில் திருப் பரங்குன்றம், திருவாவினன்குடி, திருச் செந்தூர், திருநெல்வேலி, தென்காசி, குற்றாலம், திருவாதவூர், ஆவுடையார் கோயில், இராமேச்சுரம், உத்தரகோச மங்கை, குமரிக் கோயிலும் பிறவுமாம்.

வைணவ விண்ணகரங்களில், திரு மோகூர், திருமாலிருஞ்சோலையாம் அழகர் கோயில், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத் தூர், தாடிக்கொம்பு, கிருஷ்ணபுரமும் பிறவுமாம்.

திருப்பரங்குன்றம், திருவாவினன் குடி, திருச்சீரலைவாய் என்ற திருச்செந் தூர் முருகனது மெய்ப்பாடுகள் நிறைந்த தலங்களாகும். இம் மூன்றும் பண்டைப் பாண்டியர்களது வள்ளன்மையால் வளர்ந்து சங்க கால இலக்கியச் சான்று கள் மிக்குடையன. திருநெல்வேலி, மூங் கில் வனமாக இருந்து பல பாண்டியர் களால் வளமிக வளர்ந்ததும்; மதுரை ஆலவாய் போன்று, சுவாமிக்கும் அம்ம னுக்கும் கோயில் இருகூருகவும் ஒருமித்த பண்புடனும் விளங்குகிறது. கூத்தாடும் எம்மிறை மதுரையில் வெள்ளியம்பலத் தேயும், இங்கு தாம்பிர சபையிலும் ஆடுகின்றனர்.

பாண்டியன் எடுப்பித்த தென்காசி விசுவநாதர் கோயில் சிற்பத்திரு மேனி களின் ஒரு ஒப்பற்ற கருவூலமெனலாம். திருமேனிகள் பிரமாண்டமான அளவில், ஊர்த்துவ தாண்டவமூர்த்தியும், காளியும், மன்மதனும்,ரதியும், வேணுகோபாலனும், அக்னிவீரபத்திரரும், வீறுபெற்று உயிர்க் களையுடன் விளங்குகின்றனர்.

அதனை அடுத்த குற்றாலநாதர் கோயில் சமயச் செறிவுக்கும், இலக்கியச் செல்வத்திற்கும் அழகுத் தெய்வத் திற்கும் உறைவிடமாகும். இதனையடுத்த பொதிகைமலையே தமிழ் முனிவனின் உறைவிடம். அதன் நீர்த்துறையாகிய தாம்பிரபரணியும் வாழ்விற்கு உயிர் கொடுப்பதாகும்.

திருவாதவூரர், மதுரைக்குக் கிழக்கே பதினான்கு கல் தொலைவிலுள்ள மதுரை யின் புகழ் தேடுமூராகும். இங்கு மாணிக்க வாசகர் தோன்றினார். சிவன் எம்மிறை பல திருவிளையாடல்களை அவருக்காக ஆடினாராக, பிட்டுக்கு மண் சுமந்தார், பாண்டியன் பிரம்பால் அடிபட்டார். உலகம் உய்ய மணிவாசகரைத் தந்தார்.

ஆவுடையார் கோயில், மாணிக்கவாச கரது திருப்பணியாகும், அறந்தாங்கிக்கு ஆறு கல் தொலைவிலுள்ளது. வேதநாய கன் ஆரணவல்லி திருவாதவூரில் கோயில் கொண்டுள்ளனர். நரியைப் பரியாக்கி, குதிரைச் சேவகனாக வந்த சிவபெரு மானின் திருவுருவம் ஆவுடையார் கோயி லில் சிற்பத் திருமேனியாக விளங்குகின் றது.

பாண்டியநாட்டு ஆவுடையார்கோயில் சிற்ப முறையே ஒரு தனித்தரம். சிற்பா சிரியர் தாம் எடுக்கப் புகும் கோயிலுக்கு ஒப்பந்தம் பேசுகையில் "ஆவுடையார் கோயில் திருப்பணிக்கும் புறத்தி" என் றெழுதுவார்களாம். அதன் பொருள், அத் தலத்திலே காணப்படும் சிற்பங்களுக்கு நிகராகச் செய்யச் சொன்னால் தங்களால் இயலாது என்பது தான். சிற்பங்கள் தவிர கோயில் கொடுங் கைகளும், உலகப் பிர சித்தி பெற்றவை. ஆகவே, கோயிலை

நேராகக் கண்டு இறை வழிபாடு செய்வதே அதன் பொருளாகும்.

இராமேசுவரம், உத்தரகோசமங்கை, குமரிக்கோயில்களும் பாண்டியர்களால் எடுப்பிக்கப்பட்டு விஜயநகரப் பேரரசர்களாலும் சேதுபதி மன்னர்களாலும் பெரிதாக்கப்பட்டவை. இராமேசுவரம், கி. பி. 1635-1672 வரையுள்ள சேதுபதிகளால் உலக வியப்புக்கேற்ற திருச்சுற்றுகூயுடனும் (பிராகாரம்) அப்பிரகாரத் தூண்கள் சேதுபதி மன்னர்களின் உருவத்தைத் தாங்கியதாகவும் எடுக்கப்பட்டுள்ளன. சுவாமி இராமனுல் பிரதிட்டிக்கப்பட்ட இராமலிங்கம். அப்பரும் சம்பந்தரும், அருணகிரியாரும் பாடியுள்ளனர். நிரம்ப அழகிய தேசிகர் சேது புராணம் இயற்றியுள்ளனர். கோயிலின் வடபால் இராமனது பாதந்தாங்கிய 'கந்தமாதன பருவதம்' தரிசிக்கத் தக்கது.

உத்தரகோசமங்கை, இராமநாதபுரத்திற்கு ஆறு கல் தொலேவிலுள்ளது. மாணிக்கவாசகர் மனத்திடைப் புகுந்த "உள்ளம் பெருங் கோவில்" உத்தரகோசமங்கைக்கரசு, மங்களநாயகர்; அம்பிகை பூண்முலேயம்மை.

குமரிக்கோயில், இந்திய நாட்டுத் தென்முனேக் கோடியிலுள்ள சரித்திரச் சிறப்பும், புராணச் சிறப்பும் பெற்ற உலக அன்னே, கன்னியாம் என்ற கூற்றினுக்குச் சான்ருகும் அழகுக் கோயில். மூன்று கடல்சேரும் தலத்தில், தனித்திலங்குவது.

இன்னும் வைணவ விண்ணகரங்களும் பலவாக, திருமோகூர், மதுரைக்கு அணித்தான சரித்திரக் குறிப்பு பெற்ற விண்ணகரம், திருமாலிருஞ் சோலே. சங்கமிருந்தார் காலமுதல், முருகனுக்கும் திருமாலுக்குமாக உகந்த மலேத்தலம், அழகர் கோயில் என இதுபோது வழங்குகிறது. திருமலேநாயக்கரது உருவச்சிலேயுடன் கூடிய மண்டபங்கள், மதிற் கோட்டைத் தளங்களுடன் கூடியது.

ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ வைகுண்டம், திருநெல்வேலிச் சீமையிலுள்ளது. தாமிரபரணி ஆற்ருேரமுள்ள, அணிதிகழ் விண்ணகரங்கள், ஆழ்வார்கள் நம்மாழ்வார் மதுரகவியாழ்வாரது பிறப்பு, வாழ்க்கைத் தலம். ஸ்ரீவில்லிபுத்தூர், பெரியாழ்வார் தன்னிகரிலாத கோதை — ஆண்டாள், இவர்களது ஞானவாழ்க்கையில் ஈடுபட்டதும், சிறப்புச் சிறப்புக்கள் தங்கியதுமான பெருங்கோயில். தாடிக்கொம்பு, திண்டுக்கல்லுக்கு 5½ மைலிலுள்ள, வைணவப் புராணச்சிறப்பும் கலேக்கு ஒரு கருவூலமுமாகும்.

கிருஷ்ணபுரம் பாளேயங்கோட்டைக்கு 6 கல் தொலேயிலுள்ளது. மதுரைப் பாண்டிய, கிருஷ்ணப்பநாயக்கனுல் (கி. பி. 1563–73) எடுப்பித்த விண்ணகரம் பெருமான் திருவேங்கடாசலபதி, தாயார் அலர்மேல் மங்கை, கோயில்—ரங்கமண்டபம் உள்ளத்தைக் கொள்ளேகொள்ளும் சிற்பக் களஞ்சியம். உலகினேர் அதிசயிக்கும் வனப்புடையவை.

**சிற்பமும் கலே வாழ்வும்**

தமிழ்ப் பண்புடையார் கலேச் செல்வர்கள். அவரது கலேச் செல்வம், அவர் எடுப்பித்த சிற்பம் திகழ் கோயில்களில் எங்கும் பூத்துப் பரிமளித்தன. இறைவனது எழிலே, அவனுக்காக ஆக்கிய சிவனுறையும் கோயில்களிலும், விண்ணகரங்களிலும் கண்டனர். உண்மையில் அவை சிவ

மாகத் திகழ்ந்தன. மாலாக உயிர்த் தத்துவம் பெற்றன, இறைவன், உண்மை அன்பு, எழில் வடிவினன் அன்றே!

காலவரையறையில் ஆதிக் கோயில்கள் திருவெஃகா போன்று சாந்தாலும் சுடுமண்ணாலும் எழுந்தன. காலவெள்ளத்தாலும், தட்ப வெப்ப நிலையாலும், அவை பழுதுற்றபோது மீண்டும் மீண்டும் புதுப்பிக்க வேண்டியவையுமாயின. இதையுணர்ந்த பல்லவ மகேந்திர வர்மனே என்றும் நிலையுற்ற கடவுளுக்கு என்றும் அழியாக் கற் கோயில்களை முதன் முதலில் பெரிய பாறைகளைக் குடைந்து, குகைக் கோயில்களை எடுத்தான். அதுதான் மண்டகப்பட்டு திருமூர்த்திக் கோயிலாகும். அதில் "விசித்திர சித்தன் (மகேந்திரர்) பிரமாவிற்கும், ஈசுவரனுக்கும், விஷ்ணுவிற்கும், செங்கல், மரம், சாந்து, உலோகம் முதலியன உபயோகப்படுத்தாத ஒரு கோயிலைக் கட்டுவித்தான் என்ற கல்வெட்டு காணப்படுகிறது. பின்னர், பாறைகளைச் சிறு அளவில் செதுக்கி ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி, சுண்ணும்பினால் இசைத்த காஞ்சியிலுள்ள இராஜசிம்மன், கயிலாசநாதர் கோயில் முறையாகும். அதற்குமேல், சோழர்களது சிற்ப அமைப்பு புதுக்கோட்டைச் சீமையில், விஜயாலய சோழேச்சரத்திலும், நார்த்தா மலையிலுமாக, அதன் பெருமிதத்தோற்றம் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழேச்சுரம், தாராசுரம் திருபுவனம் கோயில்களிலும் காண்பதாகும். இங்கு, காணும் நீண்ட சதுரக் கற்றூண்கள், அகலமான பல மண்டபங்கள், சுவர்களில் எங்கும் மாடக் குழிகள், அவற்றில் பொருந்திய உருவத் திருமேனிகள் அதன்மேல் காணும் அழகிய தோரணங்கள், பெருமிதங்கொண்ட துவாரபாலகர்கள், தவிர இவற்றிற்கு மேலாக இங்கு சிவனுறையும் கருவறைக்கு மேல் ஓங்கி வளர்ந்த அழகிய விமானங்களுமாகும். இவ்விமானங்கள், பாண்டியர் காலத்தே உயரத்திலும் உருவத்திலும் குறைந்தன. ஆனால், கோயிலின் சுற்று மதிலையொட்டிய வாயிற் கோபுரங்கள் ஐந்துமுதல் பதிமூன்று எழுநிலை மாடங்களுடன் விண்ணளாவி உயருவதாயின. இன்னொரு பண்பு, ஒவ்வொரு சிறப்புப் பற்றி திருக்கோயிலினுள் பெரு மண்டபங்களும் பல எழுவதாயின. இவற்றின் பகுதிகளும், திருச்சுற்றுலைகளும், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், நீராழி மண்டபமும், மற்றும் எழுந்தன. இம்மண்டபங்களைத் தாங்கும் தூண்களும், மரத்தால் செதுக்கியவை போன்று அழகின் பெருக்கையும், சிற்பியின் வல்லமையையும் மெய்ப்பிக்கும். இத்தன்மைகள் பொதுவாக, மதுரை, தென்காசி, திருநெல்வேலி, காஞ்சி, திருவரங்கம், தில்லையிலும் காணலாம். பாண்டியர்களுக்குப் பின்னர் விஜயநகரப் பேரரசில் எழுந்த கோயில்களில், மேற்கூறிய சிற்ப முறைப் பகுதிகளெல்லாம் கதம்பமாகக் காணலாம். இன்னும் அவ்வரசின் வீரப்பிரதாபப் பெருமிதம் மதுரை, ஸ்ரீரங்கம், கிருஷ்ணபுரம், காஞ்சியிலும் காணலாம். குதிரை வீரர்கள் வீறுபெற்றவர்கள், ஆகிய அற்புதச் சிற்பங்களைக் காணலாம். இவ்வாறு வளர்ந்த கோயிற் சிற்பமுறை, அக்கால மக்களின் தொன்று தொட்டு வளர்ந்த உயர் இலக்கியப் பண்பிற்கும், ஊன்றிய சமய உணர்ச்சிக்கும் சான்று பகர்வனவாம்.

# திருமுறை ஓதுவாருக்குத் திருமலை நாயக்கர் கொடுத்த செப்புப் பட்டயம்

வித்துவான் தா. குருசாமி ஓதுவார்

[ பட்டயத்தின் தொடக்கத்திற்கு முன்பு இறைவனின் திரிசூலக்குறி பொறிக்கப் பட்டுள்ளது. இனி பட்டயத்தின் வாசகங்கள் அப்படியே தரப்படுகின்றன. பட்டயத்தின் இடையில் தெலுங்கில் "திருமலை நாயக்கன் அய்யனிகாரு" என்றும் கடைசியில் கிரந்த எழுத்துக்களும் காணப்படுகின்றன. ]

ஸ்வஸ்தி ஸ்ரீரிமன் மகா மண்டலெசுரன் அரியதழவிபாடன பாஷைக்குத் தப்பு வராத கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் பாண்டி மண்டலத் தாபனுசாரியன், சோழ மண்டல பிரதிபடாணுசாரியன், தொண்ட மண்டலப்பிரதாபன், ராசாதிராசன் ராச பரமெசுரன் ராசமார்த்தாண்டன் ராசகெம் பீரன் ராசகுல திலகன் ராசசவுத்தண்டன் ராசகுலசெகரன் வீரப்பிரதாபன் இழமுங் கொங்கும் யாள(ழ்)ப்பாணமும் யெம்மண் டலமுந் திறைகொண்டருளிய கெசபதி அசுபதி நாபதி நவெ(ே)காடி நாராயணன் செ(ே)சாமவங்கி செஞ்சூரிய வங்கிசம் செ(ே)யவல்செய்ய விசைய நகர்ப்பட்ட ணத்தில் வீரசிங்காசனத்திலிருந்து கெச வேட்டை கண்டருளி ராச்சிய பரிபாலனம் பண்ணி அருளா நின்ற ஸ்ரீமன் கட்டாரிச் சாமுவரில் உத்துங்கராயர், கட்டாரிராயர், விருபாட்சராயர், நரசிங்கராயர், வீரநர சிங்கராயர், பிரபுட (திருமலை நாயக்கன் அய்யணிகாரு) தேவமகாராயர் அல்லமாப் பிரபு தெவமகாராயர் சென்னவசவ தேவ மகாராயர், மல்லிகாச்சுனமகாராயர், சதா சிவ தேவமகாராயர், வீரவசந்தராயர், கிஷ்ணராயர், அச்சுதராயர், ராமராயர், வெந்த்திமமாராயர், திருமலராயர், வெங் கிடபதிராயர், சிக்காராயர், ராமதேவராயர், ஆணைக்குந்திராயர், சீரங்கராயரிலிப்பிரி திவி பாண்டி மண்டலராச்சிய பரிபாலனம் பண்ணி அருளா நின்ற விசுவநாத நாயக் கர், கிஷ்டிணப்ப நாயக்கர், பெரியவீரப்ப நாயக்கர், குமார கிஷ்டிணப்ப நாயக்கர், முத்துவீரப்பநாயக்கர், கஸ்த்துரிரெங்கப்ப நாயக்கர், முத்துவீரப்ப நாயக்கர், திருமலை நா(ய்)க்கனய்யன் அவர்கள் ராச்சிய பரி பாலனம் பண்ணி அருளா நின்ற கலியுக சகார்த்தம் ௪௬௭௩ (4673) சாலி வாகன சகார்த்தம் ௧௫௪௪ (1544) செல்லா நின்ற வெகுதானிய ஸூ அர்பசி மீ௨ ௧௫ (15) தெதி உள்ளுடைய முதலியார்சிஷன் மதுரைத்தலத்து அலங் கார ஓதுவார் ஆனந்த ஓதுவார் கனகசபா பதி ஓதுவார் வீதிவிடங்க ஓதுவார் குமா ரன் தாண்டவமூர்த்தி ஓதுவார்க்கு காணி யாட்சிப் பட்டயங்கொடுத்தபடி. காணி யாட்சியாவது செங்குளம் நஞ்சை நிலம் முப்பது முக்காணியும் புஞ்சை இருபத்தி

முக்கால விரைப்பாடும் மாவிடை மரவிடை சொரணுதாய முள்படக் காணியாட்சியாக விட்டுக்கொடுத்த படியினுலே சந்திராதித்தர் வரைக்கும் புத்திர பவுத்திரபாரம்பரையாக ஆண்டனுபவிச்சிக் கொள்வாராகவும். இப்படிக்கு நடக்குமிடத்தில் இந்த செங்குளத்துக்கு விகிர்தம் பண்ணுமல் அனுகூலமாய் நடத்திவச்சி வந்த பெயர்கள் வங்கிஷ அவிவிரத்தியாய் சகல திக்குவிசயங்களும் உண்டாயிருப்பார்கள். அலங்கார ஓதுவார் செங்குளம் வளந்தெரியிருக்ககடுத்த மலக்கலு ராமசந்திரனய்யனெழுத்து.

---

[ குறிப்பு :— மேற்கண்ட நன்செய்புன்செய் உடைய செங்குளம் கிராமம் ஓதுவார் செங்குளம் என்றே வழங்கி வருகிறது. அவ்வூர் திருப்பூவணத்தில் இருந்து 10 கல் தொலையில் உள்ளது. என் தந்தையார் காலம்வரை செங்குளம் கிராமத்திலிருந்து வருகின்ற வருமானத்தைக்கொண்டு மதுரைக் கோயிலில் திருமுறைத் தொண்டு செய்யப்பட்டது. தற்சமயம் 1950-ம் ஆண்டு ஏற்பட்ட ஜமீன் இனும் ஒழிப்பில் சேர்ந்து எங்கள் கையைவிட்டுச் செங்குளக் கிராமம் அகன்றது. மேற்கண்ட பட்டயம் இன்னும் எங்கள் கையில் இருந்து வருகிறது என்பதும் அது கூறும் செய்தி உண்மையே என்பதும் அறியற்பாலதாகும். ]



## ○ பாண்டி ○

ஆவியந் தென்றல் வெற்பின் அகத்தியன் விரும்பும் தென்பால்
நாவலந் தீவம் போற்றி, நாவலந் தீவந் தன்னுள்
மூவர்கட்கு அரியான் நிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநன் னுடு போற்றி

—பெரும்பற்றப்புலியூர் நம்பி
திருவிளையாடற்புராணம்

# சில வரலாற்றுப் புதையல்கள்

C. M. இராமச்சந்திரன், B. A., B. L.

ஒரு நாட்டு மக்களின் பண்பாட்டை அந் நாட்டு வரலாறே தெரிவிக்கும். அவ் வரலாறு படிப்படியாய் உயர்ந்து வளர்ந் திருக்கின், அதன் பண்பாடும் உயர்ந்து ஓங்கியிருக்கும். உயர்ந்து வளர்ந்திராத வரலாறு அவர்களுடைய பண்பாட்டை நன்கு வெளிப்படுத்தாது. தங்கள் வர லாற்றைக் கூறமுடியாத நாட்டு மக்க ளுக்குப் பண்பாடு இல்லை எனலாம்.

இந்த வகையில் ஆராய்ந்தால் தமிழ் நாட்டு மக்கள் சிறந்த பண்பாடு உடைய வர்கள் என்றும், ஆகவே அவர்கள் சிறந்த தொரு வரலாற்றைப் படைத்தவர்கள் என் றும் சொல்ல வேண்டும். சில நாடுகளில் கற்றோர்கள் எழுதிவைத்த வரலாற்று நூல் கள் உண்டு. சில நாடுகளில் அந்நூல்கள் இல்லை. அது காரணமாகப் பண்பாட்டை அளக்கமுடியாது. தமிழ்நாட்டிலோ கற்றோர்கள் வரலாற்றுப் பகுதி என்ற முறையில் நூல்களை எழுதிவைக்கவில்லை. ஆனால் வேறு பலவகையில் வரலாற்றை அறிவித்து இருக்கிறார்கள். ஆகவே தமிழ்நாட்டின் பண்பாட்டுச் சிறப்பை அறியவேண்டின் பலவகையான துணுக்கு களைத் திரட்டி, ஒழுங்குபடுத்தி ஆராய்ச்சி செய்ய வேண்டி வரும். அவை களின் மூலம்தான், பண்பாட்டை அறிய லாம்.

முன்னோர்களின் கருத்தோவியங்களே பண்பாட்டின் அறிகுறிகள் ஆகும். அக் கருத்தோவியங்களை அவர்கள் எழுதி வைத்த சீரிய கவிதைகளில் காணலாம். அக் கவிதைகள் சிறந்த இலக்கியங்களாக விளங்குகின்றன. நாளடைவில் அவ்விலக் கியங்களுக்கு இலக்கணங்களும் வகுத் திருக்கிறார்கள். அந்நூல்களில் சரிதத் துணுக்குகளும் ஆங்காங்கு காணலாம். தமிழ்நாட்டு இலக்கியத்தில் பற்பல சரி தத்துணுக்குகள் வெகு அழகாக வரையப் பட்டிருக்கின்றன. அவைகளை ஒருங்கு சேர்த்து ஒழுங்குபடுத்தின் நல்லதொரு வகையில் நாட்டு வரலாற்றை அறியலாம். அவைகளைக் கொண்டே நாட்டு வரலாறு முழுவதும் அறிய முடியாது. புதை பொருள்கள், பண்டைக் கட்டிடங்கள், பழைய கோயில்கள், அரிய சிற்பங்கள், அழகிய ஓவியங்கள், இன்னிசைக் கருவி கள், தொழில் வகைக் கருவிகள், மண் பாண்டங்கள், அணிவகைகள், செயற் கைப் பொருள்கள் முதலான பல் வகைப் பொருள்களிலும் நாட்டின் பண்பாட்டினை அறியலாம். இவைகளேயன்றி நாட்டுக் கவிதைகள், பாட்டி கதைகள், விடு கதை கள், பழமொழிகள், முதலியவைகளிலும் நாட்டுச் சரிதம் புதைந்து கிடக்கிறது.

இவ்வடிப்படை ஆதாரங்கள் எல்லா வற்றிலும் தென்னாட்டில் கிடைத்திருக் கும் அரிய பொன்புதையல்கள் திருக் கோயில் சுவர்களில் பொறிக்கப்பட்டிருக் கும் கல்வெட்டுகளே ஆகும். அக் கல் வெட்டுகள் தென்னாட்டின் வரலாற்றை உள்ளது உள்ளபடியே வெளிப்படுத்து கின்றன. அக் கல்வெட்டுகளில் அமிழ்ந்து கிடக்கும் செய்திகள் வெறும் கட்டுக்கதை கள் அல்ல. அவைகள் தோன்றின காலத் திலேயே பொறிக்கப்பட்ட காரணத்தி னால் நீதிமன்றங்களில் வெளியிடப்படும்

சற்சான்றுகள் போல அவைகள் இருக்கின்றன.

நாட்டை ஆளும் அரசர்களும் அவர்களுடைய செயல்களும், குடிகளும் அவர்களுடைய நடவடிக்கைகளும், போர்களும், அவற்றின் வெற்றி தோல்விகளும் அறச் செயல்களும் அவற்றின் நிர்வாகமும், சிற்பங்கள் கவிதைகள் மற்ற நற்கலைகளும், நீதி நெறிகளும் அவைகளைச் சீர்படுத்தும் முறைகளும் முதலியவைகளை எல்லாம் அவைகள் தெரிவிக்கின்றன. இவைகளை விளக்குவதற்காக சில எடுத்துக் காட்டுகளை இங்கே கூறுவோம். ஏட்டுப் பிரதிகளிலும், பண்டைய நூல்களிலும் காணாத செய்திகள் அக்கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

கொங்குநாட்டின் மேற்குப் பகுதிகளில் உள்ள உட்பிரிவுகள் பேரூர்நாடும் வாயிரக்காநாடும் ஆகும். இவைகள் தற்காலத்தில் கோவை வட்டமும், பொள்ளாச்சி வட்டமுமாகும். இவைகளை அடுத்து மேற்கே உள்ளன கேரள நாட்டைச் சேர்ந்த பாலைக்காடும் சித்தூர் வட்டமும் ஆகும். இந்நாடுகள் ஒட்டியுள்ள வகைகளில் இரு பக்கங்களிலும் அரசியல், வாணிபம், பழக்கவழக்கம் முதலியவைகள் கலந்திருக்கின்றன. இருபது நூற்றுண்டுகளுக்கு முன்னரே உரோமானியர் தமிழ் நாட்டுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்த நாளில், கேரளம் (சேரநாடு) கொங்கு நாடு இரண்டிற்கும் வாணிபத் துறையில் பெரும் நட்பு இருந்தது. உரோமானிய நாணயப் புதையல்கள் இதனைத் தெரிவிக்கின்றன. பிறகு சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான்பெருமாளுடன் நட்புப்பூண்டு திருவஞ்சைக்களம் சென்றபோது அரசியலிலும் தொடர்பு ஏற்பட்டது. பின்னர் கொங்குச் சோழர் ஆட்சி கொங்குநாட்டில் ஏற்பட்டது. அந்தக் காலத்தில் (10-ஆம் நூற்றுண்டுமுதல் 13-ஆம் நூற்றுண்டு வரை) அடிக்கடி கொங்குநாட்டிற்கும் கேரளநாட்டிற்கும் போர்களும் நடந்தன. இவைகளைப்பற்றி கல்வெட்டுக்களால் அறிகிறோமே ஒழிய நூல்களால் அறியமுடியாது. அதனைச் சிறிது விவரிப்போம்.

முதன் முதலாக 10 நூற்றுண்டுகளுக்கு முன்னர் கேரள மன்னர்கள் இருவர் கொங்கு நாட்டில் புகுந்து பேரூர் நாட்டு வெள்ளலூர் வரையில் சென்று அவ்வூர் தேனீசுவரர் கோயிலில் தங்கள் வருகையைக் குறித்திருக்கிறார்கள். அவர்கள் பெயர்கள் இரவி கோதை, கோக்கண்டன் ரவி என்பன. அவர்கள் ஈரோடு வரை சென்றிருக்க வேண்டும். அவ்வூர்க் கோட்டைக் கோயிலிலும் மற்றும் பேரூர் பட்டீசர் கோயிலிலும் தங்கள் பெயர்களைக் குறித்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் செய்த காரியங்கள் விவரமாகச் சொல்லப்படவில்லை. அந்தக் காலம் 9—வது நூற்றுண்டாக இருக்கலாம். எழுத்தும் பண்டைய எழுத்தே.

பின்னர் கொங்குநாட்டரசன் ஒருவன் மேற்கே படையெடுத்து வாளையாற்றைத் தாண்டிச் சித்தூர் அருகே சென்றான். கேரளநாட்டு மன்னன் போரில் பின்தங்கி சித்தூர் அம்மன் கோயிலில் சரணம் புகுந்தான். அவனது வேண்டுதலைக் கேட்ட அம்மன் செவிசாய்த்துப் போர்க்கோலம் கொண்டு கொங்குநாட்டரசனை வெட்டிவிட்டதாக ஒரு கர்ண பரம்பரைச் செய்தி கூறுகிறது. இச்செய்தியை ஒரு விழாவாகத் தற்போதும் சித்தூரம்மன் கோயிலிலே மாசிச் சிவராத்திரியின்போது உற்சவம் கொண்டாடுகிறார்கள். இதனைக்

"கொங்குப் படை" என்ற பெயரால் வழங்குகிறார்கள். அப்போது போர் நடக்கிறாற் போல வேடங்கள் போட்டுக்கொண்டு திருவிழா நடத்துகிறார்கள். பூசாரி பழைய ஏட்டுப் பிரதி ஒன்றில் உள்ள சாசனத்தை அவ்விழாவில் படிக்கிறான்.

மீண்டும் 10, 11, 12 நூற்றாண்டுகளில் கொங்கு சோழர்கள் மேம்பாடு அடைந்திருந்த காலத்தில் அடிக்கடி கொங்கு நாட்டிற்கும் கேரளத்திற்கும் போர்கள் நடந்தன. கேரள அரசர்கள் அப்பபோது பேரூர்நாடு, வாயிரக்கா நாடு, வைகாவூர் நாடு (பழனி) முதலிய நாடுகளில் புகுந்து நிலங்களை அழித்தும் கோயில்களில் சென்றும் சிலவற்றைப் புதுப்பித்தும் கல்வெட்டைப் பொறித்துள்ளார்கள். பேரூர் நாட்டில் கோவன் புத்தூருக்கு (கோயம்புத்தூர்) வீர கேரள நல்லூர் எனப் பெயரிட்டு மேற்கேயுள்ள முட்டத்திற்கு அமரபுயங்கா நல்லூர் என்று பெயரிட்டும் தங்கள் வெற்றியைக் குறித்திருக்கிறார்கள். அன்னார் படையெடுப்புக்கள் குலைந்து போக அப்பெயர்களும் மறைந்தன. அச்செய்திகளைக் கல்வெட்டுகளில் மட்டும் அறியலாம். அவ்வாறு நடந்த போர்களில் விக்கிரமசோழன் என்ற கொங்கு சோழன் காலத்தில் ஒரு பெரும் போர் நடந்திருக்கிறது. அண்மையில் பேரூரில் படியெடுத்த ஒரு கல்வெட்டில் அது கூறப்பட்டுள்ளது. அதில் இதுவரையில் அறிந்திராத ஒரு அரிய சம்பவம் கூறப்பட்டுள்ளது. அது 440/59 என்று இலக்கம் இட்ட ஒரு கல்வெட்டு ஆகும். அதை வரலாற்று அறிஞர்கள் ஆராயவேண்டிய ஒரு செய்தியாகையால் அதன் விவரத்தை இங்குச் சுருக்கமாகக் கூறுவோம்.

பேரூர் பட்டன்கோயில் முன்மண்டபத்தில் வடபுறச் சுவரில் திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் என்ற பட்டம் வகித்த கொங்குச்சோழன் காலத்தில் 12-ம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்தில் அக்கல் வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டில் காணும் குறிப்புகளினால் அது விக்கிரமசோழன் காலத்தில் வெட்டப்பட்டது என அறியலாம். அரசன் நடத்தின போரில் அவன் மலைராச்சியத்தில் (கேரளம்) பாளையம் (படைவீடு) இறங்கி இருந்ததாகத் தெரிகிறது. அவன் போரில் மலைநாட்டாரை வென்று க-புத்தூர் என்ற ஊரைப் பிடித்து, அந்த வெற்றியைக் கொண்டாடும் பொருட்டு இறைவனுக்கு நன்றி செலுத்தும் முறையில் பேரூர் பட்டீசுவரர் கோயிலுக்குச் சென்று அங்கே ஆராதனை செய்து இறைவனுக்கு வாயிரக்கா நாட்டு கீழ் மலையூர் என்ற விக்கிரம சோழ நல்லூரைத் தானமாகக் கொடுத்தான். இந்த தானம் தனக்கும் தன் தகப்பனுருடையதுமான நலத்தின் பொருட்டு அளித்தான். அரசனுடைய உத்தரவாகையால் அக்கால வழக்கத்தின்படி தன் இயற்பெயர் குறிக்காமல் கோனேரின்மை கொண்டான் என்ற பொதுப்பெயரால் கல்வெட்டு வெட்டியிருக்கிறான். அவன் பிடித்த ஊரின் பெயர் சிறிது அழிந்திருக்கிறது. தானம்செய்த ஊர் கீழ் மலையூர், அதற்கு அரசன் தன் பெயரால் விக்கிரம சோழநல்லூர் என்றப் புதுப் பெயர் தந்திருக்கிறான். இதனால் கொங்குசோழன் கேரள நாட்டு அரசன் ஒருவன் மீது வெற்றியடைந்த செய்தி தெரிகிறது. காலம்-12ம் நூற்றாண்டு. இன்னும் இரண்டு அரிய கல்வெட்டுச் செய்திகள் அக்கோயில் கல்வெட்டுகளில் அறியக் கிடக்கின்றன. ஊர்களும் நிலங்களும் எல்லை வகுத்து வைப்பது தற்காலத்தில் மட்டுமல்ல,

கொங்குச்சோழர் காலத்திலும் இருந்தது. ஊர்களை அளந்து பதிவு செய்வது ஒரு சிறந்த அரசியல் நடவடிக்கையாகும். கொங்குச்சோழன் வீரராசேந்திரன் (1207-1255) உடைய 13 ஆண்டு 335 வது நாளில் (421/28—59) பேரூர் திருஆன் பட்டியுடைய நாயனுர் (பட்டீசர்) கோயிலுக்குத் தேவதானமாகத் தந்திருந்த வாயிரக்காநாட்டு பலகைப் பூனை என்ற வீரராசேந்திர சோழ நல்லூரின் எல்லைகள் குறிக்கப்படாமல் இருந்ததை முன்னிட்டு எல்லை வகுக்கும்படி அரசன் ஆணையிட்டான். அவ்வாறு எல்லை வகுக்கப்பட்ட அவ்வூருக்குத் தன் பெயராலேயே பெயர் சூட்டினுன். கல்வெட்டெழுத்து 12-ம் நூற்ருண்டெழுத்து. அரசன் ஆணையிட்ட காலம்—கி.பி. 1220.

அதே அரசனுடைய மற்ருெரு கல்வெட்டில் (422/58—59) புதிதாக ஒரு அணை கட்டப்பட்ட செய்தி குறிக்கப்பட்டிருக்கிறது. தற்போது நமது அரசாங்கம் பல அணைகள் கட்டத் திட்டமிட்டு வேலை செய்து வருவதை நாம் அறிவோம். அதே போல 11, 12-ம் நூற்ருண்டுகளில் கொங்குச்சோழர்கள் அணைகள் கட்டி நீர் தேக்கிப் பாய்ச்சல்வசதிகளைப் பெருக்கிஞர்கள். வீரராசேந்திரன் காலத்தில் பேருருக்கருகில் கோளுர் அணை என்ற ஒரு அணை இருந்தது. அரசன் அதற்கு அருகில் ஒரு புதூர் கட்ட ஆணையிட்டான். அதற்குப் புகலிடம் கொடுத்த சோழ சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் தந்தான். அது அவன் பட்டப் பெயராக இருக்க வேண்டும். அவ்வூர்ச் சபையார் தங்கள் ஊருக்கு நீர் பாய்ச்சல் வசதி தரவேண்டுமென்று விரும்ப அதற்காக வேருெரு அணை கட்டிக்கொடுக்க உத்தரவிட்டான். அது பேருருக்கும் புதூருக்கும் இடையில் கட்டப்பட்டது. அதற்கு "தேவிசிறை" என்ற பெயர் கொடுக்கப்பட்டது. ஆனல் இப்புது அணையால் கோளுர் அணைப் பாய்ச்சல் பாதிக்கக்கூடாது என்று அரசன் ஆணையிட்டான். இவ்வாறு சச்சரவுகள் உண்டாகாதபடி அணைவசதிகள் ஏற்படுத்துவது ஒரு சிறந்த அரசியல் முறையல்லவா?

இதுவரையில் பேரூர்க் கோயில் கல்வெட்டுகளின்படி கொங்கு நாட்டின் மேற்பகுதியில் நடந்த மூன்று அரிய செய்திகளைப்பற்றி எழுதினேம். அவைகளில் (1) போரில் வெற்றி அடைந்ததின் பொருட்டு நன்றிகாட்டும் வெற்றிச்சின்னம் (2) தானம்செய்த ஊரின் எல்லை வகுக்கும்படி அரசன் இட்ட ஆணை (3) ஊர்கட்டி நீர்பாய்ச்சல் வசதி செய்ய அணைகட்டினது இந்த மூன்று வகைச் செய்திகளும் பண்பாட்டில் சிறந்த ஒரு அரசியலார் செய்யும் வேலைகள் ஆகும். தற்காலத்தில் இவ்வகைச் செய்திகளைப் பளிங்குச் சாசனங்களில் பதிப்பார்கள். அதே முறையில் கொங்கு நாட்டில் 12-ம் நூற்ருண்டிலேயே நடந்தன என்று பேரூர்க் கல்வெட்டுகள் கூறுகின்றன.

நாயக்க மன்னர்கள் ஆண்ட காலத்தில் பேரூர்க் கோயில் மதுரை மன்னர்களின் ஆட்சியில் இருந்ததை முன்னிட்டு மதுரைக்கும் பேருருக்கும் தொடர்பு இருந்ததை நினைவு படுத்திக் கொள்ளலாம். தற்போது மதுரையில் நடக்கும் மீனுட்சி கோயில் குடமுழுக்கு விழாவின்போது வெளிவரும் மலரில் இக்கட்டுரை சேருதல் இயல்பு என்று எண்ணி இது எழுதப்பட்டது.

---

# ஒரு கல் வெட்டு — ஆராய்ச்சிக்கு

க. மாரன்

இது இருக்குமிடம் :— சோமசுந்தரர் ஆலயம் இரண்டாவது சுற்றுப்புற மதில் நடுவில் எட்டடி உயரத்தில் பதினைந்து வரிகளையுடையதாக இது வெட்டப்பட்டுள்ளது.

1-வரி : ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கர வர்த்திகள் கோனேரின்மை கொண்டான் உடையார் திருவாலவாயுடைய நாயனுர் கோயில் ஆதிசண்டேசுரர்க்கு —

2-வரி : உடையார் திருவாலவாய் உடைய நாயனுர்க்கு நம்பேரில் கட்டின சந்தித் திருமஞ்சனத்துக்கு கர்ப்பூரங் கஸ்தூரி குங்குமம் சந்தனம் பன் —

3-வரி : னீர் ஊட்டவேண்டும் இப்படி விஞ்சனத்துக்கு வேண்டும் முதலுக்கு விட்ட முத்தூற்றுக் கூற்றத்து கப்ப லூர் ஆன உலகளந்தசோ —

4-வரி : ழ நல்லூர்க் கரிய மாணிக்காழ் வான் திருவுடைநாயனுரான வீரபாண் டியக் காலிங்கராயன் காணியான அண்டநாட்டு —

5-வரி : புரவரி நல்லூரான நான் கெல் லைக் குட்பட்ட நன்செய் புன்செய் வாழை கொழுந்து உள்ளிட்டவா —

6-வரி : னப் பயிரும் மாவடை குளவடை தறியிறை செக்கிறை தட்டொலி தட் டார்ப பாட்டம் உட்பட்டவனைத் தாயங் களுக்கு —

7-வரி : ம் கடமையும் கொற்றிலக்கை கடைக் கூட்டிலக்கை பஞ்சுபீலி சந்து விக்கிரகப் பேறு வாசல் வினியோகம் உட்பட்ட அவனு -

8-வரி : க்கு... உட்பட வரியிலுங்கழித்து இவ்வூருக்கு மூன்ருவது தை மாதம் முதல் ஆண்டொன்றுக்கு வாடாக் கட மையாக —

9-வரி : இறுத்துப் பொதும் பொன் ஐம் பதில் விளங்குடி நாயனுர் விக்கிரம பாண்டிய ஈச்சுவர உடைய நாயனு ருக்கு இறுத்திப் பொதும் பொ -

10-வரி : ன் பத்து நீக்கித் தங்களுக்கு இறுத்துப்பொதும் பொன் நாற்பது ஆக பொன் ஐம்பதும் வாடாக் கடமையாக இறுத்துப்போ —

11-வரி : தும் படியும் சொன்ேனும் இப் பொன் ஐம்பதும் இப்படியிலே செல்லு பித்துக் கொள்ளவும் இப்படிக்கு இவ் வோலை பிடிபா —

12-வரி : டாகக் கொண்டு இவ்வூர் நான் கெல்லையிலும் திருச்சூல ஸ்தாபனமும் ஸதரமும் பண்ணி கல்லிலும் செம்பிலும் வெட்டி சந்திரா —

13-வரி : தித்தவரை செல்ல அனுபவித் துப் போதுக இவை கப்பலுடையான் எழுத்து இவைவான வதரையன் எழுத்துயாண்டு மூன் —

**14-வரி :** ருவது நாள் **உாஅயக (......)** இப்படிக்கு இது ஸ்ரீ பன்மாஹேஸ்வர ரகைஷ பண்ணினென் இக்கோயில் சாஸ் திரி ஆசாரியன் சங்கப்புலவர் –

**15-வரி :** திருவெம்பாவை ஆசாரியனுன திருவாழவாய் ஆச்சாரியன் எழுத்து

**குறிப்பு :**

புரவரிநல்லூரின் வருவாய் (மேல், வரி) முழுதும் குறிப்பிட்ட நிவந்தத்துக்கு அளிக்கப்பட்டது. மூன்ருவது தைமாதம் முதல் வருவாய் ஒதுக்கப்பட்டதை 8வது வரி அறிவிக்கின்றது. விளங்குடியில் விக்கிரமபாண்டிய ஈச்சுரம் உடைய நாயனுர் என்ற பெயரால் இக்கல்வெட்டு உடைய அரசனுக்கு முன் விக்கிரம பாண் டியன் என்ற அரசன் ஆண்டிருக்க வேண்டும். ஆனுல் அவன் யாவன் என்று அறுதியிட இயலாது. முத்தூற்றுக் கூற்றம் என்பது ராமனுதபுரம் திருவா டானை தாலுகாவின் வட பகுதியில் அடங்கி யுள்ளது. கரியமாணிக்காழ்வான் திரு வுடைநாயனுரான வீரபாண்டியக் காலிங்க ராயன் என்பவன் இரண்டாவது மாற வர்மன் சுந்தரபாண்டியன் கீழ் தொண்டு செய்த ஊழியனுயிருத்தல்கூடும். அண்ட நாடு பழனிக்கு கிழக்கிலும் வடக்கிலும் பரந்த பகுதியாகும். புரவுவரிநல்லூர் என்பது புரவரிநல்லூர் என்று மருவியிருக் கிறது. குறிப்பிட்ட பயிர்களுக்கு விதித்த வரிகளில் கொற்றிலக்கை என்பது சிற்ருள் களுக்கு கொடுக்கப்படும் கூலிக்காக ஏற் பட்ட வரி. கடைக் கூட்டிலக்கை என்பது அரசியலதிகாரிகளுக்கு அளிக்கப்படும் படியாகும். வாடாக் கடமையெனப்படுவது மொத்தமாகத் தொகுத்து முதலாகப் பயன் படும் வரித்தொகை.

சாஸ்திரி ஆசாரியன் சங்கப் புலவர் திருவெம்பாவை ஆசிரியனுன திருவாழ் வாய் (ர்?) ஆசாரியன் எழுத்து என்பதன் பாடம் முற்றிலும் சரியாக இருந்தால் திரு வெம்பாவை ஆசிரியன் என்பது சுவை யுள்ளதாக இருக்கிறது.

# மதுரைக் கோயில்

ராய. சொ.

மதுரைக் கோயில் மிக்க தொன்மை வாய்ந்தது; கோயில்கள் எல்லாவற்றுள்ளும் பெரியது; உள்ளத்தைக் கவரும் அழகு வாய்ந்தது; மணிவாசகப் பெருமானும், அப்பர் சுவாமிகளும், சம்பந்த மூர்த்திகளும் பாடிப் பரவியது; பெரும்பற்றப் புலியூர் நம்பியாலும், கல்விக் கடலாகிய பரஞ்சோதி முனிவராலும் புராணம் பாடப் பெற்றது; சிவபெருமான் புலவர் குழாத்தோடு வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்த பெருமையுடையது. சுவாமி பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் கண்ணுதற் பெருங் கடவுள் கழகமோடு அமர்ந்து தமிழ் ஆராயும் சிறப்பை இன்றும் காணலாம்.

"நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரை யெல்லாம்
பிச்சதேற்றும் பெருந்துறையாய்!"

என்று மணிவாசகப் பெருமான் பாடினார்.

"முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிரும் சடைமுடிமேல்
முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரை சிலையா வாசுகி மாநாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தால் துவளநீருத்
தூமுத்த வெண்முறுவலு மையோடாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே"

என அப்பர் சுவாமிகள் பரவினார்.

"மண் எலாம் நிகழ மன்னனாய் மன்னும்
மணிமுடிச் சோழன் தன் மகளாம்
பண்ணின் நேர் மொழியாள், பாண்டிமாதேவி,
பாங்கினாற் பணி செய்து பரவ
விண் உளார் இருவர் கீழொடு மேலும்
அளப்பு அரிதாம் வகை நின்ற
அண்ணலார் உமையோடு இன்புறுகின்ற
ஆலவாய் ஆவதும் இதுவே"

என்று சம்பந்தப் பெருமான் புகழ்ந்தார்.

"குன்றில் இள வாடைவரும் பொழுதெல்லாம்
மலர்ந்த திருக் கொன்றை நாறத்
தென்றல் வரும் பொழுதெல்லாம்
செழுஞ்சாந்தின்
மணநாறும் செல்வ வீதி
நன்றறிவார் வீற்றிருக்கும் நான் மாடக்
கூடல் வள நகரி......"

என மதுரை நகரத்தை வில்லிபுத்தூராழ்வார் வியந்து ஓதினார்.

"இளவண்தமிழ் எழுது ஏடுமுன்
எதிரேறிய துறைசூழ்
தளவங்கமழ் புறவம் செறி தண்கூடல்"

என்று அவ்வாழ்வார் மேலும் பேசினார்.

தலபுராணங்களுக்குள்ளே தலைசிறந்தது திருவிளையாடற் புராணம். அப் புராணம் மதுரையைப் பற்றியும், அங்கு எழுந்தருளியுள்ள இறைவன் இறைவியைப் பற்றியும் எந்தப் புலவரும் வியக்கத் தக்க வகையில் கூறுகிறது.

"வடுவில் மாநில மடந்தை மார்பிடைக்
கிடந்துஇமைக்கப்
படுவில் ஆரமே பாண்டிநாடு ஆரம்;
மேற்பக்கத்து
இடுவில் மாமணி இதன்புற நகரெல்லாம்;
இவற்றுள்
நடுவிநாயக மாமணி மதுரை மாநகரம்"

எனவும்,

"திருமகட்கு ஒருதாமரைக் கூடமே;
திருமால் மருமகட்கு வெண்தாமரை
மாடமே; ஞானம்
தருமகட்கு யோகத்தனிப் பீடமே;
தரையாம்
பெருமகட்கு அணிதிலகமே ஆனது
இப்பேரூர்"

என்றும் பரஞ்சோதி முனிவர் பாராட்டினார். நிற்க,

"திருவாலவாய்க்கிணையாம் ஒருதலமும்
தெய்வமணம் செய்யப் பூத்த
மருவார் பொற்கமல நிகர் தீர்த்தமும்
அத்தீர்த்தத்தின் மருங்கில்ஞான
உருவாகி உறை சோமசுந்தரன் போல்
இகபரம் தந்து உலவா வீடு
தருவானும் முப்புவனத்தினுமில்லை;
உண்மை இது
சாற்றின் மன்னே!"

என அங்கு எழுந்தருளியிருக்கிற இறைவனையும், பொற்றாமரைத் திருக் குளத்தையும் புகழ்ந்தார் அம்மாமுனிவர்.

"வேதமுடிமேல் ஆனந்த உருவாய்
நிறைந்து விளையாடும்
மாதர் அரசே! முத்த நகை மானே!
இமயமட மயிலே!
மாதர் இமவான் தேவி மணி வடந்தோய்
மார்பும் தடந்தோளும்
பாதமலர் சேப்புற, மிதித்து விளையாட்டு
அயரும் பரிசு என்னே!"

எனவும்,

"வேதன், நெடு மால் ஆதி விண்ணுடர்,
மண்ணுடர், விரத யோகர்,
மாதவர் யாவருங்காண, மணிமுறுவல்
சிறிது அரும்பி, மாடக் கூடல்
நாதன், இருதிருக்கரம் தொட்டு அம்மியின்
மேல்
வைத்த கயல் நாட்டச் செல்வி
பாதமலர், எழுபிறவிக் கடல் நீந்தும்
புணை என்பர்; பற்றி லாதோர்"

என்றும் மதுரை மீனுட்சியைப் பரஞ்சோதியார் பரவிப்பணிந்தார்.

"சொக்கர் உண்டுதுணை என்று இராய்; அவர்
பக்கல் அன்பு பழுத்த தென்று ஓர்கிலாய்;
மக்கள் என்றும். மனைஎன்றும்,
வாழ்வென்றும்
ஒக்கல் என்றும் உருகும் என் நெஞ்சமே!"

என மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி என்ற நூலில் வழுத்தினுர் அப்பரஞ்சோதி முனிவர்.



# சைவ சமயம்

S. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T.

சிவம் என்னும் சொல்மங்களம் நன்மை என்னும் பொருளைத் தருவது. இச் சொல்லின் அடிப்படையாகப் பிறந்தது சைவம். இதன் பொருள் சிவசம்பந்தம் உடையது என்பதாம். சிவம் என்பது பூரண மங்களமாகிய செம்பொருள், பரம் பொருள், மெய்ப்பொருள். இதனை உயிர்கள் அடைவதற்கு அப்பரம்பொருள் வகுத்துள்ள வழியும் சைவம், சைவ சமயம் எனப்படும்.

> சைவ சமயத்தனி நாயகன் நந்தி
> உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
> தெய்வச் சிவநெறிச் சன்மார்க்கம் சேர்ந்துய்ய
> வையத் துள்ளார்க்கு வகுத்து வைத்தானே

என்பது திருமந்திரம்.

சமயம் என்பது நன்ருக ஆக்கப்பட்டது — சமைக்கப்பட்டது — ஒழுங்கான மார்க்கம் என்ற பொருளைத்தரும். உயிர்கள் உலகையும் தம்மையும் சிவ சம்பந்தத்தையும் சிவத்தையும் அறிந்து உணர்ந்து சிவத்தோடு ஒன்றுபட்டு நின்று பேரானந்தப் பெருவாழ்வை அடைவதற்கு இறைவனுல் வகுக்கப்பட்ட வழிதான் சைவ சமயம். இந்த நெறியை, சைவநெறி சித்தாந்த நெறி, சித்தாந்தம், சன்மார்க்கம், என்றெல்லாம் குறிப்பர்.

இச்சைவநெறி அனுதியாகவே உள்ளது. அவ்வப்போது இறைவன் இந்நெறியின் உண்மைகளைத் தானே நேராகவோ அல்லது தக்க அன்பர்களை அதிட்டித்து நின்று அவர்கள் வாயிலாகவோ உலகுய்ய உணர்த்தி யருளுவான்.

இந்த அடிப்படையில் பரந்தெழுந்தோங்கியுள்ள சைவமாநெறியை, சைவம் வைணவம், சாக்தம், காணுபத்யம், கௌமாரம், சௌரம், என்னும் அறுவகை அகச் சமயப் பட்டியலில் சேர்த்துக் கூறுவதும் உண்டு. எனினும் ஆதி முதல்வனுகிய சிவபெருமானே உட்சமயங்கள் ஆறினுக்கும் இறைவன் என்பது சைவக் கொள்கை. இறைவன் இணையடியே

> ஆறு சமயத்தவரவரைத் தேற்றும் தகையன

என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார்.

> ஒன்றது பேரூர் வழி ஆறு அதற்குள

என்றதுபோல இரு முச்சமயமும்,

> நன்று இது தீது இது என உரை மாந்தர்கள்
> குன்று குரைத்தெழும் நாயை ஒத்தார்களே

என்று திருமூலர் அறிவுறுத்துகின்ருர்.

சைவம் சமயங்களுள் ஒன்ருகவும் அவற்றுள் சிறந்ததாகவும், சமயம் கடந்த மோன சமரசமாய் முற்றி, சமயா தீதப் பழம் பொருள் பால் சேர்ப்பதாகவும் அமைந்துள்ளது என்றெல்லாம் தாயுமானவர் முதலிய அனுபூதிமான்கள் அருளிச் செய்துள்ளார்கள்.

மேல் நாடுகளிலிருந்து நம் நாட்டிற்கு வந்து சைவத்தின் மாண்புகளை ஆராய்ந்த பேரறிஞர் சிலர் சைவச் சிறப்புகளைப் பற்றி எழுதியுள்ளனர். அவற்றுள் இரண்டை மட்டும் இங்கே காணலாம்.

1. The Saiva Siddhanta is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the south Indian and Tamil Religion"

[Rev: Dr. Gu. Pope]

2. This system possesses the merits of great antiquity in the religious world; it is heir to all that most ancient in Southern India. As a system of religious thought, as an expression of faith and life, the Saiva Siddhanta is by far the best that South India possesses; indeed it would not be rash to include the whole of India, and to maintain that judged by its intrinsic merits, the siddhanda represents the high water - mark of Indian thought and Indian feeling.

[Rev. C. Gowdic.]

இனி, சைவத்தின் தொன்மையைக் குறித்து ஸர். ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்னும் தொல் பொருள் ஆராய்ச்சிப் பேரறிஞர் கூறுவனவற்றுள் ஒன்றைக் கருதலாம்.

Among the many revelations that MohenjoDaro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivaism has a history going back to the chalcolithic Age, or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in the world.

இனி சைவ சமயத்தின் பரப்பை ஒரு சிறிது காண்போம். பாரத நாட்டின் வட கோடியில் உள்ள திருக் கைலாய பருவதம் முதல் தென் கோடியிலுள்ள கன்னியாகுமரி வரையில் சிவம் சக்தி சம் பந்தமான பெருந் தலங்கள் பலப்பல பண்டைக் காலந் தொட்டே அமைந்திருப் பதை இன்றுங் காணலாம். இவற்றுள் ஆயிரத்து எட்டு சிவத்தலங்கள். சுவீடன், இங்கிலாந்து, எகிப்து, மெசொப்படே மியா, அமெரிக்கா முதலிய பல நாடுகளில் கிறிஸ்து சகாப்தத்திற்குப் பற்பல நூற் றுண்டுகளுக்கு முன்னரே சிவ வழிபாடு நடந்து வந்ததற்குச் சான்றுகள் இன்றும் காணப்படுகின்றன.

இச் சைவத்தை உலகிற்கு அளித்த வர் மானிடர் எவரும் அன்று; சிவபெரு மானே ஆவர். இதற்கு முக்கிய பிரமாண மாக உள்ளவை வட மொழியில் வேதங் களும் சிவாகமங்களும்; தமிழ் மொழியில் தேவார திருவாசக முதல் பெரிய புராணம் ஈருக உள்ள பன்னிரு திருமுறைகளும் சிவ ஞானபோதம் முதலிய பதினுன்கு சாத்திரங்களும் ஆகும்.

வேத மோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள்ளன,
நாதன்உரை அவை; நாடில் இரண்டந்தம்
பேதமது என்பர்; பெரியார்க்கு அபேதமே.

என்பது திருமந்திரம். **வேதாந்தத் தெளி வாம் சைவ சித்தாந்தம்** என்பது உமா பதி சிவாசாரியார் திருவாக்கு. வேதாந்தம் சித்தாந்தம் வேறு அல்ல என்பது தாயு மானவர் கருத்துமாகும். இப்பிரமாண நூல் களை ஒட்டிப் பற்பல சிறந்த நூல்கள் இடைக் காலத்திலும், பிற்காலத்திலும் தோன்றின.

சைவத்துக்கு வைதீக சைவம் சித்தாந்த சைவம் வேதாகமோத்த சைவம் சுத்தாத்வைதம் சன்மார்க்கம் என்றெல்லாம் பெயர்கள் வழங்கி வருகின்றன.

**வேதம் பசு அதன் பால் மெய்ஆகமம் நால்வர்**
**ஓதுந்தமிழ் அதனின் உள்ளுறு நெய்—போதமிகு**
**நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்**
**செய்ததமிழ் நூலின் திறம்.**

**—தனிப்பாடல்**

சைவத்தைச் சார்ந்து உய்வதற்கு சாதி, நாடு, மொழி முதலிய வேறுபாடுகள் தடையாக நிற்பன அல்ல. சிவமே பொருள்எனக்கொண்டு தத்தமக்கு வாய்த்துள்ள சூழ்நிலையிலும் அவ்வுணர்ச்சி குன்றாது நிற்பவர்கள் யாவரும் சிவனடியார்களேயாவர். பெரிய புராணத்தில் வேடர், பாணர், பறையர் முதலிய சாதிகளைச் சேர்ந்தவர்களும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் முதலியவர்களோடு சமமாகவே போற்றப் பெற்றுள்ளனர். பெரிய புராணத்திற்கு மூலமாகிய திருத் தொண்டத் தொகையில் தொகையடியார்களையே குறிக்கும் பாசுரம் உண்டு. அதன் கண் **அப்பாலும் அடிச் சார்ந்த அடியார்க்கும் அடியேன்''** என்றுங் காண்கிறோம்.

மூவேந்தர் தமிழ் வழங்கும் நாட்டிற் கப்பால்
முதல்வனுர் அடிச் சார்ந்த முறைமை யோடும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
சிவனடியைச் சார்ந்தவர்களை அப்பாலும் அடிச்சார்ந்தார்,

என்று சேக்கிழார் விளக்கியுள்ளார்.

பக்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார்,
சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்.

இவர்கள் தன்மைகளைச்சேக்கிழார் விளக்கியிருக்கிற திறனும் உணரத் தக்கதே.

சிவத்தை அடைதற்குரிய சாதனங்களுக்குள் விபூதி, ருத்திராக்கமாகிய சிவ சின்னங்களும் திருவைந்தெழுத்தும், சிவாலய வழிபாடும் அடியார் கூட்டுறவும் மிகமிக இன்றியமையாதவை. மலத்தை நீக்கும் ஒரு நற்குறி திருநீறு என்று சிதம்பர சாமிகள் உணர்த்துகின்றார். ஞானக்கினியால் மும்மலத்தையும் நீருக்கித் தூய்மை அடைவது மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை விபூதி செய்யும் விதமும் திரிபுண்டரமாக அதை அணியும் முறையும் நினைப்பூட்டுகின்றன. '**நீரில்லா நெற்றி பாழ்**' என்றதன் உட்கருத்து இது.

உருத்திராக்கம் பிறர் துன்பங் கண்டால் இரங்கி உபசரிக்கவேண்டும் என்பதைக் குறிப்பதாகும். உருத்திராக்க மரம் தோன்றிய வரலாற்றினால் இது விளங்கும். திருவைந்தெழுத்தின் நுண்பொருள் மாண்பு பெரிது! பெரிது! தூல பஞ்சாக்கரப் பாங்கில் சாமானிய மனிதர்க்கும் இறைவன் மானிட உடம்பு தந்தருளியிருப்பதன் குறிப்புஅதன் துணைகொண்டு ஆன்மா, பஞ்சாக்கரப் பொருளாகிய பரமன் கழலைச் சேர முயலவேண்டும் என்பதே.

ஆலயங்களின் அமைப்பும் அவற்றிப் பிரதிட்டிக்கப்பட்டுள்ளனவும் பற்பல தத்துவங்களைக் குறிப்பனவாகும். இரண்டை மட்டும் இங்கு திருமந்திரத்தின் துணை கொண்டு காணலாம்.

1 ஆய பதிதான் அருள்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடல் ஏறு எனநிற்கும்;
ஆய பலிபீடம் ஆகும்நல் பாசமாம்;
ஆய அறன் நிலை ஆய்ந்துகொள்வார்க்கே.

2 உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம் ;
வள்ளல் பிரானுர்க்கு வாய் கோபுர வாசல் ;
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம் ;
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணி விளக்கே.

ஆலயங்களில் நிகழும் நித்திய நைமித்திகமும் பிறவும் உட்கருத்து நிறைந்தனவே.

குறிகளும், அடையாளமும், கோயிலும்,
நெறிகளும், அவர்நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியிலீர்! மனம் என்கொல் புகாததே ?

என்ற நம்அப்பர்பெருமானது அருளார்ந்த கடுமொழியும் நன்றியுடன் கருதத் தக்கதே.

சைவ சமயத்தின் உள்ளீடாயுள்ள சைவ சித்தாந்த நுண் பொருள்கள் பெரிதும் வியந்துபோற்றத் தக்கவை. இந்த அரிய பெரிய நுண்பொருள்களை, வடிவில் சிறியதான சிவஞான போதம் என்னும் தமிழ் முதல் நூல், அதன் வழி நூலாகிய சிவஞான சித்தியாரின் துணை கொண்டும் பின்னர் எழுந்த சிவப்பிரகாசம் போன்ற நூல்களின் துணை கொண்டும் தக்கார் வாயிலாக அறிதல் பெரும் பயன்தர வல்லதாம்.நமது தலைமுறையிலே Rev. Dr. J.H. Piet என்ற மேனாட்டறிஞர் இங்கு வந்து, தமிழ்கற்று, சைவ சித்தாந்த நூல்களை ஆராய்ந்து, A logical Presentation of Saiva Siddhanta Philosophy என்றொரு அரிய நூலை எழுதியுள்ளார். அதிலே சிவஞான போதத்தைப் பின் வருமாறு பாராட்டியுள்ளார். This book contains forty lines of Tamil Poetry, and is without doubt one of the most closely reasoned religious Philosophies found anywhere in the world.

இது முற்றிலும் உண்மை என்பதை சாத்திரங் கற்றோர் யாவரும் ஒப்புவார். சித்தாந்த சாத்திரக் கருத்துக்களைப் பற்றிப் பேச இச்சிறு கட்டுரையில் இடம் இல்லை. பற்பல அரிய நுண் பொருள்கள் அவற்றில் பொதிந்துள்ளன. சில குறிப்புகளைத் தருவதோடு அமைவுற வேண்டியதே.

1. முப்பொருள் உண்மை மிகமுக்கியமானதோர் சித்தாந்தக் கருத்து.

'பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல் பசு பாசம் அனாதி.
பதியினைச் சென்று அணுகா பசு பாசம்;
பதியணுகில் பசுபாசம் நிலாவே' எனும்

திருமந்திரத்தால் இது காட்டப்படுகிறது.

2. சிவனும் சீவனும் பொருள் தன்மையால் ஒன்று அல்ல; சின் முத்திரை குறிப்பதுபோல் கலப்பால் மட்டும் ஒன்றுகி நிற்கலாம். உபநிடதத்தில் காணும் அத்துவைத சப்தத்திற்குப் பெரிய பாடிய கர்த்தர்கள் வெவ்வேறு பொருள்கள் கூறியுள்ளனர். இவற்றைக் குறிக்க, கேவலாத்வைதம், விசிஷ்டாத் வைதம் துவைதம் என்னும் பெயர்கள் தோன்றின. சித்தாந்த சைவம் கொள்ளும் பொருளை விளக்க சுத்தாத்வைதம் என்ற பெயர் வழங்குகிறது.

பொய்கண்டார் காணு புனித மெனும் அத்துவிதம்
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ

என்ற தாயுமானுர் திருவாக்காலும் இதை உணரலாம்.

3. சிவபெருமான் மும்மூர்த்திகளுள் ஒருவன் அல்லன். அவன் **மூவராலும் அறியொணு முதலாய ஆனந்த மூர்த்தி யான்**-(திருவாசகம்). அவன் சதுர்த்தன்.

4. ஆணவம் என்னும் மூலமலத்தின் சேட்டைகள் ஏழு, எட்டு என்று வகுத்துக் காட்டுவர். அது உண்மையை **மறைக்கும் சக்தியையும்**, மேல் நெறிக்குச் செல்ல முயலும் ஆன்மாவைக் **கீழே இழுக்கும் சக்தியையும்** படைத்தது. முந்தியதை ஆவாரக சக்தி என்பர். பிந்தியதை அதோ நியாமிக சக்தி என்பர்.

5. மாயை இல்பொருள் அன்று. அதன் சூக்கும நிலையில் உள்பொருளே. அது ஏகதேச விளக்கம் தரும் நன்மை புரிவது—மயக்குவது. ஆணவம் மறைப்பது.

6. **தெய்வம் என்பதோர் சித்தம் உண்டான** பின், சிவத்தைக் காணுதற் குரிய சாதனத்துக்கு அடிப்படையாக உள்ளது பொது ஒழுக்கம். ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம் என்று தொடங்கிப் பதினுறு பண்புகளைக் குறிக்கும் சித்தியார் திருப்பாட்டு கருதத் தக்கது. பொது ஒழுக்கம் இன்றி எவ் வகை விழுப்பமும் ஏற்படாது.

7. சித்தாந்த சாத்திரம் தெரிவிக்கும் நான்கு மார்க்கங்களும் அவற்றின் பயன் களும், பஞ்சாக்கர வகைகளின் உட் பொருள்களும் தீட்சைகளின் முறைகளும் பயன்களும், அந்தர்யாக பூஜை முத்தி நிலை முதலியவற்றின் விளக்கங்களும் தனிச் சிறப்புடையன.

8. சைவ சித்தாந்தம், விரிந்த அறி வுடன் பிற சமயங்களைத் தன்னேடு அணைத்துக் கொண்டு போற்றும் அரிய பெருமையும் அறிந்து மகிழ்ந்து ஏற்கத் தக்கதே. இதனை, பின்வரும் சிவஞான சித்தியார்ச் செய்யுள் ஒன்றால் அறியலாம்.

> ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள்
> ஒன்றோ டொன்றொவ்வாமல் உள பலவும்; இவற்றுள்
> யாது சமயம் பொருள் நூல் யாதிங் கென்னில்
> இது வாகும் அது அல்ல தெனும் பிணக்க தின்றி நீதியினல்
> இவை எல்லாம் ஓரிடத்தே காண
> நின்றது யாதொரு சமயம், அது சமயம் பொருள் நூல்
> ஆதலினல் இவை எல்லாம் அருமறை ஆகமத்தே
> அடங்கிவிடும். அவைஇரண்டும் அரன் அடிக் கீழ் அடங்கும்

9. விபூதிருத்ராக்க தாரணமும் திருவைந்தெழுத்தும் ஆலயமும் ஞானி யர்க்கும் அவசியமே.

10. சீவன் முத்தர்கள் பிற உயிர் களின் துன்பங்களைக்கண்டு இரங்கி, தம் நிலையிலிருந்து கலையாமலே, எல்லாம் சிவமயமாய்க் கண்டுகொண்டே மன்னுயிர் களை உயர்த்தத் தொண்டாற்றுவர். சிவ பெருமான் **'தயாமூலதர்ம மென்னும் தத்து வத்தின் வழிநின்று, தாழ்ந்தோர்க் கெல் லாம் நலங்கொடுக்கும் நம்பி'** என்று நாவுக்கரசர் தெரிவிக்கின்றார். **'எவ்வுயி ரும் நீங்காது உறையும் இறை சிவன் என்று எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு'** என்று காரணங்காட்டிப் பணிக்கின்றார் மறைஞானசம்பந்தர். **'வந்தித்து நின்னை மறவாக் கடனுகச் சிந்தைசெய்ய நின்ன தருள் செய்யாய் பராபரமே'** என்று இறைவனை வேண்டிய தாயுமானர், அதை அடுத்தே, **'எவ்வுயிரும் என்னுயிர்போல்**

**எண்ணி இரங்கவும் நின் தெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே'** என்று வேண்டியிருப்பது சைவ சமயிகள் எல்லோர் சிந்தையிலும் தங்கியிருக்கத் தக்க உணர்ச்சி ஆகும்.

பண்டைக் காலத்தில் சைவசமயத்துக்குக் கேடுநேர்ந்தபோது சமயாசாரியர்கள் அவதரித்து, அதனைக்காத்து, மக்கள் வாழ்விற்குப் புத்துயிர் அளித்தனர். இக்காலத்தில் விபரீத நவநாகரீக உணர்ச்சியும் புறமதங்களின் தந்திரத் தாக்குதல்களும் காணப்படுகின்றன. எனினும், இறைவன் திருவருள் துணையால் நமது பண்டைய இந்து ஆலயங்களிற் பல புனருத்தாரணம் செய்யப்பெற்றுப் பொலிவுடன் ஓங்கி நிற்கின்றன. கன்னித் தண்டமிழ் நாட்டின் மதுரை மாநகரில் திருவாலவாய்க் கோயில் திருப்பணி செய்யப்பெற்றுப் பெரும் பொலிவுடன் விளங்குவது இதற்கு மாபெருஞ் சான்ருகும். இப்புனித நிகழ்ச்சியின் விளைவாக இந்துக்கள் யாவரும் தத்தம் சமயப்பிரிவின் முறைப்படி தீட்சை பெற்றுத் திரிகரண சுத்தியுடன் நித்தியவழிபாடு செய்யத் தொடங்கவேண்டும். குடும்பவழிபாடு வீட்டிலும், வாரவழிபாடு அவரவர் பேட்டைக் கோயிலிலும் திட்டமான முறையில் திறம்பட நடைபெற வழி செய்யவேண்டும். நல்லமுறையில் தல யாத்திரைகள் பெருகி வருவதும் சிறந்ததோர் வாய்ப்பாகும். நமது கிருஸ்து இஸ்லாமிய சகோதரர்கள் இத்துறையில் செய்துவரும் நற்பணியைக் கவனித்து நாமும் நம் சமய அறிவாற்றல்களையும் ஒற்றுமையையும் வளர்த்துவர வேண்டும். பிடியரிசியிடுதல், சமயக்காணிக்கைசெலுத்துதல், சமயப்பிரசாரங்கள் செய்தல், துண்டுப் பிரசுரங்கள் வழங்கல், சிறப்பு வகையில் மிக எளிய இந்துமக்கள் வாழும் இடங்களுக்கு அன்புடனே சென்று, நன்மைதரவல்ல உண்மைகளை இனிய முறையில் உளங்கொளக் கூறி, அவர்கள் ஆன்மீகப் பண்பாட்டையும் வளர்க்க முயல வேண்டும். இயன்ற அளவில், சிவ கருணைத் தொண்டாற்ற ஆர்வங்கொண்டு, திறம்படச் செயல்புரிய வேண்டும். எல்லா நாட்டினரும் நெருங்கி ஒத்துவாழ வேண்டிய காலம் வந்துவிட்டது என்பது வெளிப்படை. பிறநாட்டின் சீரிய சமயக் கருத்துக்களை நாமும் அறிந்து பாராட்ட வேண்டும். நம் சமயப் பெரியோர் சரிதங்களையும் போதனைகளையும் தமிழறியாத பிற மாநில மொழிகளிலும் உலகமொழியாகிய ஆங்கிலத்திலும் எழுதி யாவர்க்கும் கிடைக்கும்படி செய்யவேண்டும். இதற்கெல்லாம் அகிலாண்டகோடி ஈன்ற அன்னையாம் மீனுட்சியம்மை அருள் நிரம்பப்புரிந்து உலகை நன்னெறியில் உய்ப்பாளாக.

கல்லாலின் புடைஅமர்ந்து, நான்மறை
ஆறங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்த தனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்

— பரஞ்சோதி முனிவர்,
(திருவிளையாடற் புராணம்)

# வைணவமும் வாழ்க்கையும்

அ. சீனிவாசராகவன், M. A., L. T.

முன் ஒரு காலத்திலே முனிவர் ஒருவர் காட்டில் தவம் புரிந்து, யோகத்தினால் முகில் வண்ணனைத் தம் உள்ளத்துள்ளே கண்டு மகிழ்ந்திருந்தார். யோகம் கலைந்ததும் அவர் காட்டைவிட்டுப் புறப்பட்டார். அவருடைய சீடன் தன் குருவைத் தொடர்ந்து சென்றான்.

இருவரும் ஒரு நகரத்தின் புறச்சோலையை அடைந்தனர். அபபோது அந்நாட்டு அரசகுமாரன் தன் பரிவாரங்கள் புடைசூழ அங்கே தங்கியிருந்தான். பல ஏவலாளர்களும் பணிப் பெண்களும் தொண்டு செய்ய அவன் உண்டு உடுத்து விளையாடிக் களித்திருந்தான். வந்த முனிவரைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அவனுக்கு நேரமில்லை. ஆகிலும் முனிவர் அவனை யணுகி, 'ராஜபுத்ர! சிரம் ஜீவ-நீடுழிவாழ்க' என்று ஆசீர்வதித்து அப்பால் சென்றார்.

அங்கிருந்து முனிவர் ஒரு நதிக்கரையை அடைந்தார். அங்கே ஒரு ரிஷி குமாரன் தன் புலன்களை ஒறுத்து மனதையடக்கி வெற்பிடையே நின்று வெந்தவத் தீயில் வெந்து கடும்தவம் புரிந்துகொண்டிருந்தான். அவனைக் கண்ட முனிவர், 'ம்ரியஸ்வ ரிஷி புத்ரக! - ரிஷி புத்திரனே! நீ இறக்கலாம்' என்று கூறிக் கொண்டே நகர்ந்தார்.

சிறிது தூரம், நடந்து சென்று, முனிவரும் சீடனும் ஒரு வேடுவர் குறிச்சியையடைந்தனர். வேட மன்னனின் புதல்வன் ஒத்த பிராயத்தையுடைய சிறுவர்களுடன் வேட்டை நாய்களைப் பிடித்துச் சென்று பல ஆயுதங்களால் காட்டிலுள்ள மான் முதலான மிருகங்களைக் கொன்று விளையாடி வந்து கொண்டிருந்தான். சிஷ்யனுக்கு அவனைப் பார்க்கவும் பயமாயிருந்தது. முனிவரோ மன அமைதியுடன் அவனைநோக்கி, 'நம்ரியஸ்வ ந ஜீவத்வம்-வேடுவச் சிறுவனே! நீ இறக்கவும் வேண்டாம்; இருக்கவும் வேண்டாம்' என்று சொன்னார்.

மறுபடி தங்கள் வழியே சென்று அவ்விருவரும் ஒரு கிராமத்தை அடைந்தனர். கிராமத்தில் ஒரு அழகிய குடிசை. சுற்றிலும் மல்லிகை முல்லை முதலிய புஷ்பச் செடிகள் கொண்ட தோட்டம். ஒரு புறம் பைந்துழாய்ச் செடிகள். ஒரு புறம் மரகத மணித்தடம் போன்ற ஒரு குளம். அதில் பசுமையான தாமரை இலைகளுக்கு நடுவே அலர்ந்த செந்தாமரை மலர்கள். அமைதியான சூழ்நிலையைக் கண்டு முனிவர் சற்று நின்றார். அச்சமயம் ஒரு வாலிபன் தன் இல்லாளுடன் அங்கே வந்து பூக்களையும் துளசியையும் பறித்து, மாலையாகத் தொடுத்தான். "பச்சைமாமலை போல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண் அச்சுதா அமரரேறே ஆயர் தம் கொழுந்தே" என்று இனிய குரலில் இசையுடன் பாடிக்கொண்டே தம் காரியங்களைச் செய்து கொண்டிருந்தான். தம் குடிசையில் எழுந்தருளியிருந்த அரங்கநாதன் அழகிய மணவாளனுக்கு மாலையைச் சாற்றி, பட்டாடை அணிவித்து அறுசுவை உண்டியைச் சமர்ப்பித்து,

"இருமாநிலம் முன் உண்டு மிழ்ந்த
செங்கோலத்த பவளவாய்ச்
செந்தாமரைக் கண் என்னம்மான்
பொங்கேய் புகழ்கள் வாயவாய்ப்
புலன்கொள் வடிவென் மனத்ததாய்
அங்கேய் மலர்கள் கையவாய்
வழிபட்டோட அருளுமே"

என்று மனமுருகிப் பாடினான். பிறகு பூஜையை முடித்துப் பகவத் பிரசாதமாக எல்லாவற்றையும் தானும் தமருமாக ஏற்று உளம் மகிழ்ந்திருந்தான். அவனையும் அவன் செயலையும் கண்ட முனிவர், 'ஜீவ வா மா வா - ஐயா! நீ இருக்கவும் செய்யலாம் இறக்கவும் செய்யலாம் இஷ்டம் போல்' என்று கூறித் தம் வழியே செல்லலானார்.

இதையெல்லாம் பார்த்துவந்த சிஷ்யனுக்கு வியப்பு மேலிட்டு, குருவிடம் வணக்கத்துடன், 'ஐயன்மீர்! தங்களைப் பின்பற்றி வருகிற நான் நால்வகை மனிதர்களைக் கண்டேன். அந்நால்வரையும் நோக்கி முறையே தாங்கள் கூறிய மொழிகளையும் கேட்டேன். அவை எவ்வாறு பொருத்த முள்ளவை என்று எனக்குத் தெரியவில்லை. கூறியருள வேண்டும் என்று வேண்டினான்.

முனிவரும் புன்முறுவலுடன் விளக்கம் ஆரம்பித்தார்—'முதலில் நாம் கண்டது அரச குமாரனை யல்லவா!

சிலம்படி யுருவிற் கருநெடுங் கண்ணார்
திறத்தனாய், அறத்தையே மறந்து
புலம்படிந்து உண்ணும் போகமே பெருக்கிப்
பொழுது போக்குபவன்

அவன். இங்கே இருக்கும்நாள் அவனுக்கு இச்சிற்றின்பமே கிட்டும். இறந்தால் மறுமையில் பேரின்பத்துக்கு வகை செய்யாததால் அது கிட்டாது. ஆதலால் இருந்த நாள் சிற்றின்பத்தை யாவது துய்க்கட்டும் என்று 'ராஜபுத்திர! நீடுழி வாழ்வாயாக' என்று அவனை ஆசீர்வதித்தேன்.

பிறகு நாம் ரிஷி குமரனைப் பார்த்தோம். அவன் பரலோக சுகத்தை அடைவதற்கு வேண்டிய தவம் புரிபவனாதலால் மரணமானால் அவனுக்கு வைகுந்தம் கிட்டும். இனியும் இவன்,

காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால்
நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து
தீயோடு நின்று தவம் செய்ய

வேண்டாம். உடலைவிட்டுப் பேரின்பம் பெறட்டும் என்று 'ரிஷி புத்திர! நீ இறக்கலாம்' என்று கூறினேன்.

அதன் பின் கண்ட வேடுவச் சிறுவனோ,

கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து
திரிந்து நாயினத்தொடும் திளைத்திட்டு
ஓடியும் உழன்றும் உயிர்களைக் கொன்று
பாவமே செய்து பாவியாய்

நிற்பவன். இம்மையில் அவனுக்குச் சீரிய போகம் ஒன்றுமில்லை. குறிக்கோள் ஒன்றின்றிப் பல்லுயிரைக் கொல்வதால், இவனால் பிறருக்கு ஒரு நன்மையும் இல்லை. அவன் இருந்தும் பயனில்லை, ஆதலால் 'நீ உயிர் துறக்கலாம்' என்றேன்; இறந்து பெறுவது நரக வேதனையாகையால், அவன் இறந்தும் பயனில்லை, என்று கருதி 'நீ இறக்கவும் வேண்டாம்' என்று மொழிந்தேன்.

நாம் கடைசியில் கண்ட மனிதனோ,

பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக்
கண்ணனைப்
பயில இனிய நம்பாற் கடல் சேர்ந்த
பரமனைப்
பயிலும் திருவுடையவன்.

காரியங்கள் நல்லன காணில் கண்ணனுக்கு என்று ஈரியாயிருப்பவன். கண்ணனுக்கு என்று பொருள் ஈட்டி, கண்ணனுக்கு என்று அறுசுவை அன்னம் பக்குவப் படுத்தி, கண்ணனுக்கே என்று அர்ப் பணித்து, கண்ணன் உண்ட அடிசில், அவன் சூடிய மலர் என்று எல்லாவற்றை யும் ஏற்றுச் சுகமாக வாழ்பவன். அவன்

> உடுத்துக் களைந்த பீதகவாடை யுடுத்துக்
> கலத்தது உண்டு
> தொடுத்த துழாய் மலர்சூடிக் களைந்தன
> சூடும் தொண்டன்.

ஆகையால் இம்மையில் பல்கலனும் அணிந்து, பட்டாடை உடுத்து, பாற்சோறு மூடநெய்பெய்து முழங்கை வழிவார உண்டு சுகத்தோடு இருப்பவன். அவன் இறந்தால் நலமந்தமில்லதோர் நாட்டில் அலர் மேல் மங்கை யுறை மார்பனையும் ஆநந்தத்தையுமே பெறுகிறான். அவன் இங்கே இருப்பினும் இன்பம், இறப்பினும் இன்பம் ஆதலால் ' நீ உன் இஷ்டம்போல் செய்! ' என்றேன்.

இச்சிறு கதை வைணவம் வாழ்க்கைக்கு எவ்வாறு முற்றிலும் பொருந்தும் என்பதைக் காட்டும்.

விஷ்ணுவைப் பரம் பொருளாகவும், அவனையடைவதற்கு அவன் கழலிணையே உபாயமாகவும் அறுதியிட்டுக் கூறும் சமயம் வைணவம். 'நாரணன் மூவேழுலகுக்கும் நாதன்' என்றும், அவன் 'நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்து' என்றும், 'ஒண்டொடியாள் திரு மகளும் நீயே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டு அடைந்தேன் உன் திருவடியே' என்றும், ஆழ்வார்கள் அனுபவித்துப் பாடிப் போந்த மதம் வைணவம்.

இவர்களுக்கு மூலப் பிரமாணம் வேதம். 'சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழால் அளித்த', 'மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்து' என்னும் அருளிச் செயல்கள் இவ்வுண்மையைப் புலப்படுத்துவன. ஆக, செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய ஓதித், தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோம்.

அப்படி மறை நிலங்களிலிருந்து தெளிந்த வைணவமதத்தில், சேதனம், அசேதனம், ஈசுவரன் என்ற தத்துவம் மூன்று; பக்தி, சரணாகதி என்ற இரண்டும் உபாயம்; சர்வேசுவரனை அடைந்து அவனுக்குத் தொண்டு புரிவதே உறுதிப் பொருள். ஒருவன் தத்துவத்தை உணர்ந்து, உபாயத்தை அநுட்டித்து, உறுதிப் பொருளைப் பெறவேண்டும். 'பரப்ரஹ்மம், பரமாத்மா' என்று உபநிடதங்கள் கூறும் ஸ்ரீமந்நாராயணனே ஈசுவரன் என்கிற பரதத்துவம். 'எவனுக்குப் பூமி சரீரமோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, அவனே எல்லாவற்றுக்கும் ஆத்மா' என்று அந்தர்யாமிப் பிராமண்யத்தில் பரமாத்மா எல்லாவற்றுக்கும் ஆத்மா, சித்தும் அசித்தும் அவனுக்கு உடல் என்று கூறியதை நம்மாழ்வார் 'உடல் மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்து உளன்' என்று அருளிச்செய்தார்.

இறைவனுக்கும் மற்றப் பொருள்களுக்கும் உள்ள இச்சம்பந்தம் 'சரீராத்ம பாவ சம்பந்தம்' எனப்படும். வைஷ்ணவ சமயத்தின் கொள்கைகளுள் இது மிகவும் முக்கியமானது. இந்த சரீராத்மபாவ ஸம்பந்தம் நன்கு உணரப்படுமாகில் மறுமையில் மட்டுமன்றி இம்மையிலும் சாந்தி நிலவும். நாடும் சமூகமும் முன்னேறும்.

தனிப்பட்ட மனிதனின் வாழ்க்கையும் தரம் பெறும்.

இதைச் சற்றே விளக்குவோம்; நம் உடலை எடுத்துக்கொண்டால், ஆத்மா இருப்பதால் உடல் இருக்கிறது. சரீரம் இருப்பதாலேயே ஆத்மா அதை ஆச்ரயித்து இருந்து, காரியங்களைச் செய்ய வல்லதாகிறது. ஆத்மா இல்லாவிட்டால் சரீரம் நிற்காது; சரீரம் இராவிடில் ஆத்மா இயங்க முடியாது. இதையே ஆழ்வார் 'நான் உன்னை அன்றியிலேன் கண்டாய், நாரணனே நீ என்னையன்றியிலை' என்று நாரணனிடத்தும் கூறினார். மனித உடலுக்கும் ஆத்மாவுக்கும் உள்ள சம்பந்தம் போன்றதே இறைவனுக்கும் சேதனாசேதனங்களுக்கும் உள்ள சம்பந்தம்.

இந்த சரீராத்ம பாவ சம்பந்தத்தை சமய நிலையிலிருந்து, சமூகத்திற்கும் நாட்டுக்கும் தனி மனிதனுக்கும் கொண்டு செல்வோமாணுல், நாடும் சமூகமும் முன்னேற வாய்ப்பு உண்டு. ஒவ்வொரு தனி மனிதனும் தன்னைச் சமூகத்துக்கு ஆத்மாவாகவும், சமூகத்தைத் தன் சரீரத்துக்குத் துன்பத்தை விலக்கி நன்மையைத் தேடிக் கொள்வது போலவே, சமூகத்துக்கு நன்மையைத் தேடுவதிலேயே ஒவ்வொருவனும் ஈடுபடுவான். மூகத்தையே தன்நலமாகக் கருதுவான். இதுபோலவே நாட்டைத் தன் உடலாகவும் தன்னை அதன் ஆத்மாவாகவும், அறிந்த ஒருவன், நாட்டின் இன்பமே தன் இன்பம் என்று உணர்ந்து, உடலின் துன்பத்தைப் போக்க முயலுவான்; நாட்டுக்கும் சமூகத்துக்கும் தொண்டு புரியாத மனிதன் உடலுக்கு ஊறுசெய்யும் உன்மத்தன் போல அறிவிலியாகக் கருதப்படுவான்.

இது மட்டுமன்றி, குடும்பத்திற்கும் குடும்பத் தலைவனுக்கும் உள்ள தொடர்பு சரீராத்மா பாவ சம்பந்தமே. ஆசிரியனுக்கும் சீடனுக்கும், கணவனுக்கும் மனைவிக்கும் இருப்பதுவும் இந்த சரீராத்ம பாவ சம்பந்தம்தான். முதலாளிக்கும் தொழிலாளிக்கும், தலைவனுக்கும் தொண்டர்களுக்கும் மேலதிகாரிக்கும் கீழதிகாரிக்கும் இருக்கும் தொடர்பும் இத்தகையதே. இதை உணர்ந்தால் முதலாளி தன் உடல் போன்ற தொழிலாளிக்குக் குறை செய்யக் கருதமாட்டான். தொழிலாளி தன் ஆத்மா போன்ற முதலாளிக்கு ஊறு செய்ய நினையான். குடும்பத்திலும் பள்ளியிலும், சமூகத்திலும் நாட்டிலும் எங்கும் இன்பமும் நன்மையும் நிலவுமேயொழிய துன்பமும் தீமையும் இடம்பெறு. பிறர்க்கு செய்யும் நன்மையும் தம் நன்மையாகவே ஆவதால், பிறநலம்பேணி அதனுல் தன் நலத்தைப்பெற எல்லோரும் விரும்புவார்கள். சர்வ ஜகதுக்கும் ஆத்மாவான சர்வேச்வரனை ஆச்ரயித்துத் தன் நன்மையை கோரும்போது சமூகத்துக்கும் நன்மை கோருவதாக முடிகிறது. சமூகத்தைப்பேணுவது இறைவனுடைய உடலைப் பேணுவதாகும். இறைவனைப் பூசிப்பது ஆத்மாவைப் பூசிப்பதாகும். இதுவே உபநிஷத்துக்கள் உபதேசித்த விசிஷ்டாத்வைத சித்தாந்தம். இதுவே ஆழ்வார்கள் காட்டிய வைணவ மதம். பராசரர், வியாஸர், வால்மிகி, போன்ற ரிஷிகளும், நாதமுனிகள், ராமானுஜர், தேசிகர் போன்ற ஆசாரியர்களும் பரப்பின சமயம். நிற்கின்றதெல்லாம் நெடுமால், என்றிருப்பவன் வைஷ்ணவன். "வாஸுதேவ: ஸர்வம் இதிஸ : மஹாத்மா ஸுதுர்லப :" என்று கண்ணன் கீதையிலும், "உண்ணும் சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலை

யும் எல்லாம் கண்ணன் " என்று நம்மாழ்வாரும் வைணவன் நிலையையே கூறினர்.

இந்நிலையிலுள்ள வைணவன் தன் காலத்தையெல்லாம் 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது' என்றும் 'இருமுப்பொழுது ஏத்தி' என்றும் கூறியபடி, ஒவ்வொரு நாளையும் ஐந்து பிரிவாகப் பிரித்து, காலை எழுந்தது முதல் இரவு படுக்கப் போகும் வரையில் ஆத்மாக்களுக்கெல்லாம் ஆத்மாவான சர்வேச்வரனை பூசித்து நன்மை பெறுவதிலேயே செலவிடுவான். விடியற்காலையில் **அபிகமநம்** என்ற முதற்பிரிவில் தன்னையும் தன்னுடையவைகளையும் ஆட்கொண்டு உய்விக்குமாறு திருமாலை இறைஞ்சியும், இரண்டாவதான **உபாதாநத்தில்** இறைவனைப் பூசிக்கப் பொருள் ஈட்டியும், மூன்றுவதான **இஜ்யா காலத்தில்** ஈட்டியபொருள்களைக்கொண்டு தன் சக்திக்கேற்றவாறு எம்பெருமானுக்ுத் திருமஞ்சனம் நைவைத்யம் முதலியவற்றைச் செய்தும், இவனடியார்களை பூஜித்தும், நாலாவதான **ஸ்வாத்யாய காலத்தில்** ஸர்வேசுவரனுடைய ஸ்வரூப, குணருபங்களைக் கூறும் வேதம் புராணம் முன்னோர்களின் அருளிச் செயல்கள் இவற்றைக் கேட்டும் படித்தும், கடைசி பிரிவான **யோக காலத்தில்** தான் கற்றுக் கேட்டு அறிந்த சர்வேசுவரனை நெஞ்சில் தியானித்துக்கொண்டே இரவில் படுக்கைக்குச் சென்றும் இவ்வாறு சங்கிலித் தொடர்போல நாள் முழுவதையும் எம்பெருமானுக்காகவே செலவிடுவான். 'இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே யாவோம். உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று ஆண்டாளும், 'உற்றேன் உகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன்' 'ஈதேயின்னம் வேண்டுவது எந்தாய்' என்று நம்மாழ்வாரும் வைணவன் செயலைக் கூறினர்.

இவ்வாறு 'இங்கும் அங்கும் திருமாலன்றி இம்மை கண்ட' வைணவன் திருமாலை யாச்ரயித்து, தனக்கும் தன்னைச் சுற்றியுள்ளவர்களுக்கும் இன்பத்துக்கே காரணமான வாழ்க்கையை நடத்தி, மனிதர்களின் போற்றுதலையும் இறைவனின் உகப்பையும் எய்தி, இம்மையில் இன்பத்துடன் இருந்து மறுமையில் பேரின்பம் பெறுகிறன்.



# சாக்த தரிசனம் அல்லது தேவி வழிபாடு

அண்ணா என். சுப்ரமணிய ஐயர்

ஏந்தப் பரம்பொருள் உண்மை'- அறிவு- இன்ப வடிவமாய், ஆதியந்தமற்றதாய் உள்ளதோ அதுவே **சக்தி** எனப்படும். அவனென்பதுவுமின்றி, அதுவென்பதுவுமின்றி இருப்பினும் பெரும்பாலும் சக்தி பெண் வடிவிலேயே போற்றப்படுகின்றது. சக்தி எந்தெந்த உருவங்களை எடுக்கிருளோ, அந்தந்த உருவங்களைத் தன்னுடையதாய்க் கொண்டு சக்திமான் என்றும், பதி என்றும் போற்றப்படுவதாய், ' நித்தியமாய், நிர்மலமாய், நிட்களமாய், நிரா மயமாய், நிறைவாய், சக்தியின் மூலமே அறிவுக்கு விளங்குவதாய் உள்ளது எதுவோ அது **சிவம்**. எது சிவமோ அதுவேதான் சக்தி. 'மணியும் அதன் ஒளியும்போல, சூரியனும் அதன் பிரபையும் போல, பூவும் அதன் பொலிவும்போல நிர்க்குணமான பரம்பொருளே ஸகுணமாயும் உள்ளது. பிரம்மமாயிருக்கும் பொருளே சக்தியாயும் உள்ளது. கிரியையற்றதாக்க் கருதும்போது அது பிரம்மம் அல்லது சிவம் எனப்படும். படைத்துக் காத்து அழிக்கும்போது அது சக்தி எனப்படுகிறது, என்று கூறுகிருர் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர். சிவம் 'சிவனே என்று' கேவலமாயிருக்கும்போது அது ஒன்றையும் செய்யாது; சக்தி என்னும்போது எல்லாவற்றையும் செய்யும்,

" சிவமெனும் பொருளும் ஆதி சக்தியோடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்;
இவள் பிரிந்திடின் இயங்குதற்குமரிது
அரிதெனுமறை இரைக்குமால் "

என்று ஸௌந்தர்யலஹரீ கூறுகிறது.

சிவம் என்றும் சக்தி என்றும் சொல்லளவில் வேற்றுமையே தவிரப் பொருள் வேற்றுமை இல்லை. ஆதி சக்தியின் ஆவிர்ப்பாவத்திஞல்தான் சுத்த சிவத்திற்கு ஸ்வரூப ஆனந்தானுபவம் உண்டாகிறது. ஆதி சக்தியாயிருக்கிற சித்சக்தியிலிருந்து மாயா சக்தி அல்லது மூடசக்தி உதிக்கிறது. இவளே பரா சக்தி எனப்படுபவள். பரா சக்தியிடமிருந்து இச்சா ஞானக் கிரியா சக்திகளாம் பிரம்மாவிஷ்ணு ருத்திரர்கள் தோன்றுகின்றனர். அவர்களின் மூலம் பராசக்தி சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் எனும் பிரபஞ்ச லீலையை நடத்துகிருள்.

'நிர்மாஸி ஸம்ஹரஸி நிர்வஹஸி த்ரிலோகீம்
வருத்தாந்த - மேதமபி வேத்தி நவா மஹேசஃ
தஸ்யாத்மனஸ்து கிரிஜே தவ ஸாஹசர்யாத்
ஜாத: ச்ருதிஷ்வபி ஜகஜ்ஜனகத்வ - வாத;!!

பார்வதி! நீயே மூவுலகையும் உண்டாக்குகிருய், ஆளுகிருய், அழிக்கிருய், இந்த விருத்தாந்தத்தைக் கூட சிவன் அறிவாஞே அறியமாட்டாஞே தெரியவில்லை. ஆனல் அவனுடன் நீ கூடியிருப்பதால் வேதம் அவனை உலகிற்குப் பிதா எனக்கூறுகிறது. (ஆனந்த ஸகாரஸ்தவம் - நீலகண்ட தீட்சிதர்.)

உபநிஷதங்களில் உபதேசிக்கப்படும் உண்மை பிரம்ம வித்தை எனப்படும். அதையறிந்து அனுபவத்தில் கொண்டு. வர வழிகாட்டுவது ஸ்ரீவித்தை அல்லது சாக்த தரிசனம். பிரம்மம் பிந்துவால்

குறிக்கப்படும்; சக்தி முக்கோணத்தால் குறிக்கப்படும். மூன்று காலங்கள், மூன்று அவஸ்தைகள், மூன்று குணங்கள், மூன்று மூர்த்திகள் என்று மூன்று மூன்ருக உள்ள தெல்லாம் சக்தியின் ஸ்வரூபம். சக்தி வழி பாட்டு முறையில் மந்திரம், யந்திரம், தந்திரம் என்ற மூன்றையும் முக்கோணத்தின் மூன்று மூலைகளாகக் கருதலாம். மந்திரத்தி லுள்ள கருத்தை உருவகப்படுத்திக் காட்டுவது யந்திரம். அது சித்தத்தை நிறுத்துவதற்குப் பயன்படும். பாஹிய பூஜையும் மானஸிக பூஜையும் குண்டலினீ யோகமும் மற்ற சாதனங்களும் தந்திரத்திலடங்கும். ஸ்ரீவித்தையின் கோடிக்கணக்கான மந்திரங்களில் மிக முக்கியமாய்க் கொள்ளப்படுவது பஞ்சதசாக்ஷரி மந்திரம்; முக்கியமான யந்திரம் ஸ்ரீசக்கரம்; முக்கியமான தந்திரம் ஐக்கியானு ஸந்தானம். மந்திர சித்திக்கு யந்திரமும் தந்திரமும் பக்கத் துணைகள். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் தனது சரீரத்தையே சிறந்த யந்திரமாகக் கருதினுர். '(அமீயந்த்ர, துமீயந்த்ரீ) நான் யந்த்ரம் நீ யந்த்ரீ' என தேவியை நோக்கி அவர் கூறுவார்.

ஸநாதன தர்மம் அல்லது இந்து மதம் இமய மலைபோன்றது. அதில் உதித்துப் பல திசைகளில் பாய்ந்து செல்லும் நதிகள் போன்றவை பல சமயங்கள். நதிகள் புகும் கடல்போன்றது சாக்த தரிசனம். பிரிந்துபோன மார்க்கங்கள் ஒன்று சேரும் இடமாக அது விளங்குகிறது. காணபதம், ஸௌரம், வைஷ்ணவம், சைவம், கௌமாரம் என்ற எல்லா உபாஸனுமார்க்கங்களும் சாக்தத்திஞல் ஸமரசத் தன்மையை அடைகின்றன. (அந்த: சாக்தோ பஹி: சைவ: வ்யவஹாரேஷு வைஷ்ணவ:) உள்ளே சாக்தன் வெளியே சைவன், விவகாரத்தில் வைஷ்ணவன் என்ற மூதுரைப்படி ஒரே சாதகனும் கூட முரண்பாடின்றி வெவ்வேறு மார்க்கங்களைச் சமரசப்படுத்திக் கையாளலாம். சக்தி வடிவான காயத்ரீ உபாசனையில் இந்தச் சமரசம் அடங்கியிருப்பதைக் காயத்ரியை வழிபடுவோர் அறிவர். மகாபாரதத்தில் அர்ஜுனனை இந்த சமரசத்திற்கு உதாரணமாக வியாஸர் காட்டுகிருர். அர்ஜுனன் சிவனைப் பூஜிப்பவன், உள்ளத்தில் தேவியைப் போற்றுபவன், விவகாரங்களிலெல்லாம் கிருஷ்ணனைத் தோழனுய்க் கொண்டவன். பாரதப்போருக்கு முன் ஸ்ரீகிருஷ்ணன் துர்க்காதேவியைப் பிரார்த்திக்கும்படி அர்ஜுனனுக்குக் கூற 'ஸ்துதானித்வம் மஹாதேவி விசுத்தேன அந்தராத்மனு' என்று அர்ஜுனன் துதிக்கிருன்.

ஸ்ரீஆதி சங்கர் காட்டிய சாதன மார்க்கத்தில் சூரியன் சக்தி விஷ்ணு கணபதி சிவன் என்ற ஐந்து மூர்த்திகளின் பூஜையடங்கிய பஞ்சாயதன பூஜையும், அவரேற்படுத்திய மடங்களில் ஸ்ரீசக்ரத்தில் விசேஷமாக தேவியின், ஆராதனையும் அவரெழுதிய நூல்களில் பிரபஞ்சஸாரம், ஸௌந்தர்ய லஹரீ த்ரி சதீபாஷ்யம் போன்றவையும் இச்சமரஸத்தையே நிலை நாட்டுகின்றன.

நவயுக அவதார புருஷராகிய ஸ்ரீராமகிருஷ்ணர் இந்து மதத்துக்குப் புறம்பான மதங்களையுங் கூட ஏற்று, எம்மதமும் அம்மைக்குச் சம்மதமே என்பதைத் தமது வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் உலகிற்கு எடுத்துக் காட்டியுள்ளார். அன்னை பரா சக்தியின் அருளால் இச்சமரச நிலை கிட்டாத வரை வேதாந்தமும் சித்தாந்தமும் வெறும் கேள்வியாக மட்டுந்தானிருக்கும். அன்னையை உள்ளன்புடன் வழிபட்டால் 'ஸர்வ - தேவ - தேவீ - ஸ்வரு



**பைரவி**

சுதை வேலை

தெற்குக் கோபுரம் : வடக்கு வசம்

2-வது நிலம்

பிணி'யாகிய அவளே எல்லாத் தேவதைகளையும் காட்டியருள்வாள் என்பதற்கும் அந்த காலத்தில்போல் இந்த காலத்திலும் இது அனுபவசித்தம் என்பதற்கும் நமது காலத்தில் வாழ்ந்த இராமகிருஷ்ணருடைய வாழ்க்கையே சான்று.

இங்ஙனம் சமரச பாவனையுடன் அன்னையை வழிபடுவோர்க்கு நிர்க்குண உபாசனையும் ஸகுண உபாசனையும், கருமமும் பக்தியும், யோகமும் ஞானமும், அத்துவைதமும் துவைதமும், இல்லறமும் துறவறமும் எல்லாம் அன்னையின் உள்ளத்திற்குகந்ததாகவும், எல்லாமாயிருக்கும் அவளை யடையும் மார்க்கங்களாகவும் காட்சியளிப்பனவாய் விளங்கும். அவளே பிரம்மா, அவளே விஷ்ணு, அவளே ருத்திரன், அவளே ஈசுவரன், அவளே ஸதாசிவன் (ஸ்ருஷ்டி, கர்த்ரீ ப்ரஹ்மரூபா, கோப்த்ரீ கோவிந்தரூபிணீ, ஸம்ஹாரிணீ ருத்ரரூபா, திரோதரன கரீச்வரீ, ஸதாசிவானுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணு-லலிதா ஹஸ்ரநமாம்)

இப்படி தேவியை வழிபடுவதற்கு எல்லா வர்ணத்தார்க்கும் ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் சம உரிமை உண்டு. இது வித்தைகளுக்கு அரசு, இரகசியங்களிற் சிறந்தது, உத்தமமானது, பரிசுத்தமளிப்பது, நேரில் கண்டனுபவிக்கக் கூடியது. தருமத்தினின்று பிறழாதது, அனுஷ்டிப்பதற்கு மிக எளியது, என்றும் அழியாதது' என்று பகவத்கீதையில் கண்ணன் பக்தி யோகத்தைப் பற்றிக் கூறியது ஸ்ரீவித்தைக்கும் முழுதும் பொருந்தும். காளிதாசன், மூககவி, வித்யாரண்யர் போன்ற முன்கால தேவி பக்தர்களுடைய மதமும் ஸ்ரீராமகிருஷ்ணர் போன்ற தற்கால தேவி பக்தர்களுடைய மதமும் இதுவே.

சிவபக்தராகிய திருமூலர் திருவாவடுதுறையில் தான் சக்தியை வழிபட்டுப் பூரணத்துவம் எய்திய தாய்க் கூறியுள்ளார்.

நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாள்என் பிறப்பறுத்
தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே.
(திருமந்திரம் 78.)

பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் காதி வித்தையை அவர் பின்வருமாறு விளக்குகிறார்;

ககாராதி யோரைந்துங் காணிய பொன்மை
ஹகாராதி யேரா றரத்தமே போலும்
ஸகாராதி யோர்நான்குந் தான்சுத்த
வெண்மை
ககாராதி மூவித்தை காமிய முத்தியே.
(திருமந்திரம் 1307.)

சிவத்திற் கெவ்வளவு பெருமையோ அவ்வளவு சக்திக்கு முண்டு, சக்தியையும் சிவனையும் ஒன்றாக உள்ளத்தில் தியானித்தால் அஷ்டமா சித்திகளையும் பெறலாம், முக்தியையும் பெறலாம் எனக் கூறுகிறார்.

சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாம்
சத்தி அருள்தரின் சத்தன் அருளுண்டாம்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் உள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையும் ஆமே.
(திருமந்திரம் 333.)

கிரகபூத பீசாச பீடைகளின் நிவாரண சக்தியும் உடலிலும் மனத்திலுமுள்ள தீராத நோய்களைத் தீர்க்கும் சக்தியும், பலவிதமான சித்திகளும் தேவியை வழிபடுவோர்க்குத் தாமே வரினும், சிறந்த பக்தர்கள் சித்திகளைப் பொருட்படுத்த மாட்டார்கள். பக்தியொன்றையே வேண்டி நிற்பார்கள்.

அன்னையின் வழிபாடு ப்ராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலட்சுமி, காளீ, தாரா, த்ரிபுர சுந்தரீ, புவனேசுவரீ, பைரவீ, சண்டிகா என்ற பல மூர்த்திகளிலும் இன்னும் எத்தனையோ வடிவங்களிலும் நிகழ்கின்றது. இவற்றுள் சாந்தமான வடிவங்களில் உபாசனை தென்நாட்டில் பிரசித்தம்; கோரமான வடிவங்களில் உபாசனை வடநாட்டில் பிரசித்தம். ஸரஸ்வதியாகவும், லக்ஷ்மியாகவும், துர்க்கையாகவும் மும்மூர்த்தியும் ஒன்றுகவுள்ள ராஜ ராஜேசுவரியாகவும் நவராத்திரி காலத்தில் தேவியின் ஆராதனை நடைபெறுவதை அனைவருமறிவர். ஸரஸ்வதியாகவும் லக்ஷ்மியாகவும், லலிதையாகவும் ஆராதிப்பதைவிட, துர்க்கையாகவும் சண்டியாகவும் ஆராதிப்பது சற்று கடினம். துர்க்கையின் கோலம் போர்க் கோலம்; அது உலகை நடுங்க வைப்பது. அதன் இரகசியம் ஞான வீரர்களுக்கே விளங்கும்.

'எத்திக்கினிலும் நின் விழியனல்போய்
எட்டித்தானே
எரியுங் கோலம் கண்டே சாகுங் காலம்—
அன்னை, அன்னை
ஆடுங்கூத்தை காணச் செய்தாய் என்னை'

என்று கூறுகிருர் பாரதி.

அன்னை பராசக்தியின் கோபம் தீயோர்க்குக் கொடியதாய்க் காணப்படினும் அடியார்க்கு அபயமளிப்பதாகவே திகழ்கின்றது. அவள் அளிக்குந் துன்பமும் மனத்தின் கோணலை நிமிர்த்தவும், குற்றங்களைக் களையவும், பாவக் குவியலைப் பொசுக்கவுமே பயன் படுகின்றது. ஆயிரம் யுகங்களாக வளர்ந்த தீமை அவள் கோபத்தில் அரைநொடியில் பட்டுப் போகின்றது.

தேவி தென் நாட்டில் கன்னியாகுமரியில் பாலா பரமேசுவரியாகவும், மதுரையில் புத்தி ரூபிணியான மீனுக்ஷியாகவும், திருவானைக்காவலில் பராஹந்தா ரூபிணியான அகிலாண்டேசுவரியாகவும் காஞ்சியில் ஆத்மஸ்வரூபிணியான காமாக்ஷியாகவும் இன்னும் எத்தனை எத்தனையோ வடிவங்களில் கோயில் கொண்டு எழுந்தருளி அடியார்களுக்கு என்றென்றும் அருள்புரிகின்ருள்.

சொல்லும் பொருளுமென நடமாடுந்
துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே நின் புது
மலர்த்தாள்
அல்லும் பகலுந் தொழுமவர்க்
கேஅழியாவரசும்
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ்
சித்திக்குமே.

அபிராமி அந்தாதி.

# கௌமாரம்

திருப்புகழ்மணி T. M. கிருஷ்ணசாமி அய்யர்

"கௌமாரம்" என்னும்சொல் குமரனை வணங்கும் வழிபாட்டை உணர்த்தும் நூலாகக் கருதுவார்கள். யார்க்குக் குமரன் என்பதை முதலாக விளக்கிவிடலாம். ஆதி சங்கரர் ஸ்ரீ மீனாட்சியைப் போற்றும்கால் தேவியின் மகிமையை உணர்த்த வந்தவர் 'மீனாட்சீம் ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம் காருண்ய வாராம் நிதிம்" என்று ஸ்ரீ ஷண்முகனைப்பெற்ற தேவி என்றார்.

வேதத்திலும் புராணத்திலும் பக்தர்களின் தியானத்திலும் சித்தர்களின் திருஷ்டியிலும் "பராசக்தி புத்ரன்" என்றே காணப்படும் தெய்வம் ஷண்முகன். பரஞ்ஜோதியாய் விளங்கும் பரப்ரம்மம், பற்பல ரூபங்களாகி உலகிலே அவதாரமாகி சிருஷ்டியையெல்லாம் தன் கருணையால் காத்து ரட்சிக்கின்ற தெய்வம். கந்தர் அலங்காரத்தில் முருகன் தத்துவம் விளக்கப்படுகின்றது.

"வேலே விளங்கு கையான் செய்யதாளினில்
வீழ்ந்திறைஞ்சி
மாலே கொள இங்ஙன் காண்பதலால்
மனவாக்கு செய
லாலே —————— அடைதற்கரிதாய்
அருஉருவாய் ஒன்று
போலே இருக்கும் பொருளை எவ்வாறு
புகல்வதுவே"

ஸ்ரீ கச்சியப்பரும் ப்ரமமாகிய அருபம்தான் ரூபஷண்முகமாய் உலக ரக்ஷகத்தின்பொருட்டு அவதரித்தது என்பர்.

"அருவமும் உருவமாகி அநாதியாய்ப்
பலவாய் ஒன்றாய்
ப்ரமமாய் நின்ற ஜோதிப்பிழம்பதோர்
மேனியாக
கருணைகூர் முகங்களாறும் கரங்கள்
பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு தித்தனன்
உலகம்உய்ய"

ஸ்ரீ அருணகிரியாரும் திருப்புகழில் புருஷ ஸூக்த பொருளுக்கிசைப்ப, "காணொணாதது உருவோடரு," என்னும் பாட்டில் கூறுகின்றார்.

"பேத அபேதமோடுலகாய் வளர்வது -
பிந்துநாத
பேருமாய், கலையறிவாய் துரியவதீதமாய்
நிறைவாய் வள்ர்வது ஒன்று நீயே"

கதிர்காமத் திருப்புகழில் முருகனை வகுப்பது அற்புதம்.

"அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி
அகமாகி
அயனெனவாகி அரியெனவாகி அரனென
வாகி அவர்மேலாம்
இகரமுமாகி எவைகளுமாகி இனிமையுமாகி
வருவோனே"

வேதபுராண கலைகளுக்கு அதீதமாய் நிற்கும் பரம்பொருளே — கருணையின் முகத்தால், முருகனென அவதரித்தது என்பது கௌமாரத்தின் அடிப்படைத் தத்துவம்.

முருகனைப் பெற்ற கௌமாரி ஸ்ரீ மீனாட்சியென்றால், வேலெனும் பராசக்தியை இணைபிரியாத சிவதத்துவமே முருகன், சிவசக்தி ஐக்கியம் என்று போதிக்கும் ரூபம்தான் ஸ்ரீ ஷண்முகன்— ஆறுமுகன்.

பரப்ரம்மத்தை அடைவதற்கு வெகு எளிதான காலம் கலியுகம். ஸாதனத் திற்குச் சுலபமாய் இருப்பது பக்தி.

கீதையில் உபதேசித்தவாறே திருப் புகழ் உபதேசிப்பதும். "முருகனை மனத் தில் வைப்பாய் (மையேவமன ஆதத்ஸ்வ) புத்தியிலும் வைப்பாய். நீ முருகனுள் வசிப்பாய்" இது பிரத்தியட்ச அனுபவம்.

கண்ணாடிக்குள் இருந்து பார்ப்பவன் கண்ணாடி வர்ணத்தையே பார்ப்பான். முருகன் என்ற கண்ணாடிக்குள் இருந்து உலகை பார்ப்பவன் முருகனையே எங்கும் பார்ப்பான் அதாவது, முருகன் வண்ணத் தையே பார்ப்பான். பக்தியொன்றினு லன்றி ஒருவன் என்னை அறியமுடியாது, காணமுடியாது—என்பது கீதையின் தீர் மானம்.



ஸ்ரீ சுப்பிரமணியர்

விஸ்வரூபம்

தெற்குக் கோபுரம்

தெற்கு வசம்

3–வது நிலம் சுதை வேலை



# காணுபத்தியம் — பிள்ளையார்

சா. கணேசன்

உலகம் யாவையும் படைத்துக் காத்துத் துடைக்கும் முழு முதல் இறைவன் ஒருவனே. அவனை இப்படியன், இந் நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று நம் போன்றவர்கள் எளிதில் உணரமாட்டோம். ஆனாலும் உண்மை உணர்ந்த, அருள் பழுத்த நெஞ்சினர்கள் அவனுக்கு அவனருளாலே ஆயிரமாயிரம் திருப் பெயரையும், திருவுருவத்தையும் தந்து நாமுய்ய வழிவகுத்தருளி யிருக்கிறார்கள். அவையனைத்தும் அறவோர் தியானத்தில் முளைத்தவை. அவற்றிற் கெல்லாம் தத்துவப்படியும், ஆகம முறையிலும், சிற்ப ரீதியிலும் தியான ஸ்லோகங்கள் எண்ணற்றவை நமக்கு உண்டு. அந்நெறி பற்றியே நமது தெய்வத் திருவுருவங்கள் இன்றும் அமைக்கப் பெறுகின்றன.

திருவுருவ அமைதிகளைப் புலப்படுத்த தியான ஸ்லோகங்கள் இருப்பதைப் போலவே அவன் அருளைப் பெறுவதற்கு மந்திரங்களும் பல உள. வேறுவேறு உருவத்தையும், வேறுவேறு திருப்பெயரையும் மனத்துட்கொண்டு பல பாவனைகளில் அந்த ஒருவனை வழிபடுவதால் மந்திரங்களும் பல ஆயின. எனினும் எல்லா மந்திரங்களும் பிரணவ கோஷமாகிய "ஓம்" ஒலியை முதலாகக்கொண்டே ஓதப் பெறுகின்றன. அங்ஙனமே எந்த மூர்த்தத்தைப் பூசித்தாலும் பிரணவப் பொருளாகிய பிள்ளையாரை முதலில் வணங்கி மேற் செல்வதே நமதுமரபு.

பிள்ளையார், மூத்ததிருப் பிள்ளையார், கணபதி, கணேசன், கணநாதன், விநாயகன், விக்கின விநாயகன், விக்கின ராஜன், விக்கினேச்சுரன், கஜமுகன், கரிமுகன், யானைமுகன், வேழமுகன், தும்பிக்கையான், அத்திமுகன், ஐங்கரன், அங்குசபாசன், முன்னவன், ஓங்காரன், பிரணவபொருள், கற்பகமூர்த்தி, கற்பக விநாயகன், கற்பகப்பிள்ளையார், முதலான



**நர்த்தன கணபதி**
மேலக்கோபுரம்—மேற்குவசம்
4-வது நிலம் : சுதைவேலை

தெற்குக் கோபுரத்திலே



உச்சிட்ட கணபதி

2வது நிலம்

தெற்கு வசம்



வீர கணபதி

2வது நிலம்

தெற்குக் கோபுரத்திலே



வல்லப கணபதி

3வது நிலம்

தெற்கு வசம்



தருண கணபதி

3வது நிலம்

பல பொதுப்பெயர்களைக் கொண்டருளும் பெருமான் இடங்கட்குத் தக்கபடி பலப்பல காரணங்களால் சிறப்புப் பெயர்கள் பல வற்றைத் தாங்கியருள்வதை நாம் நன்கறி வோம்.

இந்த மூர்த்தத்தின் உருவ தத்து வத்தைச் சிறிது சிந்தித்துப் பார்த்தாலும் அதன் அருமை நன்கு புலப்படும். பிள்ளையாரை ஞானத்தின் அதி தேவதை என்பர் நூலோர். யானைத் தலையே அதற்குச் சான்று. ஓங்கார ஒலிக்குரிய வரி வடிவமான "ஓம்" என்பதைக் கட்புலனும் படி காட்ட யானைத்தலையே பெரிதும் ஏற்ற தாயிருக்கிறது. வலப்புறத் தந்தம் ஒடிந்த தான அமைதியில் காட்டப் பெறுவதன் மூலம் ஓ என்ற எழுத்தின் தொடக்கச் சுழி கிடைத்துவிடுகிறது. அங்கிருந்து மேல் நோக்கி வலஞ்சுழித்து இடக்காது வரைச் சென்று, வளைந்த இடத்தந்தத்தின் வழி யாகக் கீழ்நோக்கித் துதிக்கை நுனிவரை கோடிட்டால் 'ஓ' என்ற வரிவடிவம் தோன்றிவிடக் காண்போம். கையில் உள்ள மோதகம் 'ம்' என்ற வரிவடிவத்தைச் சுட்டுகிறது. பிள்ளையார்பட்டிப்பெருமான் வலம்புரிப் பிள்ளையாராயிருப்பதால், பெரும்பாலாக மற்ற இடங்களில் உள்ள மூர்த்தங்களைவிட விளக்கமாக இவ்வுண் மையை (ஓங்கார சொருபத்தை)ப் புலப் படுத்திக் கொண்டிருக்கிறது.

இனி வேறிடங்களில் சாதாரணமாகக் காணப்பெறாத சிறப்பமைதிகள் இங்கு என்ன என்பதைச் சிறிது காண்போம்.

1. இங்கே பெருமானின் துதிக்கை வலம் சுழித்ததாக அமைந்திருப்பது.

2. சாதாரணமாக மற்ற இடங்களில் இருப்பதைப் போல நான்கு கைகள் இல்லாமல் இரண்டு கரங்களைக் கொண் டிலங்குவது.

3. அங்குச பாசங்கள் இல்லாமல் விளங்குவது.

4. வயிறு ஆசனத்தில் படியாமல் 'அர்த்த பத்ம' ஆசனம் போன்று கால்கள் மடிந்திருக்க அமர்ந்தருள்வது.

5. இடக்கரத்தை இடையில் நாட்டிப்பெருமிதக் கோலம் தோன்றப் பொலிவது.

6. வலக்கரத்தில் மோதகம் தாங்கி யருள்வது.

ஆகிய இவை பிள்ளையார்பட்டிப் பெருமானிடம் காணப்பெறும் சிறப் பமைதிகள். இவற்றால் நாம் உணரக் கூடியது — உணர வேண்டியது ஒன்று. பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டில் தோன்றிய ஆதி நாளிலேயே இந்த மூர்த்தம் அமைக்கப் பெற்றிருக்கிறது. என்ற உண்மைதான் அது. சிற்பக்கலை உணர்ந்தவர்களும், சிற்பத்துறை ஆராய்ச்சியாளரும் இதை மறுக்க மாட் டார்கள். இந்த சிறப்பியல்பை அறிந்து கொண்டு மேலே செல்வோம்.

விநாயகன் என்ற சொல்லுக்கு ஒப்பு யர்வு இல்லாதவன்; "தன் அலாது ஒரு பொருள் தனக்கு மேலிலான்," என்பது பொருளாகும். அதாவது அண்டசராசரம் அனைத்திற்கும் தானே தனித் தலைவன் என்பதாம். அனைத்திற்கும் முதலாய்த் தோன்றியது நாதமே என்பதைப் பண்டைய மெய்ஞ்ஞானிகளைப் போன்றே இன்றைய விஞ்ஞானிகளும் நம்புகின் றனர். நாத தத்துவத்திற்கே ஆதாரச் சொல் அல்லது மூல ஒலி "ஓம்" என்ப தாகும். அந்த ஒலிக்கு முற்றறிவுடைய

நமது பெரியோர்கள் பல்லாயிரம் ஆண்டு கட்கு முன்னேயே உலகம் போற்ற வரி வடிவை அற்புதமாக அமைத்தனர். அந்த வரிவடிவத்தை மனத்துட்கொண்டு அமைக்கப்பெற்றதே இந்த உருவடிவம். பரம்பொருளிலிருந்து முதலில் வெளிப் பட்டதுஒலி. அந்த ஒலி(அதாவது பிரணவ) உருவுடன் விளங்குவதால் பிள்ளையார், மூத்த திருப் பிள்ளையார், ஓங்காரப் பெரு மான், பிரணவசொரூபி என்றெல்லாம் போற்றப் பெறுகிறுர்.

சகல கணங்கட்கும் தலைவனுய் விளங்கும் உண்மையை உணர்ந்த கணபதி, கணேசன், கணநாதன் முதலிய திருப்பெயர்களைத் தாங்கியருளுகிறுர்.

தம்மை உணர்ந்து பணிந்தோர்க்கு இடையூறுகளை நீக்கியும், அல்லாதார்க்கு ஆக்கியும் அருள் சுரப்பதால் விக்கினேச் சுரன், விக்கினராஜன், விக்கினவிநாயகன் என்றெல்லாம் பாராட்டப் பெறுகிறுர்.

அவருடைய பெரு வயிறு (லம்போ தரம்) சர்வாண்டங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்ற பெருமை யையும், மோதகம் ஏந்தும் கரம் அகிலத் தைத் தாங்கிப் புரக்கும் அருமையையும் உணர்த்துவன ஆம்.

நெற்றிக் கண், கங்கை, சடைமுடி, இளம்பிறை, இண்டை முதலான சிவனுக் குரிய அங்கங்கள் அனைத்தையும் பிள்ளை யார்க்கும் உரியதாகப் பேசுவது தொன்று தொட்ட மரபு. இதிலிருந்தே சிவன் வேறு பிள்ளையார் வேறு என்று சொல்ல முடியாத அபேத உண்மை நன்கு புலனுகின்றது; இல்லையா ?

விநாயகப் பிரபாவம் அதாவது பிள்ளையார் பெருமை பேசரியதாகும். எனவே பேச் சிறந்த பூரணமாம் அவ னருளாலே அவன் தாள் வணங்கி அவனரு ளுக்குப் பாத்திரராக முயல்வோமாக.



# சௌரமும் அத்வைதமும்

A. வெங்கடேஸ்வர ஐயர் B.A., B.L.

அகப்பற்று புறப்பற்று, இல்லறம் துறவறம், உண்டு இல்லை, என்ற இரட்டைத் தத்துவங்களின் தடை நீங்கிடின் அ-த்வைதநிலை. இந்நிலையில் உற்பத்தி நாசம், பந்தம் மோட்சம் என்ற அவத்தைகள் இல. அறம், பொருள், இன்பம் என்ற மும்மலங்களும் அற்ற வீடு இதுதான். வீடு முழுமையானது. தூய்மையானது. தடையற்ற ஆனந்தமயமானது. மெய்யுணர்விற்கு இருப்பிடம் வீடு. பரமார்த்த நிலை என்றும் கூறுவதுண்டு. வியவகார நிலை, அஞ்ஞானமய அவிச்சை நிலைகளை விழுங்கி சுயநிலையிலிருப்பது வீடு சமுசார சக்கரம் சுழலாத நிலை என்பது வீட்டின் இலக்கணம். வினைப் பயன்கள் முழு ஓய்வுபெற்ற நிலை. காலம், தேசம், வஸ்து. ஏவல் முதலியன ஒடுங்கின நிலை. இந்த நிலை கொள்ளத்தக்கது. மற்றெல்லா நிலைகளும் தள்ளத் தக்கன. வீடு, மெய்யுணர்வு, மோட்சம், சுயநிலை, ஆன்ம நிலை, குணங்களற்ற நிலை, பரமார்த்த நிலை, அத்வைதநிலை, என்பன ஒரு பொருட்கிளவி; இவை கொள்ளத்தக்கவை. அவிச்சை, அறியாமை, விபரீத உணர்வு, மருள் மயக்கம் என்பன ஒரு பொருட்கிளவி; இவை தள்ளத் தக்கவை.

ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக அறிந்தால் அது அவிச்சை. இந்த அவிச்சைக்குப் பொருளாவது வஸ்துவின் தோற்றமே ஒழிய வஸ்து அல்ல. வஸ்துவின் உண்மையான சுய ரூபம் அறியப்படும் கால் தோற்றமும் அவிச்சையும் ஒருங்கே ஒழிந்து வஸ்து வஸ்துவாகவே திகழும். உதாரணம்: பழுதையும் அரவத் தோற்றமும்; அரவத்தின் அவிச்சை இருக்கும் வரை பழுதை மறைந்து நிற்கும். பழுதையின் ஞானம் உண்டாகும்பொழுது அரவமும் அவிச்சையும் மாயமாய் மறைந்திடும். இதேபோல்தான் மெய்ப்பொருளும் பிரபஞ்சமும். மெய்ப்பொருளே பொருள். மற்றவை பொருள் அல்ல. ஆகையால் மெய்ப் பொருளின் பொய்யறிவை விலக்கி மெய்ப்பொருளின் மெய்யறிவு பெறவேண்டும். இந்தக் கருத்துக்களை இரண்டு குறள்களில் வள்ளுவர் நமக்கு வழங்கியிருக்கின்றார்.

1 பொருள் அல்லவற்றைப்
பொருள் என்று உணரும்
மருளான் ஆம் மாணுப் பிறப்பு

2 எப்பொருள் எத்தன்மைத்து
ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு

மெய்ப் பொருள் காண்பது அறிவு. மெய்ப் பொருள் உணர்வில் மற்ற உணர்ச்சிகள் யாவும் செத்துவிடும்.

ஒரு நிலையில் மற்ற நிலைகள் தோன்ற என்பது பிரசித்தம். நனவு நிலையில் கனவும் உறக்கமும் இல்லை. அப்படியே கனவு நிலையிலும் உறக்க நிலையிலும். பிறப்பும் இறப்பும் விழிப்பிற்கும் உறக்கத்திற்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றன.

உறங்குவது போலும் சாக்காடு - உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

என்பது குறள். இரவும் பகலும் விழிப்பும் உறக்கமும், அமாவாசையும், பௌர்ணமியும், சூரியோதயமும், சூர்யாஸ்தமனமும்,

மூச்சு விடுவதும் மூச்சு இழுப்பதும் எப்படி மாறிமாறி, சுற்றிக்கொண்டிருக்கின்றனவோ அப்படியே பிறப்பும் சாக்காடும் சுற்றிச் சுற்றி ஜீவனைப் பற்றிக் கொண்டு நிற்கின்றன. ஆனால் மெய்யுணர்வு பெற்ற நிலையில் இந்த அவல நிலைகள் எல்லாம் கரைந்து விடும் என்பது கோட்பாடு. மனிதனுக்குப் பிறப்பும் இறப்பும் அற்ற நிலையை அடையவேண்டும் என்பதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்பது எல்லா மதவாதிகளுக்கும் சம்மதம். 'சிந்தையற நில்' என்பன ஆன்றோர் வாக்கு.

மெய்ப்பொருள் எல்லாவற்றிற்கும் சிறியதிலும் சிறியதாயும் பெரியதிலும் பெரியதாயும், இடம், பொருள், ஏவல், காலம், அறிவு அண்டசராசரங்கள் எல்லாவற்றையும் பரவியும் சகலத்திற்கும் மையமாயும் இருக்கின்றது. பிரமாண்டங்களுக்கும் மையம். அணுக்களுக்கும் மையம். அவைகளைப் பரவியும் நிற்கிறது. ஆகையால் மெய்யுணர்வு பெற்றவர்கள் எல்லாவற்றையும் பிரம்மமாகவே உணர்கிறார்கள். ஆனால் அதிகாரி பேதம் என்ற வக்கணையில் பல மதங்களை தாபித்தார்கள். எந்த வழி போனாலும் வீடு போய்ச் சேர்ந்து விடுவோம் என்பது அவர்களது திண்ணம். குருவி பனங்காயைத் தாங்க முடியாது. ஆனால் ஒரு சிறு ரத்தினத்தை சுலபமாக வகித்துக் கொள்ளும். வைரக் கல்லை வயிர ஊசியாலேயே செதுக்க முடியும். நாவினால் வாசனை அறியமுடியாது. மூக்கினால் சுவையை உணரமுடியாது. கோடாறியால் சித்திரம் வரைய முடியாது. சிறு முப்பட்டை ஊசியால் விறகு பிளக்க முடியாது.

நாம் பயன்பெறுவதற்கு அந்த பயனுக்குத் தகுந்த கருவிகளையும் உபாயங்களையும் பெறவேண்டும். அந்தக் கருவிகளும் உபாயங்களும் நம்முடைய நிலைக்கு ஏற்றவைகளா என்று தெரிந்து உபயோகப்படுத்தினால் அந்தந்த பலனை அடையலாம். ஆஞ்சநேயமூர்த்தி தேக புத்தியில் ராமதாஸனாகவும், ஜீவ புத்தியில் இராமனுடைய அம்சமாகவும், ஆத்ம புத்தியில் தானே ராமனாகவும் உணர்வதாகக் கூறினார். இவை த்வைத, விசிட்டாத்வைத, அத்வைதமத சூத்திரங்கள் போல் அமைந்திருக்கின்றன. ஜீவாத்மா பரமாத்மா உறவு மூன்று வகையாக, ஜீவாத்மாவின் அந்தந்த நிலையைப் பொறுத்துக் கூறப்பட்டது. ஆகையால் எந்த நிலை நமக்குத் தேவையோ அந்த நிலையை நாமே வகுத்துக் கொள்ளலாம்.

சீவன் முத்தர்கள் அத்வைத நிலையை அடைந்தவர்கள். வறுத்த பயறு முளை விடாது. அதுபோல் பிறப்பு, நனவு, கனவு உறக்கம் சாக்காடு என்ற இரு வினைப் பயன்களால் ஏற்பட்ட அவத்தைகளைத் தோற்றங்களே என்று உணர்ந்து மெய்யறிவில் அவைகளை வறுத்து முளை கிளம்பாத படி ஆக்கி வைத்து அத்வைத நிலை எய்தினார்கள். தோற்றமும் வஸ்துவும் இணைந்திருந்தால் அத்தோற்றம் அறிவின் பயனாக வஸ்துவிலேயே லயமாகிவிடும். தோற்றங்கள் எல்லாம் அழிந்தாலும் மெய்ப்பொருள் அழியாது நிற்கும். எல்லா அவத்தைகளும், எல்லா நிலைகளும் மறைந்துவிட்டால் சூன்யம் அல்லது முற்றிலும் அழிவு என்ற வேண்டாத நிலை ஏற்பட்டு விடுமோ என்ற அச்சம் மாபெரும் யோகிகளுக்கும் உண்டு. ஏனென்றால் அத்வைத நிலையை முற்றிலும்அழிவு என்ற பயங்கரமான தத்துவத்துடன் ஒப்பிடுகிறார்கள். முற்றிலும் அழிவு என்பது விஞ்ஞானம், சமயம், தத்துவ ஞானம்,

என்றவைகளால் ஒப்புக் கொள்ளப்பட வில்லை. கருத்தில் நிற்காத ஒரு தத்துவம். அப்படியே ஒரு தத்துவம் உண்டென்று லும் அத் வைத நிலையில் அது இல்லை. அத்வைத நிலை பயமற்ற நிலை ஏகாந்த மானது எதிர்ப்பில்லாத ஒரு நிலையில் பயப் படுவதற்கு ஒன்றும் இல்லை. பழுதையை சிலர் பாம்பாகவும் சிலர் பூமாலையாகவும் இன்னும் சிலர் நீர்த்தாரையாகவும், மற்ற வர் பூமி வெடிப்பாகவும், உணர்கிறார்கள். பழுதை என்று தெரிந்த ஒருவர் அது பாம் பல்ல, பூமாலையல்ல, நீர்த்தாரையல்ல பூமி வெடிப்பல்ல என்று சொல்லவும் அவரவர் அவிச்சை நீங்கி, பழுதையே பார்க்கிறார் கள். சூன்யத்தைப் பார்ப்பதில்லை. மெய்ப் பொருள் எல்லாவற்றிற்கும் ஆதாரம். ஆகையால் அழிவுள்ள எல்லாத்தோற்றங் களையும் கருணைகாட்டாமல் நீக்கலாம். மெய்ப்பொருள் ஒன்றே இறுதியில் எஞ் சும்.

மெய்ஞ்ஞானிகள் அழிவில்லாத நிலையை நாடி, 'ஆசை அறுமின் ஆசை அறுமின், ஈசனோடாயினும் ஆசை அறு மின்,' 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்ற கோட்பாடுகளை வழிபட்டு, ஸ்தூல, சூக்கும, காரண சரீரங்களின் அவத்தைகளை நீக்கி, சமாதி நிலையையும் அதற்கும் அப்பால்பட்ட அஜாத அத்வைத நிலையையும் எய்தினார்கள். கொப்பரைத் தேங்காயும் சரட்டையும் விலகி நிற்பது போல் ஆன்மாவையும் சரீரத்தையும் வெவ் வேறாகக் கண்டார்கள். பானையில் அடை பட்டிருக்கும் ஆகாயத்தைப் போலும் ஆன்மாவைக் கண்டார்கள். சரீரம் உப யோக மற்ற தடை என்று தெளிந்தார்கள். சரட்டை அழிவதால் கொப்பரைக் காய்க்கு நட்டமில்லை. பாண்டம் நசிப்பதால் அடைபட்டிருந்ததாகக் காணப்பட்ட ஆகாயத் துண்டுக்கு நட்டமில்லை என்று கண்டார்கள். சரீரம் அழிந்தாலும், இருந் தாலும் ஜீவாத்மா பரமாத்மாவே என்று கண்டார்கள். இவ்வழியே சீவன் முத்தர் அத்வைத நிலை கண்ட வழி.

நம்முள் பெரும்பாலோர் சீவன் முத்த ரல்லாதபடியாலும், கர்மயோகம், ராஜ யோகம், அட்டாங்க யோகம், அடயோகம், அல்லது யோகங்களுக்கெல்லாம் சிகரமா யுள்ள ஞானயோகம் இவைகள் ஒன்றிலும் தேர்ச்சி பெறாததாலும், நமக்கு அத்வைத நிலைபெற வழியில்லையா என்ற கேள்வி பிறக்கிறது. இவ்விடத்தில் நமக்கு விஞ் ஞானம், சமயம், தத்துவ ஞானம் என்ற அறிவுக்களஞ்சியங்களில் எது உபயோகம் என்று பார்க்கவேண்டும். அது சரி. ஆனால் எதைக்கண்டு பிடிப்பதற்காக இந்த சாத்தி ரங்கள் முயலுகின்றன என்பதை முன்னால் அறிந்து கொள்ளவேண்டும். ஒரு புருட னிடத்தில் பிதாவின் பார்வையில் புத்திரத் தன்மையும் பாட்டனது பார்வையில் பேரத் தன்மையும் விளங்குகின்றன. அவை பர மார்த்தமாக இல்லை. புருடனுடைய பிண் டமே பரமார்த்தம் ஆகையால் எந்த வஸ்து எதனிடத்தில் மற்றொன்றின் பார் வையால் விளங்குகிறதோ அது அதனிடத் தில் பரமார்த்தமாக இல்லை. **எதன் எந்த ரூபம் பிரதீதி யாகிறதோ அது அதன் பர மார்த்த ரூபமாகிறது.** அதுபோல ஸ்தூல, சூக்கும காரண உபாதியின் திருஷ்டியால் எந்த விராட் விசுவன், இரணிய கர்ப்பன்- தைஜசன் ஈசுவரன் பிராஞ்ஞன் தோன்று கின்றனவோ, அவை மித்தையாம்; சேதன மாத்திரமே சத்தியமாம். ஒருவன் மற்றொருவனுடைய உறக்க நிலையை, தான் காண்கிறபடி அறிவதையும், உறங் கினவனே விழித்துக்கொண்டு தான் உறங் கின நிலையில் உணர்ந்ததையும் ஒப்பிட்டுப்

பார்த்தால் மேலே சொல்லப்பட்ட தத்துவத்தின் பொருள் விளங்கும். தூங்கினவனே அவனுடைய உறக்க நிலையின் இலக்கணத்தை ஞாபகப்படுத்திச் சொல்வது பொருந்தும். இருந்த போதிலும் அந்தந்த நிலையே அததற்கு பரமார்த்தம்.

விஞ்ஞானம் அணுக்களை பிரிக்க முடியாது என்ற காலம் உண்டு. அணுவின் சுயரூபம் அறிய வேண்டி, பிரித்து பார்த்தார்கள். மூன்றாகப் பிரிந்தது. கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதையாக சில அணுக்கள் வெடிக்க ஆரம்பித்தன. விஞ்ஞானத்தால் ஆகாயத்தை அளந்தார்கள். 1000 ஒளி வருடங்கள் வரை அளந்து விட்டார்கள். (ஒளி என்பது ஒருவினாடிக்கு 186000 மைல்கள் செல்லும் $186000 \times 60 \times 60 \times 24 \times 365$-or $366 \times 1000$ மைல்கள் ஆகும்). ஆனால் அளக்க அளக்க ஆகாயம் விரிந்து கொண்டே போகிறது, இரண்டிலும் அதாவது சிறியதிலும், பெரியதிலும், விஞ்ஞானம் முடிவுகாணவில்லை. முடிவுகாணவும் முடியாது. ஏனென்றால் இது முற்றிலும் புறநோக்கு. தத்துவ சாஸ்திரத்தில் எல்லாம் உள் நோக்கு. ஆகையால் பிரபஞ்சத்தைப் பற்றிய கவலை அவர்களுக்கு இல்லை.

ஆகையால் விஞ்ஞானத்தையும் தத்துவ ஞானத்தையும் வளைத்துச் சேர்த்து ஒரு நிலையில் பொருத்தி விட்டால் மெய்யறிவு ஏற்படும். இந்த காரியத்தை சாதிக்ககூடியது சமயம். சமயத்தின் கொள்கை, காரண பிரம்மம் காரிய பிரம்மம் என்று பிரித்து, காரண பிரம்மனே ஞேய பிரம்மன் என்பதும் காரிய பிரம்மன் த்யேய பிரம்மன் என்பதும் காரண பிரம்மம் தான் அறியப்படவும் உணரப்படவும் தக்கவன் ; காரிய பிரம்மன் தியானத்திற்கு மாத்திரம் லாயக்குள்ளவன் என்பனவும் விளங்கும். சமயங்கள் கணக்கில் அடங்காது. அணுமுதல் ஆகாயம் வரையிலும் அசேதன வஸ்துக்களில் எதை வேண்டுமானாலும் இலிங்கமாக வைத்துக் கொள்ளலாம். எறும்பு முதல் இரணியகர்ப்பன்வரை சேதன வஸ்துக்களில் எதை வேண்டுமானாலும் இலிங்கமாக வைத்துக் கொள்ளலாம். ஆனால் சைவம், வைணவம், சாக்தம், காணுபத்யம், கௌமாரம், சௌரம் இவை ஆறுமே முக்கியமாகப் புராணங்கள் சொல்லுகின்றன. ஒவ்வொரு புராணமும் தன் தெய்வத்தை காரணமாகவும் மற்ற தெய்வங்களைக் காரியங்களாகவும்சொல்லுகிறது. அத்வைத மதத்தில் காரணம் கொள்ளத்தக்கது; காரியம் தள்ளத்தக்கது. களிமண் கொள்ளத்தக்கது. அதனால் உண்டாகும் நாம ரூபங்கள் தள்ளத்தக்கவை. இதேபோல்தான், தங்கமும் ஆபரணங்களும், இப்பியும் வெள்ளியும், குற்றியும் மகனும். ஆனால் காரண காரியங்களின் வித்யாசமின்மைக் கொள்கை அத்வைத மதத்தில் அவசியம் எடுத்துக்கொள்ளத்தக்கது. ஒரு புராணத்தில் காரியங்களாக இருக்கும் தெய்வங்கள் அந்தந்தப் புராணங்களில் காரணங்களாக அமைந்து விடுகின்றன. இந்த முறை ஒரு தெய்வத்தினிடம் திடவைராக்ய சித்தம் ஏற்பட்டுவிட்டால், வீடு பெறும் நிலை வந்துவிடும் என்பதுதான். சமபுத்தி ஏற்பட்டுவிடும் என்பதே அபிப்பிராயம். தள்ளுதலில் நோக்கம் அதிகமல்ல. கொள்ளுதலில் ஒரே நோக்குடன் இருக்க வேண்டும் என்பதே கருத்து. தள்ளுதலில் கருத்து இருந்தால் ஆறு தெய்வங்களும் ஆறு சமயங்களும் இல்லாமல் போய்விடும். ஆறு சமய தெய்வங்களையும் கொஞ்சமும் வித்யாச மனப்பான்மை

இல்லாமல் சமபுத்தியுடன் உபாசிக்க முடியுமானுலும் அத்வைத மௌன ஓங்கார ஆன்ம அனுபவம் ஏற்படும்.

"ஆசை நிகளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையை ஏற்றி
அத்து வித மதமாகி, மதம் ஆறும் ஆருக
அங்கையின் விலாழியாக்கிப்
பாச இருள் தன்னிழலெனச் சுளித்
தார்த்துமேல்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க உண்டுமுக
படா மன்ன மாயை நூறித்
தேசு பெற நீ வைத்த சின்முத்திராங்குசச்
செங்கைக்குளே யடக்கிச்
சின் மயானந்த சுக வெள்ளம் படிந்து நின்
திருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதென்னை யொரு ஞான
மத்தகம் என வளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில் வரு மௌன குருவே"

(மௌன குரு வணக்கம் — தாயுமானவர்)

சௌர மதத்தில் சூரிய பகவான் காரண பிரம்மனுகக் கொள்ளப்பட்டிருக்கிறது. பிரம்ம சூத்திரத்தில் எதிலிருந்து சகல பிரபஞ்சங்களும் உண்டாகின்றனவோ, எதில் அவை ஜீவிக்கின்றனவோ, எதில் மறுபடியும் லய மடைகின்றனவோ, அதுவே பிரம்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சௌர மதத்தில் சூரிய பகவானையே மேல் சொன்ன பிரம்மமாக சொல்லப்படுகிறது. சூரியனிட மிருந்தே மூம் மூர்த்திகளும் தோன்றி அவரவர் காரியங்களான சிருட்டி, காப்பாற்றுதல், அழித்தல் என்ற தர்மங்களை அனுட்டிக்கிருர்கள். சூரியனே மெய்ப் பொருள். அவன் அருவமாகவும் உருவமாகவும் இருக்கிருன். அருவம் காரணமாகவும் உருவங்கள் காரியங்களாகவும் உள. அருவம் ஒன்று உருவங்கள் பல. அருவ சூரியன் அசல், மற்ற உருவங்கள் எல்லாம் நகல்கள். அருவ சூரியனின் பிரதி பிம்பங்களான மற்ற உருவங்கள் அவனுடைய சாமார்த்தியத்தாலேயே பிரகாசிக்கின்றன. தக்ஷிண சம்பிரதாயப்படி தேவி உபாஸனை செய்பவர்களுக்கும் மனதில் எது கட்டுப்படுகிறதோ அந்த சூரியன் இல்லையாயின் எல்லோரும் குருடராவர். சூரியனைப்போல் ஒருவனும் இதஞ் செய்கிறவனில்லை. பிறருடைய இதத்தின் பொருட்டுத்தான் ஆகாசத்தில் ஓயாமல் பிரணவ மந்திரம் சபித்துக் கொண்டு அலைகிருன். இச் சூரியன் காலத்தை ஒட்டியிருக்கும் எல்லாக் காரியங்களையும் சூத்திரமாகச் செய்கிருன். உயிருக்கும், புத்திக்கும் சூரியனே ஆதாரம். பிறவிக் கடலைத் தாண்ட இரண்டு வழிகள் உண்டு. ஒன்று புகை அல்லது இருள் வழி. இந்த வழி போனால் மறு பிறப்பு உறுதி. மற்றொன்று பிரகாசமான சூரியனின் வழி. இந்த வழியில் பிரம்மலோகம் சேர்ந்து வீடு பெறுவது திண்ணம்.

இத்துணை பிரபாவங்கள் கொண்ட சூரியனைப்பற்றி வியாஸ முனிவர் தன்னுடைய பிரம்ம புராணத்தில் உப புராணமாக 3899 செய்யுள்கள் அடங்கிய சௌர புராணம் இயற்றி இருக்கிருர். சூரிய உப நிடதத்தில் இவனே பிரம்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கீதையிலும் நானே சூரியன் என்று கிருஷ்ண பகவான் பகருகிருர். எல்லா வேதங்களிலும் காயத்ரீ மகா மந்த்ரம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த காயத்ரீ மந்த்ரம் சூரியனைக் குறித்தே சொல்லப் பட்டிருக்கிறது. எல்லாத் துன்பங்களையும் போக்கவல்லது காயத்ரீ மந்த்ரம். இந்த மந்த்ரத்தை சபித்தால் சூரிய பகவானின் அருள் கிட்டும். சூரியபகவான் பாரபக்ஷமற்றவன். சாதி,

ஆண்பால், பெண்பால், நிறம், குழந்தைப் பருவம், வாலிபம், வயோதிகம் என்ற வித்தியாஸம் அவனிடத்தில் இல்லை. ஆதலால் மற்ற வஸ்துக்களிடமும் இந்த வித்யாஸங்கள் அவன் பாராட்டுவதில்லை. சமயங்களில் முக்யமான அம்சங்கள், உபாஸனை, ஆராதனை, பக்தி. இவை களின் மூலம் கடவுளின் அனுக்ரகம் பெற்று இன்பப் பேறு பெறுவதே நோக்கம். சர்வ வல்லமையுள்ளதாயும், பிரபஞ்சத்தை சிருஷ்டி செய்து, ஜீவாத்மாக்களின் இருவினைப் பயனை ஒட்டி அவரவர்களுக்கு அனுக்ரகம் செய்யக்கூடிய சக்தி வாய்ந்தவனுயும், எல்லா சாத்திரங்களுக்கும் கர்த்தாவாயும், எல்லா வஸ்துக்களைப் பரவி நிற்பதாயும் உள்ள கடவுளை எப்படி உபாஸிப்பது என்பது கேள்வி. சமய வழியில் பிரதீகை அல்லது பிம்ப உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. பிம்பம் கடவுளைக் காட்டும் இலிங்கமாகும். கடவுளின் அனந்த கல்யாண குணங்களையும் பிம்பத்தில் ஆவாஹனம் செய்து உபாஸிப்பது முறை. ஆகம விதிப்படி மந்திர சக்திகளை எல்லாம் பிம்பத்தில் ஏற்றிவைத்து அதற்கு ஸர்வாபீட்ட அனுக்ரக சக்தியை உண்டுபண்ணுவது; சில பிம்பங்கள் ஸ்வயம்புவாகவே இருக்கும். பிம்பத்திற்கு அனுக்ரஹ சக்தி ஏற்பட்ட பின் அதனுடைய சந்நிதானத்தில் சோடச உபசாரங்கள் செய்து, பக்தி சிரத்தையுடன் பூசை நைவேத்தியங்கள் செய்து கடவுளின் அனுக்ரஹம் பெறுவது என்பது சமய சித்தாந்தம்.

சௌர மதத்திற்கு உரிய தெய்வம் சூரிய பகவான். அவனைக் காலையில் பலர் துதிக்கிருர்கள். சூரிய நாராயண பூசை செய்து சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்கிருர்கள். அவனை ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தில் சஞ்சரிப்பவனுக உபாஸனை செய்கிருர்கள். சூரியபகவானைக் கடவுளாக நேரடியாக உபாஸனை செய்யலாம். இது த்வைத பாவனை. சூரியனுடைய அம்சமாகவே அந்த பகவானைத் துதிக்கலாம். இது விசிட்டாத் வைத பாவனை. தெரிந்தோ தெரியாமலோ சூரிய பகவானை அதனுடைய சக்தியின் அனுகூல பலனை அடையும் போது போற்றியும், அதனுடைய சக்தியின் பிரதி கூல பலனை அடையும் போது தூற்றியும் நாமெல்லோரும் கடவுளின் பிரத்யக்ஷப் பிரதிநிதியான சூரியனை வணங்கத்தான் செய்கிறேம். அறிவு வளர்ச்சி குன்றிய ஆதிகாலத்து மனிதர்கள் அறியாமையால் சூரியனைக் கடவுளாக உபாசித்தார்கள் என்று சிலர் சொல்லுகிருர்கள். ஆனுல் அறிவு முதிர்ந்து முத்துக்களாக உதிரும் இக்காலத்திலும் சூரியனைக் கடவுளாக வழிபடுபவர்கள் உளர். நம்மைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்தவர்களிடம் மரியாதை செலுத்தி அவர்களின் உதவி பெற்று சுகம் அடைகிறேம். இந்த முறையில் சூரியபகவான் நம்மைக் காட்டிலும் அளவிட முடியாத சக்திவாய்ந்தவன். கால தேச வர்த்தமானங்களில் நம்மை அவனுடன் ஒப்பிட்டுப் பார்க்கமுடியாது. அசேதனை சூரியன் சேதனனை சூரிய பகவானையே சூக்குமமாக அறிவிக்கின்ருன் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும்.

அத்வைத மதத்தில், அத்வைத நிலையே நித்தியமாயும் அழிவற்றதாயும் பிரகாசமாயும் உள்ளது என்பது ஸித்தாந்தம். இந்த நிலை எய்துவதற்கு சகுண, நிர்குண பிரம்மங்களின் அறிவுபெற்று சகுண பிரம்ம அறிவை நிர்குண பிரம்ம அறிவில் ஒன்றறக் கரைத்து விட வேண்டும் என்பது கருத்து. சகுணமென்ருல் குணங்களுள்

ளது, நிர்குணம் என்ருல் குணங்களற்றது. குணங்களுள்ள வஸ்துக்களுக்குப் பெயரும் உருவமும் உண்டு. மற்றதற்குப் பெயரும் உருவமும் கிடையா. ஆகாரம் என்ருல் உருவமுள்ளது. ஆகையால் சாகாரம், நிராகாரம் என்று சொல்வதும் உண்டு. சுயநிலை என்ற அத்வைத நிலையில் ஒரு ஆகாரமும் கிடையாது. ஆனுல் எல்லா ஆகாரங்களும் உண்டு. தத்துவங்கள் ஒன்றும் கிடையாது. ஆனுல் எல்லாத் தத்துவங்களும் உண்டு. முரண்பாடான தர்மங்களெல்லாம் சூக்குமமாக இருந்தும் இல்லாதது போல் காணப்படும் நிலை அத்வைத நிலை.

நீரில் இரண்டு வாயு தத்துவங்களே உள. நீர் ஒன்று. அது பார்க்கத்தக்கது. தீயின் வெப்பத்தைப் போக்கத் தக்கது. ஆனுல் வாயுக்கள் இரண்டும் பார்க்கத் தக்கனவல்ல. அவை இரண்டும் தீயுடன் உறவாடி அவைகளும் கொளுந்துவிட்டு எரியும். ஆனுல் இந்த இரண்டு வாயுக்களும் சேர்ந்துதான் நீர் என்ற தத்துவமே உண்டாகிறது. ஆனுல் நீரின் நிலை, தான் ஒன்ருக நின்று இரண்டு வாயுத் தத்துவங்கள் தன்னிடம் இருந்தும் இல்லாதது போலவே சூக்கும சக்தியால் வகிக்கிறது. உறக்க நிலையில், நனவு நிலையும், கனவு நிலையும் சூக்குமமாக இருந்தும் இல்லாமலும் இருக்கின்றன. ஓங்காரம் எல்லா சத்த தத்துவங்களையும் வைத்துக்கொண்டிருக்கிறது. இந்த ஓங்காரமும், மௌனத்தில் சூக்குமமாக இருக்கிறது. மௌனத்தில் நிலைத்து நின்றுவிட்டால், சத்த ஜாலங்களெல்லாம், அந்த நிலையில் சூக்குமமாக இருந்தாலும், செயல் இழந்து சவத்திற்கு சமமாக மறைந்தே நிற்கும். இது போலவே மாறிமாறி வரும் பிறப்பும் இறப்பும் அத்வைத நிலையில் செயல் இழந்து கிடக்கும்.

அத்வைத மதப்படி சூரியனுக்கு நிராகார சாகார ரூபங்கள் என்று இரண்டு ரூபங்கள் உள. வேதாந்தத்தில் நிர்க்குண சகுண பிரம்மங்கள் என்று சொல்லப்படும் தத்துவங்களுடன் உவமை கூறலாம். சப்த ஓங்காரத்தின் அடைவு மூலம் மௌன ஓங்கார அடைவு கூடும். சாகார ரூப அடைவால் நிராகார ரூப அடைவு கூடும் என்பன உபநிடத நிச்சயம். இந்த வழியில் சாகார சூரியனின் நித்திய பிரகாசத்தின் தன்மையை உபாஸித்து நிராகார சூரிய அடைவு பெறலாம்.

அதிட்டானமில்லாத வஸ்து கிடையாது என்பது வேதாந்த நிச்சயம். வியவகார வஸ்துக்களுக்கும், விபரீத தோற்ற வஸ்துக்களுக்கும் அதிட்டானம் அதாவது மூலாதாரம் இருந்தே தீரவேண்டும் என்பது அத்வைத சம்மதம். வியவகார நிலையில் வெள்ளிக்கு அதிட்டானம் இப்பி. ஆனுல் இப்பியில் வெள்ளி காண்பது சொப்பன உலகில் காணும் மித்தையான வஸ்துக்களைக் காண்பதுபோலும். உறக்கத்தில் சொப்பனம் மித்தை. விழிப்பில் சொப்பனம் இப்பியில் வெள்ளியைக் காண்பது. எந்த வகையில் விசாரித்துப் பார்த்தாலும் தத்துவ ஆராய்ச்சி சிறு நுணுக்கங்களையெல்லாம் அலசிப்பார்த்தாலும் நம்முடைய அனுபவம் விபரீதமானதும் முழுமையில்லாததும் என்பது விளங்கும். ஒரு வழி உண்டு. நம்முடைய துண்டுபட்ட நிலைகளையெல்லாம் ஒரே நிலையில் சேர்த்து விட வேண்டும்.

முதலில் சூரியன் பிரகாசமாயிருக்கிருன் என்ற அறிவில், (ஸ்)தூலமான ஒளியையே கொள்ளுகிருேம். சூரியனுடைய ஒளியும் மற்ற எந்தவிதமான ஒளியும் இல்லாத சமயத்திலும் புத்தியில்

கருத்துக்கள் விளங்குகின்றன. புத்தியில் விளங்குவது ஒளியின் தன்மையல்லவா. ஆகையால் தூலமான ஒளியைப் பிரகாசப் படுத்தி விளங்க வைப்பது எது, அதுதான் சூரியனில் தோன்றும் ஒளிக்கும் புத்தியில் தோன்றும் ஒளிக்கும் அதிட்டானம். இந்த அதிட்டானம் தன்னைத் தானே பிரகாசிப்பித்துக் கொண்டு பிரபஞ்சத்தையும் பிரகாசிக்கிறது. இந்த வல்லமை இந்த அதிட்டானத்திற்கு இல்லையேல் அதற்கு ஒரு அதிட்டானம், பிறகு மூன்ருவது அதிட்டானம், பிறகு, நாலு, ஐந்து என்று முடிவில்லாத அதிட்டானங்களைக் கொள்ள நேரிடும். இதனுல் நியாய சம்மதமில்லாத ஆத்மாச்ரயாதி குற்றங்கள் நேரிடும். ஆகையால் தூல, சூக்கும, காரண ஒளிகளையெல்லாம் விளங்கவைக்கும் அதிட்டான சூரியன் நிராகார சூரியன் என்று அறியவேண்டும். இந்த நிராகார சூரியனின் இருப்பிடம் வீடு. ஆனுல் வீட்டிற்கும் இந்த நிராகார சூரியனுக்கும் பேதமில்லை. ஆகையால் நிராகார சூரியனின் அடைவே வீடு பெறுதல் என்பது.

இந்த கிருட்ணனே அந்த கிருட்ணன் என்ற அறிவில் 'இந்த' 'அந்த' என்ற நிகழ்கால, சென்றகால கருத்துக்கள் நீக்கப்பெற்று கிருட்ணனுடைய சுயருபத்தை மாத்திரம் அறிகிருேம். இது கிருட்ணனின் பால் உள்ள அபேத உணர்வு. இதைத்தான் 'அதுவே நீ' என்று உபதேச வாக்கியமாகக் கூறப்படுகிறது. இந்த உபதேச வாக்கியத்தின் கருத்தை உணர்ந்து 'யான் பிரம்மம்' என்ற உபநிடத மஹா வாக்கியத்தின் பொருளில் விளங்கும் அபேத அத்வைத உணர்வு பெறவேண்டும்.

நிராகார சூரியனே சாகார சூரியனுக்கு அதிட்டானம்; நிராகார சூரியனின் சாகார சூரியன் அதிட்டான தோற்றம் என்று உணரவேண்டும். அதிட்டான சூரியன் மெய்ப் பொருள். சாகாரத் தோற்றம் மெய்ப்பொருளில் அவிச்சையால் கற்பனை செய்யப்படுகிறது அதிட்டானமும் அதன் தோற்றமும் ஒன்றுதான். ஆனுல் தோற்றமான சாகார சூரியனை அதிட்டான நிராகார சூரியனின் உணர்வால் அதிலேயே சூக்குமமாகக் கரைத்துவிடலாம். சாகார சூரியனையும் அதன் வல்லமைகளையும் எப்படி நிராகார சூரியனின் உணர்வால் விலக்கிவிடலாமோ அதேபோல் புத்தியையும் புத்தி பிரகாசத்தையும் நிராகார பிரகாச சூரியனிடத்தில் கரைத்துவிட்டால் அபேத உணர்வு ஏற்படும். ''யான்சூரியன்'' என்ற உணர்வு ஏற்படும். இதுவே அத்வைத நிலை. சாகார சூரியனே நிராகார சூரியன் என்ற ஞானம் சாகார சூரியனின் தோற்றத்தை விலக்கி விடுவதால் ஏற்படுகிறது. இது உபதேச வழி. இது சாகார நிராகார சூரியர்களின் தத்துவ ஞானத்தால் ஏற்படுகிறது. உபதேச வழியைப் பின்பற்றி 'யான் சூரியன்' என்ற உணர்வால் அத்வைத நிலை ஏற்படுகிறது. சூரியனே வழிகாட்டியாய் இருக்கிருன். ஆகையால் அத்வைதநிலை எய்துவதற்கும் சூரிய பகவானின் வழிபாடு சிறந்ததாகவே இருக்கிறது. நிராகார சூரியனே அக்னி தத்துவத்திற்கு ஆதாரம். அக்னி இல்லாமல் கிரியைகள் கிடையா. அக்னி உபாஸனையே வேதங்களில் முதன்மையாகக் காணப்படுகிறது. அக்னி, ஒளியில்லாமல் வேதங்கள் இல்லை. அக்கினி தத்துவமும் ஒளியின் தத்துவமுமே மெய்ப்பொருளின் முக்கியமான சக்திகள். இந்த சக்திகள் வாயிலாகவே அட்ட சித்திகளும் பெறப்படுகின்றன. யோகாப்பியாசங்களில் மூலாதாரத்தில் இருக்கும் குண்டலி

னியை எழுப்புவதற்கு உட்ணமே பிரதானம். பிராணுயாமத்தால் உட்ணம் உண்டாக்கப் படுகிறது. பிறகு பிரம்ம ரந்த்ரம் சேரும் வரையிலுள்ள சக்கரங்களின் அதிட்டான தேவதைகளைப் பிரகாசப்படுத்துவது ஒளி. ஸகஸ்ரார கமலத்தில் சோதி மயமாய் விளங்குவது நிராகார சூரியனே.

பாகவத புராணத்தில் எல்லாவற்றிற்கும் உன்னதமான அறிவுபடைத்தவன் மெய்யுணர்வுபெற்று, பாரபட்ச மற்ற சூரியபகவானைப் போல் தானும் பாரபக்ஷமற்று சுய நிலையில் இருக்கிறுன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் நாமும் சூரியபகவானை வழிபடுவோம். அத்வைத நிலை எய்துவோம்.

சூரிய பகவானே போற்றி.

---

## யாத்திரை போகலாமே

நல்ல அமைப்பாய் ஒரு கவி (பாடல்) கிடைத்துவிட்டால் அந்த ஒரு கவிக்காகவே ஒரு நிலையம் கட்டலாம். அந்த நிலையத்துக்கு யாத்திரை போய்க் கொண்டிருக்கலாம். இது ஏதோ பொருளற்ற படாடோபம் என்று தற்காலத்துப் படாடோபிகள் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆனுல் ஒரு கவி-உண்மையான கவி-நம்முடைய வாழ்க்கையை எப்படி ஒளிபெறச் செய்யும் என்பதை நம்முடைய Bachelor of Arts கள், உணர்வார்களானுல் நான் சொல்லுகிற சொல் பயனில் சொல் cant அல்ல என்று சொல்லுவார்கள்.

நாடுதும்வா நெஞ்சே !
நாராயணன் பதிகள்—
கூடுதும்வா மெய்யடியார்
கூட்டங்கள்—சூடுதும்வா
வீதிஎங்கும் கார் அகிலின்
வீசுபுகை வாசம் எழும்
ஆதிஇந்த ளூரான் அடி.

இந்த ஒரு பாடலுக்காக இந்தளூருக்கு—மாயவரத்துக்கு வடக்கே மூன்று மைல் யாத்திரை போகலாம் அல்லவா.

—டி. கே. சிதம்பரநாத முதலியார்

# ஜைனம் வாழ்க்கைக்கு உகந்த சமயம்

S. A. ஜெயின், M. A., L. T.

ஜைன தரிசனத்தில் தத்துவம், சமயம், ஒழுக்கம், புராணம் ஆகியவை ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருக்கின்றன. அதனால் அவை ஆன்மாவின் நலனுக்காக மனித சக்தியை இறுதியான பூரண நிலையை அடையத் தக்க வழியில் புகுத்துவதில் இன்றியமையாதனவாய் இருக்கின்றன. தனிப்பட்ட ஒவ்வொரு ஆன்மாவின் இலட்சியமும் தன்னையறிவது அதாவது தன் உண்மைத் தன்மையைப் பெறுவதேயாகும். அதுதான் நித்தியானந்தம் என்றும், அதை அடைந்தபின் அதிலிருந்து எவரும் மீள்வதில்லை என்றும் கூறப்படுகின்றன.

பூரணத்தை எய்த விரும்பும் ஆன்மா நிர்மலமான நிலையை அடைய இடையருது உழைக்கவேண்டும், உறுதியான நம்பிக்கையும் உண்மையான ஞானமும் கொள்ளவேண்டும். முயற்சி மட்டும் வெற்றிதராது; ஆனல் யுக்திபூர்ணமான முயற்சியே வெற்றியைச் சாதிக்கவல்லது. எனவே நன்னடத்தையாகிய ஒழுக்கம் வெற்றிபெறுவதற்கு மிகமிக முக்கியமானது. "மகோன்னதமானதும் உலகம் ஒப்பத் தக்கதுமான இலட்சியத்தைத் தரத் தக்கது சமயம். அதுவன்றி இலட்சியத்தைத் தேர்ந்து கொள்வதற்காக, வாழ்க்கையின் வேறுபட்ட எல்லா நிலைகளிலும் உள்ள பல வாய்ப்புகளிலே, எது தலை சிறந்தது என்று போதிக்க வல்ல ஞானமும் வேண்டும்." உண்மை ஆன்ம தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டல்லது உயரிய ஒழுக்க விதிகளை அமைத்தல் முடியாது.. உண்மையான ஞானம் இல்லாத போது உறுதியான பற்றுக்கே இடமில்லை.

நம் நுண்ணறிவிற்கு எட்டாத சில உண்மைகளும் ஜைன சமய நூல்களில் காணப்படுகின்றன. அவை மகா வீரத்துடனும் மகாஉண்மையாகவும் மக்களுக்கு உதவப்பட்டிருக்கின்றன. "எல்லாவற்றிற்கும் முதன்மையான ஒரே கடவுளால் இவ்வுலகம் படைக்கப்பட்டது; அவராலேயே இவ்வுலகம் ஆளப்படுகிறது" என்னும் கொள்கைகளை ஜைனமதம் ஒப்புக் கொள்வதில்லை. உலகம் ஆதியும் அந்தமும் இல்லாதது. எனினும் சிறந்த விஞ்ஞானிகளுங் கூட வெகு காலத்திற்குப் பிறகு உலகம் அழிந்துவிடும் என்று கருதுகிறார்கள். நினைவுக்கு எட்டாத காலம் முதல் உலகம் இருந்து வந்திருக்கிறது என்பது ஒப்புக் கொள்ளப்பட்டபோதிலும், அது மாறத்தக்கது என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

உலகம் பொருளையும் ஆவியையும் கொண்டது. அவை பெரும்பாலும் இணைந்தே காணப்படுகின்றன. என்றாலும் அவை ஒன்றற்கொன்று மாறுபட்டன. அவற்றின் தனித் தன்மையைக்கொண்டு அவற்றைப் பாகுபடுத்திக்கொள்ளலாம். ஆன்மாவின் தன்மையான உணர்வு (சைதன்ய குணம்) பொருள்களில் முற்றிலும் கிடையாது.

சித்தும் அசித்தும் ஒன்றுக்கொன்று அடியோடு மாறுபட்டவை, அவற்றின் தன்மைகளும் அதுபோலவே மாறுபட்டவை. ஒன்றை மற்றொன்றாக மாற்ற இயலாது. சித்துக்கும் அசித்துக்கும் உள்ள வேற்றுமை அடிப்படையானது. அதை அலட்சியப் படுத்துவதினால் பயனில்லை. பொருள்கள் போலியானவை; அவை உண்மையல்ல என்று மறுப்பது, விருப்பு வெறுப்பற்ற ஆராய்ச்சியாளர்களை திருப்தி படுத்துவதாகாது. சித்தோடு கலவாத சுத்தமான நிலையில் அசித்து அவ்வப்போது காணப்பட்டாலும், உடலோடு இணையாத நிலையில் நாம் ஆன்மாக்களைக் காணமுடியாது என்பது உண்மைதான். அசித்தினின்று ஆன்மாக்கள் அடியோடு விடுதலைபெறுங் காலத்தில் அவை மீட்சி பெறுகின்றன. பிறகு, உலகத்தின் உயர் நிலையை அவை உடனே அடைகின்றன. ஆகவே, சித்தைப் பற்றி நாம் பெற்றுள்ள அனுபவங்களெல்லாம் அது அசித்தோடே கலந்துள்ள நிலைமையில் மட்டுமேதான். சித்தான ஆன்மாவுக்கும் அசித்தான உடலுக்குமுள்ள வேற்றுமை இதன்மூலம் தெளிவுபடுகிறது. சித்தை அசித்தாக மாற்றமுடியாதென்பதை நாம் உணருகிறோம். அப்படிப்பட்ட மாற்றம் நிகழக் கூடும் என்பதற்கான சான்று எதுவும் இதுவரையில் நமக்குக் கிடைக்கவில்லை.

உலகத்திலுள்ள ஆன்மாக்களோ எண்ணிறந்தன. அவை ஒன்றிற்கொன்று மாறுபட்டிருக்கின்றன. அவை கடைசியில் பூரணமான நிலையை அடையும் வரையில் உடலோடு இணைந்துதான் காணப்படுகின்றன. பரிசுத்த நிலை அடைந்த பிறகு ஆன்மாக்கள் உலகின் உச்ச நிலையிலேயே இருந்து வருகின்றன. அவைகளே கடவுள்கள்; வணக்கத்திற்கும் மதிப்பிற்கும் உரியன அவையே. தூய ஆன்மாக்களெல்லாம் எல்லாத்துறைகளிலும் ஒரே வகையாய் இருக்கின்றன; அவை எல்லாவற்றையும் அறியவல்லன; பூரண இன்பத்தில் திளைத்திருப்பன; பற்பல காலங்களில் அந்த பூரண நிலையை அடைந்தபோதிலும் அவற்றின் நிஜ குணங்களைப் பற்றினமட்டில் அவற்றில் வேற்றுமையில்லை.

மனிதன் சமீப காலத்தில் தோன்றியவன்தான் என்று உலகத்தோற்ற ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். அப்படியன்று, மகா முன்னேற்றமுள்ள உயரினங்களில் மனிதன் அநாதிகாலத்திலேயே தொடங்கி உயிர் வாழ்வதாக ஜைனமதம் தெளிவுபடக் கூறுகின்றது. ஜைன நூல்களில் பாகுபாடுகள் குறிப்பிடப்படுகின்றன என்பது உண்மைதான். உயிர்கள் படிப்படியாக பிரித்துக் கூறப்பட்டிருக்கின்றன. மாறுதல்களை நாம் நிராகரிக்க வேண்டுவதில்லை. அடுத்தடுத்துள்ள இரண்டு இனங்கள் மிகவும் நெருங்கிய சாயலுடையன என்னும் காரணத்தைக் கொண்டு அவற்றிற்கிடையேயுள்ள வேற்றுமையை நாம் அலட்சியப்படுத்துவதற்கில்லை. உயிர் ஒரு கீழ்நிலையிலிருந்து ஒரு மேல் நிலையை அடைந்தது என்றும் கொள்வதற்கில்லை. ஜைனசமயப்படி எண்ணிறந்தஜீவராசிகள் எப்போதும் இருந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று அதை அடுத்துள்ள மற்றொன்றோடு கொண்டுள்ள வேற்றுமை மிகமிகச் சிறியதாக இருக்கலாம். ஆகவே, அதைக் கொண்டு ஒவ்வோரினமும் விருத்தியில்லாததிலிருந்து விருத்தியுற்றதாகக் கொள்வதற்கில்லை. உலகம் முழுவதும் அப்படிப்பட்ட மாறுதல் நிகழ்ந்திருக்குமானால் அந்த முடிவை ஒப்புக்கொள்ளலாம். அதாவது, கீழ்நிலையிலிருந்த உயிர்கள்

எல்லாம் மேல் நிலை அடைந்தன என்பது உண்மையானுல் முன் கூறிய முடிவும் உண்மையாகும். ஆனுல் நடைமுறையில் உயர் நிலையிலுள்ளவற்றைவிட இழி நிலையிலுள்ளவையே எண்ணிக்கையில் அதிகம். உயிர்கள் படிப்படியாக உயர்ந்தன என்னும் கொள்கையை நாம் ஒப்புக்கொள்ள ஒட்டாதபடியுள்ள பெருந்தடை இதுவே. அந்தக் கொள்கையினுல் முக்கியமாக நாம் தெரிந்துகொள்வதெல்லாம், உயிர்கள் சிறு சிறு பாகுபாடுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன என்பது மட்டுந்தான்!

மற்றச் சமயங்களிலே சிலகுறைபாடுகள் கூறப்படுகின்றன. "உயிர்களைத் தோற்றுவித்த கடவுள் துன்பங்களையும் தொல்லைகளையும் ஏன் தோற்றுவிக்கவேண்டும்? அன்புமயமான கடவுள் இறப்பையும், தீமையையும், பாவத்தையும் ஏன் உண்டாக்கவேண்டும்?" என்னும் கேள்விகள் எழுகின்றன. ஆனுல் அந்தக் கேள்விகள் ஜைன சமயம் சம்பந்தப்பட்டவரையில் கேட்கப்படமாட்டா. உலகமும் ஆன்மாக்களும் ஆதி காலந்தொட்டே இருந்துவந்துள்ளன. அவை தாமாகவே தோன்றியவை. ஆன்மாக்கள் களங்கங்களோடு இணைந்திருக்கின்றன; அஃதாவது அவரவருடைய இயற்கைக்கும் கடமைக்கும் ஏற்றவாறு இன்ப துன்பங்களை உண்டாக்கும் கர்மத்தோடு இணைந்திருக்கின்றன. இந்த நிலையில் ஆன்மாக்கள் ஒருவிதக்கட்டுப்பாட்டுக் குள்ளாகி இருக்கின்றன. ஆன்மாவோடு எந்த அளவிற்குக்கருமம் இணைந்திருக்கின்றதோ அந்த அளவிற்கு ஆன்மாவிற்கு விளங்கக் கூடிய இயற்கையறிவும் இன்பமும் மயங்கிக் கிடக்கின்றன. எனினும் ஆன்மாவின் நிஜத்தன்மைகளை எதனுலும் அடியோடு அழித்துவிட முடியாது. சமணசமயக் கொள்கைப்படி முடிவில்லாத கொடுந்தண்டம் எந்த ஆன்மாவுக்கும் நேர்வதற்கில்லை.

கட்டுப்பாட்டிலிருந்து தாமே தம்மை விடுவித்துக்கொண்டு பூரணத்துவம் அடைய ஆன்மாக்களால் முடியும். இதற்கு அவை பழைய காரணங்களை ஒழிக்கவேண்டும். அந்தக் காரணங்களின் பலாபலன்களை அமைதியோடும் பொறுமையோடும் சகிக்கவேண்டும். அதே சமயத்தில் புதிய காரணங்கள் உண்டாகாதபடி விருப்புவெறுப்புற்றுத்தம் உண்மை நிலையில் சிந்தையைச் செலுத்தியிருக்க வேண்டும்.

செயல்களே ஆன்மாவிடம் கருமங்கள் நிகழ்வதற்குக் காரணம். ஆன்மாவின் கட்டுப்பாடு அதனுலேயே உண்டாகிறது. செயலற்ற நிலையில் இருந்தால் மேலும் கருமங்கள் தொடர இடமில்லை. குவிந்து கிடக்கும் கருமங்களை ஒழித்துப் பூரண விடுதலையைப் பெறுவதற்குச் சிறந்த வழி தன்னில் தானே பதிந்து கிடப்பதுதான்.

உண்மை மயமே ஜைன சமயம். பரிசுத்தமான - கலப்பற்ற - உண்மையைத் தான் ஜைன சமயம் தன்னுள் கொண்டிருக்கிறது. உலகிலுள்ள மற்றச் சமயங்களினின்று ஜைன மதத்தைப் பாகுபடுத்திக் காட்ட வல்ல தனிப்பெருமை இதுதான். அரைகுறை உண்மைகள், வாய்மையற்றவை, அறிவிற்குப் பொருத்தமற்ற குயுக்திகள் ஆகியவை இதில் அடியோடு இல்லாதிருப்பது இதற்குத் தனிச் சிறப்பைத் தருகின்றது.

அறிவியக்கம் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு இருக்கின்றது. அனுபவத்திற்கு முரண்பாடான விஷயங்களுக்கும்,

சிற்றறிவுக்கு எட்டாத விஷயங்களுக்கும், உள்ள வேறுபாட்டை அஃது அங்கீகரிக்கவில்லை. இவ்விரண்டு தவறுகளினின்றும் தவிர்த்து இயற்கையின்படி உண்மையைப் புகட்டுவதே ஜைன சமயத்தின் சிறந்த நோக்கம். ஜைன சமயம் அறிவியக்கத்தவர்களுக்கு ஏற்றதாக இருக்கிறது. என்ருலும் அறிவியக்கத்தவர்களுடைய அகக் கண்களுக்கு அப்பாற்பட்டவைகளை ஜைன சமயம் அலட்சியப்படுத்துவதில்லை; மனித அனுபவ எல்லைகளுக்கப்பால் செல்லுகிறது. உண்மைகள் கடவுளால் உபதேசிக்கப்பட்டன என்று ஜைன சமயம் ஒப்புக்கொள்வதற்கு அத்தாட்சி உண்டு. புலன்களுடைய சிற்றறிவிற்கு எட்டாத அநேக நுட்பமான உண்மைகள் முழுதும் உணர்ந்த கடவுளாலன்றி மற்றவர்களால் கண்டறிய இயலாதன. ஆனல் கடவுளின் வாக்கியம் என்னும் மூட நம்பிக்கைக்கு இச்சமயம் இடம் கொடுப்பதில்லை. எதையும் பரீட்சித்தே நாம் விஷயங்களை யூகித்தறியவேண்டும். கடவுளால் சொல்லப்பட்ட உண்மைகள் இயற்கைக்கு விரோதமாகவும் அனுபவத்திற்கு மாருகவும் ஒருக்காலும் இருக்கமுடியாது என்பது இவர்களது துணிபு. ஆகையால் நம் அனுபவத்திற்கு வரம்பிலுள்ள விஷயங்களைப்பற்றின வரையில் உண்மைக்கு மாருக நூல்களில் காணப்படுமேயானுல் அவைகள் கடவுளால் உபதேசிக்கப்பட்டவை அல்ல என்பதே சிறந்த தீர்மானமாகும். தேவ வாக்கியங்கள் நம் பரீட்சைக்கு அப்பாற்பட்டவை. வேத வாக்கியங்கள் என்பதாலேயே நாம் அவைகளை உண்மையென்று ஒப்புக்கொள்ளவேண்டுமென்று ஒரு சாரார் கூறுகின்றனர். அது தவறு. எல்லாச்சமய நூல்களும் கடவுளால் உபதேசிக்கப்பட்டன என்று கூறப்படுகின்றன. ஆனல் ஒன்றிற்கொன்று முரண்பாடான விஷயங்களைக் கூறுகின்றன. எப்படி எல்லாம் உண்மையாக இருக்க முடியும்? எல்லாம் முழுவதும் உணர்ந்த கடவுளின் உபதேசங்களாக இருக்க முடியும்? ஆகவே எதையும் தீரப் பரீட்சித்தே தீர்மானம் செய்யவேண்டும் என்பது எல்லாச் சமயத்தாராலும் ஒப்புக் கொள்ளுவதற்குரிய கருத்து.

இச்சமயத்தின் அடிப்படையான தத்துவங்களில் முக்கியமானவை சில வருமாறு: துறவு, உள்ளத்தூய்மை, ஒழுக்கத்தூய்மை, தன்னலமின்மை, பிறர்நலம் கருதுதல், கடுங்கோபம் மூட்டப்பட்ட காலத்தும் மன்னித்தல், துன்பம் வந்திட்ட காலைப் பொறுமையோடும் களிப்போடும் சகித்தல், எல்லா உயிரினங்களிடத்தும் அன்பு பாராட்டுதல், பரிபூர்ண நேர்மையாகிய இவையே. ஆகவே இச்சமயம் மெய்ப்பொருள் நுட்பத்தை விளக்குகிறது. வீண் நம்பிக்கைகளையும் ஆடம்பர மொழிகளையும், கொண்டு அது நம்மை ஏமாற்றுவதில்லை. மத சம்பந்தமான விஷயத்தில் அனுபவத்தைக் கொண்டு மெய்ப்பிப்பது என்பது இயலாத காரியம். சில போதனைகள் நம் அறிவிற்கு அப்பாற்படடவைகளாக இருக்கலாம். அதில் கூறப்பட்டுள்ள சில முறைகள் நம்மால் கையாள முடியாதவைகளாகவும் இருக்கலாம். ஆகவே நாம் அதைக் குறையாக எண்ணுவது நியாயமன்று. நுண்பொருளுக்கு அதிசயத் தக்க ஆற்றலுண்டு. இந்தச்சமயத்தில் கூறப்பட்டுள்ள அளவு கடந்த ஆன்ம சக்தியை அது வலியுறுத்துகிறது. ஆன்மாவின் ஆற்றலை உணர்ந்துகொள்வதற்கு வேண்டும் கடுமையான தன்னெழுக்கம் சாதாரண மக்களில் ஆணிடத்திலோ பெண்ணிடத்திலோ காண்பது அரிதுதான். ஆனல்,

அது காரணமாக அந்த மதக் கொள்கைகள் நடை முறைக்கு ஒத்ததல்ல. இயலாதனவென்று நாம் ஒதுக்கிவிடலாகாது. பெரு முயற்சியின்றிப் பெரு நலன்களை அடைய முடியாது. தளர்ச்சியில்லாமலும் இடைவிடாமலும் உழைத்துவந்தால் மட்டும்தான் பெரிய இலட்சியங்களைப் பெறலாம். அதற்கு நெடுங்காலம் பிடிக்கலாம். இந்த இலட்சியத்தை அடைவதற்குப்பெரு முயற்சி அவசியம். ஆனால் நாம் கோரும் அரிய இலட்சியத்திற்கு இடைவிடாத பெருமுயற்சி வீணாகாது. என்றுமழியாத ஜைன நூல்களை ஆக்கிய பண்டைக்கால ஜைனப் பேராசிரியர்கள் அறவே தன்னலமற்றவர்களாயிருந்தனர். மக்களினம் உண்மையிலேயே இன்ப வாழ்வு அடையவேண்டும் என்பதன் பொருட்டு உழைப்பதைத் தம் கடமையாகக் கொண்டிருந்தனர். அவர்கள் மகா கல்வி-மான்கள்: நுண்பொருள் உணரத் தக்கவர்கள்; உலகத்தில் போதிக்கப்பட்டவைகள் அனைத்திலும் மிகச் சிறந்த உண்மைகளைப் போதிக்கத் தக்க பேராற்றல் பெரிதும் வாய்ந்தவர்கள். அவர்கள் சிறந்த ஆராய்ச்சியாளர்கள். அவர்களின் பேரறிவும் நுண்ணறிவும் புகழ்வாய்ந்தவை. தற்கால நூலாசிரியர்களுக்கும் அவர்களுக்கும் பல துறைகளில் பெரிதும் வேற்றுமையுண்டு. அவர்கள் தம் குறைபாடுகளைத் தாமே மிகவும் கடுமையாகத் தண்டித்துக்கொண்டார்கள். தம் நூல்களை ஆக்கும் காலத்தில் மிகவும் எச்சரிக்கையோடு அவர்கள் ஆக்கினார்கள். ஏனென்றால் உண்மையிலிருந்து ஒரு சிறிதளவும் தம்மையுமறியாது அவர்கள் பிறழ்ந்தபோதிலும் மக்களினத்தையே தவறான நெறியில் புகுத்திய குற்றம் அவர்களைச் சாரும். உண்மைகள்தான் அவர்களுடைய இலட்சியம். உண்மையைச் நாடுவது அவர்களுடைய வாழ்க்கைப்பணி; அவர்களால் உரைக்கப்பட்டகருத்துக்களை தீர ஆராயாமல் குறை கூறுவது தகுதியன்று. பக்தியோடும், கவனத்தோடும், புத்திசாலித்தனத்தோடும், நடு நிலையோடும் ஆராய்ச்சி செய்தால் மட்டுந்தான் அந்த உண்மைகளின் முழுச் சிறப்பையும் நன்கு உணர்ந்து கொள்ளக்கூடும்.

ஒரு காரியத்தைச் செய்துமுடிக்க எந்த முறையையும் பின்பற்றலாம் என்பது ஜைன சமயக் கொள்கையன்று. தீமையினின்றும் நன்மை பிறவாது, இன்பத்திற்கு கொடுமை அடிகோலாது, "நாம் விரும்புவனவும் அவைகளை அடையும் உபாயங்களும்" Ends and means என்னும் புத்தகத்தை எழுதிய திரு. ஆல்டஸ் ஹக்ஸ்லி Mr. Aldous Huxley இந்த நூலில் இந்தக் கொள்கைகளில் சிலவற்றை வலியுறுத்தியிருக்கிறார்.

"கொடுமையிலிருந்து உண்மை முன்னேற்றத்திற்கு வழி பிறவாது. நன்மை பிறக்குமானால் அதற்கு முன்தோன்றிய கொடுமை காரணமாகாது. ஆனால், தீங்கிற்குப்பின் உண்டான நடு நிலைமையும் கருணைச் செயல்களுமே நலனை நாட்டக் கூடியவை. அப்போது ஈடு செய்யும் நடத்தையின் காரணமாகத்தான் முன்னேற்றத்திற்கு வழியேற்படுகிறதே ஒழிய, அவர்கள் ஈடுசெய்வதற்கு மூலமாக இருந்த கொடுமைகள் நலனுக்கு ஒரு போதும் காரணமல்ல. தக்க முறைகளைக் கையாளுவதனால் மட்டுந்தான் நல்ல பலன்கள் விளையும். எந்த முறையைப் பின்பற்றியும் ஒரு காரியத்தைச் சாதித்துக் கொள்வது என்பது தவறான கொள்கை. ஏன் என்றால், இதற்குக் காரணம் வெளிப்படை. எந்த முறையை நாம் கையாளு

கிருமோ அந்த தன்மையைக் கொண்ட பலன்தான் கிடைக்கும்.''

இந்த உண்மைகளை நெடு நாட்களுக்கு முன்னமே ஜைனர்கள் உணர்ந்திருந்தார்கள். ஆகவே தான் அவர்கள் தங்கள் போதனைகளிலெல்லாம் அகிம்சைக் கொள்கையை மிகவும் முக்கியமானதாக வற்புறுத்தி இருக்கிருர்கள். அவர்கள் சகிப்புத் தன்மையையே பழகி வந்தார்கள். இந்த அளவிற்கு வேறெந்த மதத்தவர்களும் பழகியதில்லை. ஜைன சமயத் துறவுக்கொள்கையை ஹக்ஸ்லியும் கூட வலியுறுத்துகிருர்.

"எல்லாவற்றையும் துறந்தவன்தான் உத்தம மனிதன். மனித உணர்ச்சியையும், காமத்தையும் வென்றவனை ஆதிக்க ஆசையோ, மனப்பற்ருே அணுகா. பல வகையான ஆசைப் பொருள்களில் அவனது சிந்தை செல்லாது. கோபமும் வெறுப்பும் நீத்தவனிடம் தனிப்பட்ட ஆசை எதுவும் கிடையாது. சொத்து, புகழ், சமுதாய நிலை அவனுக்குப் பொருட்டல்ல. விஞ்ஞானம், கலை, விசாரணை, சமூகத் தொண்டு ஆகியவற்றிலும் அவன் அக்கரை கொள்வதில்லை. எப்படிப்பட்டவற்றிலும் பற்றில்லாதவன் தான் அதி உன்னத நிலையை அடைந்தவன்''. ஆனுல், இதற்கு மாறுபட்ட துறையிலே உலகம் சென்றுகொண்டிருக்கிறது என்பது மறுக்கமுடியாததோர் உண்மை. பலாத்காரம், கொடுமை, புரட்சிமுறைகள், கோப உணர்ச்சிகளைத் தூண்டிவிடுதல், பொருமை, கோபம், ஆகியவற்றைக் கொண்டு உலகத்தில் அமைதியையும் இன்பத்தையும் நிலைநாட்டி விடலாமென்று தவருகக் கருதுகிருர்கள். அவர்கள் நினைப்பதைப் போல் குறுக்கு வழியைக்கொண்டு எளிதாகவும் விரைவாகவும் உண்மையான இன்பத்தை அடைய முடியாது. நமது துன்பத்திற்குக் காரணங்களாக இருந்தார்கள் என்று பிறரை நாம் தவருகக் கருதி, அவர்களை நாம் கொடுமையாக நடத்துவதன் மூலம், நமக்கேற்பட்ட கஷ்டங்களையும் துன்பங்களையும் நீக்கிக் கொள்ளலாமென்று நினைப்பது, தற்கால மக்கள் செய்யும் அறிவிற்குப் பொருத்தமல்லாத குற்றங்களில் மிகவும் கடுமையானது. இந்த வேலை எவ்வளவு கஷ்டமானதென்பதை மக்கள் பொதுவாக உணர்வதில்லை. கீழ்க்கண்ட கேள்வியை மிஸ்டர் ஹக்ஸ்லி கேட்கின்ருர்; அது பொருத்தமானதே.

"அடிப்படையிலேயே நியாயமற்றதொரு முறையைக்கொண்டு நியாயத் துறையில் முன்னேற முடியுமா? நமது சொந்த அனுபவத்தைக் கொண்டு பட்சபாதமற்ற முறையில் நாம் ஆலோசித்தாலும், சரித்திரச் சான்றுகளைக்கொண்டு பார்த்தாலும் முடியாது என்னும் முடிவுக்குத்தான் வருவோம். குறுக்கு வழியைக் கொண்டு நாம் பேரின்ப வாழ்வை அடைந்து விடலாம் என்னும் கொள்கையில் நாம் பெரிதும் ஆசை கொள்கிரேும். நம்மைப் போலவே நினைக்கிறவர்களுடைய கருத்துப்படியே நம் நினைவும் செல்லுகிறதே யொழிய, பட்சபாத மற்ற முறையில் ஆராய்ச்சி செய்வதற்குரிய ஆற்றல் நமக்கு அதனுல் இருப்பதில்லை."

உலகப் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டே மக்கள் இனம் இன்பமடைய முடியும் என்னும் தவருன நெறியே உலகம் பின்பற்றிக்கொண்டு இருக்கிறது. உலக மாயுத்தத்தின் கொடுமைகள் நம் எண்ணங்கள் நம் கோரிக்கைகள் பயனற்றன என்பதை மெய்ப்பித்து

விட்டன. உண்மையான நித்தியானந்தம் ஏற்படவேண்டுமானால், மக்களின் தீய தன்மைகள் அடியோடு விடுபடவேண்டும். இவற்றிற்குப் பொறுமையோடும் இடைவிடாது உழைக்கவேண்டும் என்று உறுதியாகச் சொல்லுவேன். இஃது அவசியமான ஆரம்ப நிபந்தனை. இதுவன்றி உலக மக்கள் இன்பத்துடன் உயிர் வாழ முடியாது. ஆனால், துன்பமும் துயரமும் நாசமுமே அதனால் ஏற்படும்.

தொழில் நுட்பத்துறை விரைவில் முன்னேறிக்கொண்டு இருக்கிறது. ஆனால், நேர்மை முன்னேற்றம் இன்றி தொழில் நுட்பத் துறை முன்னேற்றம் பயன் அற்றது. அது பெருங் கேடு விளைவிக்க வல்லது. தொழில் நுட்பத்துறை முன்னேற்றம் நாம் பிற்போக்கான வழியில் போவதற்கு ஏற்றதொரு சாதனமாக விளங்குகிறது. இந்த உண்மையை நாம் உணர்ந்து கொள்ளவில்லை. பொருளாதாரத் திட்டங்களை வகுப்பதிலும், விஞ்ஞான முன்னேற்றத்திலுமே எல்லா நாடுகளும் தம் கவனத்தையும் முயற்சியையும் செலுத்திக்கொண்டு இருக்கின்றன. அதைவிட, முக்கியமானது மக்களின் தன்மையை முன்னேறச் செய்வதே. அஃது அலட்சியம் செய்யப்படுகிறது.

தற்காலத்திய பிரச்னைகள் எல்லாவற்றிலும் பெரியதும் திகைக்கச்செய்ய வல்லதும் ஆனது, மனித இயல்பை முன்னேறச்செய்யும் பிரச்னையே என ஜைன ஆசிரியர்கள் முன் உணர்ந்திருக்கிறார்கள். இது மிக நுட்பமான தொன்று. தனிப்பட்டவர்களின் உரிமை என்னும் முக்கியமான கொள்கைபற்றியது. இது மிகவும் சிக்கலான பிரச்னையுமாம். இது பற்றி அபிப்பிராய பேதம் இருந்தே தீரும். இது விஷயத்தில் முழு ஒற்றுமை ஒருக்காலும் எதிர்பார்க்கமுடியாது.

உங்களுக்குப் பிறர் நீங்கள் எதைச் செய்யவேண்டும் என்று விரும்புகிறீர்களோ அதையே நீங்களும் பிறருக்குச் செய்யுங்கள் என்னும் தலைசிறந்த விதியினைக் கடைப்பிடியுங்கள்; அப்போது சமூகம் இன்பம் பெறும். ஆனால் தற்காலத்தில் நாம் உண்மையிலேயே அந்தக் கொள்கையில் நம்பிக்கை கொண்டிருக்கிறோமா என்பது சந்தேகமாயிருக்கிறது. நாடுகளும், தனிப்பட்டவர்களும், உலகத்தில் பிறரோடு பழகும்போது சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு நடந்துகொள்கிறார்களேயொழிய நீதி, தயை, அன்பு எனும் கொள்கையை அடிப்படையாகக் கொள்ளுவதில்லை. நமது உள்ளமும் செயலும் ஒன்றற்கொன்று அடியோடு மாறுபட்டு இருக்கின்றன என்பது மறக்கமுடியாததோர் உண்மை. நம் குறைபாடுகளை நாம் அடியோடு அலட்சியப்படுத்துகிறோம். இந்த உலகத்தை ஓர் இன்ப நிலையமாக ஆக்கிவிடக்கூடும் என்று பகற்கனவு காண்கின்றோம்.

"உன்னையே வெல்" என்னும் இலட்சியம் இதுவரையில் இருந்து வந்தது போலவே அடையவொண்ணாததாக இருக்கிறது. ஆராய்ச்சியாளர்கள் நம்நிலைமையைப் பற்றி அதிருப்தி கொள்ளுகிறார்கள். அன்றியும் நம் கொள்கைகள் நம் முடிவுகள் தற்காலப் போக்குகள் ஆகியவை பற்றியும் அதிருப்தி கொள்ளுகிறார்கள். நாம் இலௌகீகத்திலேயே மூழ்கிக் கிடக்கின்றோம்.

ஒன்றற்கும் உதவாதவற்றிற்சாக நாம் அரும்பாடுபட்டு, நாம் அடைதற்குரிய ஆன்மாவின் முன்னேற்றத்தை

அடியோடு மறந்துவிடுகிறோம். எனவே நம்மை நாமே இழந்தவர்களாகின்றோம்.

உள்ளுணர்வு பெருகினுலொழிய நாம் இன்பம் அடைய முடியாது. வீண் நம்பிக்கைகளைக் கொண்டு நாம் நம்மையே ஏமாற்றிக் கொள்வதில் பயனில்லை. உண்மைகளைத் தைரியத்தோடு கடைப்பிடிக்கவேண்டும். அறிவீனத்தை நாம் உண்மையிலேயே அகற்றவில்லை. நேர்மையான சிந்தனை என்பது இன்னும் கொள்கைகள் அளவிலேதான் இருக்கிறது. குற்றங்கள், பொய்மை, தவருன எண்ணங்கள், விருப்பு வெறுப்புகள் ஆகியவற்றிற்கும் நாம் இன்னும் ஆளாகிக் கொண்டுதான் இருக்கின்றோம். ஞானமும் விமோசனமும் பெறுவது பகற்கனவாகத் தான் இருக்கிறது. உடல் நசித்தபோதும் ஆன்மா நசிப்பதில்லை. உயிர் நீத்தபிறகு மறுபிறவி உண்டு என்னும் நம்பிக்கையில்லாவிடில், தீமையை விலக்கி நன்மையே செய்ய வேண்டும் என்பதற்குப் போதிய ஆதாரமில்லை. இந்தக் கஷ்டங்களை, அஃதாவது சராசரி மனிதன் அல்லது பெண்ணின் பலவீனம்- மனித இயற்கையும் திறமையும் பெரிதும் மாறுபட்டவை என்னும் உண்மைகளை ஜைன சமயம் ஒப்புக்கொள்ளுகிறது. ஆகவே, இயலாததொன்றைச் செய்து முடிக்கும்படி அது கோருவதில்லை. அவரவர் ஆற்றலுக்கேற்றவாறு மிகச் சிறந்த முறையில் அவர்கள் ஒழுக வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறது. அநேக விதத் தடைகளும் கஷ்டங்களும் உண்டு என்பதை ஜைனமதம் நிராகரிக்கவில்லை. பலவீனமோ அறியாமையோ ஒரு சமாதானமாகாது.

மகா கொடியவர்கள் தத்தம் செயல்களுக்கு ஏற்ற பலன்களிலிருந்து தப்பமுடியாது என்ருலும், அவர்களும் தக்கமுயற்சி செய்தால் சித்தி எய்தலாம் என்பதில் சந்தேகமில்லை. என்றென்றும் ஒருவன் கடைசிப்படி (கீழ்த்தரத்தில்) யிலேயே இருக்கவேண்டும் என்பதை ஜைனமதம் ஒப்புக்கொள்வதில்லை.

ஒரு ஜன்மத்திலேயே உயிர் முடிவடைவதில்லை. எதிர்காலம் முழுதும், அந்த உயிர்க்கு உரித்தானதே. முன்பு செய்த நல்வினை தீவினைகளைக் கொண்டு எதிர்காலத்திற்கு இடமே அடியோடுகிடையாது என்றும் சொல்லிவிடுவதற்கு இல்லை. உண்மையிலேயே அது முன்னேற்றத்திற்கு ஒரு தடையாகத்தானிருக்கிறது. ஆனுல், மனிதன் தன் முயற்சியினுல் வினைப்பயனை-விதியை-வெல்லலாம். மனித முயற்சிக்கும் தலைவிதிக்கும் உள்ள மாறுபாட்டிற்கும், சுயேச்சையுணர்ச்சிக்கும், தலையெழுத்துக்குமுள்ள வேறுபாட்டிற்குமுள்ள பரஸ்பர விரோதம் சரியான முறையில் இச்சமயத்தில் பொருத்துவிக்கப்படுகிறது.

மிகவுக்கிரமான ஒருதலைக் கொள்கைகள் நிராகரிக்கப்படுகின்றன. நேர்மையான முறைகளைக் கொண்டோ, இடையருத முயற்சியாலோ அவற்றிலிருந்து தன்னை மீட்டுக்கொள்ள எவ்வகை வாய்ப்பும் இல்லாதபோது. துன்பத்துக்குள்ளானவன் பொறுமையோடு எல்லாக் கஷ்டங்களையும் சகிக்கவேண்டும் என்று கூறப்படுகிறது. இதுதான் காந்தியடிகள் வகுத்த 'சத்தியாக்கிரகம்'. ஆனுல் தற்காலத்தில் சாத்வீக எதிர்ப்பு பயனற்றதென்றும், தீமையோடு போராடவேண்டுமென்றும் சொல்லப்படுகின்றன. பொறுமையோடு கஷ்டத்தைச் சகிக்கக்கூடிய உயரிய பண்பு தற்காலத்தவருடைய மனத்திற்குப் பிடிப்பதில்லை. இப்போதனையைப் பெரும்பாலும் தவறுதலாக அர்த்தம் செய்கின்ருர்களே ஒழிய இதன் உண்மையை உணர்ந்தார்களில்லை.

# பௌத்தமும் தம்மபதமும்

நா. கனகராஜையர், M. A., M. E. S. Retd.

பாரத பூமியிலே புத்தர் பெருமான் திரு அவதாரம் நிகழ்ந்த காலம் கி. மு. 563 ஆம் ஆண்டு என்று அறிஞர் கூறுகின்றனர். சாக்கிய கவுதம மரபிலே இவர் பிறப்புற்றது. இக்காலக் கணக்கால் உணரப்படுவதே ஆயினும் இப்பிறப்புக்கு முன்னும் இப்புவியிலே பலமுறை பல பிறவிகளில் வந்தார் என்பது பௌத்தர் நம்பும் உண்மையாம். இந்து மதம் என்ற பெயரால் வழங்கும் கொள்கையை நாம் சநாதந தருமம் என்று கூறத் துணிவது போலவே, பௌத்தரும் தம் கொள்கை என்றும் உள்ளது என்று நிறுவும் கருத்தால் புத்த ஜாதகக் கதைகளை நம் புராணங்களிலும் விரிவாக அமைத்திருக்கின்றனர்.

" ஈரெண்ணூற்றோடு ஈரெட்டாண்டில் பேரறிவாளன் தோன்றும் " என்று இனி வரப்போகும் புத்தாவதாரம் ஒன்றைப் பற்றிக் கூறுகிறார். இத்திருநாள் இன்னது என்பதை இன்றளவும் நாம் அறிந்தோம் இல்லை.

புத்த தேவர் உபதேசித்த மதத்தை உலகம் பௌத்தமதம் என்று கூறுகின்றது. இம்மதம் சங்கரர் சம்பந்தர் அப்பர் மணிவாசகர் என்ற ஞானச்செல்வர்களாற் கண்டிக்கப்பட்டிருப்பதை நாம் அவர்கள் வாக்குக்களால் அறிகிறோம். இன்று இம்மதம் நம் நாட்டில் தலையெடுக்க இயலாது ஒடுங்கியதே ஆயினும், சீனம், திபெத்து, நிப்பன், சிங்களம் என்ற நாடுகளில் ஆட்சி பெற்று நிலைபெற்றுள்ளது. திபெத்து நாட்டை அரசாளும் துறவரசர் மரபே புத்தர் அவதார பரம்பரை என்று பௌத்தர் நம்புகின்றனர். தலைலாமா என்ற பதவி பெறும் செல்வர், தவச் செல்வராம் பேற்றைக் கருவிலே பெற்ற திருவுடையர் என்று பௌத்தவுலகம் நம்புகிறது. பௌத்த வேதம் திரிபிடகம் என்ற பெயர் பெற்றுப் பாலி மொழியில் வழங்குகிறது. பௌத்தபிக்கு வருக்கத்தார் இத்திரிபிடகத்தை நன்கு ஓதுவதும் பொருள்தேற முயல்வதும் தொன்று தொட்ட வழக்கமாம். பௌத்தர் தம் நூல்களிலே புத்தருக்கும் பல பிறப்புக்கள் உரைப்பதுண்டாயினும் அவற்றுள் இருபத்துநான்கு அவதாரங்களைச் சிறந்தனவாக உரைக்கின்றனர். இருபத்துநான்காம் நிலைபெற்றவரே கௌதம புத்தராவர்.

" இறந்த காலத் தெண்ணில் புத்தர்களும்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்தது "

என்று சத்தனார் கூறுகிறார். புத்தர்பிரான் தம் சித்தாந்தத்திற் கூறும் சாதனம் நான்கும் மணிமேகலையிலே 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் பிறவார் உறுவது பெரும் பேரின்பம் பற்றின் வருவது முன்னது பின்னது அற்றோர் உறுவது' என்று கூறப்பட்டுள்ளன. இவற்றைப் பௌத்த சாத்திரங்கள், துக்கம் துக்கோற்பத்தி துக்க நிவாரணம் துக்க நிவாரண மார்க்கம் என்று கூறுகின்றன. நான்காவது தத்துவம் எட்டு அங்கங்களை உடையது. அவை நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி நற்கடைப்பிடி நல்லுளத்தாரைத் தலைப்படுதல் என்பனவாம். இவ்வழி

பற்றி வாழ்பவன் பெறும்பேறு நிருவாணம் என்பது புத்தர் திருவுள்ளக் கிடக்கையாம். இந்நெறியை மக்கள் அறியும் பொருட்டு அவர் தம் வாழ்நாள் எல்லாம் புத்த சங்கம் கூட்டி, அச்சங்கத்தார்க்குப் புத்த தருமத்தைத் தெளிவுற விளக்கி வந்தார். அவர் அருள் விளக்கமே திரி பிடக உருவம் பூண்டது. திரிபிடகத்துள் சூத்த பிடகம், விநய பிடகம் அபிதம்ம பிடகம் என்று மூன்று பகுதிகள் உண்டு. சூத்த பிடகம் புத்த வாக்குக்களைக் காத்து வைத்த பேழையாம். விநய பிடகம் ஒழுக்க நெறியை உரைக்கின்றது. அபி தம்ம பிடகம், தத்துவ போதத்தை விளக்கு கிறது.

இத்திரி பிடகத்திலே முதற் பகுதி யான சூத்த பிடகத்தில் தம்மபதம் இடம் பெறுகின்றது. திரிபிடகம் என்ற பௌத்த வேதம் பௌத்த சங்கத்தார் முதற் பெருங் குழுக் கூடிய பிறகே எழுத்துருவம் பெற்றது. அதற்கு முன்பு நம் சுருதி போலச் செவி வழியே வந்தது. கி. மு. (88-76) முதல் நூற்றுண்டிலே பௌத்த சங்கத்தார் வத்தகாமணி என்ற மன்னன் வேண்டுகோளால் திரி பிடகத்தையும் அதன் புத்த கதைகளையும் எழுத்துருவத் துக்கு இறக்கினர்.

புத்த சங்கத்தின் முதற் பெருங் குழு இராஜக்கிருக நகரத்தில் கி. மு. 477இல் கூடியது. இரண்டாம் குழு வைசாலி நகரில் கி. மு. 377இல் நிகழ்ந்தது. அசோக மன்னன் முயற்சியால் மூன்றும் குழு கி. மு. 247இல் நிகழ்ந்தது. முதல் இரண்டு குழுக்களைப் பற்றிய வரலாறு திரி பிடகத்தில் உரைக்கப்பட்டுள்ளது. மூன்றும் குழுவைப் பற்றி நூலுள்ளும் உரையுள்ளும் கதையுள்ளும் பேச்சே இல்லை. ஆகவே திரி பிடகம் எழுத்துருவம் ஆன பிறகே மூன்றும் குழுக் குழுமியிருக்கிறது என்று உணர்கின்றேம். இங்ஙனம் போற்றிய பெருநூலின் ஒரு பகுதியே தம்ம பதம். தம்ம பதம் இருபத்தாறு வருக்கங்களை உடையது. வருக்கம் அத்தியாயம் என்று கருதத் தக்கது. பாலி மொழியில் இயன்றது. நானூற்று இருபத்துமூன்று செய்யுட்களையுடையது. தம்மபதத்தின் வருக்கங்களைச் சிறிது துருவுவோமாயின் புத்த மதத்தின் சாரம் நமக்கு நன்கு விளங்கும். இத்தம்ம பதம் பல மொழி பெயர்ப்புக்களை உடையது.

தம்மபதம் கூறும் பொருள் பல திறப் பட்டது. அவற்றுள் ஒரு சில இங்கு எடுத்துக்காட்டப் படுகின்றன.

"வயிரம் வயிரத்தால் என்றும் அடங்காது, வயிரம் இன்மையால் அடங்கும். இதுவே பழமையான அறமாகும்." 1-5. (தம்மபதம்)

வயிரம் என்பது மனத்தில் நெடுங் காலமாக நிகழ்ந்துவரும் சினம். இதனைச் செற்றம் என்று தமிழர் கூறுகின்றனர், பகைமைக்கு வேர் செற்றமே.

"மனமாசு கழுவாமலும் உண்மை உரைக்காமலும் தன்னடக்கம் இல்லாமலும் வாழும் ஒருவன் துவராடை அணிவதற்குத் தகுதி அற்றவனும்". (தம்மபதம் 1-9.)

காஷாய தண்ட மாத் ரேனயதி: பூஜ்ய: என்ற வடமொழி வாக்கியத்தின் கருத்துக்கு இது எதிர் மொழியாகும். திரு வள்ளுவப் பெருந்தகையார் "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்து விடின்" என்று அருளிச்செய்ததும் "தவமறைந்தல்லவை செய்தல் புதல்

மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று'' என்று அருளியதும் இங்கு நன்கு சிந்திக் கத்தக்கன.

''நல்வினை செய்தவன் இங்கும் இன் பம் அடைகிறான். இறப்பின் பின்பு மறு பிறப்பிலும் இன்பமே பெறுகிறான். இரு மையிலும் அவன் இன்பத்துக்கு உரிமை பூண்கிறான். 'நான் புண்ணியம் செய் தேனே' என்று அவன் மனம் மகிழ்கிறான். நற்கதி அடையும்போதும் அவன் மனம் இன்பத்தில் திளைக்கிறது.'' – தம்மபதம் *(1-18)*

''செயற்பால தோரும் அறனே'' என்ற திருவள்ளுவர் திருவாக்கு இங்கு நினைக்கத்தக்கது.

முதுமை

''ஊனாலும் உதிரத்தாலும் பூசப்பட்ட என்பால் இயன்ற ஆலயம் ஒன்று உண்டு. அதன்கண் முதுமை சாவு கர்வம் வஞ்சகம் என்பவை வாழ்கின்றன. ''நன்கு சித்திர வேலைப்பாட்டோடு அமைந்த அரசர் தேரும் அழியும்; அங்ஙனமே மனிதவுடம் பும் முதுமையால் தளர்ந்து அழிவுபெறும். நல்லோர் தருமசீலம் முதுமை பெறுவதே இல்லை. நன்மக்கள் இதனை ஒருவர்க் கொருவர் அறிவிப்பர். *(11-5, 6)* மணி மேகலை என்ற காப்பியத்தில் சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை என்ற பகுதி யிலே மக்கள் வாழ்வின் நிலையாமை பல பட உரைக்கப் பட்டுளது. முதுமை சாவுக் குத் துணைமையாம். அப்பருவத்தே கருவ மும் வஞ்சகமும் உள்ளத்தே புகுந்து அலைப்பதும் இயல்பே. அரசர் தேர் எத்தனை சித்திரச்சிறப்பு உடையதே யாயினும் அதுவும் ஒருநாள் நொறுங்கி அழிவதே யாம். அதுபோலவே அழகும் திருவும் வலிமையும் செல்வக் குவையாற் செழித்த சிறப்பும் வாய்ந்த உடலினரே ஆயினும் அவரும் முதுமைக்கு ஆளாக இறப்பது உறுதி என்பதை இவ்வுவமை விளக்கு கின்றது.

''பல பிறப்புள்ள இவ்வாழ்வில் நான் இரவு பகலாக இவ்வீடு அமைத்தவனைத் தேடி உழன்றும் கண்டிலேன். மீண்டும் மீண்டும் பிறப்பது துன்பமே. வீடு கட்டியவனே நீ காணப்பட்டாய். இனி நீ வீடுகட்ட மாட்டாய். உன் கட்டைகள் நொறுங்கின. முகட்டு மரம் தகர்ந்தது. நிருவாணத்தில் நின்று மனம் ஆசையெல்லாம் ஒழிந்தது, *(11—8, 9)* ஸம்ஸாரம் என்பது தொடர்ந்துவரும் பிறப்பு இறப்பு பிறப்பு என்ற சங்கிலியை உணர்த்துவது. வீடு என்றது உடம்பாம். இவ்வுடம்பை அமைத்த கருத்தா ஒருவன் இருக்கவேண்டும் என்று கூறுவார் போல இவ்வாக்கியத்தை அமைத்தார் ஆயினும் புத்தருக்கு இறைவன் ஒருவன் உண்டு என்று கருத்து இருப்பதாக எவரும் உரைக்கத் துணியாமையால், பிறப்புக்குக் காரணமான வினையை இங்கு, கருத்தா வைப் போல உபசரித்தார் என்று கருதல் வேண்டும். பௌத்தமும் சமணமும் கரும பந்தத்தால் எண்ணற்ற பிறவிகள் வரும் என்று கூறுவது உண்டு. கருமம் ஒழிந்த நிலையே நிருவாணம் என்பது புத்தர் கருத்து.

ஆத்மா

ஆத்மா என்ற சொல் இங்கு ஜீவாத்ம பரமாத்ம பேதங்களாக நாம் எடுத்துரைக் கும் ஆத்மாவை உரைக்கவில்லை. தான் என்ற பொருள்தரவே வருகின்றது, ''தீவினை தன்னாலே இயல்வதாம். தீங்கு

விளைவது தன் செயலே. தீவினை செய்யாது இருப்பதும் தன் செயலே. தூய்மை பெறுவதும் தன் செயலே. தூய்மையும் அஃது இன்மையும் தன் செயலே. ஒருவன் பிறனைத் தூயனுக்குவதில்லை. (12-9)

மனிதப் பிறவி வாய்த்த எவனும் தன் செயலாலே உயர்வு அடைய இயலும் என்ற கருத்தை இவ்வத்தியாயத்தில் புத்தர் பிரான் அருள்கின்றார். வறுமையில் வருந்தும் பிறவி முன்னைய வினையால் வாய்த்ததே யாயினும் இப்பிறவியிலே மேலும் பாவங்களைப் புரியாது அற நெறியில் நடந்து நற்கதி பெறும் உரிமை ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டு என்பது இப் பகுதியின் கருத்தாம்.

### புத்தர் யார்?

புத்தர் பிரான் திருவாக்கு என்றே பௌத்தர் மதிக்கும் இந் நூலில் அவரே புத்த பரம்பரைக்கு உள்ள பொது இயல்பை இங்கு விளக்குகின்றார். "மனிதப் பிறப்பு அடைவது அரிது; மனிதனாக வாழ்வது அரிது; நல்லறத்தைக் கேட்பது அரிது. புத்தராகப் பிறப்பது அரிது. (14-4,) "பாவம் ஒன்றையும் செய்யாமை, புண்ணியங்களைப் பரிபூரணமாகச் செய்வது; தன் உள்ளத்தைத் தூய்மை செய்வது. இதுவே புத்த உபதேசமாகும்." (14—5 )

"பொறுமையே சிறந்த தவம் என்றும் துன்பங்களைத் தாங்குவதே நிருவாணம் என்றும் புத்தர் உரைக்கின்றார். பிறரைத் துன்புறுத்தும் ஒருவன் துறவி ஆகான். பிறரை அவமதிப்பவன் சமணன் ஆகான். (14—16)

"குறை கூறுமை, துன்பம் விளையாமை, தருமமார்க்கத்தில் அடங்கி நிற்பது, உணவில் அளவோடு இருப்பது, தனிமையில் உண்டு உறங்குவது உள்ளத்தின் மீறிய கருத்துக்களில் ஆழ்ந்து அடங்கியிருத்தல் இவை புத்தர் ஆணையாம் (14—7)

இந்த இயல் பௌத்த தருமத்தையே மிகத் தெளிவாக உரைக்கிறது. பதின்மூன்றும் செய்யுள் தத்துவ சதுட்டயங்களை விளக்குவதாய் அமைந்துளது. இதுவே வாழ்விற்குக் காரணம் என்று அடுத்த செய்யுள் உரைக்கிறது. இதனுல் இவ்வருக்கம் தம்மபதத்துள் மிகவும் சாரம் உள்ளதாக நினைத்தற்குரியதாம். இனி வரும் இயல்கள் எல்லாம் புத்த தரும சங்க நோக்கங்களை விளக்குவனவேயாம்.

### பிராமணன்

இதன் கீழ் புத்தர் கூறுவது நன்கு ஆராய்தற்குரிய சிறப்புடையது. இதன் கண் இரு செய்யுட்கள் மாக்ஸ் முல்லர் மனதைக் குழப்பின. அவற்றை இங்கு எடுத்துக் காட்டுவோம்.

"ஒரு பிராமணன் தாயைக் கொன்று தந்தையைக் கொன்று, அரசர் இருவரைக் கொன்று, இராச்சியம் ஒன்றை அதன் மக்கட் கூட்டத்தோடு அழித்தும் பாவம் அற்றவன் ஆகின்றுன் (21—5)

தாயைக் கொன்று தந்தையைக் கொன்று அரசர் இருவரைக் கொன்று வேதம் ஒழிய வேதியனைக் கொன்று சான்றோன் ஒருவனையும் கொன்று பிராமணன் பாவம் அற்றவன் ஆகின்றுன். (21—6)

இந்த இரண்டு செய்யுட்களுக்கும் தம்மபத உரைகாரர் புத்த கோஷர் சில விசேடக் கருத்துக்களைத் தந்துரைக்கிறார். வேட்கை என்ற தாயைக் கொல்ல வேண்டும்; வாழ்வுணர்வு ஆன தந்தையைக்

கொல்ல வேண்டும். உலகம் உள்ளது என்பதும் எல்லாம் இறுதியில் அழியும் என்பதும் இரண்டு தவறான கொள்கைகள். இந்த அரசர் இருவரையும் அழிக்க வேண்டும். சிராஷ்டிரம் உடம்பில் உள்ள பற்றுக்கள் ஆகும். அவற்றை அழிப்பதே வேண்டும். அந்நாட்டில் உள்ள ஏவலர் காமமும் வேட்கையுமேயாம். அவ்வேவலரும் கொலைக்கு உரியர். முதற் செய்யுளுக்கு இங்ஙனம் விளக்கம் தந்த புத்த கோஷர் அடுத்த செய்யுளில் புலி போல நன்மை கருதாத தீமையே பற்றும் வழி என்று பொருள் கூறி அது ஐந்து வகைப்படும் என்று விளக்குகின்றார். மாக்ஸ் முல்லர் உண்மையில் மெய்யறிவு பெற்ற ஒருவன் அகஸ்மாத்தாக சில குற்றங்களை இயற்றினான் ஆயினும் பாவம் அற்றவனே ஆவன்' என்று பொருள் கூறுகிறார்.

உபநிஷத்திலும் பகவத் கீதையிலும் இக் கருத்து வந்திருப்பதை இவ்விருபெருமக்களும் அறிவர். அறிந்திருந்தும் இங்ஙனம் இடர்ப்படுகின்றார். பகவத்கீதையை இங்கு பயன் படுத்துவோம். புத்தர் இங்கு பிராமணன் என்று எவனைக் குறிக்கின்றார் என்பதை முதற்கண் நாம் உணர வேண்டும். இந்நூலின் இறுதியியல் அந்தணர் இயல் என்றே பெயர் பெறுகின்றது. அவ்வியலில் இடம்பெற்ற அந்தணனே இங்கு எடுத்துரைக்கப்படுகின்றான். அவன் வேதம் ஓதி வேள்வியியற்றித் தன் குல தருமம் போற்றுவோன் என்று மதிக்கப் பட்ட பிராமணன் அன்று. பிரம்மத்தை அணுகியவன் பிரம்மமயம் ஆனவன் பிரம்ம வித்தியாஸ்வரூபன் ஆனவன் என்று உணரவேண்டும்.

கீதையிலே அருச்சுனன் மனம் தளர்ந்து வில்லை நழுவவிட்டுப் போர்க்களம் என்பதையும் மறந்து தன் முன்னே நிற்கும் வீடுமா துரோணர், கிருபர் முதலிய பெருமக்களையும் தயாதியரையும் பிற உறவினரையும் கொல்ல மனமின்றிப் பின்வாங்கத் துணிந்தபோது, கண்ணபிரான் அவன் உள்ளத்தில் பதிய ஒரு பேருண்மையை விளக்குகின்றான், ஆத்மா என்றும் உள்ளது. தோற்றம் வளர்ச்சி மெலிவு அழிவு முதலிய குறைகள் உடையதன்று. அதுவே பிரமம், அதுவே நான் என்று அறிவதே மெய்யறிவு. ஆத்துமாவுக்கு உலகத் தொடர்பு ஒன்றும் இல்லை. அது நீரில் நனையாது தீயில் வேகாது காற்றால் அசையாது. வாளால் வெட்டுண்ணாது. ஆத்மா ஒன்றே, பன்மைத்தன்மை அங்கு இல்லை. நாம் காணும் பன்மையெல்லாம் தோற்றமே. வீடுமர் முதலியோரை அழிப்பதற்கென்றே நான் இங்கு நிற்கிறேன். அவர் எல்லாரும் என்பார்வை யளவில் அழிந்தவரே ஆயினர். நீ வில் எடுத்து அவரை அழிப்பது என்பது உண்மையில்லை. என் செயலுக்கு நீ நிமித்தமாத்திரம் ஆகின்றாய், என்று கூறி அவனைப் போர்க்குத் தூண்டினன். கொல்வானும் இல்லை கொல்லப்படுவானும் இல்லை. இவன் கொல்கின்றான் அவன் கொல்லப்படுகின்றான் என்று நினைப்பது அறியாமையே. என்று விளக்கினார். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டதே தம்மபதத்தில் இங்கு எடுத்துக்காட்டிய இரு செய்யுட் போக்கும். அந்தணன் ஒருவன் இத்தனை பாவம் செய்தாலும் அவன் அவற்றின் தொடர்பு அற்றவன். என்பதே புத்தர் திருவுள்ளக் கருத்தாம். அந்தணன் இங்கும் பிரம்ம வித்தைப் பரிபூரண மூர்த்தியே.

---

# சிவாகமங்கள்

ஆகம வித்வான் S. சுவாமிநாத சிவாச்சாரியார், D. S. M.

சர்வக்ஞத்வம் முதலிய எண்குணமுடையவரும், மெய்யெழுத்துக்களில் உயிரெழுத்துப்போல எல்லா ஆன்மாக்களிடமும் நிறைந்தவரும், மந்திரம் வர்ணம் பதம் புவனம் தத்துவம் கலை என்ற ஆறு அத்வா வடிவமுடையவராய், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் இயமான் என்ற எட்டு சரீரமுடையவராய், இருப்பினும், ரூபம் அரூபம் ரூபாரூபம் என்ற இவற்றிற்கு வேருனவராயும், வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவராயுமுள்ள சிவபெருமான், சகளீகரித்து சதா சிவமூர்த்தியாய் நின்று, தத்புருஷம் முதலிய நான்கு முகங்களிஞல் இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் ஈசான முகமாகிய உச்சி முகத்திஞல் இருபத்தெட்டு சிவாகமங்களையும் மகாசிருஷ்டி ஆரம்ப காலத்தில் தோற்றுவித்தருளிஞர்.

வேதம் என்பது அறிதற்கருவி எனப் பொருள்படும். ஆகவே அது பதி பசு பாசம் என்ற முப்பொருள்களையும் அறிதற்குக் கருவியாயுள்ளது.

ஆகமம் என்பது பரமாப்தரினின்றும் வந்தது எனப் பொருள்படும். 'ஆ'என்பது பாசம் எனவும், 'க' என்பது பசுவெனவும், 'ம' என்பது பதி எனவும் பொருள்படும் ஆகமம் என்பதற்குத் திரி பதார்த்த இலக்கணத்தை உணர்த்தும் நூல் என்பதே சிறந்த பொருள்.

மற்றும் 'ஆ' என்பது சிவஞானமும், 'க' என்பது மோட்சமும், 'ம' என்பது மல நாசமும் எனக்கொண்டு, ஆன்மாக்களுக்கு மலத்தை நாசம் பண்ணி, சிவ ஞானத்தை உதிப்பித்து, மோட்சத்தைக் கொடுத்தல் பற்றி ஆகமம் எனப்பெயராயிற்று எனக் கூறுதலும் ஒன்று. இவ்வேதாகமம் முறையே உலகத்தார்க்கும், சத்திநிபாதர்க்கும் உரித்தாகிய பொதுநூலும் சிறப்பு நூலுமாம்.

வேதம், கன்மகாண்டம் ஞானகாண்டமென இரண்டு காண்டங்களையுடையது. அதில் ஞானகாண்டம், வேதாந்தமெனவும், உபநிடதமெனவும் பெயர் பெறும். உபநிடதம் பல; அவற்றுள் சில உபநிடதம் அக்கினியையே பிர்மம் எனவும் சில உபநிடதம் சந்திரனையே பிரமமெனவும் இவ்வாறே பல உபநிடதங்களும் ஒவ்வொரு தெய்வத்தையும் பிரமமெனக் கூற, —சுவேதாச்வதரம் முதலிய சில உபநிடதங்கள் சிவபெருமானையே பிரமமெனக் கூறும்.

தெளிவான வேதாந்தப் பொருளை சிவாகமங்கள் தனித்தெடுத்துக் கூறுவதால் "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என அருள்நந்தி சிவாசாரியார் அருளிச் செய்வாராயினர். சிவாகமங்களில் கூறப்படும் முடிவும், சுவேதாச்வதரம் முதலிய உபநிடதங்களில் கூறப்படும் முடிவும் ஒன்றே. இக் கருத்துபற்றியே நீலகண்ட சிவாசாரியார்,"யாம் வேத சிவாகமங்களுக்குப் பேதம் காண்கின்றிலம்; வேதமும் சிவாகமமாம்' என்று கூறியுள்ளனர்.

வேதமோடாகமம் மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவும் சிறப்புமென்று

உன்னுக

நாதன் உரையிவை நாடிலிரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க் கபேதமே

எனத் திருமூலநாயனுர் கூறியுள்ளார்.

சிவாகமம், தந்திரகலை, மந்த்ரகலை, உபதேசகலை என மூன்று கலைகளாகப் பிரிந்துள்ளது. **தந்திரகலை** சிவாலய நிர்மாணம், விக்கிரக அமைப்பு முதலியவற்றையும்; **மந்திரகலை**, பிரதிட்டை முதலியவற்றையும்; **உபதேசகலை**, சிவபெருமானேடு இரண்டறக் கலத்தற்கேதுவாகிய ஞானமார்க்கத்தினையும் கூறும். இம்மூன்று கலைகளும் சிவபெருமானைப் பற்றியே கூறுதலின் சிவாகமம்-சத்திநிபாதர்க்கு உரிய நூல் எனப்பட்டது.

இவ்வாகமமானது காமிகம் முதல் வாதுளம் ஈருன இருபத்தெட்டாம்.

சிவாகமங்கள் **மந்திரம், தந்திரம், சித்தாந்தம்** என்று பெயர்பெறும். இவ்விருபத்தெட்டு ஆகமங்களும் ஒவ்வொன்றுக்குக் கோடி கிரந்தமாக இருபத்தெட்டுக் கோடி கிரந்தமுண்டு.

இக்காமிகம் முதலிய ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு. மற்றும் சிவாகமம், ச்ரௌதம் அச்ரௌதம் என இருவகையாகக் கருதப்படுகிறது. சுருதி சாரமயமானது **ச்ரௌதம்**; சுவதந்திரமானது **அச்ரௌதம்**. இந்த ச்ரௌதமானது, பிரணவர் முதலிய பதின்மருக்குப் பத்து சிவாகமங்களாகவும், மகாருத்திரன் முதலிய பதினெண்மருக்குப் பதினெட்டு ஆகமங்களாகவும் சிவபெருமான் அனுக்ரகம் செய்தார்.

'வேதத்தை அனுசரியாத அச்ரௌதம் என்ற ஆகமங்கள் வாமம், சோமம், வாகுளம், பைரவம் முதலானவை. இவை வேதபாஹ்யங்கள்; வேத விகிதமான ச்ரௌத ஆகமங்களே சித்தாந்திகளால் கொள்ளப்படும்.

இந்த சித்தாந்த சிவாகமங்கள், ஞான பாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியா பாதம், எனத்தனித்தனி நான்கு பாதங்களை உடையதாக இருக்கும். இவற்றுள் **ஞானபாதம்** பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தங்களில் ஸ்வரூபத்தையும், **யோகபாதம்** பிராணுயாமம் முதலிய அங்கங்களோடு கூடிய சிவயோகத்தையும், **கிரியாபாதம்** மந்திரங்களின் உத்தாரம், சந்தியா வந்தனம், பூஜை, ஜெபம், ஹோமம் என்பனவற்றையும் **சரியாபாதம்** சமயவிசேஷ நிர்வாண தீட்சையுடன் ஆசாரியாபிஷேகத்தையும், சமயாசாரங்களையும் உபதேசிக்கும். **ஞானபாதத்தின்** விளக்கம் சிவஞானபோதம் சிவஞான சித்தியார் முதலிய சித்தாந்த சாத்திரங்களில் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.

சிவபெருமான் எங்கும் வியாபகமாய் இருப்பினும் சிவலிங்க முதலிய திருமேனியும் குருவும் சங்கமமும் இடமாகக் கொண்டு நின்றும் அகத்தே உயிரிடமாகக் கொண்டு நின்றும் ஆன்மாக்கள் செய்யும் கிரியைகளைக் கொண்டருளுவர். சிவபெருமான் இவ்விடங்களில் தயிரில் நெய் போல் விளங்கி நிற்பர். மற்றய இடங்களிலெல்லாம் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்பர் ஆதலினுலே நமது பரமபதியாகிய சிவபெருமானை நாமெல்லாம் குருலிங்க சங்கமம் ஆகிய இடங்களிலே விதிப்படி சிரத்தையோடு சரியை முதலிய நான்கு வழிகளிலே வழிபடவேண்டும்.

இலிங்கம் உறைவிடம் சிவாலயம்; சிவாலயத்தில் செய்யப்படும் பூஜையானது, நித்யம், நைமித்திகம், காமியம் என மூன்றும். இம் மூன்றும் நித்யம்,

நித்யாங்கம் என்றும்; நைமித்திகம் நைமித்திகாங்கம் எனவும், காம்யம் காம்யாங்கம் எனவும் ஒவ்வொன்றும் இவ்விரண்டாய் அறுவகைப்படும்.

ஆன்மாக்களுடைய பக்குவத்திற்கேற்ப, அருள்செய்யும் பொருட்டு சிவபெருமான் ஒருவரே சந்திரசேகர் முதலிய திருமேனிகளைக் கொண்டார். இம் மூர்த்திகளுக்குச் செய்யப்பெறும் நித்தியாங்கம் முதலிய வழிபாடுகளிலே மந்திரபேதம் இருக்குமே அன்றி, கிரியாபேதம் இல்லை. ஆதலின் விநாயகர் சந்திரசேகரர் முதலிய மூர்த்திகளுக்குச் செய்யப்படும் கிரியைகள் யாவும் சிவபெருமானுக்குக் கூறியுள்ளபடியே செய்யவேண்டும்

**பிரதிஷ்டை** என்பது லிங்கம் பிம்பம் முதலியவைகளிடத்தில் அந்தந்த மூர்த்திகளை எழுந்தருளச் செய்தல். அதாவது, லிங்கம், ஞானசக்திவடிவம்; பீடம், கிரியாசக்திவடிவம்; ஆதலால் இவ்விரண்டும் சிவனை அதிட்டிக்கும் தேகம் ஆயிற்று. அவ்விரண்டையும் சிவாகம முறைப்படி சேர்ப்பது பிரதிஷ்டை. இது, பிரதிஷ்டை, ஸ்திதஸ்தாபனம், ஸ்தாபனம் ஆஸ்தாபனம், உத்தாபனம் என்று ஐந்து விதம். அவ்வியக்தம் முதலிய லிங்கங்களை ஆதார சிலையிலே ஸ்தாபனம் செய்தல் பிரதிஷ்டை. அபின்னமான பீடமுடைய ஸ்படிகம் முதலிய லிங்கத்தில் மானஸ ஸம்ஸ்காரமாக ஸ்தாபனம் செய்தல் ஸ்திதஸ்தாபனம். உலோகம் முதலிய பீடத்தில் பாணலிங்கத்தை அவ்விடத்தின் பலாபலத்திற்கேற்றவாறு, மூன்று பாகத்திலோ இரண்டுபாகத்திலோ அல்லது ஒரு பாகத்திலோ தக்கபடி பிண்டிகை மத்தியில் ஸ்தாபனம் செய்தல் ஸ்தாபனம். மகாலிங்கத்தை ப்ரசாத மத்தியில் மந்திர ஸம்ஸ்காரத்தோடு ஸ்தாபனம் செய்தல் ஆஸ்தாபனம்; ஜீர்ணமான லிங்கத்தை மறுபடியும் உத்தாரணம் செய்தல் உத்தாபனம்.

இந்தப் பிரதிஷ்டைக்குச் செய்யப்பெறும் கிரியைகள் 64, என்றும் 56 என்றும் ஆகமங்கள் கூறுகின்றன. மந்திர கலையினுள் உள்ளதான இந்தப் பிரதிஷ்டாங்கமான கிரியைகள் யாவும் மந்திரம் கிரியை பாவனை என்ற செயல்களை உடையன. மந்திரம் பலவகை; அவை யாவன, சம்ஹிதா பிரசாத தத்துவ கலா பத ஆஸ்திர முதலிய. இவற்றுள் முதல் இரண்டும் சிவதீட்சை பெறும் காலத்திலே ஆசாரியரால் உபதேசிக்கப்படும் மகா மந்திரமாகும். தத்துவ மந்திரம் 36. ஒவ்வொரு கிரியையையும் தத்துவக் கண்ணால் பார்க்கவேண்டும்.

உதாரணம் : **கும்பாபிஷேக** நிமித்தமாக மூலஸ்தான மூர்த்தியை கும்பத்தில் ஆவாகனம் செய்து, வேதிகை குண்டம் தோரணம் கொடி பதாகை அஷ்டமங்கலம் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட இடத்திலே வேதிகையின் மேல் கும்பத்தை ஸ்தாபித்து, அர்ச்சித்து ஹோமம் செய்யும் இடம் யாகசாலை அல்லவா? இந்த யாக சாலை பூமியின்மேல் உயரமான மேடையாக இருக்கவேண்டும். இதன் மேல் பரப்பு சுத்தவித்யாதத்துவம் வரையில் வியாபகம் உள்ளது. இதன்மேல் சப்த விம்சதி கலசங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இடம் ஈசுவரதத்துவம். பின் ஆசாரியன் ஆன்மசுத்தி முதலியவைகளால் தன்னைச் சிவனாகப் பாவித்து, அதன் பிறகு அந்தஈசுவர தத்துவத்தைக்கடந்து, சதா சிவதத்துவத்தில் நின்று, சத்தி தத்துவத்துடன் இரண்டறக்கலந்து, சிவ தத்துவத்தின் மேலிருக்கும் இறைவனைப் பூசை செய்யவேண்டும். இவ்வாறு தத்துவ திருஷ்டியிலே காணவேண்டும்.

யாக சாலையானது மந்திரங்களாலும் தேவர்களாலும் நிறைந்தஇடம்; இங்குள்ள

சூரியன் சகள மூர்த்தி; சிவன் நிஷ்கள மூர்த்தி. மேலும் அங்கு துவார தேவர்கள் கலைகள் நந்தி மகாகாளன் முதலிய கணங்களும், வாஸ்துப் பிரம்மன் இந்திரன் முதலிய திக்பதிகளும், இலக்குமி விநாயகர் சப்தகுரு முதலியவர்களும் இருக்கின்றனர். இத்தகைய யாகசாலையின் நடுவில் அமைக்கப் பட்டிருக்கும் வேதிகையிலே கும்பத்தில் ஆவாகனம்செய்து பூஜிக்கப்படுகிறார் இறைவன். யானை பெரியதாக இருப்பினும் பாகனிடத்திலே கட்டுப்படுவதுபோல, மந்திரவானுன ஆசாரியனிடம் இறைவன் அன்பால் கட்டுப்படுகிறார்.

யாகசாலையிலே முதன்மையாய் விளங்கும் அக்கினி சிவாக்னி; இந்த அக்னியினின்றும் மற்ற எட்டு அக்னி தேவர்கள் உண்டானார்கள் அவராவன: ஆகவணீயம் தட்சிணாக்னி, கேவலாக்னி கர்கபத்தியம் விருத்தாக்னி சாமான்யாக்னி யௌனாக்னி பாலாக்னி — இந்த அக்னிகளில் ஈசானம் நேத்ரம். அஸ்திரம் நீங்கிய சம்ஹிதா மந்திரங்களும் அஷ்ட மூர்த்திகளும் அஷ்டமூர்த்திகளின் அதிபர்களான சர்வன் பசுபதி உக்ரன் ருத்ரன் பவன் மகாதேவன் ஈசானம் பீமன் என்ற எண்மர்களும் பூஜிக்கப்படுகிறார்கள்; ஹோமம் செய்யப் பட்டு வீர்யம் வாய்ந்தவர்களாகச் செய்யப் படுகிறார்கள். இவ்வாறு காலந்தோறும் பூஜித்து ஹோமம் செய்வதனால் நிறைந்த அனுக்ரகசக்தி பெறுகிறார்கள். அஷ்ட மூர்த்திகளையும் மந்திரங்களையும் நாடீ சந்தானம் என்ற முறையால் (ஸ்பர்சாகுதி) மூலஸ்தானத்திலே சேர்த்து அதில் விளங்கும் மூர்த்தியை, கோடிசூரியனுக்குச் சமமான தேஜஸ் உடையராயும் கோடி சந்திரனுக்குச் சமமான தண்மை-குளிர்ச்சி வாய்ந்தவராயும் பாவிக்க வேண்டும். பூஜையில் பாவனை இன்றியமையாதது; மந்திரத்துடன் கிரியையைச் செய்து மனசினால் பாவிக்கவேண்டும் இவ்வாறு ஒவ்வொரு கிரியைக்கும் மந்திரம் செயல் பாவனை என்ற மூன்றும் முக்கியம்.

**சிவார்ச்சனையால்** விஸ்தாரமான ராச்சியத்தை நிலபுலங்களை அடைகிறான்; **ஹோமம் செய்வதால்** சம்பத்துகள் அடைந்து தனவானாகிறான் **ஜெபத்தால்** பாப நீக்கமும் **தியானத்தால்** ஞானமும் பெறுகிறான். இவ்வளவையும் சிவ யாகத்தால் ஒருங்கே பெறுகிறான்.

விக்கின நீக்கத்தின் பொருட்டுக் கணபதியை, ஆரோக்கியத்துக்காக சூரியனை, தருமம் மோட்சங்களுக்காக மாதவனை, அறம் பொருள் வீடுகளுக்காக சிவனை, அறம் பொருள் இன்பம் வீடுகளுக்காகத் தேவியை வழிபடவேண்டும். சிவபெருமான் எப்போதும் பிரியாத சக்தியை உடையவர் ஆதலின் தேவியுடன் கூடிய இறைவனை வழிபடுபவர் உறுதிப் பொருள் நான்கையும் பெறுவர். அக்கினிக்குச் சூடு, சூரியனுக்கு ஒளி சந்திரனுக்குக் குளிர்ந்த நிலவு எப்படியோ அப்படி சிவனுக்குத் தேவி; ஆதலின் த்வாதசாந்தத்தலமான மதுரையிலே ஸ்ரீ மீனாட்சி-சுந்ரேசுவரரை குடமுழுக்கு நாளன்று வழிபடுபவரும் அவர்கள் ஆலயத்திருப்பணி செய்தோரும் திருப்பணிக் குழுத் தலைவர் **பி. டி. ராஜன்** அவர்களும் எல்லா நலங்களும் இம்மையே யெய்துவார்களாக.

---

# வேதங்கள்

அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாசாரியார்

அமரகவி பாரதி கூறியது போல நமது நாட்டுக்குள்ள சிறப்பில் வேதங்களும் ஒன்று. உலக மானிடவர்க்க நூல்களிலே, சரித்திர ரீதியில் இதுவே முதன்மையானதாக விளங்குகிறது. மாக்ஸ் முல்லர் கூறியதுபோல், மற்ற உலக நூல்கள் செய்ய முடியாத காரியங்களைச் செய்ய வேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. வேதம் என்ற பெயர் சிறப்பாக சம்ஸ்கிருத பாஷையிலுள்ள ருக்வேதம் முதலிய நூல்களுக்கு ஏற்பட்டு இருக்கின்றது. ஆனால் வேதம் என்ற பெயரில் உள்ள சிறப்பை உணர்ந்து, பலர் மற்ற மத நூல்களுக்கும் இதையே உபயோகப்படுத்துகிறார்கள். காலஞ்சென்ற மேதாவி டாக்டர் ஐயகர் குறிப்பிட்டதுபோல், வகுப்பு, குறுகிய தேசீய மனப்பான்மை இவை இல்லாமல் பரந்த நோக்கத்துடன் ஏற்பட்ட நூல் வேதம் என்றால் மிகையாகாது.

மதுரை மாநகரத்திற்கும் வேதத்திலே கூறப்படும் தத்துவங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சங்க நூல்கள், மதுரை மாநகரத்திலுள்ள மக்கள் கோழி கூவுவதைக் கேட்டு எழுந்திருப்பதில்லை, வேத ஒலியைக் கேட்டுத்தான் எழுந்திருக்கின்றனர் என்று கூறுகின்றன. ஆங்காங்கு வேதம் சொல்லிக் கொடுக்கும் பள்ளிகள், மதுரையில், இருந்து வந்திருக்கின்றன என்பதையும் தெரிவிக்கின்றன. திருஞானஸம்பந்தர். மங்கையர்க்கரசியின் அழைப்பின் மேல் மதுரை வந்ததும் வைதிக மதத்தின் பெருமையை விளக்க, வைகையாற்றில் ஏட்டை விட்டது வைதீக மதத்தின் சரித்திரத்தில் நடந்துள்ள பெரிய சம்பவம் இதனால் ஜைன பௌத்த மதங்கள் ஒடுங்கி, வைதீக மதம் தன் அழியாப் புகழை மீண்டும் பெற்றது. சங்ககாலங்களிலிருந்து தமிழன் வேதம், வைதீக மதம் இவைகளைப் பேணிவளர்த்து வந்து இருக்கின்றான். அரசர்களும், கவிகளும், கொடையாளர்களும் பாமர மக்களும் வேதத்தையும் வைதீக மதத்தையும் பேணிவளர்த்து விட்டனர். தமிழனின் பண்பாடு நாகரீகம் கலை விஞ்ஞானம் வேதாந்தம் மதம் இவைகளோடு வேதம் ஒன்றாகக் கலந்து விட்டது. சமயாசாரியர்களான, ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்கள் நூல்களில் வேதத்தை மிகவும் புகழ்ந்து பேசிவிட்டார்கள்.

உண்மையிலேயே வேதம் ஒரு உயர்ந்த நூல்; சம்ஸ்கிருத சாஸ்த்ரங்களிலுள்ள ஸ்மிருதி, இதிகாஸ புராணங்களிலும் கொண்டாடப்படும் நூல். சைவத்திற்கு வேதம் செய்துள்ள உபகாரத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது. பஞ்சாட்சரம், வேதம் கொடுத்தது. சிவ வழிபாட்டில் பல அம்சங்கள் வேதங்களை அடிப்படையாகக் கொண்டவை.

வேதம் என்ற வார்த்தை "தெரிவிப்பது" என்ற பொருளில் வந்துள்ளது. மனித வர்க்கத்திற்குத் தேவையான அம்சங்களைத் தெரிவிப்பதால் இதற்கு 'வேதம்' என்ற பெயர் வந்தது. இது மந்திரம், ப்ராம்மணம் என்ற இருவகையாகப் பிரிந்து உள்ளது. மந்திரம் என்ற பாகம் கடவுளை இறைஞ்ச ஏற்பட்டது. ப்ராம்மண பாகம் மந்திரங்

களுக்கு விரிவுரைபோல் அமைந்து உள்ளது. வேள்விகளைப் பற்றிய பூர்ண மான விளக்கங்களை ப்ராம்மணங்களில் பார்க்கிறோம். கடவுளைப் பற்றிப் பேசும் காலத்திலும், கர்மாக்களைப் பற்றிப் பேசும் காலத்திலும் வேதங்கள் பல கதைகளைச் சொல்கின்றன. கடவுள் தத்வத்தையும் வேதாந்த கருத்துக்களையும் விளக்கும் வேத பாகத்திற்கு உபநிடதம் என்று பெயர். ஜீவாத்மா, பரமாத்மா, பிரபஞ்சம், இவைகளின் உண்மை நிலையைப் பற்றி, 'த்வைதம்' அத்வைதம், வசிஷ்டாத்வைதம், பேத அபேத சித்தாந்தம், சுத்த அத்வைதம், முதலிய வேதாந்த கருத்துக்கள் உபநிடதங்களை அடிப் படியையாகக் கொண்டு ஏற்பட்டவை. இவ்விதம் வேதமானது ருக்வேதம், யஜுர் வேதம், ஸாமவேதம், அதர்வேதம் என்று நான்காகப் பிரிந்துள்ளது. ருக்வேத மந்திரங்கள் செய்யுள் நடையில் அமைந்துள்ளன. யஜுர்வேத மந்திரங்கள் வசன நடையில் அமைந்துள்ளன. இசைக் குத் தகுந்தாற்போல் அமைந்துள்ள ருக் மந்திரங்களே ஸாம மந்திரங்களாவன. அதர்வவேதம் ருக்வேத வகையைச் சேர்ந் தது. ருக்வேதம் கடவுளைப் பிரதானமாக கொண்டது. யஜுர்வேதம் கடவுளை வழி பட ஏற்பட்டுள்ள கர்மாக்களைப் பிரதான மாகக் கொண்டது. அதர்வவேதம் கடவுளை வழிபடும் மனிதனுடைய வாழ்நாளுக்குத் தேவையான அம்சங்களை வெளியிடுகிறது. மானிட வர்க்கத்திற்கு உதவி செய்வது வேதத்தின் நோக்கம். இகவாழ்க்கையி லும், பர வாழ்க்கையிலும் வேதம் உதவு கிறது. சமூகப் பொருளாதார அரசியல் வாழ்க்கைக்கு உதவி செய்வதன் மூலம் வேதம் இம்மையிலும், மறுமையிலும் மனித வர்க்கத்திற்கு செய்யும் உப காரத்தை அளவிட்டுச் சொல்லமுடியாது. மறுமையில் ஆத்மா ஆண்டவனை அடைவ தற்கான வழியையும், அடுத்த ஜன்மாவில் க்ஷேமத்தை அடைவதற்கான வழிகளையும் வேதம் விளக்குகிறது. பௌத்த மதம்போல் இகவாழ்க்கையை வேதம் உதாசீனம் செய்யவில்லை. இகவாழ்க்கையின் முக் யத்வத்தை உணர்ந்து, அதை நடத்தும் வழியையும் விவரித்துக் கூறுகிறது. இக வாழ்க்கை உலகாயத வாழ்க்கை அல்ல. இம்மை, தெய்வத்தின் அருளால் நடை பெறுகிறது என்பதே வேதம் காணும் அடிப்படை. வாழ்க்கையில் அனுபவத்தின் ஒவ்வொரு சிறிய அம்சமும் தெய்வத் தையே நம்பி உள்ளது என்று வேதம் தெரிவிக்கிறது.

சமுதாய வாழ்கையைப் பற்றிப்பேசும் வேதம் ஆண் பெண் உறவிலிருந்து, உலகம் வரை பேசுகிறது. மனிதவர்க்கத் தின் ஒற்றுமையில் வேதத்திற்கு அபார மான கவலை உண்டு. சேர்ந்து வாழ்வது என்பது மனிதப் பண்பாட்டின் அடிப்படை. இது மிருகங்களுக்குக்கிடையாது. சேர்ந்து வாழ்வதை வேதம் வற்புறுத்துகிறது. அதர்வ வேதத்தில் பூமி சூக்தம் உலகத் தைப் பற்றிப் பேசுகிறது. அங்கு குறிப்பிடப்படும் கருத்துக்கள் கவனத் துக்கு உரியவை. "**ஜனம், பிப்பரதி பஹுதா, விவாசஸம் நாநாதர் மாணம்**" என்று கூறுகிறது. இதன் கருத்தாவது உலகில் பலவித மக்கள் இருந்து வருகிறார் கள். பலவித பாஷைகளும் பேசப்பட்டு வருகின்றன. பலவித நாகரீகங்களும் இருந்து வருகின்றன. எல்லாம் அவசிய மானவைகளே. அந்தந்த இனத்திற்கும் மொழிக்கும், நாகரீகத்திற்கும் முக்யத்வம் உண்டு. ஒரு இனம் மற்றொரு இனத்தை அழிக்க முற்படக்கூடாது. ஒரு பாஷை

மற்றெரு பாஷையை அழிக்க முற்படக் கூடாது. ஒரு நாகரீகம் மற்றெரு நாகரீகத்தை அழிக்க முற்படக் கூடாது என்று வேதம் கூறுகிறது. இனவெறியும் மொழிவெறியும் வேதத்தின் கொள்கைக்கு எதிரானது. அவ்விதமே ஒரு அதர்வ வேத மந்திரம் பல வித மதங்கள் உலகத்தில் இருந்து வரும் என்றும், 'அவைகளில் ஒன்று உயர்ந்தது ஒன்று தாழ்ந்தது என்று கூறக்கூடாது என்றும், எல்லாம் கடவுளை அடையும் மார்க்கம் என்றும் கூறுகிறது. இனவெறி, மொழி வெறிகளை வெறுப்பதுபோல் மதவெறியையும் வேதம் வெறுக்கிறது. மனித பண்பாட்டிற்குத் தேவையான இனம், மொழி நாகரீகம், மதம் இவைகளில் பரந்த நோக்கத்தோடு பேசும் பெருமை வேதத்திற்கு உண்டு. கடவுளைத் துதித்துப் பிரார்த்திக்கும்போதும் வேதம் குறுகிய மனேபாவத்தோடு பேசுவதில்லை. உலகமே வாழ வேண்டும் என்றுதான் பேசுகிறது. ஸ்ரீருத்ரத்தில் உலகம் ஒரு விதமான பிணியும் இல்லாமல் வாழ வேண்டும் பரஸ்பர நல்வெண்ணத்துடன் வாழவேண்டும் என்று கூறுவது மிகவும் கவனிக்கத்தகுந்தது. சமுதாய வாழ்க்கையின் அடிப்படையான மணமக்கள் வாழ்க்கையையும் வேதம் விவரித்துக் கூறுகிறது.

மனிதனின் பொருளாதார வாழ்க்கையில் வேதத்திற்கு உள்ள சிரத்தை அபாரமானது. 'பிறந்தவர்கள் எல்லோரும் வாழ வேண்டும்; ஆகாராதிகள் எல்லோருக்கும் பொதுவானவை; சுகமாக வாழவே எல்லோரும் பிறந்துள்ளனர்' என்ற கொள்கை வேதத்தைச் சேர்ந்தது. ஒரு அதர்வ வேத மந்திரம், 'எல்லோருக்கும் அன்னம் கிடைக்கவேண்டும்; குடிதண்ணீர் எல்லோருக்கும் கிடைக்கவேண்டும்' என்று கூறுகிறது. மனிதனின் பொருளாதார வாழ்க்கைக்கு அடிப்படையான மழையைப்பற்றி வேதம் பேசாத இடம் கிடையாது. அரசியல் கொள்கையிலும் வேதம் உயர்ந்த கருத்துக்களை வெளியிடுகிறது. வேத அரசியலில் மக்களின் அபிப்ராயத்திற்கே முக்கியத்துவம் உண்டு. ஆளும் வர்க்கம் யாராயிருந்தாலும் பொது ஜன அபிப்பிராயம் மாறிவிட்டால் பதவியைவிட்டு விலகிவிடவேண்டும் என்றும் கூறுகிறது. 'ஜனநாயகம்' என்ற வார்த்தையை உலகத்திற்கு அளித்த பெருமை வேதத்திற்கு உண்டு. அதை ஜான்ராஜ்யாய என்கிறது. தனிப்பட்ட மனிதனின் வாழ்க்கையைத்திருத்தி, மனிதப் பண்பாட்டோடு வாழ வேதம் அறநெறியை வற்புறுத்துகிறது. (மனுஷியாவை தர்ம:) அறநெறியில் வாழாவிட்டால் மனிதன், மனிதன் அல்ல என்று கூறுகிறது. (நருதேச்ராந்தஸ்ய ஸக்யாயதேவா:) சோம்பேறியாக வாழக்கூடாது என்றும் கூறுகிறது. மனிதன் தன் உழைப்பினுலேயே வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும்என்றும் உழைப்பு மனிதனுக்கு இன்றியமையாத குணம் என்றும் வேதம் கூறுகிறது.

வேதத்தில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள் ஏட்டுச்சுரக்காய் அல்ல; ஜீவகளை உள்ளவை.வேதத்தைப் பின்பற்றுபவர்கள் அதன் உயர்ந்த கருத்துக்களை இன்றும் செயல் படுத்தி வருகிருர்கள். சைவசமயாசாரியரான திருமூலர் வேதத்தின் கருத்துகளின் பெருமையை மனதிற்கொண்டு தான் "சித்தத்தினுள்ளே சிறக்கின்ற நூல்கள் எல்லாம் உத்தமமாக ஓதிய வேதத்தினுள்" என்று கூறுகின்ருர்.

மனிதவாழ்க்கை சம்பந்தமாக எல்லா அம்சங்களையும் வேதம் பேசுவதால் வேதம் ஒரு முழு நூல். பைபிள் போல் அது ஆத்ம குணத்தை மட்டும் வற்புறுத்தவில்லை. குறள் போல் எழுச்சியையும் கட்டுப்பாட்டையும் மட்டும் வற்புறுத்தவில்லை. புத்தர் போல் துறவறத்தை மட்டும் வற்புறுத்தவில்லை. திருமூலர் 'வேதத்தை விட்டால் அறன் இல்லை வேதத்தில் ஓதத்தகும் அறம் எல்லாம்' என்று கூறுவது முற்றிலும் உண்மையை அடிப்படையாகக் கொண்டது. மனித வாழ்க்கையை மனதில் கொண்டு பேசும் வள்ளுவர் பெருமான், வேதத்தில் ஈடுபட்டுப் பேசுகிறார். 'ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூல் மறப்பர் காவலன் காவான் எனின்' என்று கூறுவது கவனிக்க தகுந்தது. அறுதொழிலோர் நூல் என்பது வேதத்தைக் குறிப்பிடுகிறது. தமிழ்ப் பண்பாட்டின் அணிகலமாக விளங்குவது கடவுள் நம்பிக்கை, கடவுள் வழிபாடு இவைகளை எடுத்துவிட்டால் தமிழன்பண்பாடு இல்லை என்றே கூறலாம். தமிழன் பண்பாட்டின் சரித்திரமே மதத்தின் சரித்திரம் என்று கூறுவது மிகையாகாது. கடவுளைத் தென்னாட்டவராகவும் பாண்டிய நாட்டினராகவும் மாணிக்கவாசகர் கூறுவதும் தமிழ் நாட்டினருக்குக் கடவுளிடம் உள்ள அளவற்ற பக்தியைத் தெரிவிக்கிறது. மதுரையில் அம்மை, மீனாட்சியாகப் பிறந்ததும், அப்பன், சுந்தரேசுவரராகப் பிறந்ததும், தமிழனின் பண்பாட்டிற்கே ஏற்பட்டுள்ள பெருமை. வட மதுரையில் கிருஷ்ணபரமாத்மா பிறந்தார். தென் மதுரையில் மீனாட்சிசுந்தரேசுவரர்கள் பிறந்தார்கள். திருவிளையாடல் புராணம் மதுரைக் கடவுளின் லீலைகளைத் தெரிவிக்கின்றது. தமிழ் இலக்கியமே கடவுள் இலக்கியம் என்று கூறலாம். வேதத்தில் காணப்படும் கடவுள் தத்துவம் கருத்து நிறைந்ததாக இருப்பதால், தமிழ் நூல்கள் அதை ஏற்றிப் பேசுகின்றன. பரிபாடல் முதல் இன்றுவரையில் உள்ள தமிழ்நூல்கள், கடவுளை வேதமுதல்வன் என்று போற்றிப் பேசுவது கவனிக்கத் தக்கது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் கடவுளை முழு வேதத்தமுதம் என்று போற்றிப் பேசுகிறார்கள். வேதக்கடலில் ஆழ்ந்து கடவுள் கருத்தை அடியார்கள் எடுத்திருப்பதால் தமிழ் நாட்டின் கடவுள் தத்துவம் முழுவதும் வேதமயமானதாகவே விளங்குகிறது. வேதத்தில் காணப்படும் பல கடவுள் தத்துவத்திற்கு விளக்கங்களையும் தமிழ் நூல்களில் பார்க்கிறோம். பாண்டிய நாட்டின் அரசனை **பல்யாகசாலைப் பெருவழுதி** பல யாகங்களைச் செய்து இருக்கிறான். வேள்விக்குடி தாமர சாஸனமே, இதற்குத் தகுந்த சான்று. திருஞானசம்பந்தர் வேத வேள்விகளை நிந்தனைசெய்து உழல்பவர்களை வெல்லவே ஆலவாயன் அவதரித்து உள்ளான் என்று கூறுகிறார். திரு ஆலவாய் எம்பெருமான் வேதத்தையும், வேத நெறிகளையும் பாதுகாக்கவே ஏற்பட்டு உள்ள கடவுள்; அவனிடம் வேதம் வாழவேண்டும் வைதீகநெறி வாழ வேண்டும் என்று வேண்டுவோம். வேதம் வாழ்ந்தால்தான் உலகம் வாழும். 'வேதநெறி தழைத்து ஓங்க மிகுசைவத்துறை விளங்க' ஞானசம்பந்தர் அவதரித்தார். இந்த மதுரை மாநகரிலே வேதநெறி தழைக்கும்படியும் செய்தார். மதுரைக்கும் வேதநெறிக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு என்றோம். தமிழ்நாட்டின் இருபெரு சமயங்கள் சைவமும் வைணவமும். இரண்டையும் தமிழ்நாட்டுக்கு அளித்த பெருமை வேதத்திற்கு உண்டு.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல், வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெலாம்: அரன்நாமமே
சூழ்க வையகமுந்துயர் தீர்கவே.

—○—

